

# முன்னுரை.

தோன்றி நின்றழியுமிந்த தொடுகடற் புவியினுள்ளோராகிய மானிடர்கள் தங்கள் வாழ்நாளின் இன்ப துன்பங்களை ஆராய்ந் தறிந் துணர்ந்து துன்பத்திற் றுழாதும் இன்பத்தில் மகிழாதும் திடச்சித்தங்கொண்டு விலக்குவனவற்றை யொழித்து கொள்வன வற்றைக் கொண்டு அதற் கேற்றவாறு ஒழுக ஆன்மாக்கள் உய்யும் வண்ணம் வேதசாகைகளில் ஒன்றாகிய (ஜோதியைக் கண்டலன் ஜோதிடன்.) இச்சோதிட சாஸ்திரத்தை கண்ணின்மணி யெனக் கருதப்பெற்று வழங்கி வருகின்றது.

கீரனூர். நடராஜ ரென்பவர் கி. பி. 1725-ம் வருடத்திற்கு முன் வடமொழியி லியற்றியிருந்த ஹோராசாரம், சாராவளி, பாராசாரியம், சந்தானதீபம், பிரகத்ஜாதகம், சருவார்த்த சிந்தாமணி, மணிகண்டகேரளம், சம்புநாதம் முதலிய பல சோதிட கிரந்தங்களின் சாராம்சத்தை யநுசரித்து யுட்கொண்டு திரட்டி சாதக அலங்கார மெனப் பெயர் தந்து விருத்தமெனும் ஒண்பாக்களால் செய்துவைத்தனர். அது கற்றோர்க்கன்றி மற்றோர்க்குப் பயன் படாவென யான் 1900-ம் வருஷத்தில் அதற்கு மூலமும்-விரியுரையும் அச்சிட்டுக்கொண்டு வந்தனன். இப்போது சென்றார் என்பதை போனார் என்னும் ஆகி என்பதை ஆய் எனச் சொற்களை மாற்றி போலியுரை ஒன்று ஒருவர் அச்சிட்டது உலகோர்க்கு என்ன பிரயோசனமோ அவரே யறிவார். வாங்குநர் ஆதி - உண்மையுரை இன்னதுதானென்று மோசம் போகாது ஆராய்ச்சி செய்து வாங்கிக் கற்று கீர்த்தியை நிலைநாட்டுவீரென நம்புகின்றோம்.

இப்படிக்கு,

அ. இ. ரா. முருகைய சோதிடர்,

அநுப்பாபாளையம்,

கோயமுத்தூர் ஜில்லா.




இதனால் அச்சுக்கூடத் தலைவர் முதலிய யாவருக்கும் தெரிவிப்பது யாதெனில்:—

சோதிட சார்வ பௌமராகிய கீரனூர் - நடராஜரா லருளிச் செய்த "சாதகாலங்காரம்" மூலத்தை ம-ள-ள-ஸ்ரீ, மா. வடிவேலு முதலியார் அவர்களால் விரியுரை எழுதி ரிஜிஸ்டர் காபிரைட் சுதந்திரத்தை எனது தகப்பனார். டி. கோபால் நாயகரால் கிரையத்திற்குப் பெற்றுக்கொண்டு என்னால் அச்சிட்டு வெளிப்படுத்தி யிருப்பதால் ஷை ஆகி விரிவுரையையும், டைடில் பேஜியில் * இச்சோதிட நூலைப் பரிசோதித்த அநுப்பாபாளையம், ஸ்ரீமான். அ. இ. ரா. முருகைய சோதிடரின் ஆப்டோன் படத்தை யமைத்து காபிரைட் செய்திருக்கும் ஷை டிசைன் பிரகாரமும், யாதாமொருவர் மாறுதலாக எழுதி அச்சிடுவரேல், ரிஜிஸ்டர் காபிரைட் ஆக்டு விதிப்படியும் ஷை டைடில் டிசைன் காபிரைட் பிளாக் ரிஜிஸ்டர் ஆக்டு விதிப்படியும் யான் கோரும் நஷ்டத்திற்கும் பினல் கோர்ட்டு ஸெக்ஷன் குற்றத்திற்கும் உத்திரவாதிக ளாகவேண்டு மென்பதைக் கவனிக்கக் கோருகிறேன்.

இப்படிக்கு,

**தி. கோ. ஜானகிராம் நாயகர்,**

கோள்டன் பிரஸ், புரோப்ரைடர்,

நெ. 16, காளத்தியப்ப முதலி வீதி,

வேப்பேரி போஸ்டு, மதராஸ்.

* அ. இ. ரா. முருகைய சோதிடர் ரிஜிஸ்டர் பதிப்பாய் வாங்கவும்.

உ

மீனாக்ஷிதுணை.

# சாதகாலங்காரம்

## மூலமும் ஆதி-விரியுரையும்.

---

### பொதுப்பாயிரம்.

### விநாயகர் துதி.

நீருலவு புவியினரர் சனனகா லையினில்
நின்றநவக் கிரகத்தா னிகழ்த்துபலன் புகலும்
ஏருலவும் வடமொழியைச் செந்தமிழ்ச்சா தகநூல்
எனத்தமியே னுரைசெய்ய வெழில்வேத முனிவன்
பாருலகிற் குருகுலபா ரதக்கதையை வழுத்தப்
பயிலும்வட கிரிமிசையிற் பரிந்துமருப் பதனால்
சீருலவ வரைந்தருளுந் தெய்வதவா ரணத்தின்
செழுங்கமலத் தாளிணையைச் சிரந்தனில்வைத் திடுவாம்.

(இ - ள்.) நீர்-சமுத்திரமானது, உலவு-சூழ்ந்திருக்கின்ற, புவியில் இந்நில வுலகத்தின்கண், நரர்-(வாழ்கின்ற) மனுஷர்கள், சனனகாலையில்-பிறக்குங் காலத்தில், நின்ற-நிலைபெற்றிருந்த, நவக்கிரகத்தால் - ஒன்பது கிரகங்களின் வரிசைக்கிரமத்தால், நிகழ்த்து - நடத்தப்படுகின்ற, பலன்-பிரயோசனங்களை, புகலும் - சொல்லுகின்ற, ஏர் உலவும் - அழகு பொருந்திய, வடமொழியை - சமஸ்கிருத பாஷையிலிருந்த (சோதிடங்களை), செந்தமிழ் - இயற்றமிழில் (மொழி பெயர்த்து), சாதகநூல் என - சாதகாலங்காரம் என்னும் (பெயரால்), தமியேன்-கல்வியறிவில்லாத எளியனேன், உரைசெய்ய - சொல்லுதற்பொருட்டு, பார் உலகில் - பரந்த இவ்வுலகத்திலே, குருகுல - குரு குலத்தாராகிய (துர்யோதனாதியர் விஷயமான), பாரதக் கதையை - பாரதம் என்னும் பேருடையதான ஒரு கதையை, எழில் - அழகிய, வேத முனிவன் - வேதவியாசரானவர், வழுத்த - முற்காலத்தில் சொல்ல, பயிலும் - இருக்கின்ற, வடகிரிமிசையில் - மேருமலையை ஏடாகக்கொண்டு அதனிடத்தில், பரிந்து - விரும்பி, மருப்பதனால் - தமது கொம்பை (எழுத்தாணியாகக்) கொண்டு, சீர் உலவ - சிறப்பாக, வரைந்தருளும் - எழுதியருளிய, தெய்வதவாரணத்தின் - தெய்வீகத்தன்மையுடைய யானைமுக விநாயகக் கடவுளின், செழுங்கமலம் - செந்தாமரைபோலும், தாளிணையை - உபய திருவடிகளையும், சிரந்தனில் - தலையின்கண், வைத்திடுவாம் - அணிந்து கொள்வோம், எ - று. (1)

ஒரு கருமஞ்செய்வோர் அக்கருமம் முட்டின்றி முடித்தற்கு, முன்னர் விநாயகக் கடவுளை வணங்குதல் முறையாதலால், இந்நூலாசிரியரும் தாம் சொல்லத்துணிந்த சாதகாலங்காரம் நிறைவேறற்பொருட்டு அக்கடவுளை இக்கவியால் சிறப்பாக வணங்கினார் என்பதாம்.

நடராஜர், சிவகாமசௌந்தரி, சத்தி, கணபதி, சண்முகன் இவர்கள் துதி.

*வைத்தபல பூதபே தங்களெழு வகையின்*
*மன்னுமுயிர்க் குயிராகி மணியொளிக ளிலங்கு*
*பைத்தலைவா ளரவரசன் வியாக்கிரமா முனியும்*
*பணியநடம் புரிபரமன் பங்கயத்தா டொழுதே*
*கைத்திகிரி நெடுமாலோ டலர்விரிஞ்சன் மகவான்*
*கருணையுற வணங்குசிவ காமசௌந் தரியின்*
*சத்திகண பதியமர ருறுசிறைமீட் டருளும்*
*சண்முகன்பொற் கமலமலர் தலைக்கணிவோ மன்பாய்.*

(இ - ள்.) வைத்த - உண்டாக்கப்பட்ட, பல அநேகவகையாகிய, பூத பேதங்கள் - பூதசம்பந்தத்தாலுண்டாகின்ற, எழுவகையில் மன்னும் - எழுவகை தோற்றங்களாக நிலைத்திருக்கின்ற, உயிர்க்கு - உயிர்களுக்கு, உயிராகி - உயிராகியும், மணியொளிகள் இலங்கு - ரத்தினங்களின் தேஜஸால் விளங்கிக்கொண் டிருக்கின்ற, பைத்தலை வாளரவரசன் - பசிய படைத் தலையையுடைய பதஞ்சலி முனிவரும், வியாக்கிரமாமுனியும் - வியாக்கிரம பாதரும், பணிய - பணிந்து நமஸ்காரஞ்செய்ய, நடம்புரி - ஆனந்தத் தாண்டவஞ் செய்கின்ற, பரமன் - நடராஜப் பெருமானது, பங்கயம் தாள் தொழுது - தாமரைபோலுந் திருவடிகளைத் தொழுது, (பிறகு) கை, திருக்கரத்தின்கண், திகிரி - சக்கராயுதத்தையுடைய, நெடுமாலோடு - விஷ்ணுவுடன், அலர் - தாமரைமலரில் வசிக்கின்ற, விரிஞ்சன் - பிரமதேவன், மகவான் - இந்திரன், கருணையுற - (ஆகிய இவர்கள்) கிருபையைப் பெறுதற்பொருட்டு - வணங்கு - பணிகின்ற, சிவகாம சௌந்தரியின் - சிவகாம சுந்தரியினுடைய, பொற்கமல மலர் - பொன்போலும் சரணாரவிந்தங்களையும், அமரர் - தேவர்களுடைய, உறுசிறை - மிக்க சிறையை, மீட்டு - நீக்கி, அருளும் - திருவருள் செய்த, சண்முகன் - ஆறுமுகக்கடவுளுடைய, பொற்கமல மலர் - பொன்போலுஞ் சரணாரவிந்தங்களையும், அன்பாய்-மிக்க ஆவலோடு, தலைக்கு அணிவோம்-எமது சிரத்தின்கண் தரித்துக்கொள்வோம், எ-று.

சமயகுரவர் திருத்தொண்டர் இவர்கள் துதி.

*அன்புருவாந் திருநாவுக் கரசர்வெண்ணெய் நல்லூர்*
*ஆதிசைவ குலதிலக ராகியவன் றொண்டர்*
*என்புருவாக் கியஞான சம்பந்தரெழில்சேர்*
*ஏதமறு வேதமதை யின்றமிழா லுரைத்த*

இன்புருவா கியவாத வூரா றுபானோ
டியன்மூவர் முண்டகத்தா ளென்றலைமேற் கொண்டே
முன்புபெரி யோர்வகுத்த சாதகசா கரத்தில்
மொழிபொருளைச் சுருக்கிமுறை யேபுகலு வாமே.

(இ - ள்.) அன்பு உருவாம்-அன்பே திருமேனியாகக் கொண்ட, திருநாவுக்கரசர்-திருநாவுக்கரச ரென்னும் அப்பர் சுவாமிகள், வெண்ணெய் நல்லூர்-திருவெண்ணெய் நல்லூரிலிருந்த, ஆதிசைவ குலதிலகராகிய-ஆதிசைவ பிராமணகுல சிரேஷ்டராகிய, வன்றொண்டர் - சுந்தரமூர்த்திசுவாமிகள், என்பு - எலும்பை, உருவாக்கிய - நல்ல பெண்ணுருவாகச்செய்த, ஞானசம்பந்தர்-திருஞானசம்பந்த சுவாமிகள், எழில்சேர் - அழகுபொருந்திய, ஏதம் அறு - குற்றமற்ற, வேதமதை - இருக்கு முதலிய வேதங்களை, இன்தமிழால் உரைத்த - இனிய தமிழ் வேதமாகத் திருவாய்மலர்ந்தருளிய, இன்பு உருவாகிய-சுகமே சொரூபமாகிய, வாதவூரர்-மாணிக்கவாசக சுவாமிகள், அறுபானோடு இயன் மூவர் - அறுபத்துமூன்று நாயன்மார்கள், (ஆகிய இவர்களுடைய) முண்டகத்தாள்-தாமரை மலர்போலுந் திருவடிகளை, என்தலைமேல் கொண்டு - என்னுடைய தலையில் வைத்துக்கொண்டு, முன்பு - பூர்வத்தில், பெரியோர் வகுத்த - சோதிடத்தில் வல்லவர்களால் சொல்லப்பட்டிருந்த, சாதகசாகரத்தில் - சாதகமென்னும் சமுத்திரத்தில், மொழி - சொன்ன, பொருளை-சோதிட அரும் பொருளை, சுருக்கி-சுருக்கமாக்கி, முறையே-வரிசைக்கிரமமாக, புகலுவாம் - சொல்லுவோம், எ-று. (3)

ஆசிரிய வணக்கம்

வாமமுதற் பலசமய வகைநூலா கமங்கள்
மன்னுசிவ சமயசாஸ் திரவுண்மை பலவும்
தாமுமிக வுணர்ந்தடியார் பரிபாக மறிந்து
தயவுடனே திருநோக்காற் சஞ்சிதங்க ளகற்றி
ஓமவிதி யுஞ்சமய பேதமுத லுரைத்தே
ஓரெழுத்தி லைந்தெழுத்தி லுண்மையுமெய் யுயிர்க்குப்
பூமலிதன் சேவடியுங் காட்டியருள் வழங்கும்
புகழ்ஞான ப்ரகாசன் பொன்னடியைப் பணிவாம்.

(இ - ள்.) வாமமுதற் பலசமயவகைநூல் - வாமம் பசுபாதம் முதலிய உட்சமயம் ஆறின் நூல்களும், ஆகமங்கள் - இருபத்தெட்டு ஆகமங்களும், மன்னுசிவ சமய சாஸ்திர வுண்மை-நிலைபெற்ற சித்தாந்த வேதாந்த சாஸ்திரங்களும், (ஆகிய) பலவும்-எல்லாவற்றையும், தாமும் மிகவுணர்ந்து - நன்றாயாராய்ந்தறிந்து, அடியார் பரிபாகமறிந்து - தம்மிடத்து அடிமைப்பட்ட சீடர்களது பரிபக்குவத்தை யறிந்து, திருநோக்கால் - தமது கிருபாகடாட்சத்தால், தயவுடன்-மிக்க இரக்கத்துடன், சஞ்சிதங்கள் அகற்றி - சஞ்சித முதலிய வினைகளைநீக்கி, ஓம விதியும்-ஔபாசனக்கிரமத்தையும், சமயபேத

முதல்-சமயவேறுபாடுகளையும், உரைத்து-உபதேசித்து, ஓர் எழுத்தில் ஐந் தெழுத்தினுண்மையும் - ஒரு எழுத்தில் பஞ்சாக்ஷரங்களும் கூடியிருக்குந் தன்மையையும், மெய் உயிர்க்கு - உண்மையையுணர்ந்த சீவர்களுக்கு, பூமலி தன் சேவடியும்-அழகிய தம்முடைய திருவடியையும், காட்டி-விளக்கி,அருள் வழங்கும்-திருவருள் செய்கின்ற, புகழ் - கீர்த்தியையுடைய, ஞானப்பிரகா சன்-ஞானப்பிரகாசன் ஆங்ல என்னுந் திருப்பெயரினையுடைய எனது ஆசிரிய னது, பொன்னடியை பணிவாம் - பொன் போலுந்திருவடியை வணங்கு வோம், எ - று- (4)

## நூல் வரலாறு.

ஆதவன்புங் கவன்வேத வியாசன் பராசரனும்
அத்திரிரோ மசன்வசிட்ட னணிமரிசிதானும்
போதபௌ லகன்யவனன் சௌனன்மனு பிருகு
புகழ்சனக னங்கிரன் காசிபன்கார்க் கியனும்
ஓதியநா ரதன்முதலீ ரொன்பதின்மர் கூடி
உரைசெய்த நான்கிலக்கத் தைம்பதி னாயிரமாம்
நீதிபெறுஞ் சோதிடத்திற் றெரிந்தெடுத்த வுண்மை
நிறைந்தபொரு டனைக்கருத்தி னினைந்துமிகத் தானே.

(இ - ள்.) ஆதவன் நாரதன்-ஆதவன், புங்கவன், வேதவியாசன், பாரா சரன், அத்திரி, உரோமசன், வசிட்டன், மரிசி, பௌலகன், யவனன், சௌ னன், மநு, பிருகு, சனகன், ஆங்கிரன், காசிபன், கார்க்கியன், நாரதன், முதல்-முதலிய, ஈரொன்பதிமர் கூடி-பதினெண்பேர்களுஞ் சேர்ந்து, உரை செய்த நான்கு இலக்கத்துக்கு ஐம்பதினாயிரமாம் சொல்லிய நான்கு லட் சத்து ஐம்பதினாயிரம் சுலோகங்கொண்ட, நீதிபெறுஞ் சோதிடத்தில்-நியாய மாகிய சோதிடங்களில், தெரிந்தெடுத்த-நிச்சயித் தெடுக்கப்பட்ட, உண்மை நிறைந்த பொருள்தனை - பூர்த்தியாக மெய்யே விளங்குகின்ற பொருளை, கருத்தில் மிக நினைந்து-என்னுடைய மனத்தில் மிகுதியுஞ் சிந்தனை செய்து, எ - று.

இது முதல் நான்கு செய்யுட்கள் குளகம். (5)

தானசபதபசீல லோகித கோத் திரத்தான்
தழைவதிட்டைக் குடிமேவுஞ் சாமசமுத் திரமாம்
மானபரன் றிருமலையங் கார்துணை வன்மேவும்
மறைமுனியா ராவமுதின் வரமெனு நாரணையன்
தேனுலவு பொழில்வெதிரி வனப்பர மாநந்தன்
திருவருள் பெற்றிடுஞ் சிதானந்த சிவயோகி
ஞானபரன் றருவேதன் கீழமுத்தூர் மேவும்
நாரணைய ரிவர்மூவர் நவின்ற வடமொழியும்.

(இ-ள்.) தானசபதபசீல லோகித கோத்திரத்தான் - தருமம் செபம் தவம் ஆசாரம் முதலியன மிகுதியும் செய்துவராநின்ற லோகித கோத்திரத்திலே, தழைவதிட்டைக் குடிமேவும் - தழைந்த வதிஷ்டையர் குலத்திலே பிறந்தவராய், சாம சமுத்திரமாம் மானபரன் - சாமவேதத்தை யறவே கற்றுணர்ந்தவராய், திருமலையயங்கார் - இருந்த திருமலையயங்காரும், துணைவன் மேவும் மறைமுனியாராவமுதின் வரமெனு நாரணையன்-அவரது சகோதரரும் வேதவியாசரது வரப்பிரசாத மென்று சொல்லப்படுகின்றவருமாகிய நாராயண ஐயங்காரும், தேன் உலவுபொழில் வெதிரிவனப் பரமாநந்தன் திருவருள் போற்றிடும் - தேன் பொருந்திய சோலைசூழ்ந்த வெதிரீகாச்சிமரத்திற்குத் தலைவனது திருவருளைப்பெற்ற, சிதாநந்த சிவயோகி ஞானபரன்தரு - சிதாநந்தயோகியாரளித்த, வேதன் - பிரமகுலத்தவனை, கீழமுத்தூர் மேவும்-கீழ்முத்தூரில் வசிக்கின்ற, நாரணையர் - நாராயணஐயர், இவர் மூவர் - (ஆகிய) இவர்கள் மூவரும், நவின்ற வடமொழியும் - சொல்லியருளிய ஸமஸ்கிருத கிரந்தங்களையும், எ - று- (6)

இந்நூற்கு முதனூலாராய்ச்சி.

மொழிசுருதியாகமசாஸ் திரங்களுஞ்சோதிடத்தின்
  முறைகணிதபலபாக முழுவதுங்காவியமும்
ஒழியாதசமயசாஸ் திரதருக்கவிதியும்
  உணருமத்தியார்ச்சுனவே தியனுமுரைத்தருளும்
பழியாதபல்பாகஞ் சாதகதீபிகையும்
  பயிலரிட்டநவநீதம் பகர்நாதர்சிதமும்
அழியாதவட்டவயிர் வரியவிதிப்படியோ
  டலங்காரசாதகத்தி னடையுமிகவோர்ந்தே.

(இ - ள்.) மொழிசுருதி யாகமசாஸ்திரங்களும்-சொல்லப்பட்ட வேதம் ஆகமம் சாஸ்திரமாகிய இவைகளையும், சோதிடத்தின் முறைகணித பலபாக முழுவதும் காவியமும் - சோதிடஞ் சொல்லும் வரிசைக்கிரமம் கணிதப் பலன் சொல்லும் பாகங்கள் பெருநூல் முதலியவைகளையும், ஒழியாத சமய சாஸ்திர தருக்கவிதியும் - எத்தனைகாலம் கற்றாலும் நீங்குதலில்லாத சித்தாந்த சாஸ்திரங்கள் தருக்கங்கள் முதலியவைகளையும், உணரும் - கற்றுணர்ந்த, மத்தியார்ச்சுன வேதியன் - மத்தியார்ச்சுன வேதியன் என்போன், உரைத்தருளும் - சொல்லிய, பழியாத - குற்றமில்லாத, பலபாகம் சாதகதீபிகையும் பயில் அரிட்டம் நவநீதம் பகர் நாதர் சிதமும் - பலபாகம் முதலாகச் சொல்லப்பட்ட நூல்களையும், அழியாத - கெடாத, அட்டவயிச்வரிய விதிப்படியோடு - எட்டுவித வைஸ்வரியங்களை யெடுத்துக்காட்டும் விதியோடு, அலங்கார சாதகத்தின் அடையும் மிக ஓர்ந்து - சாதகாலங்காரத்தின் கிரமங்களையும் நன்றாயுணர்ந்து, எ-று. (7)

இதுவுமது.

ஓராசாரஞ்சாரா வளிபாராசரியம்
  உயருஞ்சந்தானதீ பம்ப்ரகசாதகமும்

சீராருஞ்சருவார்த்தம் பெறுசிந்தாமணியும்
செப்பியகேரளஞ் சம்புநாதமுதற்றெரிந்தே
பேராரும்பாவங்க டோறும்பலனைப்பிரித்துப்
பிறைகதிர்செவ்வாய்புந்தி பிருகுசனியரசன்
கூராரும்வாளரவு முதலோரைத்தொழுதே
கூறுகின்றேனவரருளைக் கொண்டுமிகுத்தானே.

(இ - ள்.) ஓராசாரம் சாராவளி பாராசாரியம் ஹோராசாரம் சாராவளியையும் பாராசரியத்தையும், உயரும் சந்தானதீபம் ப்ரகசாதகமும் - மேன்மையுடையதான சந்தானதீபத்தையும் ப்ருகத் சாதகத்தையும், சீர் ஆரும் சர்வ அர்த்தம் பெறு சிந்தாமணியையும் - சிறப்புப்பொருந்திய பலன்களை ஆழ்ந்த பொருளுடன் பெற்றிருக்கின்ற சிந்தாமணியும், செப்பிய கேரளம் சம்புநாத முதல் தெரிந்து - சொல்லிய கேரளஞ் சம்புநாத முதல் அந்நிய பாஷாநூல்களையு முணர்ந்து, பேர் ஆரும் பாவகங்கள் தோறும் பலனைப் பிரித்து-இன்னின்ன பாவகமென்று பேர் பெற்றிருக்கின்ற பன்னிரண்டு பாவகங்களின் பலன்களை யெல்லாம் பிரித்து, பிறை கதிர் செவ்வாய் புந்தி பிருகு சனியரசன் கூராரும் வாளரவு முதலோரைத் தொழுது - சந்திரன் முதலிய நவக்கிரகங்களைத் தொழுது, அவரருளை மிகக்கொண்டு - அந்நவக்கிரகங்களுடைய திருவருளை மிகுதியும் அடைந்து, கூறுகின்றேன்- இந்நூலைச் சொல்லுகின்றேன், எ - று. (8)

நூலின் பெயரும் உட்பொருளும.

கொண்டுதமிழ்ச்சாதகா லங்காரமெனப்பேர்
குறித்தரிட்டஞ்சுபம்ராஜ யோகமுமங்கிசையும்
மண்டியநட்பாட்சியுச்சம்பகைநீ சம்பலன்கள்
மருவுதிரேக்காணமுடன் மூலதிரிகோணம்
கண்டிடும்வேளைக்குணங்க ளோரைமகாதசையும்
காலசக்கரமுதலா வங்கிசையாஞ்சக்கரமும்
மிண்டியலக்கினமுதலாப் பன்னிருபாவகத்தில்
விரிந்தபலனிவைதெரிந்து விளம்பலுற்றவாறே.

(இ - ள்.) கொண்டு - மேலே சொல்லப்பட்ட நூல்களை யெல்லாம் ஆதாரமாகக் கொண்டு, அரிட்டம் சுபம் ராஜயோகம் அங்கிசை நட்பு ஆட்சி உச்சம் பகைநீசம் பலன்கள் மருவுதிரேக்காணம் மூலத்திரிகோணம் கண்டிடும் வேளைக்குணங்கள் ஓரை மகாதசையும் காலசக்கரமுதல் அங்கிசையாம் சக்கரமும்-அரிட்டமுதல் அங்கிசச்சக்கரம் வரையும், மிண்டியலக்கின முதலாப் பன்னிருபாவகத்தில் விரித்த பலன்-நெருங்கிய லக்கினமுதல் பன்னிரண்டு இராசிகளை யனுசரித்த பன்னிரண்டு பாவகத்திலும் சொல்லவேண்டிய பலன்களுமாகிய, இவை தெரிந்து - இவைகளையெல்லாம் நன்குவிளக்கி, தமிழ்ச் சாதகாலங்கார மெனப் பேர் விளம்பலுற்றவாறு - இந்நூற்குச் சாதகாலங்காரம் என்று பேரிட்டதாகும், எ - று. (9)

அவையடக்கமும் சோதிடக்கிரந்தமும்.

உற்றதொகைநான் கிலக்கத்தைம்பதினாயிரமென்
றுரைத்தவடமொழி வெற்பினொருகடுகினளவிற்
பெற்றிடுமங்கிச நூற்றிலொருபங்கின் பொருளைப்
பேருலகிற் சாதகாலங்கார மென்றே
வெற்றிசெறிசெந்தமிழை யுணர்ந்தருளும் பெரியோர்
வீற்றிருக்குஞ்சபைதனில்யான் விளம்பியபுன்மொழியிற்
குற்றமுரையார்கருணை புரிவரறியாத
குதலைமொழிக் குழவியின்சொற் குறித்தறிவார்போல.

(இ - ள்.) வெற்றிசெறி செந்தமிழை யுணர்ந்தருளும் பெரியோர் வீற்றிருக்குஞ் சபைதன்னில் - மிக்க ஜயத்தைப் பெற்றதாகிய இயற்றமிழ்க் கல்வியை நன்கு ஆராய்ந்தறிந்த பெரியோர்கள் கூடியிருக்கின்ற சபையின் கண், உற்ற தொகை நான்கிலக்கத் தைம்பதினாயிரம் என்றுரைத்த வடமொழி வெற்பின்-பொருந்திய நான்கு லட்சத்தைம்பதினாயிரமென்று சொல்லுந் தொகைச் சுலோகங்களையுடைய ஸமஸ்கிருத மலையின்கண், ஒரு கடுகினளவிற் பெற்றிடு மங்கிச நூற்றிலொரு பங்கி லொருபங்கின் பொருளை - ஒரு கடுகினளவில் நூறு பங்கிலொரு பங்கின் பொருள்களையே, பேர் உலகில் - இவ்வுலகத்தின் கண், சாதகாலங்காரம் என்று விளம்பிய புன் மொழியில் - சாதகாலங்கார மென்கிற பெரிய பேரை வைத்துச் சொல்லிய அற்ப சொற்களில், அறியாத குதலைமொழிக் குழவியின் சொற்குறித்தறிவார் போல - புத்தியறியாத குழந்தைகள் பேசுஞ் சொற்களில் குற்றம்பாராது குணங் கொள்வதுபோல, குற்றமுரையார் - யாதொரு குற்றத்தையு முரையாமல், கருணை புரிவர் - கிருபை செய்வர், எ - று. (10)

சாதகமென்ப தின்னதெனல்.

குறித்திடுசாதகமென்ப தவரவர் தம்வினையின்
குணங்களறிந்தயன் விதித்த கொள்கையுளதன்றே
மறித்துமவரவர்தமக்குவரும் பலபாவகத்தின்
வகையறிந்துபெரியோர்கள் வழுத்தியசொல்லதனைப்
பிறித்தறிந்துசுபம்வருமென் றுளமகிழ்ச்சிபொங்கப்
பின்னசுபம்வரிலதற்குப் பிரீதியென்கொலென்று
நெறித்தருமசாஸ்திரத்தின் சாந்திசெய்தேபின்னும்
நிறைந்தசுபம் பெறுவதற்கே நிகழ்த்தினர்சாதகமே.

(இ - ள்.) குறித்திடு சாதகம் என்பது - சாதகம் என்று சொல்லப்படுவது என்னவென்றால், அவரவர் தம் வினையின் குணங்களறிந்து அயன் விதித்த கொள்கையுளது அன்றே - ஜீவர்களின் வினைகளை யறிந்து அவ்வவர்களுக்குத் தக்கவாறு நன்மை தீமைகளை அநுபவிக்கும்படி பிரமதேவன் ஏற்படுத்திய அளவே யாகும், மறித்தும் அவரவர் தமக்குவரும் பல பாவகத்-

தின் வகையறிந்து - மீண்டும் அவரவர்களுக்கு வரும் பலன்களது பிரிவுகளை யறிந்து, பெரியோர்கள் வழுத்திய சொல்லதனைப் பிறித்தறிந்து-பெரியோர்களால் சொல்லப்பட்ட சோதிடங்களைப் பகுத்துணர்ந்து, சுபம் வரும் என்று உளம் மகிழ்ச்சி பொங்க-நன்மை வருமென்றால் மனஞ் சந்தோஷிக்கவும், பின் அசுபம் வரில் அதற்குப் பிரீதியென் கொல் என்று-பிறகே அசுபம் வருவதாயிருந்தால் அதற்குப் பிரீதியாது என, நெறித்தரும சாஸ்திரத்தின் விதிசாந்தி செய்து - தரும சாஸ்திரத்தில் சொல்லியபடியே சாந்தியாதிகள் செய்து, நிறைந்த சுபம் பெறுவதற்கே நிகழ்த்தினர் சாதகம் - பூரண நன்மையை யடைவதற்கே சாதக மென்பதைப் பெரியோர்கள் சொன்னதாகும்; எ - று. (11)

சாதகபலனெழுது முறை.

சாதகநற்பலன்வழுத்து முறைமையைக்கேண்மடவார்
தமக்குமணப்பொருத்த மதைத்தான்பார்க்குமந்தப்
போதுதசப்பொருத்தம்பார்ப் பதற்குமுன்னரச்சுப்
பொருத்தம்பார்ப்பதுபோலு முகூர்த்தங்கடமக்கே
ஓதியசக்கரந்தீட்டி பிராணனெடுவேளை
உணர்வதற்குமுன்விதித்த யுடுவுணர்தல்போலும்
நீதியுடன் பலபாகம் பார்ப்பதற்கு முன்னே
நிறைசீவன் றனையறிந்து நிகழ்த்துச் சாதகமே.

(இ - ள்.) சாதக நற்பலன் வழுத்து முறைமையைக்கேள் - சாதகமானது அவரவர்களுடைய பலாபலன்களைச் சொல்லுகின்ற தன்மையைக் கேள், மடவார் தமக்கு மணப்பொருத்தம்-பெண்களுக்கு விவாகப் பொருத்தம், அதைத்தான் பார்க்குமந்தபோது - அங்ஙனம் பார்க்கின்ற அக்காலத்தில், தசப் பொருத்தம் பார்ப்பதற்கு முன்னர் - தசப் பொருத்தம் பார்ப்பதற்கு முன்னரே, ரச்சுப் பொருத்தம் பார்ப்பதுபோலும் - கயிற்றுக் (கழுத்து) பொருத்தம் பார்ப்பதுபோலும், முகூர்த்தங்கள் தமக்கு - ஒவ்வொரு முகூர்த்தங்களுக்கும், ஓதிய சக்கரம் தீட்டி - சொல்லப்பட்ட சக்கரங்கீறி, பிராணனெடுவேளை உணர்வதற்கு முன் - ஆயுட்காலம் இவைகளைத் தெரிந்து கொள்வதற்கு முன், விதித்த உடு உணர்தல்போலும் - ஏற்படுத்தப்பட்ட நட்சத்திரத்தைத் தெரிந்து கொள்வது போலும், நீதியுடன் பலபாகம் பார்ப்பதற்கு முன்னே - கிரமப்படி பல பிரிவுக் கிரமங்களைப் பார்ப்பதற்கு முன்னர், நிறை ஜீவன் தனையறிந்து நிகழ்த்துக சாதகமே - ஆயுட்கால நிர்ணயத்தைத் தெரிந்து சாதகம் ஏற்படுத்தக் கடவர், எ - று. (12)

மாணுக்கன் விதி.

சாதகவா ரிதியதனிற் சிறுதிவலை யளவுஞ்
சாற்றுபல பாகமுறுந் தமிழ்ப்பனுவ லதனில்
ஓதியநற் பலனறிந்து பகர்வதற் கேயுரிய
உத்தமசற் குணம்பொறுமை யறிவுமறு நீதி

ஈதல்பலகலைதெரிவோன் பெரியோர்கடம்மை
எதிர்த்துவாதுரையாம லிணக்கமுடைய னுமாய்ச்
சீதநிறைமதிபோலு மமுதமிகுவார்த்தை
செறிந்திடுமாணாக்கனுக்கே செப்புவதுகுணமே.

(இ - ள்.) சாதகவாரிதியதனிற் சிறுதிவலையளவும் சாற்று-சாதக சாத்திரம் என்னும் கடலுள் சிறிய அலையளவும், பலபாகமுறும் தமிழ் பநுவல் தனில் ஓதிய-பலவகைப்பட்ட சந்தத்தமிழ்ப் பாடல்களாற் சொல்லப்பட்ட; நற்பலன் அறிந்து பகர்வதற்கு-நல்ல பலாபலன்களை யறிந்து சொல்வதற்கு. உரிய உத்தம சற்குணம் பொறுமை அறிவு மறுநீதி ஈதல் பலகலை தெரிவோன்-பொருந்திய உத்தம குணம் பொறுமை நல்ல அறிவு தரும சாஸ்திரப்படி நடத்தல் தானம் வழங்குதல் முதலிய காரியங்களை யுடைய பல சாஸ்திரங்களையும் ஆராய்வோனும், பெரியோர்கள் தம்மை எதிர்த்து வாதுஉரையாமல் இணக்க முடையனுமாய் - பெரியோர்களிடத்தில் அடங்கி நடப்பவனும், சீதநிறைமதிபோலும் அமுதமிகு வார்த்தை செறிந்திடும்-குளிர்ந்த சந்திரன்போலும் இனிய மிருது வசனங்கள் நிறைந்த, மாணாக்கனுக்கே செப்புவது குணம்-நல்ல சிஷ்யனுக்குச் சொல்வதே நன்மையாகும், எ - று. (13)

இலக்கினாதாரமும் கேள்வியும்.

செப்பியதோர்பலபாகம் பகர்வதற்கேயிரவி
தேசதேசத்தின்விழுச் சாயைதெரிந்தெண்ணித்
தப்பறவேகண்டருளுஞ் சரபிண்டத்தொகையின்
தகைமைபெறமருவியிலக் கினங்கடமையறிந்தே
ஒப்புடன்லக்கினசந்து கண்டாலக்காலை
உயர்கடிகாலக்கினசத் திகளுணர்ந்துகண்டு
விப்பிரர்சோதிடவல்லோர் சரணமதைப்போற்றி
விளம்பினர்க்குப்பலபாகம் விளங்குமிகத்தானே.

(இ - ள்.) செப்பியதோர் பலபாகம் பகர்வதற்கு-சொல்லப்பட்ட பலாபலங்களைச் சொல்லுவதற்கு, இரவிதேச தேசத்தின் விழுச்சாயை தெரிந்தெண்ணி-சூரியன் செல்லும் அக்ஷாம்சம் முதலிய தேசாந்தர சாயைப் படிகளைக் கணக்குப் பண்ணி, தப்பறக் கண்டருளுஞ் சரபிண்டத் தொகையின்-அதினால் காணப்படும் சரபிண்டத் தொகையின், தகைமைபெற-தன்மையை யுடைய, மருவி - புத்தி பொருந்தி, இலக்கினங்கள் தமையறிந்து - இலக்கின கணிதஞ் செய்து, ஒப்புடன் லக்கின சந்து கண்டால்-சமத்துவமாக நிலை லக்கின ஈறும் வரும் லக்கின முதலும் தம்முள் முரணுவதாகிய சந்து காணப்பட்டால், அக்காலை-அப்பொழுது, உயர்கடிகாலக்கின சுத்திகள் உணர்ந்து கண்டு - உயர்ந்த கடிகார ரீதியாய் லக்கினஸ்புடஞ்செய்து கண்டு, விப்பிரர் சோதிட வல்லோர் சரணமதைப் போற்றி - பிராமணர்கள் சோதிடத்தில்

வல்லவர்களாகிய அவர்களுடைய பாதம் போற்றி, விளம்பினர்க்கு-சொன்னவர்களுக்கு, பலபாகம் - பலாபலங்களது தன்மை, மிக விளங்கும் - மிகவும் நன்றாய் விளங்கும், எ - று. (14)

ஆக்கியோன் பெயர்.

விளங்கியதோர்சகாத்தமா யிரத்தைந்நூற்றின்மேல்
மேலெண்பத்தேழுவிசு வாவசுவாமாண்டில்
களங்கமிலாவடமொழியைத் தான்றெளிந்து கண்டு
காசினியில்சாதகா லங்காரமெனவே
வளங்குலவும்புகழ்பெறுநற் கீரனூர்வாழும்
வள்ளல்சேவடிநாதன் வரவுருவாய்வந்தோன்
உளங்களிகூர்ந்தருள்ஞான யோகநடாசன்
உரைத்தனனிப்பொருளுணர்ந்தோர்க் குண்மைதருந்தானே.

(இ - ள்.) விளங்கியதோர் சகாத்தமாயிரத்தைந்நூற்றின் மேல்மேலெண்பத்தேழு - விளங்குகின்ற சாலிவாகன சகாப்தம் 1587 - ல், விசுவாவசுவாம் ஆண்டில் - விசுவாவசு என்னும் வருஷத்தில், களங்கமிலா வடமொழியைத்தான் தெளிந்து கண்டு - குற்றமில்லா சம்ஸ்கிருத பாஷையிலிருப்பதை தெரிந்துகொண்டு, காசினியில் - இவ்வுலகத்தில், சாதகாலங்காரம் என - சாதகாலங்காரம் என்னும் இந்நூலை, வளங்குலவும் புகழ்பெறும் நல்கீரனூர் வாழும் வள்ளல் சேவடி நாதன் வரவுருவாய் வந்தோன்-வளப்பந்தங்கிய கீரனூரில் வாழும் வள்ளலானவனும் சேவடி நாதனது வரப்பிரசாதமே ரூபமாய் வந்தவனும், உளங்களி கூர்ந்தருள் ஞானயோக-மனங்களித்து அருள்கின்ற ஞானயோகங்களில் வல்லவனுமாகிய, நடராஜன்-நடராஜன் என்னும் பேருடையோன், உரைத்தனன்-சொன்னான், இப்பொருள்-இதில் சொல்லப்பட்ட விஷயங்களை, உணர்ந்தோர்க்கு-அறிந்துக்கொண்டவர்களுக்கு, உண்மை தரும்-(இந் நூலானது) உண்மையை விளக்கிக் காட்டும், எ - று. (15)

பொதுப்பாயிரம்
சம்பூரணம்.

# பொதுலட்சணம்

## துவாதச பாவக விவரம்.

## இலக்கின முதல்.

### முதலாவது பாவகம்.

சீர்பெறுஞ்சன்மலக்கினத்ததிபர் சேர்ந்தினிதிருந்திடுமந்தப்,
பேர்தருபலன்கண்மெய்ந்நிறஞ் சொரூபம்பெருநிதியுதரமத்தகமும்,
ஏர்பெறுமுபாங்கஞ்சிந்திதங்கிலேச மிலக்கணகீர்த்திமூர்த்திகளும்,
பார்தருஞ்சுபசந்தோஷமும்வயதும் பகர்தநுத்தானமென்றுரைக்கும்.

(இ - ள்.) சீர்பெறுஞ் சன்ம லக்கினத்ததிபர் - சிறப்புப் பொருந்திய ஜன்ம லக்கினாதிபதிகள், சேர்ந்தினிதிருந்திடும் - பொருந்திய நன்மையைக் கொடுத்திடும்படியான, அந்தப்பேர் தருபலன்கள் - அந்தப்பேரை விளக்கும் லக்கின ஸ்தான பலன்களாவன, மெய் - சரீரமும், நிறம் - காந்தியும், சொரூபம் - ரூபமும், பெருநிதி - செல்வமும், உதரம் - இரத்தமும், மத்தகமும் - சிரமும், ஏர்பெறு அழகிய, உபாங்கம் - பிரதியமிசமும், சிந்திதம் - நினைப்பும், கிலேசம்-மனவாட்டமும், இலக்கணம்-இலட்சணமும், கீர்த்தி - சிறப்பும், மூர்த்திகளும் - மூர்த்திகரமும், பார்தரும் - உலகத்தி லடைய வேண்டிய, சுபம் - சுபகாரியங்களும், சந்தோஷம் - சந்தோஷமும், பகர் வயது - ஆயுள் முதலியவை தெரியச் சொல்லுமிடத்து, தநுத்தானமென்று உரைக்கும் - முதற்றானங்க ளென்று நூற்களுரைக்கும், எ - று. (1)

இதற்கு இலக்கினபலனே சிறப்புலட்சணமாம்.

### இரண்டாவது பாவகம்.

உரைத்திடுஞ் சவுபாக்கியந்தனங்குடும்பமொளிசெறி நேத்திரம்
வித்தை, தரைப்பெருஞ்செல்வமுடன்புகல்வாக்கு சாத்திரக்கேள்வி
கண்முற்றும், விரைத்தெழுகமன மனமுமுத்தேச மேம்படவிரும்பு
செம்பொன்னும், நிரைத்திடு நவரத்தின மிரண்டிடத்தி னிலமை
கண்டுரைசெய்வர் நின்றே.

(இ - ள்.) இரண்டு இடத்தில் - இரண்டாவது வீட்டில், உரைத்திடுஞ் சவுபாக்கியம் - சொல்லுகின்ற பூரணபாக்கியமும், தனம்-செல்வமும், குடும்பம் - குடும்பமும், ஒளிசெறி நேத்திரம் - பிரகாசநிறைந்த நேத்திரமும், வித்தை - கல்வியும், தரைப்பெருஞ் செல்வமுடன் - உலகத்தின்கண் மிக்க நிதியும், புகல்வாக்கு - வசனமும், சாத்திரக்கேள்விகள் முற்றும் - சர்வ சாஸ்திர விசாரணையும், விரைத்தெழுகமனம் - விரைந்தெழுகின்ற கூடலும், மனம் - மனசும், உத்தேசம் - உத்தேசமும், மேம்பட விரும்பும் - மிகுதியாக இச்சிக்கின்ற, செம்பொன்னும் - பொன்னிதியும் (செல்வமும்),

நிரைத்திடு - வரிசைபடுத்துகின்ற, நவரத்தினம் - நவரத்தினமும், (ஆகிய இவைகளை) நின்று - நிதானித்தறிந்து, உரைசெய்வர் - (ஆன்றோர்) சொல்லுவார்கள், எ - று. (2)

இதற்கு நேத்திரபலனே சிறப்பு லட்சணமாம்.

## மூன்றாவது பாவகம்.

நின்றிடுமூன்றுமிடத்தினிற்பலன்க ணிருபாலுரை செய்யும் பலன்கள், வென்றிகொள்போக மடிமையாள்கானம் வீரியஞ்சத்துவந்துணைவர், பொன்றிடாதணியகாதுநோய்கன்ன பூடணம்புசித்திடுங்கலன்கள், துன்றுவிக்கிரமஞ்சேவகாவிருத்தி சூழ்தயிரியங்களுஞ் சொல்வர்.

(இ - ள்.) நின்றிடும் மூன்று ஆம் இடத்தில் - வரிசைக்கிரமமாக விருக்கின்ற மூன்றுமிடத்தைக் குறிக்குமிடத்தில், நிருபரால் உரைசெய்யும் பலன்கள் - அவர்களால் சொல்லுகின்ற பலன்கள், வென்றிகொள் போகம் - வெற்றி பெறுகின்ற போகமும், அடிமையாள்-ஆள் அடிமைகளும், கானம் - சங்கீதமும், வீரியம் - பராக்கிரமமும், சத்துவம்-பொறுமையும், துணைவர் - கனிஷ்ட சகோதரர்களும், பொன்றிடாதணிய காதுநோய் - நீங்காத ஆபரணமும் காது நோயும், கன்னபூடணம் - கர்ணபூஷணமும், புசித்திடும் கலன்கள் - சாப்பிடும் பாத்திரங்களும், துன்று விக்கிரமம் - நெருங்கிய வீரமும், சேவகா விருத்தி - உத்தியோகாபி விருத்தியும், சூழ்தயிரியங்களும் - கூடிய தயிரியங்களும், சொல்வர் - (ஆகிய இவைகளைப்) பலனாகச் சொல்லுவார்கள், எ - று. (3)

இதற்கு கனிஷ்டசகோதர பலனே சிறப்பு லட்சணமாம்.

## நான்காவது பாவகம்.

சொல்லியவித்தை வாகனஞ்சுபங்கள் சூழும்வியாபாரமு மனையும், வெல்லுமேம்பாடுஞ் சவுக்கியமன்னை விரும்புநல்லுறவினராகும், நல்லநிட்சேபம் பரவிஷயங்க ணறைகமழ்பாற் பசுகன்று, வல்லதோர் தேவதானமிப்பலனை வழுத்துநான் காமிடங்கொண்டே.

(இ - ள்.) நான்காம் இடங்கொண்டு - நான்காவது வீட்டைக்கொண்டு, சொல்லிய வித்தை - படிக்கின்ற கல்வியும், வாகனம்-வாகனமும், சுபங்கள்-சுபகாரியங்களும், சூழும் வியாபாரமும் - நெருங்கிய வியாபாரமும், மனையும் - வீடும், வெல்லு மேம்பாடும் - கீர்த்தியும், சவுக்கியம் - சௌக்கியமும், அன்னை - மாதுரும், விரும்பு நல்லுறவினர் ஆகும் - விரும்புகின்ற உறவினரும், நல்ல நிட்சேபம் - நல்ல புதையலும், பரவிஷயங்கள் - அன்னிய ஸ்திரீ புருஷ விஷயங்களும், நறை - சுகந்தமும், கமழ்பால் - (பசும்பால்) பாக்கியமும், பசுகன்று - பசுவும் கன்றும், வல்லதோர் - வலிவுடையதான, தேவதானம் - தேவாலயமும், இப்பலனை - (ஆகிய) இப்பலன்களை, வழுத்தும் - சொல்லக்கடவர், எ - று. (4)

இதற்கு மாதுரு பலனே சிறப்புலட்சண மாகும்.

ஐந்தாவது பாவகம்.

கொண்டதோர் மாமன்பிதாப் பெறும்புதல்வர் குலவுபூருவஞ் செய்புண்ணியமும், தண்டமிழ்வாணர் புகல்பிரபந்தந் தரித்திடுங் கர்ப்ப மந்திரங்கள், மிண்டியவித்தை விதரணம்புத்தி விரும்புமிப் பலனெலா மறிந்தே, கண்டுரைத்திடுவ ரைந்தாமிடங்கொண்டே கற்றுணர்ந்தருளு மாதவரே.

(இ - ள்.) கற்று உணர்ந்தருளும் மாதவர் - சோதிட நூலாராய்ச்சியில் வல்ல பெரியோர்கள், ஐந்தாம் இடங்கொண்டு - இலக்கினத்திற்கு ஐந்தாவது இடத்தைக்கொண்டு, கொண்டதோர் மாமன் - அம்மான் வர்க்கமும், பிதா - தந்தைவர்க்கமும், பெறும் புதல்வர் - பெறுகின்ற பிள்ளைகளும், குலவு பூருவம்செய் புண்ணியமும் - பூர்வ புண்ணியமும், தண்டமிழ் வாணர் புகல் பிரபந்தம் - இனிய தமிழ் பிரபந்தம் பெறலும், தரித்திடும் கர்ப்பம் - தங்கும் கர்ப்பமும், மந்திரம் - மந்திரங்களும், மிண்டிய வித்தை - சத்கால க்ஷேபமும், விதரணம் - விசாரணையும், புத்தி - புத்தியும், (ஆக) விரும்பு - விரும்பப்பட்ட, இப்பலனெலாம் - இப்படிப்பட்ட பலன்க ளெல்லாவற்றையும், அறிந்து - தெரிந்து, உரைத்திடுவர் - சொல்லுவர், எ - று. (5)

இதற்குப் புத்திர பலனே சிறப்புலட்சணமாம்.

ஆறுவது பாவகம்.

மாதுகேள்வியாதி சத்துருபீடை மற்றுமாயுதங்களா விரணம்
ஓதியஞாதியால்வரு துன்பம் யுத்தமெய்வாதை பொற்கண்டம்
பேதமாங்கள்வர் புனல்மடந்தையரால்பிறங்கு பாம்பாலுநோயுளது
நீதிசேர் பிரதானிக்கமுஞ்சிறையினிலைமையாறு மிடங்குறித்தே.

(இ - ள்.) மாதுகேள் - பெண்ணே கேட்பாயாக, ஆறும் இடங் குறித்து - ஆறுவது வீட்டைக்கொண்டு, வியாதி - வியாதியும், சத்துரு-பகையும், பீடை - துக்கமும், மற்றும் - இன்னும், ஆயுதங்களாய் இரணம் - ஆயுத காயங்களும், ஓதிய - சொல்லப்பட்ட, ஞாதியால்வரும் துன்பம் - தாயாதிகளால் உண்டாகும் வழக்கும், யுத்தம் - சண்டையும், மெய்வாதை - சரீரத்தில் நோயும், பொற்கண்டம் - பொல்லாத ஆபத்தும், பேதம் ஆம் - மாறுபாட்டையுடைய, கள்வர் - திருடரால் பயமும், புனல் - சலத்தாற் பயமும், மடந்தையரால் - பெண்களால் துக்கமும், பாம்பால் - பாம்பினால், நோய் - அபாயமும், உளது - உண்டாவதும், நீதிசேர், பிரதானிக்கமும் - அதிகாரஞ் செலுத்தலும், சிறையினிலைமை - சிறைப்படுவதுமாகிய பலன்களைச் சொல்வர், எ - று. (6)

இதற்குச் சத்துருபலனே சிறப்புலட்சணமாம்.

## ஏழாவது பாவகம்.

குறித்திடுங்கமன மணமடந்தையர்க்குங் குமரர்கடமக்கு நல் லின்பம், நிறுத்திடு விபகாரந்தமர்கூட நேமியோருதவி சன்மானம், பிறித்தறிவியாபாரம் மணம்புரிநாள்பின் மனையாள்வியந்பெறுதல், மறிக்கயல்விழியா யெழிடங்கொண்டு வழுத்துவர் மறைமொழிப் புலவர்.

(இ - ள்.) மறிக்கயல் விழியாய் - சுழல்கின்ற சேற்கண்டைபோலும் கண்களை யுடையவளே! மறைமொழிப் புலவர் - வேதவாராய்ச்சிசெய்த சோதிட வல்லவர்கள், ஏழிடங்கொண்டு-ஏழாவது ஸ்தானத்தைக்கொண்டு, குறித்திடும் - சொல்லப்பட்ட, கமனம் - கூடுதலும், மடந்தையர்க்கும்-பெண் களுக்கும், குமரர்கள் தமக்கும் - ஆடவர்களுக்கும், மணம் - விவாகமும், நல்லின்பம் - சந்தோஷமும், நிறுத்திடு - கொடுக்கின்ற, விபகாரம் விசார ணையும், தமர் கூட்டம் - சுற்றத்தார் கூட்டமும், நேமியோர் உதவு சன் மானம் - அரசர்கள் கொடுக்கும் வெகுமானமும், பிறித்தறி வியாபாரம் - கொள்ளல் விற்கலான வர்த்தகமும், மணம்புரிநாள் - கலியாணம் நடத்தும் போககாலமும், பின் - பிறகு, மனையாள் விடம் பெறுதல் - மனைவியின் வியோகமும், (ஆகிய இவைகளை) வழுத்துவர் - சொல்லுவர், எ - று. (7)

இதற்குக் களத்திரபலனே சிறப்புலட்சணமாம்.

## எட்டாவது பாவகம்.

புலவுறும்படையால் வாயுதஞ்சருயுத்தம் பொருப்பின்மேலேறி விழ்ந்திடுதல், நிலைபெறும்வியாதி விக்கினங்கிலேச நீள்பலதுன்ப மோடிரணம், செலவினனட்டம் விழுக்காடு செறிபகைமரணமித்த னையும், உலகினிலுயர்ந்தோ ரட்டமபலன்கண் டுரைசெய்வாருண்மை பெற்றிடவே.

(இ - ள்.) உலகினில் உயர்ந்தோர் - உலகத்தின்கண் பெரியோராயுள் ளோர், உண்மை பெற்றிட - உயிர்கள் உண்மை யறிந்து கொள்ளும்படி, அட்டம பலன் கண்டு - எட்டாவது வீட்டைக்கொண்டு, பலவுறும் படை யால் வாதை - ஆயுதங்களால் துன்பமும், சேரு யுத்தம்-யுத்தஞ் செய்வதும், பொருப்பின்மேல் ஏறி வீழ்ந்திடுதல் - மலையின் மேலேறி விழுதலும், நிலை பெறும் வியாதி - நிலைத்திருக்கும் வியாதியும், விக்கினம் - இடையூறும், கிலேசம் - கிலேசமும், நீள் பல துன்பம் - இன்னும் அநேக துன்பங்களும், இரணம் - இரணமும், செலவினால் நட்டம் - அதிக செலவினால் நட்டமும், விழுக்காடு - பெருமையும், செறிபகை - நெருங்கிய விரோதமும், மரணம் - மரணமும், (ஆகிய) இத்தனையும், இவைக ளெல்லாவற்றையும், உரை செய் வார் - சொல்லுவார்கள், எ - று. (8)

இதற்கு ஆயுட்பலனே சிறப்புலட்சணமாம்.

## ஒன்பதாவது பாவகம்

பெற்றிடுந்தந்தை மகம்பயில்கருமம் பெருமைசேர்பாக்கியமடங்கள், உற்றதோர் பரம புண்ணியக்குளமு முயர்திருப்பணி யுபதேசம், வெற்றிசேர்நீர்க்கா வணம்புகழ்கூபம் விரும்பியசெல்வமீதெல்லாம், கற்றறிந்தோர்க ளொன்பதாமிடத்தாற் கருணையும் பெறமொழிந்திடுவார்.

(இ - ள்.) கற்றறிந்தோர் - சோதிடநூலில் வல்லவர்கள், ஒன்பதாம் இடத்தால் - ஒன்பதாவது வீட்டைக் கொண்டு, பெற்றிடுந்தந்தை - பெற்றெடுத்த தகப்பனும், மகம் பயில் - யாகாதிகிருத்தியமும், தருமம் - தான தருமமும், பெருமைசேர் பாக்கியம் - கீர்த்தியும் செல்வமும், மடங்கள் - சத்திரம் சாவடிகளும், உற்றதோர் பரமபுண்ணியம் - மேலான புண்ணிய கருமமும், குளம் - தடாகமுண்டாக்கலும், உயர்திருப்பணி - தேவாலய பிரதிஷ்டையும், உபதேசம்-குருவினிடத்தில் உபதேசம்பெறலும், வெற்றிசேர் நீர்க்காவணம் - ஜெயம் பொருந்திய தண்ணீர்பந்தல், சோலைகள் வைத்தலும், புகழ் கூபம் - பெருமைக்கு கிணறு வெட்டுவித்தலும், விரும்பிய செல்வமீதெல்லாம் - இவைமுதல் இன்னும் நிலைத்த செல்வங்கள் யாவற்றையும் அநுபவித்தலும், கருணையும்பெற - ஜீவகாருண்ய முதலியவைகளை, மொழிந்திடுவார் - சொல்லுவார், எ-று. (9)

இதற்கு பிதிர்பலனே சிறப்பு லட்சணமாம்.

## பத்தாவது பாவகம்

மொழிந்திடும்பல புண்ணியம்புவியாளல் முயன்று பட்டணங் கூடாபித்தல், பொழிந்திடுங்கரும மிரக்கமெய்ஞ்ஞானம் பூசனைமனை பிதாப்பவங்கள், ஒழிந்திடுமினிய தேவதாபத்தி யுயர் சவுரியம் பிரதாபம், இழிந்திடுமிரவு கருப்பமூண்சுவையுமிவை பத்தாமிடப் பெயரென்னே.

(இ - ள்.) பத்தாம் இடப்பெயர்-பத்தாவதுவீட்டைக்கொண்டு சொல்லவேண்டிய பலன்கள், மொழிந்திடும் பல புண்ணியம் - சொல்லப்பட்ட அனேக தர்மங்களும், புவியாளல் - அரசாளுகிறதும், முயன்றுபட்டணங்கள் தாபித்தல் - முயற்சிசெய்து தன்பெயரால் பட்டணங்கள் உண்டாக்குவதும், பொழிந்திடும் - நிறைந்த, கருமம் - அவ்வியகவ்வியமும் (சத்கருமம் துற்கருமம்), இரக்கம் - தயையும், மெய்ஞ்ஞானப்பூசனை - ஞானம் தெய்வபூசையும், மனைவி - மனையாளும், பிதா - தகப்பனும், பவங்கள் - செய்பாவங்களும், ஒழிந்திடும் - ஒழித்தலும், இனிய - நல்ல, தேவதாபத்தி - தெய்வபக்தியும், உயர்சவுரியம் - உயர்ந்த பராக்கிரமும், பிரதாபம் - பிரதாபமும், இழிந்திடும்-இழிவாகிய, இரவு - இரவிற் சையோகமும் உத்தியோகமும், கருப்பம் - கர்ப்பமும், ஊண் - உணவும், சுவையும் - போஜனவிருத்தியும், (ஆகிய) இவை-இவைகளாகும், என்னே - என்றுசொல்லக் கடவாய், எ - று, (10)

இதற்கு கன்மபலனே சிறப்பு லட்சணமாம்.

## பதினோராவது பாவகம்.

*என்னுமூத்தவர் சேவித்திடும்பேர்க ளிளங்கொடிமனைவி பொன் வித்தை, மின்னியலாபம் பயிர் பரிவேழம் விளங்கு நல்லறிவு தண்டிகையும், உன்னியமனத்திற் றுக்கமுந்தீரு முத்தரீயஞ் செறிவகையும், பன்னியபதினோ ரிடங்கொண்டு பரிந்தருள்புரிவர் பாவலரே.*

(இ - ள்.) பாவலர் - சோதிடத்தில் வல்லவர்கள், பதினொராம் இடங்கொண்டு - பதினோராவது வீட்டைக்கொண்டு, என்னும் மூத்தவர்-ஜேஷ்ட சகோதரர்களும், சேவித்திடும் பேர்கள் - சேவை செய்யத்தக்கவர்களும், இளங்கொடி மனைவி - இளைய மனையாளும், பொன் - பொன்னும், வித்தை-வித்தையும், மின்னியலாபம் - லாபமும், பயிர் - பயிரும், பரி - குதிரையும், வேழம் - யானையும், விளங்கு நல்லறிவு - நல்லபுத்தியும், தண்டிகை - பல்லக்கும், உன்னியமனத்தில் - நினைக்கின்ற மனத்தின்கண், துக்கமுந்தீரும்-துன்பம் ஒழியும் விதமும், உத்தரீயம் - ஆடையானது, செறிவகையும் - நிறைந்த விதமும், (ஆகிய இவைகளை) பரிந்தருள்புரிவர் - விரும்பிச்சொல்வர், எ-று.

இதற்கு ஆதாயபலனே சிறப்பு லட்சணமாம்.

## பன்னிரண்டாம் பாவகம்.

*பாவமந்நிய தேசத்திலுத்தியோகம் பணச்செலவுடனுறும் போகம், மேவியசயனசவுக்கியம் விவாதம்விளைந்திடுந் தொழில் புரிகன்மம், ஆவதோர் தானம்புண்ணியந் தியாகமருண்மகஞ்சார் வதேவிருத்தி, சேவலங்கொடியோ னருளினாற்பெரியோர் செப்புவர் துவாதசபலனே.*

(இ - ள்.) பெரியோர் - சோதிடநூலில் வல்லவர்கள், துவாதச பலன் பாவம் - பன்னிரண்டாவது வீட்டின்பலன் பாவமும், அந்நியதேசத்தில் உத்தியோகம் - இதர தேசத்தில் உத்தியோகமும், பணச்செலவு-திரவிய செலவும், உறும்போகம் - அடையும் போகமும், மேவிய சயனசவுக்கியம் - நித்திரைச் சவுக்கியமும், விவாதம் - விவாதமும், விளைந்திடுந்தொழில்புரிகன்மம்-தொழிற்றுறைச் செய்கையும், ஆவதோர் - ஆவதாகிய, தானம் - தருமமும், புண்ணியம் - புண்ணியமும், தியாகம் - பரவுபகாரமும், அருள்மகம்-யாகாதி கிருத்தியமும், சார்வதேவிருத்தி - தொழில்வகைவிருத்தியும், (ஆகிய இவைகளை) சேவலங்கொடியோன் அருளினால் - முருகக் கடவுளின் கிருபையால், செப்புவர் - சொல்லுவார்கள், எ - று. (12)

இதற்குச் சயனபலனே சிறப்புலட்சணமாம்.

## பன்னிரண்டு பாவகங்களின் பொதுலக்ஷணம் சம்பூரணம்.

# காரககிரகங்கள்.

---

*சாற்றியபிதுர்கா ரகன்பகற்கிரவி சனிபிதுர்காரக னிசிக்குப்*
*போற்றியவன்னை காரகன்பகற்குப் புகர்நிசிக் கிந்துகாரகனும்*
*ஏற்றமாந்துணைவர் காரகன்செவ்வா யெழிற்சுதற் காரகனரசன்*
*ஆற்றியவாயுட் காரகன்சனியில் லாடனக்கே புகராமே.*

(இ - ள்.) சாற்றிய பிதுர்காரகன் பகற்கிரவி - சொல்லப்பட்ட பகலுக்குப் பிதுர்காரகன் சூரியனும், சனி பிதுர்காரகன்நிசிக்கு - இரவிற்குப் பிதுர்காரகன் சனியாம், போற்றிய வன்னைகாரகன் பகற்குப் புகர் - பகலுக்கு மாதுர்காரகன் சுக்கிரனும், நிசிக்கு இந்துகாரகனும் - இரவிற்கு மாதுர்காரகன் சந்திரனும், ஏற்றமாந் துணைவர் காரகன் செவ்வாய் - உயர்ந்த சகோதரகாரகன் அங்காரகனும், எழிற்சுதன் காரகன் அரசன் - அழகியபுத்திரகாரகன் குருவாம், ஆற்றிய ஆயுட்காரகன் சனி - பொறுக்கின்ற ஆயுள்காரகன் ச்னியாம், இல்லாள் தனத்துக்குப் புகராம் - களத்திரகாரகன் சுக்கிரனும், எ - று. (13)

*ஆனதோர்சரீர காரகன்வெய்யோ னங்கனைவாகன வகைக்கும்*
*தானுமேபிருகு காரகன்கன்மந் தனக்கெழிற் காரகனரசன்*
*கானமும்வித்தியா காரகன்புந்தி கனதனகாரகன் வேந்தன் [ப்பே.*
*தேனமர்மொழியா யிலக்கினாதியைப்போற் றெரிந்துகாரகர் பலன்செ*

(இ-ள்.) ஆனதோர் சரீரகாரகன் வெய்யோன் - எடுத்துள்ள உடலுக்குக் காரகன் சூரியனும், அங்கனை வாகன வகைக்குத் தானுமே பிருகு காரகன் - வாகன முதலியவற்றிற்குக் காரகன் சுக்கிரனும், கன்மந்தனக்கு எழிற்காரகன் அரசன் - கர்மத்திற்கு அழகிய காரகனுயுள்ளவன் குருவாம், கானமும் வித்தியாகாரகன்புந்தி - கானமும் வித்தைக்குங் காரகன் புதனும், கனதனகாரகன் வேந்தன் - செல்வத்திற்குக் காரகன் குருவாம், தேன் அமர்மொழிவாய் - தேன்போலும் ருசிக்குஞ் சொல்லையுடைய பெண்ணே! இலக்கினாதியைப்போல் - இலக்கின முதலிய பன்னிரண்டு பாவகங்களை யறிந்து பலன் சொல்லுவதுபோல், தெரிந்து - இவ்விஷயத்தையும் நன்று யறிந்து, காரகர் பலன் - காரக கிரகங்களா லுண்டாகும் பலாபலன்களை, செப்பு - நீ சொல்லுவாய், எ - று. (14)

## கிரக தேவதை

அதாவது இன்ன கிரகம் இன்ன தேவதை யாகுமெனல்.

வேறு.

ஆனவெள்ளிகுரு வயனுகுமே
வானவிந்தும்புதனு நன்மாயனும்
பானுஞ்சேயுஞ் சிவனெனப்பன்னுவர்
மானவந்நிய தேவதை மந்தனே.

(இ - ள்.) ஆனவெள்ளி குரு அயனும் - பொருந்திய சுக்கிரனும் குருவும் பிரமனுடைய அம்சமானவர்களும், வான இந்தும் புதனும் நல்மாயனும் - பெருமை பொருந்திய சந்திரனும் புதனும் விஷ்ணு அம்சமானவர்களும், பானும் சேயும் சிவன் எனவும் - சூரியனும் அங்காரகனும் சிவன் அம்சமானவர்களும், மான வந்நிய தேவதை மந்தன் - சநி அந்நிய தேவதையு மாவார்களென்று, பன்னுவர் - சோதிட நூல் வல்லவர் சொல்லுவார்கள், எ - று. (15)

கிரக வலிவு.

அதாவது இன்ன காலங்களில் இன்ன கிரகங்களுக்குப் பலம் அதிகம் எனல்

வேறு.

அடறக்கணயனத்தி லசுபர்க்குப்பலமதாகும்
வடதிக்கிற்பலனாநல்லோர்க்கு வளர்பக்கந்தனக்குமீதே
திடமுறுமமரபக்கந் தீயோர்க்குப்பலமதாகும்
படவரவல்குன்மாதே பலபாகம்விளம்புங்காலே.

(இ - ள்.) படவரவல்குல் மாதே-சர்ப்பத்தினது படம்போலும் நிதம்ப ஸ்தானத்தைப் பெற்றிருக்கின்ற பெண்ணே!, பலபாகம் விளம்புங்கால் - கிரகங்கள் செய்யும் பலா பலன்களைப் பிரித்துச் சொல்லின், அசுபர்க்கு - பாபக் கிரகங்களுக்கு, அடல்தக்கணயனத்திற் பலமதாகும் - பலம் பொருந்திய தட்சணயனமாகிய ஆடிமாத முதல் ஆறுமாதங்களும் பலமாகும், நல்லோர்க்கு - சுபக்கிரகங்களுக்கும், வடதிக்கில்-தைமாதமுதல் ஆறுமாதங்களாகிய உத்தராயணகாலத்திலும்,வளர்பக்கம் தனக்கும்-வளர்பிறைக் காலங்களிலும், பலன்-பலமாம், தீயோர்க்கு - பாபக்கிரகங்களுக்கு, திடம் உறும்-பலமுள்ளதாகிய, அமரபக்கம் - தேய்பிறையில், பலமதாகும் - பலமாம், எ - று. (16)

வேறு.

பொன்னும்புதனுமுதயத்திற் பொருந்தில்வலியரேயாவர்
மன்னுசனியுங்கரும்பாம்பும் வலியரத்தமனமாகில்
மின்னுங்கதிருங்குசனுச்ச மேவில்வலியர்விளம்புங்கால்
துன்னுமதிசுக்கிரனிர்க்கீழ்ச் சூழ்ந்தால்வலியராவரே.

(இ - ள்.) பொன்னு புதனும் உதயத்தில்பொருந்தில் வலியரே யாவர்-குருவும் புதனும் ராசிகளில் பிரவேசிக்கும்போது ஆரம்பத்திலேயே பலன்

கொடுப்பவராவார்கள், மன்னுசநியும் கரும்பாம்பும் அத்தமனமாகில் வலியர் - நிலைபெற்றசநியும் ராகு (கேதுக்) களும் அஸ்தமனமாகில் பலன் கொடுப்பவராவர்கள், மின்னுங் கதிருங்குசனும் உச்சமேலிடில் வலியர் - பிரகாசியா நின்ற சூரியனும் அங்காரகனும் உச்சமாகில் பலன் கொடுப்பவராவார்கள், துன்னும் மதிசுக்கிரன் நீர்க்கீழ் சூழ்ந்தால் வலியராவர் - சந்திரனும் சுக்கிரனும் ஜலராசியில் வலியவராவார்கள், எ - று. (17)

இன்ன கிரகத்திற்கு இன்னகிரகம் வலிவுடையதெனல்.

செய்யும்புந்திதனக்கதிகஞ் செவ்வாய்வலிதுசெவ்வாயில்
வெய்யசனியும்வலிவதனை விடவேயரசன்மிகவலியன்
துய்யவரசன்றனில்வெள்ளி வலியனவனிற்சோமன்மிகும்
பையசசிக்குக்கதிர்வலிது பானுவிற்பாம்பேவலிதே.

(இ - ள்.) செய்யும் புந்திதனக்கு செவ்வாய் அதிகவலிது - புதக்கிரகத்தைப் பார்க்கிலும் அங்காரகிரகம் வலியுடையதாம், செவ்வாயில் வெய்யசநியும் வலிவு-அங்காரககிரகத்தைப் பார்க்கிலும் சநிகிரகம் வலிவுடையதாம். அதனைவிட அரசன் மிகவலியன் - அந்தச் சநிகிரகத்தைப் பார்க்கிலும் குரு மிகவும் வலிவுடையவனுவான், துய்யவரசன்தனில் வெள்ளிவலியன் - அந்தக் குருவைப் பார்க்கிலுஞ் சுக்கிரன் மிகவும் வயலிவனும், அவனிற் சோமன் மிகும் - அவனைப் பார்க்கிலும் சந்திரன் வலிவுடையனுவான், பையசசிக்கு கதிர்வலிது - அந்தச் சந்திரனைப் பார்க்கிலும் சூரியகிரகம் வலிவுடையதாம், பானுவில் பாம்புவலிது - அந்தச் சூரியனைப் பார்க்கிலும் இராகு கேதுக்கள் வலிவுடையராவார்கள், எ - று. (18)

கிரகங்களுக்கு இன்னின்ன ஸ்தானங்களில் பலன் எனல்.

உச்சமுச்சாங்கிசைநல்லோருடனு நல்லோருடன்வீட்டும்
மெச்சுமுறவோருடனுமவர் வீட்டுமித்திராங்கிசையில்
அச்சமறவேயவர வருக்கநுசமானவாங்கிசையில்
இச்சையுடனேயுறிற்பலனு மிதனிற்பிழைத்தாலிலைப்பலனே.

(இ - ள்) உச்சம் உச்ச அங்கிசை - உச்சவீட்டிலும் உச்ச அங்கிசையிலும், நல்லோருடனும் நல்லோருடன் வீட்டும் - சுபக்கிரகங்களோடும் அவர்களுடைய ஆட்சிவீட்டிலும், மெச்சுமுறவோருடனும் அவர்வீட்டும் - நட்புக் கிரகங்களோடும் அவர்களுடைய ஆட்சிவீட்டிலும், மித்திராங்கிசையில் - நட்புக்குரிய அங்கிசையிலும், அச்சமறவே அவர் அவருக்கநுசமான அங்கிசையில் - அச்சமில்லாபடி அவரவர்களுக்கு ஆட்சியாக ஏற்படும் அங்கிசையிலும், இச்சையுடனே யுறின்பலனும் - விருப்பத்துடன் கிரகங்கள் இருக்குமானுல் அந்தச் சாதகன் நல்ல பலனையடைவான், இதனில் பிழைத்தால் பலன் இல்லை - இந்தக் கிரமப்படியில்லாவிடின் அந்தச் சாதகனுக்கும் பயனில்லை, எ - று. (19)

இன்னதானங்கள் இவ்வளவு பலனுடையவை யெனல்.

வேறு

உச்சமொன்றுடன் காலொன்றுகேந்திரம்
அச்சமுக்கா லதிபதியோர்பலம்
மெச்சுநட்புக் கரைப்பலமிக்ககால்
துச்சநீசர்பலனெனச் சொல்லுமே.

(இ - ள்.) உச்சம் ஒன்றுடன்கால் - உச்சஸ்தானத்தில் ஒன்றேகால் பலனும், ஒன்று கேந்திரம் - கேந்திரஸ்தானத்தில் முழுப்பலனும், அச்சம் முக்கால் - பகைஸ்தானத்தில் முக்காற்பலனும், அதிபதி யோர்பலம் - ஆட்சிஸ்தானத்தில் முழுப்பலனும், மெச்சு நட்புக்கரைபலம் - நட்புஸ்தானத்தில் அரைப்பலமும், துச்சநீசர் பலன் மிக்ககால்என - நீசஸ்தானத்தில்காற்பலமுமாகவே, (கிரகங்களுக் கேற்படுமென்று) சொல்லும் - நூற்கள் சொல்லாநிற்கும், எ - று. (20)

காலங்களில் வலிவுடைய கிரகங்கள்.

ஏந்துசெவ்வாய் சனியிந்திராப்பலன்
வேந்தனாதவன் வெள்ளிபகற்பலன்
போந்தபுந்திக்கெப் போதும்பலன்களாம்
கூந்தல்வேளிபக் குங்குமக்கொங்கையாய்.

(இ - ள்.) கூந்தல் வேள் இபக்குங்குமக் கொங்கையாய் - கூந்தலையும் பணைத்தெழுந்த ஸ்தனபாரங்களையு முடையவளே! ஏந்து செவ்வாய் சநி இந்து இராப்பலன் - சொல்லப்படுகின்ற அங்காரகன் சநி சந்திரன் இவர்களுக்கு இராக்காலத்திற் பலனும், வேந்தன் ஆதவன் வெள்ளி பகற்பலன் - குரு சூரியன் சுக்கிரன் இவர்களுக்குப் பகற்காலத்தில் பலனும், போந்த புந்திக்கு எப்போதும் பலன்களாம் - புதனுக்கு எக்காலத்திலும் பலனுண்டாம், எ - று. (21)

ஆயவோரைக் கதிபர்க்கதிற்பலன்
தூயவாரத் ததிபர்க்கதிற்பலன்
ஏயதிங்கட் கதிபர்க்கதிற்பலன்
காயும்வில்லிற் கதிர்ச்சுபனாவனே.

(இ - ள்.) ஆய ஓரைக்கதிபர்க்கு அதில் பலன் - அந்தந்த ஓரைக்குத் தலைவர்களுக்கு அவைகளில் பலனும், தூயவாரத்து அதிபர்க்கு அதில்பலன் - அந்தந்த வாரத்தலைவர்களுக்கு அந்தந்த வாரங்களிற் பலனும், ஏயதிங்கள் அதிபர்க்கு அதில் பலன் - பொருந்திய மாதங்களுக்குத் தலைவர்களுக்கு அந்தந்த மாதங்களிற் பலனும், கதிர்காயும் வில்லில் சுபன் ஆவன் - சூரியன் தநுர்மதியில் சுபக்கிரகமா யிருப்பான், எ - று. (22)

புதனுக்குச் சிறப்பு விதி.

ஆனபுந்தி சுபரோடடுத்திடில்
தானுநற்சுபனாகுவன் ரூழ்வுறும்

ஊனதீயருட னிருந்தால்விழி
மானனுயவன் மன்னுவன்றீயனுய்.

(இ - ள்.) ஆனபுந்தி சுபரோடு அடுத்திடில் தானும் நற்சுபனுகுவன் - புதன் சுபக்கிரகங்களுடன் கூடினுல் தானும் சுபனுவன், தாழ்வுறும் ஊன தீயருடன் இருந்தால் விழிமானன் ஆயவன் தீயனுய் மன்னுவன் - இழிந்த பாபக்கிரகங்களோடு சேர்வானுனல் அவனும் பாபியே யாவன், எ-று. (23)

கிரக சுபாசுபங்கள்.

நிறைமதியுந்தமனியனும் நிறைந்தசுபக்கிரகம்
நீர்சுங்கனுர்முக்காற் சுபக்கிரகம்புதனே
குறையுமரைச் சுபன்றேய்ந்த மதியுங்காற்சுபனும்
கூறுசனிபாம்புமுழுப் பாவிகளேசெவ்வாய்
அறையுமுக்காற் பாவிபரைப்பாவிகதிரவனு
பணிபாவருடன்கூடும்புதன் பிறைகாற்பாவி
இறைசனிபாம்புடன்கூடிற் சனிபோலப்பாவி
யிந்தமவாசியிற்புதனே டிருக்கமுக்காற்சுபனே.

(இ - ள்.) நிறைமதியும் - பூரணசந்திரனும், தமனியயனும் - குருவும், நிறைந்த சுபக்கிரகம் - முழு சுபக்கிரகங்களாம், நீள்சுங்கனுர் - சுக்கிரன், முக்கால் சுபக்கிரகம் - மூன்றுபங்குவரைக்கும் சுபக்கிரகமாம், புதன் - புதனவன், குறையும் அரைச்சுபன் - குறைந்ததாகிய இரண்டு பங்குவரைக்கும் சுபக்கிரகம், தேய்ந்தமதி - தேய்பிறைச் சந்திரனவன், கால்சுபன் - ஒருபங்குவரைக்கும் சுபக்கிரகமாம், கூறு - சொல்லப்படுகின்ற, சனி-சனீஸ்வரனும், பாம்பு - ராகு கேதுக்களும், முழுப்பாவிகளே - முழுமைக்கும் பாவக்கிரகங்களே யாவார்கள், செவ்வாய்-அங்காரகன், அறையும்-சொல்லுகின்ற, முக்கால் பாவி - மூன்று பங்குவரைக்கும் பாவக்கிரகமாம், கதிரவனும் - சூரியனும், அணி - வரிசையாகிய, பாவருடன் கூடும் - பாவக்கிரகங்களோடு கூடுகின்ற, புதன் - புதனும், அரைப்பாவி - இரண்டு பங்குவரைக்கும் பாபக்கிரகங்களாம், பிறை - பாவருடன் கூடிய தேய்பிறைச் சந்திரன், கால்பாவி - ஒருபங்குவரைக்கும் பாவக்கிரகமாம், இறை - குருவானவர், சனியுடன் - சனியினேடாவது, பாம்புடன் - இராகு கேதுக்களோடாவது, கூடின் - சேர்ந்தால், சனிபோல - சனி எப்படி முழுப்பாவியோ அப்படியே, பாவி - முழுப்பாவக்கிரகமாவார், இந்து - பூரணசந்திரனுனவன் அமாவாசியில் - அமாவாசைக்காலத்தில், புதனேடிருக்க-புதக்கிரகத்துடன் சம்பந்தப்பட்டால், முக்காற் சுபன் - மூன்று பங்குவரைக்கும் சுபக்கிரகமாவான், எ - று. (24)

இதில் பாம்பு என்று பொதுவாகச் சொல்லின்மையின் இராகு கேதுக்களிருவரையும், பிறை என்றதற்குத் தேய்ந்த சந்திரன் என்றும், இந்து என்றதற்கு வளர்ச்சந்திரன் என்றும் கொள்ளவேண்டும்.

## கிரக நட்பு.

ஆதவனுக்குறவு திங்கள் செவ்வாயும்பொன்னும்
அம்புலிக்குப்புதனுஞ் செங்கதிரிருவர்நேசம்
நீதிசெறிசேய்க்குறவுகுரு திங்கள்வெய்யோன்
நின்றபுதன்றனக்குச் சுக்கிரனிரவிநேசம்
ஓதியபொன்றனக்குறவாங் கதிர்திங்கள்செவ்வாய்
உயர்வெள்ளிக்குறவுசனியுடன் புந்தியிருவர்
பூதலமேற்சவுரிக்கே புதனுஞ்சுக்கிரனும்
பொருந்தியநல்லுறவென்றே போற்றிடுவார்புலவர்.

(இ - ள்.) ஆதவனுக்கு - சூரியனுக்கு, திங்கள் - சந்திரனும், செவ்வாய் - அங்காரகனும், பொன் - குருவும், உறவு - நட்புக்கிரகங்களால், அம்புலிக்கு - சந்திரனுக்கு, புதன் - புதனும், செங்கதிர் - சூரியனும், இருவர் - ஆகிய இருவரும், நேசம் - நட்புக்கிரகங்களாம், நீதிசெறி-நியாயம் நிறைந்த, சேய்க்கு - அங்காரனுக்கு, குரு - குருவும், திங்கள் - சந்திரனும், வெய்யோன் - சூரியனும், உறவு - நட்புக்கிரகங்களாம், நின்ற-நிலைபெற்ற, புதன் தனக்கு - புதனுக்கு, சுக்கிரன் - சுக்கிரனும், இரவி - சூரியனும், நேசம் - நட்புக்கிரகங்களாம், ஓதிய - சொல்லப்பட்ட, பொன் தனக்கு - குருவுக்கு, கதிர் - சூரியனும், திங்கள் - சந்திரனும், செவ்வாய்-அங்காரகனும், உறவு - நட்புக்கிரகங்களாம், உயர் வெள்ளிக்கு - உயர்ந்த சுக்கிரனுக்கு, சனியுடன் புந்தி யிருவர் - சனியும்புதனுமாகிய இருவரும், உறவு - நட்புக்கிரகங்களாம், பூதலமேல் - உலகத்தில், சவுரிக்கு - சனிக்கு, புதன் - புதனும், சுக்கிரன் - சுக்கிரனும், பொருந்திய நல் உறவு-நன்றாய் நெருங்கிய நட்புக்கிரகங்களாம், என்று - என்று, புலவர் - சோதிடநூல், வல்லவர்கள் போற்றிடுவர் - சொல்லுவார்கள், எ - று. (25)

## கிரக சமயம்.

போற்றியசெங்கதிர் தனக்குச்சமன்புந்தியொருவன்
புனிதமதிக்கிணைசெய்வாய் குருசனிசுக்கிரனே
எற்றசெவ்வாய்க்கிணை சனிசுக்கிரரிருவர்தாமே
யினியபுதற்குச்சமனுஞ் சனிசெவ்வாயரசன்
நாற்றிசையெண்ணரசனுக்கே சமன்சவுரியொருவன்
நலந்திகழ்சுக்கிரற்கிணைபொன் னவில்செவ்வாயிருவர்
தோற்றியிடுஞ்சனிதனக்கே சமனதாகவுமே
துய்யவியாழந்தனையே சொல்வர்மிகத்தானே.

(இ - ள்.) போற்றிய செங்கதிர் தனக்கு-சொல்லப்பட்ட சூரியனுக்கு, புந்தி ஒருவன் சமன்-புதன் ஒருவனே சமத்துவமுடையவனும், புனிதமதிக்கு-பரிசுத்தமான சந்திரனுக்கு, செவ்வாய் குரு சனி சுக்கிரன் - அங்காரகன், குரு-சநி, சுக்கிரன் (இவர்கள்), இணை-சமத்துவமுடையவர்களாம், எற்றசெவ்வாய்க்கு-தகுந்த அங்காரகனுக்கு, சநி-சுக்கிரர் இருவர்தாம் இணை-சநி சுக்கி

ரன் இவர்கள் இருவரே சமத்துவ முடையவராம், இனிய புதற்கு - நல்ல புத னுக்கு, சரி செவ்வாய் அரசன் சமன் ஆம் - சநி அங்காரகன் குரு (இவர்கள்) சமத்துவ முடையவராம், நால்திசை எண் அரசனுக்கு - நான்கு திசைகளி லுள்ளோராலும் நன்கு மதிக்கப்படும் குருவுக்கு, சவுரி ஒருவன் - சநி ஒருவனே, சமன் - சமத்துவ முடையவனும், நலம் திகழ் சுக்கிரற்கு - நன்மை விளங்கு கின்ற சுக்கிரனுக்கு, பொன் - குருவும், நவில் - சொல்லப்படுகின்ற, செவ் வாய் - அங்காரகன், இருவர் - ஆகிய இருவரும், இணை - சமத்துவமுடைய வர்களாம், தோற்றியிடும் சநி தனக்கு - தோற்றுகின்ற சநிக்கு, தூய்ய வியா ழம்தனை - பரிசுத்தமான குருவை, சமனதாக - சமத்துவமுடைய கிரகமாக, மிக - மிகுதியும், சொல்வர் - (சோதிடர்கள்) சொல்லுவார்கள், எ - று. (26)

கிரக பகை.

சொல்லிரவிக்குறுபகை சுக்கிரன்சனி யோடிருவர்
சோமனுக்குப்பகையில்லைச் சொல்லவுமெக்காலே
அல்லலறுஞ்செவ்வாய்க்குப் பகைபுத்தியொருவன்
ஆனபுந்திக்குற்றபகை யம்புலியொன்றாகும்
நல்லவியாழந்தனக்குப் புதன்வெள்ளிபகையாம்
நாடியசுக்கிரற்கிரவி நவிற்றிங்கள்பகையே
வல்லசனிதனக்கிரவி திங்களுடன்செவ்வாய்
மட்டுமேபகையென்று வழுத்துவரெக்காலும்.

(இ - ள்.) சொல் இரவிக்கு - சொல்லுகின்ற சூரியனுக்கு, சுக்கிரன் சனியோடு இருவர் - சுக்கிரன் சநி இவர்களிருவரும், உறுபகை - மிக்க பகைவர்களாம் (சத்துருக்களாம்), சோமனுக்கு - சந்திரனுக்கு, எக்காலும் சொல்லவும் - எந்த காலத்தில் சொல்லுவதானாலும், பகையில்லை - சத்து ருவே கிடையாது, அல்லல் அறும் செவ்வாய்க்கு - துன்பமற்ற அங்காரக னுக்கு, புத்தி ஒருவன் பகை - புதன் ஒருவனே சத்துருவாவான், ஆன புந் திக்கு - சொல்லப்பட்ட புதனுக்கு, அம்புலி ஒன்று ஆகும் - சந்திரன் ஒரு வனே சத்துருவாம், நல்ல வியாழம் தனக்கு-நல்ல குருவுக்கு, புதன் வெள்ளி பகையாம் - புதனும் சுக்கிரனும் சத்துருக்களாம், நாடிய சுக்கிரற்கு - அந்தச் சுக்கிரனுக்கு, நவில் இரவி திங்கள் பகை - சொல்லப்பட்ட சூரியனும் சந்திர னும் சத்துருக்களாம், வல்ல சநி தனக்கு வலிமையுள்ள சநிக்கு, இரவி திங்க ளுடன் செவ்வாய்மட்டுமே - சூரியன் சந்திரன் அங்காரகன் ஆகிய இவர்கள் மாத்திரமே, எக்காலும் - எக்காலத்திலும், பகையென்று - சத்துருக்க ளென்று, வழுத்துவர் - பெரியோர்கள் சொல்லுவார்கள், எ - று. (27)

நட்பு, ஆட்சி, உச்சம், பகை, நீசம் இவைகள் அறிவது.

இவை இன்ன ராசிக்கு இன்ன கிரகம் நட்பு இன்ன கிரகம் ஆட்சி என் பது முதலியவற்றை அறிவிப்பன.

## 1. மேஷத்திற்கு.

வெள்ளியும்புதனுநட்பு விளங்கியசெவ்வாயாட்சி
ஒள்ளியகதிரோனுச்ச முயர்சனிநீசமாகும்
தெள்ளியமதியோன்பொன்னன் சீரியராகுகேது
உள்ளுறும்பகையாமென்றே யோதினர்மேடத்தோற்கே.

(இ - ள்.) மேடத்தோற்கு - மேஷராசிக்கு, வெள்ளியும் புதனும் நட்பு- சுக்கிரனும் புதனும் மித்துருக்களாம், விளங்கிய செவ்வாய் ஆட்சி - அங்காரகன் சுயக்ஷேத்திராதிபதியாம், ஒள்ளிய கதிரோன் உச்சம் - சூரியன் உச்சஸ்தானமாம், உயர்சனி நீசமாகும் - உயர்ந்த சனிக்கு நீசஸ்தானமாகும், தெள்ளிய மதியோன் பொன்னன் சீரிய ராகு கேது உள்ளுறும் பகையாம் - சந்திரன் குரு ராகு கேது இவர்களுக்கு சத்துரு க்ஷேத்திரங்களாம், என்று - என்று, ஓதினர் - பெரியோர் சொன்னார், எ - று. (28)

இதன் விவரம்.

மேஷராசியானது சுக்கிரனுக்கும், புதனுக்கும் மித்துரு க்ஷேத்திரமென்றும், அங்காரகனுக்கு ஆட்சிஸ்தானமென்றும், சூரியனுக்கு உச்சஸ்தானமென்றும், சனிக்கு நீச்சஸ்தானமென்றும், சந்திரன், குரு, ராகு, கேது இவர்களுக்கு சத்துருக்ஷேத்திரமென்றும் கொள்ளவேண்டு மென்பது.

## 2. ரிஷபத்திற்கு.

சேய்சனிபுதன்பொன்னட்புச் சீரியபுகரோனாட்சி
தூயதோர்மதியேயுச்சந் துயர்தரும்பாம்புநீசம்
காய்கதிர்பகையேயாகும் கண்டனரிடபந்தன்னில்
ஓதியபொருள்களெல்லா முண்மையாயுரைக்கலாமே.

(இ - ள்.) இடபந்தன்னில் - ரிஷபத்திற்கு, சேய், சனி புதன் பொன் நட்பு - அங்காரகன் சனி புதன் குரு இவர்கள் மித்துருக்களாம், சீரிய புகரோன் ஆட்சி - சிறந்த சுக்கிரன் சுயக்ஷேத்திரனும், தூயதோர் மதியேயுச்சம் - பரிசுத்த மிக்கச் சந்திரன் உச்சனும், துயர்தரும் பாம்பு நீசம் - துன்பத்தை விளைப்பனவான இராகு கேதுக்கள் நீசர்களாம், காய்கதிர் பகையேயாகும் - சூரியன் சத்துருவாவனும், கண்டனர் - என்று பெரியோர் சொன்னார், (ஆனால்) ஓதிய பொருள்கள் எல்லாம் உண்மையாய் உரைக்கலாமே - சொல்லப்பட்ட கிரக கிரமங்களெல்லாம் உண்மையாய் உரைக்கக் கூடியனவே யாகும், எ - று. (29)

இதன் விவரம்.

ரிஷப விராசியானது அங்காரகன், சனி, புதன், குரு இவர்களுக்கு மித்துரு க்ஷேத்திரமென்றும், சுக்கிரனுக்கு சுயக்ஷேத்திரமென்றும், சந்திரனுக்கு உச்ச, ஸ்தானமென்றும், இராகு கேதுகளுக்கு நீச்சஸ்தானமென்றும், சூரியனுக்கு சத்துருக்ஷேத்திரமென்றும் கொள்ளவேண்டு மென்பது.

### 3. மிதுனத்திற்கு.

*சந்திரன்சனியேசுங்கன் றருங்குருசெவ்வாய்பாம்பு*
*முந்தியநட்பதாகு முனிவிலாப்புதனையாட்சி*
*உந்தியபரிவேடந்தா னுச்சமாம்வில்லுநீசம்*
*தந்திடுங்கதிரோன்மாற்றன் றாழ்விலாமிதுனத்தோற்கே.*

(இ - ள்.) தாழ்விலா மிதுனத்தோற்கு - இகழ்ச்சியை யடையாத மிதுனத்திற்கு, சந்திரன் சனி சுங்கண் தரும் குரு செவ்வாய் பாம்பு முந்திய நட்பதாகும் - சந்திரன் சனி சுக்கிரன் குரு செவ்வாய் ராகு கேது இவர்கள் நண்பர்களாம், முனிவு இல்லாத புதன் ஆட்சி - கோபமற்ற புதன்சுயக்ஷேத்திரக்காரனும், தந்திடுங்கதிரோன் மாற்றன் - சூரியன்சத்துருவாவன், எ-று.

இதன் விவரம்.

மிதுனராசியானது சந்திரன், சனி, சுக்கிரன், குரு, அங்காரகன், ராகு, கேது இவர்களுக்கு மித்துருக்ஷேத்திரமும், புதனுக்கு ஆட்சிஸ்தானமும், சூரியனுக்கு சத்துருஸ்தானமுமா மென்பது. (30)

### 4. கடகராசிக்கு.

*மேதையேநட்புதிங்கள் விளங்கியவாட்சியாகுஞ்*
*சீதையேபொன்னோனுச்சஞ் சிறந்திடுஞ்செவ்வாய்நீசம்*
*ஓதியகதிரோன்சுங்க னோங்கியராகுமந்தன்*
*போதவேபகையாமென்று போற்றினார்கடகத்தோற்கே.*

(இ - ள்.) கடகத்தோற்கு - கடக லக்கினத்திற்கு, மேதை - புதன், நட்பு - மித்துருவாம், திங்கள் - சந்திரன், விளங்கிய ஆட்சியாகும் - விளங்கப்பட்ட சுய க்ஷேத்திரனும், சீதையே - இலக்குமி போன்ற பெண்ணே!, பொன்னோன் - குரு, உச்சம் - உச்சனும், சிறந்திடும் செவ்வாய் - சிறந்த அங்காரகன், நீசம் - நீசமாம், ஓதிய - சொன்ன, கதிரோன் சுங்கன் ஓங்கிய ராகு மந்தன் போதவே பகையாம் - சூரியன் சுக்கிரன் ராகு சனி இவர்கள் சத்துருக்களாம், என்று போற்றினர் - என்று பெரியோர்கள் சொன்னார்கள், எ - று.

இதன் விபரம்.

கடகலக்கினமானது புதனுக்கு நட்புஸ்தானமும், சந்திரனுக்கு சுய க்ஷேத்திரமும், குருவுக்கு உச்சஸ்தானமும் செவ்வாய்க்கு நீசஸ்தானமும், சூரியன், சுக்கிரன், ராகு, சனி இவர்களுக்குப் பகையுமாமென்று கொள்ளல் வேண்டு மென்க. (31)

### 5. சிங்கவிராசிக்கு.

*அந்தணனுறவதாகு மருங்கதிராட்சியாகும்*
*முந்தியதாமனுச்ச முனிவிலாநீசநுட்பம்*

மந்தனே புகரோனாதிவணிகனே யரவே திங்கள்
தந்திடும் பகையே சிங்கந் தனக்கெனச் சாற்றினாரே.

(இ - ள்.) சிங்கந்தனக்கு - சிங்கராசியற்கு, அந்தணன் உறவதாகும் - குருமித்துருவாவன். அருங்கதிர் ஆட்சியாகும் - சூரியன் சுயக்ஷேத்திரனாவன், முந்தியதாமன் உச்சம் - முற்பட்டஅமனானவன் உச்சனானவன், முனிவிலாநீசம் நட்பம் - அற்பநீசனுமாவான், மந்தனே புகரோனாதிவணிகனே யரவே திங்கள் தந்திடும் பகையே - சனி, சுக்கிரன், புதன், செவ்வாய், ராகு, கேது, சந்திரன் ஆகிய இவர்கள் சத்துருக்களாவார்கள், எனச்சாற்றினார் - என்று சொன்னார்கள், எ - று.

இதன் விவரம்.

சிங்கலக்கினமானது குருவுக்கு மித்துரு க்ஷேத்திரமும், சூரியனுக்கு சுயக்ஷேத்திரமும், அமனுக்கு உச்சஸ்தானமும், மற்றைய கிரகங்களுக்கு சத்துரு ஸ்தானமுமாம் எனக் கொள்ளவேண்டும். (32)

6. கன்னிராசிக்கு.

திங்களோடரவுசெவ்வாய் செம்பொன்னேமந்தனின்னோர்
தங்கியவுறவதாகுஞ் சாற்றியபுதனேயாட்சி
பொங்கியபுதனேயுச்சம் புகரவனீசமாகும்
செங்கதிர்பகையேயாகுந் தெரிவையற்கென்றுசெப்பே.

(இ - ள்.) தெரிவையற்கு - கன்னியாராசிக்கு, திங்களோடு அரவுசெவ்வாய்செம்பொன்னேமந்தன் இன்னோர் தங்கிய உறவதாகும் - சந்திரன் ராகு கேது அங்காரகன் குரு சனி இவர்கள் நட்பினவராவார், சாற்றிய புதனே யாட்சி பொங்கிய புதனே உச்சம் - புதனானவன் சுயக்ஷேத்திரனும் உச்சனுமாவான், புகரவன் நீசமாகும் - சுக்கிரன் நீசனாவான், செங்கதிர்பகையேயாகும் - சூரியன் சத்துருவாவான், என்று செப்பு - என்று சொல்லுக, எ-று.

இதன் விவரம்.

கன்னியாராசிக்கு சந்திரன், ராகு, கேது, அங்காரகன், குரு, சனி இவர்கட்கு நட்பு க்ஷேத்திரமும், புதனுக்கு சுயக்ஷேத்திரமும், உச்சக்ஷேத்திரமும், சுக்கிரனுக்கு நீச க்ஷேத்திரமும், சூரியனுக்கு சத்துரு க்ஷேத்திரமுமாம் எனக்கொள்ளவேண்டு மென்க. (33)

7. துலாராசிக்கு.

பண்டிதன்பொன்னனங்கி பாம்புடனிடர்கடாமும்
தண்டிடாவுறவாமாட்சி தரும்புகருச்சங்காரி
வண்டமிழ்க்கதிரோனீசம் வாழ்மதிபகையதென்று
கொண்டதோர் துலாத்தினோர்க்குங்கூறலாங்கோதைமாதே.

(இ - ள்.) கோதைமாதே - (கூந்தலின்கண்) புஷ்பமாலையைத் தரித்திருக்கின்ற பெண்ணே!, கொண்டதோர் துலாத்திற்கு - எடுத்துக்கொண்ட ஒப்பற்ற துலாத்திற்கு, பண்டிதன் பொன்னன் அங்கி பாம்புடன் இவர்கள் தாமும் நண்படா உறவாம் - புதன் குரு அங்காரகன் ராகு கேது ஆகிய இவர்கள் நட்பினராவார், தரும் புகர் ஆட்சி - சுக்கிரன் சுயக்ஷேத்திரனாவான், காரி உச்சம் - சனி உச்சனாவான், வண்தமிழ்க்கதிரோன் நீசம் - வளப்பம் பொருந்திய தமிழில் வல்ல சூரியனானவன் நீசனாவான், வாழ்மதி பகை - சந்திரன் சத்துருவாவான், என்று கூறலாம் - என்று சொல்லலாம், எ - று.

இதன் விவரம்.

துலாராசியானது புதன், குரு, அங்காரகன், ராகு, கேது இவர்களுக்கு மித்துருக்ஷேத்திரமும், சுக்கிரனுக்கு சுயக்ஷேத்திரமும், சனிக்கு உச்சக்ஷேத்திரமும், சூரியனுக்கு நீசஸ்தானமும், சந்திரனுக்கு சத்துரு க்ஷேத்திரமுமாம் எனக் கொள்ளவேண்டுமென்க. (34)

## 8. விருச்சிகத்துக்கு.

பணிமகன்சுக்கனட்புப் பார்மகனாட்சிபாம்பு
முனிவிலாவுச்சமாகு முழுமதிநீசமாகும்
இனியனேயருக்கன்பொன்னு நீலனும்பகையதென்றே
முனிவிலாத்தேளினுற்கே முறைமையாய்மொழிவர்மாதே.

(இ - ள்.) மாதே - பெண்ணே! முனிவிலாத்தேளினற்கு - கோபமற்ற விருச்சிகத்திலுள்ளாற்கு, பணிமகன் சுக்கன் நட்பு - புதன் சுக்கிரன் இவர்கள் மித்துருக்களாவார்கள், பார்மகன் ஆட்சி - அங்காரகன் சுயக்ஷேத்திரனாவான், பாம்பு முனிவிலா உச்சமாகும் - இராகு கேதுக்களிருவரும் திங்கு விளைக்கக்கூடாத உச்சராவார்கள், முழுமதி நீசமாகும் - சந்திரன நீசமாவான், இனியனே அருக்கன் பொன்னும் நீலனும் பகை - சூரியனும் குருவும் சனியும் பகைவர்களாவார்கள், என்று மொழிவர் - என்று சொல்லுவார்கள், எ - று.

இதன் விவரம்.

விருச்சிகராசியானது புதன், சுக்கிரன் இவர்களுக்கு மித்துருஸ்தானமும் அங்காரகனுக்கு சுயக்ஷேத்திரமும், இராகு கேதுக்களுக்கு உச்சஸ்தானமும், சந்திரனுக்கு நீசஸ்தானமும், சூரியனுக்கும், குருவுக்கும், சனிக்கும் சத்துரு க்ஷேத்திரமுமாகுமென்று அறிந்துகொள்ளவேண்டுமென்பது. (35)

## 9. தநுசுராசிக்கு.

பகலவன்புகரோன்காரி பாம்புநற்புதனேயிந்து
இகலிலாவுறவதாகு மிறைவனேயாட்சியாகும்

நலமிகுசிலேயேயுச்ச நாட்டியவட்டநீசம்
நிலமகன்பகையேயாகு நெடியதோர்தனுவினுற்கே.

(இ - ள்.) நெடியது ஓர் தநுவினுற்கு - ஒப்பற்ற தநுராசியிலுள்ள வற்கு, பகலவன் புகரோன் காரி பாம்பு நற்புதன் இந்து இகல் இல்லாத உறவதாகும் - சூரியன் சுக்கிரன் சநி இராகு கேது புதன் சந்திரன் இவர்கள் மித்துருக்களாவார்கள், இறைவன் ஆட்சியாகும் - குரு சுயக்ஷேத்திரனுவான், நலமிகுசிலேயே யுச்சம் - நன்மை மிகுந்த உயர்ந்த அத்தநுவிற்கே, நிலமகன் பகையே யாகும் - அங்காரகன் சத்துருவாவான், நாட்டிய அட்டம் நீசம் - (அவனுக்கே) இதற்கட்டம ஸ்தானம் அதாவது கடகம் நீசமுமாகும், எ - று.

இதன் விவரம்.

தநுசானது சூரியன், சுக்கிரன், சநி, இராகு, கேது, புதன், சந்திரன் இவர்கட்கு மித்துருஸ்தானமும், குருவுக்கே சுயக்ஷேத்திரமும், செவ்வாய்க்கு பகையும், அதற்கட்டமஸ்தானமாகிய கடகமும் நீசஸ்தானமுமா மென்றறிய வேண்டு மென்பது. (36)

10. மகரத்துக்கு.

பண்டிதனேடுசுங்கன் பாம்புடனுறவதாகும்
மண்டியசனியேயாட்சி மங்கலனுச்சனுகும்
கொண்டதோர்குருவேநீசங் கூறியகதிரோன்றிங்கள்
கொண்டநற்பகையேயாகுங் காட்டியமகரத்தோற்கே.

(இ - ள்.) காட்டிய மகரத்தோற்கு - சொல்லப்பட்ட மகரத்திற்கு, பண்டிதனேடு சுங்கன் பாம்புடன் உறவதாகும் - புதன், சுக்கிரன், இராகு, கேது இவர்கள் மித்துருக்களாவார்கள், மண்டிய சநியேயாட்சி - மிகுந்த சநி சுயக்ஷேத்திரனுவான், மங்கலன் உச்சனுகும் - அங்காரகன் உச்சனுவான், கொண்டதோர் குருவே நீசம் - எடுத்துக்கொண்ட குரு நீசமாவான், கூறிய கதிரோன் திங்கள் கண்ட நற்பகையே யாகும் - சொல்லிய சூரியனும் சந்திரனும் சத்துருக்களாவார்கள், எ - று.

இதன் விவரம்,

மகர லக்கினமானது புதன், சுக்கிரன், இராகு, கேது, இவர்களுக்கு மித்துரு க்ஷேத்திரமும், சநிக்கு சுயக்ஷேத்திரமும், அங்காரகனுக்கு உச்சஸ்தானமும், குருவுக்கு நீசஸ்தானமும், சூரிய சந்திரர்களுக்கு சத்துரு க்ஷேத்திரமாமென் றறியவேண்டு மென்பது. (37)

11. கும்பத்துக்கு.

என்றுமூாய்புதனும்வெள்ளி யிறைவனேயுறவதாகும்
திண்டிறற்சனியேயாட்சி செப்பியநுட்பமுச்சம்

கண்டதோர் தூமனீசங் கலைமதிபுவிசேய்பாம்பு
கொண்டநல்பகையேயாகும் குறித்திடுங்கும்பத்தோர்க்கே.

(இ - ள்.) குறித்திடும் கும்பத்தோர்க்கு - சொல்லப்படுகின்ற கும்பத்திற்கு, என்றூழ் ஆய்புதனும் வெள்ளி இறைவனே உறவதாகும் - சூரியன், புதன், சுக்கிரன், குரு இவர்கள் மித்துருவாவார்கள், திண்திறல் சநியேயாட்சி - மிக்க வலிய சநி சுயக்ஷேத்திரனுவான், செப்பிய நுட்பம் உச்சம் - சொல்லிய நுண்ணிய உச்சனுமாவான், கண்டதோர் தூமன் நீசம் - காணப்பட்ட தூமன் நீசனுவான், கலைமதி புவிசேய் பாம்பு கொண்ட நல்பகையேயாகும் - சந்திரன், அங்காரகன், இராகு, கேது இவர்கள் சத்துருக்களாவார்கள், எ - று.

இதன் விவரம்.

கும்பலக்கினமானது சூரியன், புதன், சுக்கிரன், குரு இவர்களுக்கு மித்துரு க்ஷேத்திரமும், சநிக்கு சுயக்ஷேத்திரமும் உச்சஸ்தானமுமாகும்; தூமனுக்கு நீசஸ்தானமும், சந்திரன், அங்காரகன், இராகு, கேதுக்களுக்குச் சத்துரு க்ஷேத்திரமுமாமென் றறியவேண்டு மென்பது. (38)

## 12. மீனத்துக்கு.

அரவொடுசனியேதிங்க ளருக்கனேயுறவதாகும்
பரவியகுருவேயாட்சி பார்க்கவ னுச்சனுகும்
தரைமகிழ்புதனேநீசன் றரைமகன்பகையதாகும்
கரவிலாக்கயலினுற்கே கனங்குழைமடந்தைகேண்மோ.

(இ - ள்.) கனங்குழை மடந்தை கேண்மோ - கட்டுவிட்டொளிருங் குழை பூண்ட நங்காய் கேள்!, கரவு இல்லாக் கயலினுற்கு - வஞ்சகமில்லாத மீனத்திற்கு, அரவொடு சநியேதிங்கள் அருக்கனே உறவதாகும் - இராகு, கேது, சநி, சந்திரன், சூரியன் இவர்கள் மித்துருக்களாவார்கள், பரவிய குருவேயாட்சி - பரவுகின்ற குரு சுயக்ஷேத்திரனுவான், பார்க்கவன் உச்சனுகும் - சுக்கிரன் உச்சனுவான், தரைமகிழ் புதனே நீசன் - உலகத்தாரால் மகிழப்படுகின்ற புதன் நீசனுவான், தரைமகன் பகையதாகும் - அங்காரகன் சத்துருவாவான், எ - று.

இதன் விவரம்

மீனராசியானது இராகு, கேது, சநி, சந்திரன், சூரியன் இவர்களுக்கு மித்துரு க்ஷேத்திரமும், குருவுக்கு சுயக்ஷேத்திரமும், சுக்கிரனுக்கு உச்சஸ்தானமும், புதனுக்கு நீசக்ஷேத்திரமும், அங்காரகனுக்கு சத்துரு க்ஷேத்திரமுமாமென் றறிய வேண்டு மென்பது. (39)

## துளிகன் வேறு

களிப்பானகுளிகன்வகை பார்த்திடுவாய்மின்னே
கதிரவனுக்கிருபத்தா றுமிரவிற்பத்தாம்

மிளிர்திங்க ளிருபத்திரண்டிரவிலாறும்
மேற்செவ்வாய் பதினெட்டா நிசியினிரண்டாம்
ஒளிர்புதனுக் கீரேழா மிரவிருபத்தாறும்
ஓதுகுருபத்திரவி லுயரிருபானிரண்டாம்
குளிர்வெள்ளிக்கிருமூன்று மாலைபதினெட்டாம்
கூறுசனிக்கோரிரண்டா மேழிரண்டா நிசிக்கே.

(இ-ள்.) களிப்பான குளிகன்வகை பார்த்திடுவாய் மின்னே-பெண்ணே! சந்தோஷத்தைக் கொடுக்கின்ற குளிகைக்காலத்தைச் (சொல்லுகின்றேன்) பார், சுதிரவனுக்கு இருபத்தாறும் இரவிற் பத்தாம் - ஞாயிற்றுக்கிழமைக்குப் பகலில் இருபத்தாறு நாழிகைவரைக்கும், இராத்திரியிற் பத்துநாழிகை வரைக்குமாம்; மிளிர் திங்கள் இருபத்திரண்டு இரவில் ஆறும் - விளங்குந் திங்கட்கிழமைக்குப் பகலில் இருபத்திரண்டு நாழிகை வரைக்கும், இராத்திரியில் ஆறு நாழிகை வரைக்குமாம், மேல் செவ்வாய் பதினெட்டாம் நிசியில் இரண்டாம் - செவ்வாய்க் கிழமைக்குப் பகலில் பதினெட்டு நாழிகை வரைக்கும், இராத்திரியில் இரண்டு நாழிகைவரைக்குமாம்; ஒளிர் புதனுக்கு ஈரேழாம் இரவிருபத்தாறும் - விளங்கும் புதன் கிழமைக்குப் பகலில் பதினான்கு நாழிகைவரைக்கும், இராத்திரியில் இருபத்தாறு நாழிகைவரைக்குமாம்; ஓது குருபத்து இரவில் உயர இருபானிரண்டாம் - வியாழக்கிழமைக்குப் பகலில் பத்து நாழிகை வரைக்கும் இராத்திரியில் இருபத்திரண்டு நாழிகைவரைக்குமாம்; குளிர்வெள்ளிக்கிருமூன்று மாலை பதினெட்டாம் - வெள்ளிக்கிழமைக்குப் பகலில் ஆறு நாழிகை வரைக்கும், இரவில் பதினெட்டு நாழிகை வரைக்குமாம்; கூறு சனிக்கோரிரண்டாமேழிரண்டாம் நிசிக்கே - சனிக்கிழமைக்குப் பகலில் இரண்டு நாழிகை வரைக்கும், இராத்திரியில் பதினான்கு நாழிகைவரைக்குமாம், எ - று.

இப்படிக்கில்லாமல் வேறுவிதமாகவும் குளிகைகாலஞ் சொல்லுவாருளர். அவையாவன:

## பகற்குளிகன்.

"ஞாயிறு மூகூர்த்த மேழா நன்மதிக் காறுஞ் செவ்வாய்க்
கேயவைந் தாகும் புந்திக் கீரிரண் டாம்பொன் மூன்றும்
தூயநற் புகர்க் கிரண்டாஞ் சனி னுக் கொன்றதாகும்
ஆயவிம் முகூர்த்தத் தோடே யற்றிடுங் குளிக னெல்லில்."

## இராக்குளிகன்.

"கதிரவன் றனக்கு மூன்றாங் கவின்மதிக் கிரண்ட தாகும்
சதிபெறு செவ்வாய்க் கொன்றுஞ் சாற்றிய புகற்கே ழாகும்
மதிவளர் பொன்னுக்கா று மன்புகர்க் கைந்தா நான்கு
கதிர்மகற் கா மு கூர்த்தங் காட்டிய பகல்போற் கொள்ளே."

என்பதனுலறிக. இது மாதாந்தரம்.

## நவக்கிரக தேசம்.

*இது இன்ன கிரகத்திற்கு இன்னதேசம் உரியதென்பதை விளக்குகின்றது.*

### வேறு

*பாரெலாஞ்சசிகதிரோ னிருவர்க்கு மாகும்*
*பனிவரைகேகயத்தினடு பாம்புசனிநாடாம்*
*ஏருலவுங்கேகயந்தொட் டெழில்விந்தமட்டும்*
*இந்துசுதன் பூமியென்ற வியப்புளர்நல் லோர்கள்*
*கார்செறியும்விந்தமுதற் கௌதமைமட்டாகக்*
*கனகனுக்காங் கிருஷ்ணைவரை காப்பியனுடாமே*
*சீருலவுகிருஷ்ணைமுத லிலங்கைவரையந்தச்*
*செவ்வாயின்றேயமென்று செப்புவர்நல்லோரே*

(இ - ள்.) பாரெலாம் - உலகமுழுமைக்கும், சசி கதிரோன் இருவர்க்கும் ஆகும் - சந்திரசூரியர்களிருவர்க்கு முரியதாகும், பனிவரை கேகயத்தின் நடு - இமயமலைக்கும், கேகயதேசத்திற்கும் இடையிலுள்ள தேசங்கள், பாம்பு சனி நாடாம் - இராகு, கேது, சனி இவர்களுடைய நாடாகும், ஏர் உலவும் கேகயம் தொட்டு - அழகிய கேகயதேசத்திலிருந்து, எழில் விந்தம் மட்டும் - அழகிய விந்திய பர்வதம் வரைக்கும், இந்து சுதன் பூமி - புதனுடைய தேசங்களாம், கார்செறியும் விந்தமுதல் கௌதமை மட்டாக - மேகம் நிறைந்த விந்திய பர்வதத்திலிருந்து கௌதமை வரைக்கும், கனகனுக்கு ஆம் - குருவுக்குரிய தேசங்களாம், கிருஷ்ணைவரை - கௌதமையிலிருந்து கிருஷ்ணைவரைக்கும், காப்பியன் நாடாம் - சுக்கிரனுக்குரிய தேசங்களாம், சீருலவு கிருஷ்ணைமுதல் இலங்கைவரை - சிறப்புப் பொருந்திய கிருஷ்ணைநதி யிலிருந்து இலங்கைவரைக்கும், அந்தச் செவ்வாயின் தேயம் - அங்காரகனுடைய தேசங்களாம், என்று - என்று, நல்லோர் செப்புவர் - பெரியோர் சொல்லுவார், எ - று. (41)

## மூலத்திரிகோணம்.

### வேறு.

*குலவியமூலத்திரிகோணந்தானே கூறிடிற்சிங்கமேரவிக்காம்*
*நிலவினுக்கிடபமாடுசேய்க்கென்ப நிகழ்த்திடுங்கன்னியேபுதற்காம்*
*விலகியவில்லேபொன்னினுக்காகும் வெள்ளிக்குக்கோலதனைவிளம்பு*
*நலமுறுசனிக்கேகும்பமதாகு நறுமணங்கமழ்குழன்மாதே.*

(இ - ள்-) நறுமணம் கமழ் குழல்மாதே - நல்லமலரணிதலால் வாசனையை வீசுகின்ற கூந்தலையுடைய பெண்ணே! குலவிய மூலதிரிகோணம் கூறிடின் - விளங்கிய மூலதிரிகோணத்தைச் சொன்னால், சிங்கம் ரவிக்காம் - சிங்கராசி சூரியனுக்காகும், இடபம் நிலவினுக்கு - ரிஷபராசி சந்திரனுக்காகும், ஆடுசேய்க்கு - மேஷராசி அங்காரகனுக்காகும், கன்னியே புதற்கு ஆம் - கன்னியாராசி புதனுக்காகும், விலகிய வில்லே பொன்னினுக்கு - தனுரிராசி குருவுக்காகும், கோல் வெள்ளிக்கு - துல

ஆண், பெண், அறிய.

ராசி சுக்கிரனுக்காகும், மகரம் நலமறு சனிக்கேயாகும் - மகரராசி சனிக்கேயாகும், என்ப - என்று சொல்லுவர் பெரியோர், எ - று. (42)

பாரின்மந்தன் பரிந்தொற்றைராசியின்
சேரநிற்கிலாண் பிள்ளைஜெனித்திடும்
சீருலாவிய செவ்வாயிரட்டையில்
பேரவாவொடு நிற்கிற்பெண்பிள்ளையே.

(இ - ள்.) பாரில் - உலகத்தில், மந்தன் - சனியானவன், ஒற்றைராசியில் - ஜனன லக்கினத்திற்கு ஒற்றை ராசியில் சேர, பரிந்து நிற்கில் - இருப்பானால், ஆண்பிள்ளை ஜெனித்திடும் - ஆண்பிள்ளை பிறக்கும், சீர் உலாவிய செவ்வாய் இரட்டையில் பேர் அவாவொடு நிற்கில் - சிறந்த அங்காரகனானவன் இரட்டித்த ராசியி லிருப்பானேல், பெண்பிள்ளை செனித்திடும் - பெண்பிள்ளை பிறக்கும், எ - று.

லக்கினத்தில் சந்திரனிருக்கில் பெண், தோஷமில்லை. விருத்தி சந்திரனுகில் ஆண், நல்லோர் காணில் வயது - 48.

ஒற்றை, இரட்டை ராசிகளின் விவரம்.

ஒற்றை இராசி: மேஷம், மிதுனம், சிங்கம், துலா, தநுசு, கும்பம் என்பன. இவைகட்கு ஆண்ராசி யென்றும் வியராசியென்றும் பெயர்.

இரட்டைராசி: ரிஷபம், கடகம், கன்னி, விருச்சிகம், மகரம், மீனம் என்பன. இவைகட்கு பெண்ராசி யென்றும் பெயர். (43)

வேறு

பிள்ளைமதிவெள்ளிசன்மத் திருக்கிலந்தவீடு
பெண்ணாகும்ராசியெனிற் பெண்ணாகப்பிறக்கும்
தெள்ளுமொற்றைராசிபின்னும் ரெட்டைராசிமுன்னும்
திங்களோரையினிற்பெண்ணே செனித்திடுமேரெட்டை
உள்ளராசிகளொற்றை யங்கிசம்பெண்ணாகும்
உயர்பெண்ணாங்கிரகங்க ளுமசன்மத்திருக்க
வெள்ளிமுதற்பெண்கிரகம்பார்க்கிற் பெண்பிறக்கும்
மேவிரவிகுசன்புந்தி யிரட்டையுறின்மின்னும்.

(இ - ள்.) பிள்ளை மதிவெள்ளி - வளர் சந்திரனும் சுக்கிரனும், சன்மத்திருக்கில் - இலக்கினத்திலிருந்தால், அந்த வீடு - அந்த லக்கினமானது, பெண்ணாகும் ராசியெனில் - பெண்வீடா யிருந்தால், பெண்ணாகப் பிறக்கும் - பெண்பிள்ளையாகவே பிறக்கும், தெள்ளும் ஒற்றைராசி பின்னும் ரெட்டை ராசி முன்னும் - தெளிந்த ஒற்றை ராசியைப் பின்னாகவும் ரெட்டைராசியை முன்னாகவும் கொண்ட, திங்கள் ஓரையினில் - சந்திர ஓரையாகில், பெண்ணே செனித்திடும் - பெண்பிள்ளையே பிறக்கும், ரெட்டையுள்ள ராசிகள் ஒற்றை அங்கிசம் - ஆண்ராசியில் பரவிற்காணும் கணிதப்படி ஒற்றையங்கிசமாயிருந்தால், பெண்ணாகும்-பெண்பிள்ளையே பிறக்கும், உயர் பெண்

ணும் கிரகங்கள் உறுசன்மத்து இருக்க - பெண் கிரகங்கள் லக்கினத்தி லிருந்தாலும், வெள்ளி முதல் பெண் கிரகம் பார்க்கில் - அதை சுக்கிரன் முதலிய பெண் கிரகம் பார்த்தாலும், பெண் பிறக்கும் - பெண்பிள்ளை பிறக்கும், மேல் - தவிர, இரவி குசன் புந்தி - சூரியன், அங்காரகன், புதன் ஆகிய இம்மூவரும், இரட்டை யுறில் பின்னும் - பெண்ராசியி லிருந்தால் பெண்பிள்ளையே பிறக்கும், எ - று. (44)

பெண்கிரகங்கள்:—சந்திரன், சுக்கிரன், இராகு இவர்கள்.

மின்னுகலைநிறைந்தமதி மேவிலாண்பிறக்கும்
விரவுமொற்றை முற்பாதியிரட்டையும்பிற்பாதி
என்னிலாண்பிள்ளையொற்றை ராசிதனிலிரட்டை
ஏற்றநவாங்கிசஞ்சனன மென்றிடலாமாணே
மன்னவன்சூரியனொற்றை ராசியுறிலாணும்
வரும்புருடராசிதனிற் புருஷக்கோண்மருவ
பின்னுமதுசன்மமதாய் புருஷக்கோணோக்கப்
பிறந்திடுவதாண்பிள்ளை யெனப்பேசலாமே.

(இ - ள்.) மின்னுகலை நிறைந்த மதிமேவில் ஆண்பிறக்கும் - அந்த இரட்டை ராசியிலேயே வளர்பிறைச் சந்திரனிருந்தால் ஆண்பிள்ளை பிறக்கும், விரவும் ஒற்றை முற்பாதி இரட்டையும் பிற்பாதி யென்னில் ஆண்பிள்ளை - கலந்த ஒற்றை ராசியில் முற்பங்காகிய சூரிய ஓரையானாலும், இரட்டைராசியிற் பிற்பங்காகிய சூரிய ஓரையானாலும், ஆண்பிள்ளை பிறக்கும், ஒற்றைராசி தன்னில் இரட்டையேற்ற நவாங்கிசம் ஜனனம் என்றிடல் - ஆண்ராசியில் பெண் ராசியைப்பெற்ற நவாங்கிசம் பரவிற் சனனமாயின், ஆணேயாம் - ஆண்பிள்ளையே பிறக்கும், ஒற்றைராசியில் மன்னவன் சூரியன் உறில் ஆணும் - ஆண் ராசியில் குருவும், சூரியனு மிருந்தால் ஆண்பிள்ளை பிறக்கும், வரும் புருடராசி தன்னில்-ஆண்ராசியிலே, புருடக்கோள் மருவ-ஆண் கிரகங்கள் இருந்தாலும், பின்னும் - மேலும், அது - அந்த ஆண்ராசியானது, சன்மமதாய் - சன்ம லக்கினமா யிருந்தாலும், புருஷக்கோள் நோக்க - அதைப் புருஷக்கிரகங்கள் பார்த்தாலும், பிறந்திடுவது-பிறப்பது, ஆண்பிள்ளை யென - ஆண்குழந்தை யென்று, பேசலாம் - சொல்லலாம், எ - று. (45)

புருஷக்கிரகங்கள்:—சூரியன், செவ்வாய், குருக்கள்.

பேசும்பெண்புருஷக் கோளிரண்டுஞ்சன்மம்
பெற்றிருக்கத்தானபலன் பிரித்துப்பார்த்து
நேசமுடனுறைகிரகப் பலனும்பார்த்து
நிச்சயித்தாய்பெண்ணென்றே நிகழ்த்தவேண்டும்
தேசுபெறு புருஷலக்கினத்தாலாணே
சேயிழையிற்பெண்ணகுந் திங்கள்வெய்யோன்
பாசமுடன்பெண்வீட்டி லிருக்கிற்பெண்ணும்
பார்த்திபனும்புருஷமனை பற்றிநிற்கில்.

(இ - ள்.) பேசும் பெண் புருஷக்கோள் இரண்டுஞ் சன்மம் பெற்றிருக்க - சொல்லுகின்ற பெண் கிரகங்களும் ஆண் கிரகங்களும் கலந்து சன்ம லக்கினத்தி லிருந்தால், தானபலன் பிரித்துப்பார்த்து - வீட்டின் பலனை பாகித்துப்பார்த்து சேசமுடன் உறை கிரகபலனும் பார்த்து, நிச்சயித்து - (அப்படி யிருக்கின்ற) இடவலிவையும், கிரகங்களின் வலிவையும் பார்த்து நிச்சயித்து, ஆண் பெண் என்று நிகழ்த்தல் வேண்டும் - ஆண்பிள்ளை யென்றும் பெண்பிள்ளை யென்றுஞ் சொல்லவேண்டும், தேசுபெறு புருஷலக்கினத்தால் ஆணே - செனித்தது புருஷ லக்கினமானால் ஆணாகவும், சேயிழையில்-பெண் லக்கினமாகில், பெண்ணாகும் - பெண்ணாகவும் பிறக்கும், பெண் வீட்டில் - பெண் வீட்டில், திங்கள் வெய்யோன் பாசமுடனிருக்கின்- சந்திரனும் சூரியனு நட்புடனிருந்தால், பெண்ணாகும் - பெண்பிள்ளை பிறக்கும், புருஷனை பற்றி நிற்கில் - ஆண் வீட்டில் (அந்த இருவரு) மிருந்தால், பார்த்திபனும் - ஆண் குழந்தை பிறக்கும், எ - று. (46)

நிற்கின்றவைந் தேழுக்கதிபர் சுபராசி
நேர்ந்தசுபரோடுகூடி நெடியசுபர்நோக்க
விற்கொண்டநுதலாய் கேந்திரத் திருக்கவவர்கள்
மேவுதிசைதனிலிரட்டைப்பிள்ளை செனித்திடுமால்
தற்கொன்றுமாட்சியுறிற் பிள்ளைரெட்டையாகா
சந்திரலக்கினத்ததிபன் மூன்றிடத்தோன்கூடி
அற்கொண்டவரவுறினு நோக்கினுமேயிரட்டை
யாமிவர்களாண்பெண்ணென் றறிந்துரைப்பர்பெரியோர்.

(இ - ள்.) நிற்கின்ற வைந்து எழுக்கதிபர் - ஐந்தா மிடத்திற்கும், எழா மிடத்திற்கும் உரிய கிரகங்கள், சுபராசி - சுபக்கிரகங்களாய், நேர்ந்த சுபரோடு கூடி - தாம் கூடுவதற்குரிதான சுபக்கிரகங்களோடு சேர்ந்து, நெடிய சுபர் நோக்க - பார்வைக்குரிய இடங்களிலும் சுபக்கிரகங்களிலிருந்து பார்க்கிலும், வில்கொண்ட நுதலாய் - வில்லைப்போலும் நெற்றியை யுடையாளே! கேந்திரத்து இருக்க - அவர்கள் கேந்திரத்திலிருந்தாலும், அவர்கள் மேவு திசையினில் - அந்தக் கிரகங்களின் மகா திசைகளில், இரட்டைப் பிள்ளை செனித்திடும் - இரட்டைப் பிள்ளைகள் பிறக்கும், தற்கொன்றும் ஆட்சியுறின் - அந்தக் கிரகங்களில் ஏதாவ தொன்று சுயக்ஷேத்திரம் பெற்றிருக்குமானால், பிள்ளை ரெட்டையாகா - இரட்டைபிள்ளை பிறக்க மாட்டார்கள், சந்திர லக்கினத்து அதிபன் - சந்திர லக்கினாதிபதியானவன், மூன்று இடத்தோன் கூடி - மூன்றா மிடத்ததிபனோடு சேர்ந்து, அற்கொண்ட அரவு உறினும் நோக்கினும் - ராகுவுடன் கூடினாலும், அந்த ராகுவின் பார்வையைப் பெற்றாலும், இரட்டையாம் - இரட்டைப் பிள்ளைகளே பிறக்கும், இவர்கள் ஆண்பெண்ணென்று - இந்தப்பிள்ளைகள் ஒன்று ஆணென்றும் ஒன்று பெண்ணென்றும், பெரியோர் அறிந்து உரைப்பர் - சோதிட வல்லவர் தெரிந்து சொல்லுவார்கள், எ - று. (47)

வேறு.

பெரிதுளகிழமை பெண்ணாணறிந்து
பரிதியுதயம் பார்க்குங்கடிகையைத்
துரிதமாயைங்காற் றொகையினிற்போக்கி
வருகுவதாண்பெண் ணெனவகுத்திடுவாய்.

(இ - ள்.) பெரிது உளகிழமை பெண் ஆண் அறிந்து-பெரிதாக மதிக்கப் படுகின்ற எழு வாரங்களில் இது பெண் நாளென்றும், இது ஆண் நாளென்றும் உணர்ந்து, பரிதியுதயம் பார்க்கும் கடிகையை - சூரியோதய முதலாகப் பார்க்கின்ற நாழிகையை, துரிதமாய் ஐங்கால் தொகையினிற்போக்கி- ஐங்கால் ஒன்றே கால் நாழிகை வீதம் கழித்து, வருகுவது - பிறந்து எப்பொழுது வருவதோ அதை அறிந்து, ஆண் என - ஆண்பிள்ளை யென்றும், பெண் என-பெண்பிள்ளையென்றும், வகுத்திடுவாய் - சொல்லுவாய், எ-று.

இதன் விவரம்.

ஒருவாரத்திற்குரிய எழு நாட்களையும் இது ஆண்நாள் என்றும் இது பெண்நாள் என்றும் அறிந்து ஒன்றேகால் ஒன்றேகால் நாழிகையாகக் கழிக்க வேண்டும். அப்படி கழிக்கும்போது குழந்தை பிறந்தநாள் ஆண் நாளாயின் முதல் ஒன்றேகால் நாழிகைக்கு ஆண்பிள்ளை யென்றும் பெண் நாளாயின் முதல் ஒன்றேகால் நாழிகைக்கு பெண்குழந்தை யென்றும் கணிக்கவேண்டும். இப்படியே மற்றைய ஒன்றேகால் நாழிகைகளையும்ஒன்று ஆண், ஒன்று பெண், ஒன்று பெண் ஒன்று ஆண் என்று மாறிக்கொண்டே வந்தால் எந்த நாழிகையிற் பிறந்ததோ அந்த நாழிகை பெண்ணென்று வந்தால் பெண்ணாகவும் ஆணென்று வந்தால் ஆணாகவும் கொள்ளவேண்டும்.

ஆண், பெண் நாட்களின் விவரம்.

வகுத்திடும்வார மதிபுகர்பெண்ணும்
தொகுத்தசேய்மந்தன் சூரியன்பொன்னும்
பகுத்திடுமாணும் பகர்புதனமிசம்
நிகழ்த்தொன்றாண்பெண் ணாகிடுமிரண்டே.

(இ - ள்.) வகுத்திடும் வாரம் மதிபுகர் பெண்ணும் - சொல்லப்பட்ட வாரங்களில் திங்களும் வெள்ளியும் பெண்ணாட்களாம், தொகுத்த சேய் மந்தன் சூரியன் பொன்னும் பகுத்திடும் ஆணும் - கணிக்கப்பட்ட செவ்வாய், சனி, ஞாயிறு, வியாழம் இந்நாட்கள் ஆண் நாட்களாம், பகர் புதன் அமிசம்- சொல்லுகின்ற வாரத்தின் அம்சமானது, நிகழ்த்தில் ஒன்று ஆண் ஒன்று பெண்ணாகிடும் இரண்டே - ஆண் பெண் என்னும் இரண்டு குணங்களையும் பெறுமென் றறியவேண்டும், எ - று. (49)

இலக்கின நிச்சயம்.

உதயாதிகடிகைதனை முந்நான்கிலீந்தே
யுற்றசேடந்தன்னையா டாதியெண்ணிச்

சிதையாமற்பார்க்கிலிலக் கினமாகுமந்தத்
திரிகோணமானு மாகுமேயின்னம்
முதற்காணும்லக்கினத்துக் கேழாகுந்தானம்
முதற்கொண்டுதிரிகோண மானுமாகும்
மதயானையிருமருப்புக் கனகவெற்பும்வாச
வனசமுகைபோலுமுலை வஞ்சியரேகேளாய்.

(இ - ள்.) மதயானை யிருமருப்புக் கனகவெற்பும் வாசவனச முகைபோலும் முலைவஞ்சியரே கேளாய் - மும்மதங்கொண்ட யானையி னிருமருப்புக் களையும் பொன்மலையையும் வாசம் வீசுகின்ற தாமரை மொட்டையும் ஒப் பான முலையையுடைய பெண்ணே! நீ கேட்பாயாக, உதயாதி கடிகைதனை முந்நான்கிலீந்தே - அன்று உதயமுதல் ஜெனனம் வரைக்கும் ஏற்பட்ட கடிகையை பன்னிரண்டு பேருக்குக் கொடுத்து, உற்ற சேடந்தன்னை - செல்லுபோய் வந்த மிச்சத்தை, ஆடாதி எண்ணி சிதையாமல் பார்க்கில் - மேஷம் முதலாக எண்ணிப் பார்த்தால், லக்கினமாகும் - லக்கினம் ஏற் படும், அந்தத் திரிகோணமானுமாகும் - அன்றி திரிகோணமா யிருந்தாலு மிருக்கும், இன்னம் முதற்காணும் லக்கினத்துக்கு ஏழாகுந்தானம் முதற் கொண்டு திரிகோணமானும் ஆகும்-முன்னே உண்டாகிற லக்கினத்திற்கு ஏழாம் வீடு முதலாகக் கொள்ளின் அதற்குத் திரிகோணமானும் ஆகும், எ - று. (50)

சந்திர லக்கனுதிபதி எந்தவிடத்தி லிருக்கிறனே அவனுக்கு 1-4-5-7-9-10-அல்லது 7-வது வீட்டிலாவது அந்த 7-க்கு ஒன்பதாவது ஜன்மலக்கின மாயின் நிச்சயம்.

1-3-4-5-7-9-10-சந்திரன் எந்தவீட்டி லிருக்கின்றனனே அந்த வீட்டுக் குடையவன் நின்றது ஜனன லக்கினமாகும் அல்லது 1-3-4-5-7-9-10 இவை களில் எந்த வீடாவது லக்கினமா யிருந்தாலும் அல்லது அந்த வீட்டில் நின் றாலும் லக்கின நிச்சய மெனப்படும்.

வேறு.

வஞ்சியேயொற்றையிலக் கினமுற்பாதி
மார்த்தாண்டனோரை பிற்பாதிமதியோரை
மிஞ்சிநின்றரெட்டைக்கு முன்றிங்களோரை
மீந்திடும்பிற்பாதிக்கோ வெய்யோனோரையதாம்
செஞ்சொன்மதியோரையத்த காணுமாயின்னே
சேயிழையேபிறக்குமெனச் செப்பலாகும்நற்
கஞ்சமலர்நண்பிரவி யோரையதேயாகிற்
காளையேபிலக்குமென வேகருதல்வேண்டும்.

(இ - ள்.) வஞ்சியே - ஓபெண்ணே! ஒற்றைலக்கினம் முன்பாதி மார்த் தாண்டன் ஓரை - ஆண்லக்கினத்தில் முன்பாதி சூரியனோரையும், பின்பாதி மதியோரை-பின்பாதி சந்திரனோரையுமாகும், மிஞ்சிநின்றரெட்டைக்குமுன் திங்கள் ஓரை - பெண் லக்கினத்தில் முன்பாதி சந்திரனோரையும், மீந்திடும்

பின்பாதிக்கு வெய்யோன் ஓரையதாம் - மிகுந்திருக்கும் பின்பாதிக்கு சூரியஹோரையுமாகும், செஞ்சொன்மதி ஓரையதே காணுமாயின் சேய் இழையே பிறக்கும் எனச்செப்பல் ஆகும் - சந்திரஹோரையிற் சென்மித்ததாயின் பெண்பிள்ளையே பிறந்ததென்று சொல்லலாம், நல்கஞ்சமலர் நண்பு இரவி ஓரையதேயாகில் காளையே பிறக்குமெனக் கருதல் வேண்டும் - தாமரையே மலர்விக்கும் நட்பினனான சூரியஹோரையிற் சனனமாவதானல் ஆண்பிள்ளையே பிறக்குமென்று சொல்லலாம், எ - று. (51)

## இராசிவடிவு முதலியன

### வேறு

செப்பிய ராசி வடிவுகண் டுரைக்கிற் சிவந்திடுந் தகருரு மேடம் தெரிந்திடு தவளப் பெற்றமே யிடபஞ் செயம்பெறு மிதுனமென்பதுவும், ஒப்பொடு வீணைகை மயிலுடனே யோது தண்டாயுதம் பச்சை ஒளிதரு வாண்பெண் கடகநண் டுருவமுரைத்த பாதிரிமலர் நிறமாம், வெற்படர் சிங்கல் புகைநிறமடங்கன் மின்கனி யோடமே நடத்தும் மெல்லியலழுக்கு வெள்ளைபொன் னிறத்தாள் விரிதுலாம் புருடனுங் கரத்தில், தப்பிலாத்துலைக்கோ லைவணநிறை கற்றன் பயல் வலக்கையிற் பிடிப்போன் தங்கிய விருச்சிகங்கருந் தேளாந்தக்கதே தெண்டிவை புழுவே.

(இ - ள்.) மேடத்தின்ரூபம் ஆட்டைப்போலிருக்கும் அதன் நிறம் சிவப்பாகும்; ரிடபத்தின் ரூபம் ஆட்டைப்போலிருக்கும் அதன் நிறம் சிவப்பேயாகும்; மிதுனத்தின் ரூபம் ஆண் பெண் இரண்டாயிருக்கும், அது கையில் வீணை, மயில், தண்டாயுதம் இவைகளைத் தாங்கியிருக்கும், அதன் நிறம் பச்சையாகும்; கடகத்தின் ரூபம் நண்டுருவமாகும் அதன் நிறம் பாதிரிப் பூவின் நிறமாகும்; சிங்கத்தின் ரூபம் சிங்கமாயிருக்கும் அதன் நிறம் புகை போலிருக்கும்; கன்னியின் ரூபம் பெண் வடிவாயிருக்கும், ஓடம் நடத்தும், அதன் நிறம் அழுக்குப் படிந்த வெள்ளைப் பொன்னிறம்; துலாத்தின் ரூபம் புருடவடிவாகும், கையில் தராசுக்கோல் பிடித்திருக்கும் அதன்நிறம் ஐவணம் போலிருக்கும்; விருச்சிகத்தின் ரூபம் கருந்தேள்போ லிருக்கும் அதன்நிறம் கறுப்பாகும், எ - று. (52)

### வேறு.

வேய்த்தனுபுருடன் குதிரைபோலரைக்கீழ் மின்னிருதாணிறம் பொன்னும, ஆயமீன்மகரங் காலுநல்வதன மானுமாமழுக்குவெண்ணிறமா, மேயதோர்கும்பம் புருடனுஞ்சிரத்தி லெடுப்பதுங் குடங் கருநிறத்தோன், பாயதலைக்கெண்டை யிரண்டுமீன் புழுவாம் பகர்நிற மழுக்குறுஞ் சிவப்பே.

(இ - ள்.) தநுசின் ரூபம் புருடவடிவம் குதிரைப்போல் அரைக்கீழ் இரண்டு தாளிருக்கும், அதன் நிறம் பொன்னும்; மகரத்தின் ரூபம் மீனும், அதன் நிறம் அழுக்குப்படிந்த வெள்ளைநிறமாம்; கும்பத்தின் ரூபம் குடத்தைச் சிரத்திலேந்தியிருக்கின்ற புருடவடிவாம், இதன் நிறம் கறுப்பாம்; மீனத்தின் ரூபம் இரண்டு கெண்டைமீன்போ லிருக்கும், அதன்நிறம் அழுக்குப்படிந்த சிவப்பாகும், எ - று. (53)

## இராசி விழிப்பு.

### வேறு.

சொல்லுமேடந் தனுமகரந் ஞாலங்குளிர்ஞெண் டிணைவிடபம்
வெல்லுமிவைசந் திரற்குறவாய் விழிப்பாங்கங்குல் விடியளவும்
சொல்லுங்கும்பங் கோன்மீனஞ் சிங்கம்பெண்டே ளாறுக்கும்
எல்லிற்பொழுதில் விழிதெரியு மிரவிக்குறவா னாக.

(இ - ள்.) சொல்லுகின்ற மேஷம், தநுசு, மகரம், கடகம், மிதுனம், ரிஷபம் ஆகிய இவ்வாறு இராசிகளும் பொழுது விடியும்வரைக்கும் சந்திரனுக்கு உறவாயிருந்து விழிப்பனவாகும், சொல்லுகின்ற கும்பம், துலா, மீனம், சிங்கம், கன்னி, விருச்சிகம் ஆகிய ஆறு இராசிகளும் பகற்காலத்தில் சூரியனுக்கு உறவாயிருக்கக் கண் தெரியப்பட்டனவாகும், எ - று. (54)

இனியசிங்கம் மெருதுமேடா மிவையுதிக்கிற் குருடாகும்
கன்னிகன்றி ஞெண்டிக்கும் கங்குற்பொழுதிற் கண்ணில்லை
தனுசுமகர மிராச்செவிடாந் துலாதேட்களும் பகற்செவிடாம்
மனிதன்கும்பம் பகன்முடமா மருவுமீன மிராமுடமாம்.

(இ - ள்.) சிங்கம், ரிஷபம், மேஷம் இம்மூன்று ராசிகளுக்கும் சூரியன் உதயமானால் கண் குருடாகும்; கன்னி, மிதுனம், கர்க்கடகம் ஆகிய இம்மூன்று ராசிகளுக்கும் இராத்திரியிற் கண்தெரியாது, தநுசு, மகரம் இவ்விரண்டிற்கும் இராத்திரியிற் காதுகேளாது; துலா, விருச்சிகம் இவ்விரண்டிற்கும் பகலிற் காது கேளாது; கும்பமானது பகலில் முடமாகும், மீனமானது - இராத்திரியில் முடமாகும், எ - று. (55)

## கிரகங்களின் சாதி, நிறம் முதலியன.

### வேறு.

ஆதவன்பவளநிறம் புருடக்கோளரசனுங் கிரணமைந்துடையோன், அம்புலிதவளநிறம் வைசியப்பெண்ணணி கிரணம்மெழுமூன்றும், ஓதியசேயான்செந்நிறமரச னுற்றநற்கிரணமேழுளனும் ஓங்கியபச்சைநிறம் புதன்வைசிய னுயர்வலியோன்பதுகிரணன், பீதகன்புருடன் குங்குமநிறத்தோன் பிராமணன்றசகிரணத்தோன், பிருகுபெண்வெண்மையாந்தன்னீ ரெண்பெற்றநற் கிரணமேயுடையோன், சூதனுங்காரி மைவண்ணநபுஞ்சன் சூத்திரன்சிருதியாங்கிரணன், சூழ்கரும்பாம்பு செம்பாம்பிருகோளுஞ் சொல்வரீனக்குலமென்றே.

(இ - ள்.) சூரியன் பவளநிறமும், புருடக்கிரகமும், க்ஷத்திரியனும், ஐந்து கிரணமுடையவனுமாவான்; சந்திரன் வெண்மைநிறமும், வைசியனும், பெண்கிரகமும், இருபத்தொரு கிரணமுடையனுமாவான்; அங்காரகன் செந்நிறமும், க்ஷத்திரியனும், ஏழு கிரணங்களுடையவனுமாவான்; புதன் பச்சை நிறமும், வைசியனும், அலிக்கிரகமும், ஒன்பது கிரணமுடையவனுமாவான்; குருபுருடக்கிரகமும் குங்குமப்பூநிறமும், பிராமணனும் பத்துக்

கிரணமுடையவனுமாவான்; சுக்கிரன் பெண்கிரகமும், வெண்மைநிறமும், பிராமணனும், பதினாறு கிரண முடையவனுமாவான்; சனி கறுப்பு நிறமும், அலிக்கிரகமும், சூத்திரனும், நான்கு கிரணமுடையவனுமாவான்; இராகு, கேதுக்கள் இருவரையும் ஈனசாதியாரென்று (கற்றறிந்தோர்) சொல்லுவார்கள், எ - று. (56)

சொல்லியரவிக்குச் சிரசமத்தியினிற் றுலங்குகூரிலாமன் மேனோக்குந், துய்யகொம்புளதாம் வெண்பிறைதனக்கே சொற்றனர் கொம்பிலையென்றே, வல்லிசெவ்வாய்க்குச் சிரநடுமேலாய் வளர்ந்தெழு கூரியகொம்பாம், மாலவன்றனக்கே சிரத்தொருபுறத்தின் மருவியகொம்புளதாகும், நல்லபீதகற்கே சென்னிமத்தியினுடு கொம்பெனநவில்வர், நடுச்சுக்கிரற்குச் சென்னியின்பக்கநலமுடன் செறிந்திடுகொம்பாம், அல்லல்சேர் காரிபிருவகைப்பாம்பு மாகிய விவர்கடமக்கும், அறுத்திடமறுப்பட்டிருந்து கீழ்நோக்குமாகிய கொம்புளதாமால்.

(இ - ள்.) சொல்லுகின்ற சூரியனுக்குத் தலைமத்தியில் கூரில்லாமல் விளங்கி மேலேபார்க்கும் கொம்புண்டு. சந்திரனுக்கு அப்படிப்பட்ட கொம்பு ஒன்றுமில்லை. அங்காரகனுக்கு தலைநடுவில் மேலே வளர்ந்தெழுந்த கொம் பொன்றுண்டு புதனுக்குத் தலையில் ஒரு பக்கத்தில் ஒரு கொம்புண்டு. குருவுக்கு தலைமத்தியில் ஒரு கொம்புண்டு. சுக்கிரனுக்கு தலையின் பக்கத்தில் நிறைந்து வளர்ந்த ஒரு கொம்புண்டு. சனிக்கும், இராகு கேதுக்களும் அறுக்கப்பட்டுக் கீழாக வளர்ந்துள்ள கொம்புகள் உள, எ - று. (57)

பஞ்ச பூதக்கிரகம்.

வேறு.

கண்டபஞ்சபூதமாய் நின்றவாறு கருதுவாய் செவ்வாயே பிருதிவியாகும், மிண்டியசுக்கிரன் றனப்பான பூதம் மேலானவக்கினியே குருவதாகும், கொண்டிருந்தவாயுவே புந்தியாகும் குலவியகன்னுதன் மாதே கூறக்கேணீ, கொண்டலுமாகாய மானபூதம் கோதுற்ற சனியென்றே குறித்தார் மேலோர்.

(இ - ள்.) காணப்பட்ட (கிரகங்கள்) பஞ்சபூதமாய் நின்ற வரலாற்றைச் சொல்லுமிடத்து அங்காரகன் பிருதிவிபூதமாவான். சுக்கிரன் அப்பு பூதமாவன். குரு தேயுபூதமாவன். புதன் வாயுபூதமாவன். குற்றம் பொருந்திய சனி ஆகாயபூதமாவனென்று பெரியோர்கள் சொன்னார்கள். இதை விளங்கிய நன்னுதலையுடைய பெண்ணே நீ நன்றாய்க்கேள், எ - று.

இச்செய்யுள் இங்ஙனம் புகன்றாலும், அப்புக்கிரகம் சந்திரனும், சுக்கிரனுமென்றும், தேயுக்கிரகம் குருவும், சூரியனுமென்றும், ஆகாசக்கிரகம் இராகுவும், கேதுவும், சனியும் என்றும் கூறுஞ் சில நூற்களுமுள. (58)

### இராசிமான சங்கை.

*வேண்டியமேடம்நாலே காலென்றுநும் மேன்மையிலங்கை ககசாமிருஞ் சோணாட்டில், ஈண்டியதோர் சாயையிரண்டுங்கூட்டிக் கண்ட விலக்கமாமதுரையெழிற் காஞ்சிகாசி, நீண்டதிக்கும் பெங்கரூர் தனக்குஞ்சாயை நின்றதுபார்த்தாற் குறைந்துநிற்குமேடம், மாண்டகைசேர் விழுச்சாயை கண்டாற்சன்மமாகுமனை லக்கினசுத்தி யறிந்துசெப்பாய்.*

(இ - ள்.) உயர்ச்சியையுடைய இலங்கைக்கு மேடத்தில் நாலேகால் நாழிகையென்று சொல்லும்; சோழநாட்டில் அவச்சாயை, பாதச்சாயை என்கிற இரண்டையுங் கூட்டிக்கண்ட தொகையாகும்; மதுரை, காஞ்சி, காசி; பெரிய பெங்களூர் இவைகளுக்குச் சாயைநின்ற அளவைப்பார்த்தால் மேடமானது குறைந்திருக்கும். ஆண்டன்மை பொருந்திய விழுச்சாயை தோன்றினல் சென்மமாகு மனையைக்கண்டு லக்கின சுத்தியை யறிந்து சொல்லுக, எ - று. (59)

### இலக்கினத தியாச்சியம்.

வேறு.

*செப்பிடுமே டமிடபம் கன்னியுநற் றனுவும்*
*திகழுவே முற்பாகத் தரைக்கடிகை தானும்*
*ஒப்பறுசிங் கங்கும்பங் கோன்மிதுன நான்கும்*
*உரைப்பரிடப் பாகத்தி லரைககடிகை யென்றே*
*தப்பறுதேண் மகரமுடன் கயல்கடகந் தனக்கே*
*சாற்றுவர்பிற் பாகத்தி லரைக்கடிகை யென்றே*
*மைபபொருகண் ணியமருப்புக் கொங்கைநல்லா யிதனை*
*வயங்குவிட காலமென மறையுணர்ந்த மேலோர்.*

(இ - ள்.) சொல்லப்படுகின்ற மேஷம், ரிஷபம், கன்னி, தநுசு ஆகிய இந்நான்கு லக்கினங்களுக்கும் தொடக்கத்தில் அரைக்கடிகையும், சிங்கம், கும்பம், துலா, மிதுனம் ஆகிய இந்நான்கு லக்கினங்களுக்கும் மத்திய பாகத்தில் அரைக்கடிகையும், விருச்சிகம், மகரம், மீனம் கடகம் ஆகிய இந்நான்கு லக்கினங்களுக்கும் கடைசியில் அரைக்கடிகையும் விஷகாலமாமென்று சோதிடநூலுணர்ந்த பெரியோர்கள் சொல்லுவார்கள், எ - று. (60)

### பிரசவவீடு முதலியன அறிய.

*சேயுதிக்கு மனையிருக்குந் திசைகடகஞ் சிங்கம்*
*சென்மலக் கினமாயி லுங்கிதற்கு மூலை*
*ஆயிருக்குங் கன்னிதனுர்சேன் மிதுனம்வடக்காம்*
*ஆடிடபமகரகும்ப மதற்கோமேற்கு*

வேயுண்டதோளணங்கே விரிச்சிகங்கோலாயின்
  விளங்குமார்வேந்தனூர் திசையெனவேவிளம்பாய்
தேயின்பிறைநெய்தீபந் தில்லைவளர்பிறைக்கோ
  செப்பிடுவாய்நெய்விளக்கி னிறைவுவெனத்தேர்ந்தே.

(இ - ள்.) மூங்கிலை நிகர்த்த தோள்களையுடைய பெண்ணே! கடகமும் சிங்கமும் சென்மலக்கினமாயிருந்தால் அக்குழந்தை பிறந்தவீடு தென்மூலையிலிருக்கும், கன்னி, தனுசு, மீனம், மிதுனம் ஆகிய லக்கினங்களானால் வடக்காகும், மேஷம், ரிஷபம், மகரம் கும்பலக்கினமானால் மேற்காகும். விருச்சிகம் துலாம் இந்த லக்கினங்களானால் கிழக்காகும் என்று சொல்லி அங்ஙனம் பிறந்தது தேய் பிறையாயின் எண்ணெய் குறைவு, வளர்பிறைக்கு எண்ணெய் நிறைவென்க என்பதாம், எ - று. (61.)

நிறைந்தபெண்ணு மிலக்கினத்திருதிதீபம்
  நீண்டிருக்குங்குறைந் திருக்குமந்தமாயின்
பிறந்தவிலக்கினந்தான் சமாயிற்றீபம்
  புறம்பாகுமுபயமெனிற் றிரமிருளாமென்ப
அறைந்தசனியங்கிச வீடாகிலதிற்காரி
  யம்புலியைப்பார்க்க விருளகமேயாகுஞ்
சிறந்தமதிக்குஞ்சேய்க்கு மங்கிசவீடதனைச்
  செவ்வைசனிபார்க்கிலோ செனிப்புலந்தெரிவாய்.

(இ - ள்.) நிறைந்தலக்கினம் பெண்ணுமாகில் முற்பாதியுமாகில் பிரசவித்த அறையில் அம்மனை தீபம் பிரகாசமாயிருக்கும், பிற்பாதியாகில் பிரகாசம் குறைந்திருக்கும், பிறந்த லக்கினம் சரலக்கினமாயின் விளக்கிருந்ததென்றும் உபயமாகில் பின்பக்கத்தில் தீபமிருக்கும், சரலக்கினமாயின் பேரிருள் சூழ்ந்த வீடாகும், சொல்லப்படும் சநியின் அங்கிசவீடாயிருந்து சநியும் சந்திரனைப் பார்ப்பானானால் அது இருட்டு வீடேயாகும். அது சந்திரனுக்கும் அங்காரகனுக்கும் லக்கினம் அம்சமாகி சநி பார்த்தாலும் அப்பிரசவம் கழனிகட்டு என்பதாம், எ - று. (62)

தெரிவைக்குந்துன்பமில்லை லக்கினத்தாதிக்கே
  திடமுடனேயந்தமெனிற் றேன்மொழிக்குந்துன்பம்
மருவியலக்கினமுதற்சந்திர னிருக்குமட்டும்
  மன்னுதொகைமடவார்காண் மருவியருகிருப்பார்
சருவியசுபர்காணிற்றான் றோன்றும்விரைவிற்
  சனிகுசன்பார்த்திடிற்றானே சஞ்சலமுற்றிடுவன்

பெருமையுடனிருந்தசெனிறக்குமுதிகனக்கும்
பெருமென்றேபெரியோர்களுரைப்பர்மிகத்தானே.

(இ-ள்.) எந்தலக்கினத்திற் செனனமோ அந்தலக்கினத்தில் உதயத்தில் செனனமானவன் தாய் யாதொரு துன்பமுமில்லாமல் பிரசவிப்பாள், அதின் அர்த்தமானால் தாய் துன்பப்பட்டே பிரசவிப்பாள், சென்மலக்கினமுதல் சந்திரனிருக்கும் வீடுவரைக்கும் இருக்கும் கிரகங்கள் எத்தனையோ அத்தனை பேர்கள் அப்பொழுது சமீபமாக விருப்பார்கள், லக்கினத்தை சுபக்கிரகங்கள் பார்த்தால் சீக்கிரத்தில் பிரசவமாகும், சனியாவது, அங்காரகனாவது பார்த்தால் மிகவும் வருத்தத்தோடேகூடிப் பிரசவமாகும், மிக்க கீர்த்தியுடன் லக்கினத்திலிருக்கும் கிரகங்களின் நிறமுதலானதைக்கொண்டு அர்த்தமாக உம் வடிவ முதலியன அக்குழந்தையும் பொருந்தியிருக்குமென்று பெரியோர்கள் வெகுவாய்ச் சொல்லுவார்கள், எ - று. (63)

ஞானகுகையிருந்தமட வார்பருவங்கூறில்
சனியிருந்துகண்டக் காற்றலைநரைத்தகருப்பி
ஈனமிலாக்குசனிருந்து காணின்முதுவயதே
பிசையாநிறஞ்சிவப்பாக விருப்பளாமங்கலையாம்
சாலிலைமென்குருவெள்ளி சசியிருந்துகண்டால்
வாலிசுமங்கலையாலை நடுப்புதன்மத்திமையாம்
மாசிலாமேற்பாம்பிருந்தா லநாசாரமடந்தை
மகவுறாலைதரித்து வந்திடுங்கணமே.

(இ - ள்.) லக்கினத்தில் சனியிருந்தாலும் பார்த்தாலும் சமீபத்தில் தலை நரைத்துப்போன கருப்பியிருப்பாள், அங்காரகனிருந்தாலும் பார்த்தாலும் முதிர்ந்த வயதுடைய சிவந்த நிறமுள்ள விதவை யிருப்பாள், குரு சுக்கிரன் சந்திரன் இவர்களிருந்தாலும் பார்த்தாலும் சுமங்கலையாகிய இளம் பெண் இருப்பாள், புதனிருந்து கண்டால் நடுப்பட்டவளிருப்பாள், இராகு, கேதுகளிருந்தாலும் பார்த்தாலும் அநாசாரப் பெண்ணிருப்பாள், அன்றிக் குழவியும் மாலை போட்டுக்கொண்டு வருமென்றுணர்க, எ - று. (64)

கண்டுமொழிமாதாவின் றன்பருவங்காரி
கதிர்குருமூவருங்கண்டால் விருத்தையாகும்
மண்டுவெள்ளிசேய்பார்க்க வயதுகடுவாகும்
மதிபுதனுங்கண்டக்கா லவள்வாலையாவள்
மிண்டுமுடவன்னிருந்தால் வீடுபுராதனஞ்சேய்
மேவில்வெந்துகட்டினதோர் வீடாகுமென்னே
பண்டுசசிபார்க்கிலகம் புதியதாயாகும்
பரிதிக்குமரந்திரண்ட பதியெனச்சொல்வாரே.

(இ-ள்.) இனித்தாயின் வயதினைச் சொல்லுமிடத்து சனி, சூரியன், குரு இம்மூவரும் லக்கினத்திருந்தாலும் பார்த்தாலும் அவள் கிழவியாவாள், சுக்கிரன், அங்காரகன், இவர்கள் பார்க்க இருக்க நடுவயதுடையவளாவாள், சந்திரன் புதன் இவர்கள் இருக்க பார்க்க இளவயதுடையவளாவாள், சனியிருந்தால் கண்டால் அவ்வீடு பழமை பூர்வீகமா யுள்ளதாகும், அங்காரகனிருந்தால் பார்த்தால் வெந்து கட்டிய வீடாகும், சந்திரன் இருந்தால் பார்த்தால் அது நூதன வீடாகும், சூரியன் பார்த்தால் கண்டால் மரங்களடர்ந்த பட்டணமாகுமென்று பெரியோர் சொல்லுவார், எ-று. (65)

சொல்லும்புதன்பார்த்திருந்தாற் சித்திரவீடாகும்
சுக்கிரன்பார்த்திருந்தக்காலுஞ் சுசிவீடதாகும்
வில்லவனிருந்துகண்டாற் கெட்டியதமாகும்
மின்னனையார்விரும்புசுவை வெய்யவனினுவரைப்பாம்
நல்லமதிக்குப்பாகுந்செய் துவர்ப்பையோம்
நாலுவகைச்சுவைபுதனே நல்லிவிப்பாலிப்பால்
வல்லுறுங்குருமதுரம் வெள்ளிபுளிப்பாகும்
அணிகாரிகைப்பிலக்கினத்திசையிற்சிரசே.

(இ - ள்.) சொல்லப்படும் புதன் பார்த்தும் இருந்தாலும் அது சித்திர வீடாகும், சுக்கிரன் பார்த்தாலும் இருந்தாலும் சுத்த வீடாகும், குருவிருந்து கண்டால் கெட்டி வீடாகும், தவிரப் பெற்றதாய் விரும்புஞ் சுவையைச் சொல்லுமிடத்து சூரியன் அதில் சந்திரனிருந்தால் காரத்தையும் உப்பையும், அங்காரகனிருந்தால் துவர்ப்பையும், புதனிருந்தால் நான்குவகை ருசிகளையும், குருவிருந்தால் மதுரத்தையும், சுக்கிரனிருந்தால் புளிப்பையும், சனியிருந்தால் கைப்பையும் விரும்புவார் என்பதாம், எ-று. (66)

சிரசராசியிற்சுங்க னிருக்கவிளக்கசையும்
திரங்களைப்பாவர்கள்பார்க்கிற் றீர்க்கமுறுந்தீபம்
முரைமருவும்லக்கினத்துக் கிருபாலுநான்கு
மோதுதசந்தனிவிருந்தா ருடன்கூடியிருப்பர்
இரவிபுந்திபளிங்குகேந்திரத் திருக்கிற்கிழக்காம்
இரணியன்கேந்திரத்தேறி யிருந்திடிலுத்தரமே
அரவுசெவ்வாய்சன்மத்தி லுறினுந்தெற்காகும்
அணியுமனைசேர்காரிக் ககமேற்குவாசல்.

(இ - ள்.) சரராசி யுதயமாக சுக்கிரனிருந்தால் விளக்கசைந்து நிலைபேதகமும் ஸ்திர லக்கினத்தில் ஜனிக்க பாப கிரகங்கள் பார்த்தால் தீபம் நீட்சியாயு நிலைமாறுமலு மிருக்கும், உபயலக்கின முதயமாகில் பிரசவ அறையிலிருந்த விளக்கை யெடுத்துவிட்டு வேறு விளக்கை வைப்பார்கள்,

லக்கினத்திற்கு இரண்டு பக்கங்களிலுமுள்ள நான்கு பத்து வீடுகளில் எத்தனைக் கிரகங்கள் இருக்கின்றனவோ அத்தனைப் பேர்கூட விருப்பார்கள், சூரியன், புதன், சனி இவர்கள் கேந்திரத்தேறி யிருந்தால் அவ்வீட்டுக்கு கிழக்கு வாசலில் சென்மமாம், குரு கேந்திரத்திருந்தால் வடக்கு வாசலாகும், இராகு, கேது, அங்காரகன் இவர்கள் லக்கினத்தி லிருந்தாலும் வடக்கு வாசலாகும், இலக்கினத்தில் (இரண்டாமிடத்தில்) சனி யிருந்தால் மேற்கு வாசற்படியுள்ள வீடாயிருக்கும், எ - று. (67)

வாசமுறுமூன்றாறிற் பதினொன்றிற்பாவர்
வந்திருக்கச்சனிபத்தா மனையதனிற்சார
நீசமடந்தையரிருந்து புரிவர்பரிகாரம்
நீண்டசனிசுபர்மனையி லேறிநல்லோர்காணில்
ஆசலினைத்தொழில்செய் காரியருமிருப்பார்
ஆமென்றேசுருதியறிந் துரைத்தாராய்ந்தோர்
தேசுறுநற்கலைநிறையுந் திங்கள்முகமயிலே
செப்பினரிப்பலபாகந் தெரிந்துகொளத்தானே.

(இ-ள்.) தேசுமிக்க கலைகள் நிறைந்த பூரண சந்திரன்போலு முகத்தையுடைய பெண்ணே! பலாபலனைத் தெரிந்துகொள்ளும்படி மூன்று, ஆறு, பதினொன்றும் இடங்களிற் பாபக் கிரகங்கள் வந்திருக்க, சனி பத்தாம் வீட்டிற் சேர்ந்தாலும் நீசப்பெண்களிருந்து பெற்றவளுக்கு பரிகாரம் செய்வர், அச்சனி சுபக்கிரகங்களின் வீட்டிற் சேரினும், சுபக்கிரகங்கள் கண்டாலும் குற்றமுள்ள ஈனத்தொழில் செய்யும் பெண்கள் சமீபத்திருப்பார்கள் என்று சோதிட நூல் வல்லோர் ஆராய்ந்து சொன்னார்கள், எ - று. (68)

செப்பரியசோர்பலபாகம் பகரவேண்டிற்
செங்கதிரோன்முதனவகோள் செறிபலங்கடெரிந்தே
ஒப்புடனேசனித்தநவக் கிரகபுடங்கண்டே
யுயர்தூமன்முதலைவர் குளிர்காதிநால்வர்
தப்பறவேயெண்ணி லக்கினபுடமுமாகச்
சாற்றிடும்பத்தொன்பதென தகும்புடங்கள்வரைந்தே
இப்புவியிலுரைத்தவர்க்கே சித்திக்கும்பலன்கள்
எனச்சுருதிமொழிப்புலவ ரியம்பினர்கடாமே.

(இ - ள்.) ஒரு சாதகனுக்குச் சொல்லுதற்கரிய பலாபலனைச் சொல்லவேண்டி யிருந்தால் சூரியன் முதலான நவக்கிரகங்களின் நெருங்கிய பலங்களைத் தெரிந்து சன்மகாலத்து நவக்கிரக ஸ்புடஞ்செய்து தூமன் முதலிய ஐவரையும், குளிகன் முதலிய நால்வரையும் எண்ணி லக்கின ஸ்புடம்பண்ணிப் பின்பத்தொன்பான் புடங்களையும் செய்து பார்த்து இந்நிலவுலகத்தின்கண் சொன்னவர்களுக்கே பலன்கள் சித்திக்கும் என்று சோதிடநூலில் வல்ல புலவர்கள் சொன்னார்கள், எ - று. (69)

இயம்புசன்மமனைநவாங்கிச பங்கைந்ததனில்
  இனிதுதிக்கினவக்கிரக மிருந்தபடிசரியே
நயம்பெறுவற்றங்கிசையி லுதித்திடினேயந்த
  நவக்கிரகமிருக்குநக்ஷத் திரபதமறிந்தே
செயம்பெறவேநின்றமனை வீடடுத்தவீட்டிற்
  செறிந்திருக்கும்விபரமெல்லாந் தெரிந்தெண்ணிக்கண்டே
பயன்பெறுசொற்பலபாகம் லக்கினமேமுதலாய்ப்
  பன்னிரண்டுவீட்டுக்கும் பலன்களறிந்துரைப்பாய்.

(இ - ள்.) சொல்லப்பட்ட லக்கின வீடானது நவாங்கிசத்தில் ஐந்தாவது பங்கில் உதிக்குமானால் நவக்கிரக மிருக்குங் கிரமங்கள் சரியே, தவிர மற்றைய பங்கில் உதித்திடின் அந்த நவக்கிரகங்களிருக்கும் நட்சத்திர பாதமறிந்து அவைகள் இருக்கும் வீடு, அடுத்தவீடு இவைகளில் நிறைந்திருக்கும் விவரமெல்லாவற்றையும் நன்றாய்த் தெரிந்து எண்ணிப்பார்த்து பயன்பெறுதலான பல பாகங்களை லக்கின முதலாயுள்ள பன்னிரண்டு வீட்டிற்கும் அறிந்து சொல்லுக, எ - று. (70)

வேறு.

உரைசெறிகிரக நட்பாட்சியுச்சங்க ளுறும்பகை நேசமுஞ்சமமும்
நிறைபெறுமனையும் பார்வையுந்தொழி லு நிகழ்த்துகா ரகமுமாரகமும்
வரவுறுமரபு நிறமுமேய்வடிவும் வலிசெறிபலங்க டுர்ப்பலமும்
புரவுறத்தேர்ந்து கண்டிடும்புலவர் புகன்றுளபலன்கள் சித்திக்கும்.

(இ - ள்.) சொல்லுகின்ற கிரகங்களின் நட்பு, ஆட்சி, உச்சம், பகை, நேசம், சமம், வீடு பார்வை, தொழில், காரகம், மாரகம், மரபு, நிறம், ரூபம், வடிவம், பலன்கள், துர்ப்பலன்கள் ஆகிய இவைகளை யெல்லாம் தேர்ந்து கண்டுணர்ந்த சோதிடப் புலவர்கள் சொல்லுகின்ற பலன்கள் (சாதகர்களுக்கு உண்மையாகச்) சித்திக்கும், எ - ம். (71)

வேறு

லக்கினந்தேண்மூன்றாறிற் பாவரெல்லாம்
நண்ணிலுடனேமரணம் லக்கினத்தில்
திக்கெனச்செவ்வாய்நிற்கச் சேயெட்டாறில்
சேர்ந்துசனிகூடிலோ மரணமாஞ்சன்மத்
துக்காறெட்டிற்சசிதா னிருந்துசுபர்நோக்கத்
துலங்கியநான்காண்டென்ற சொல்விடுவர்நல்லோர்
மிக்கசெவ்வாயேழிலெட்டின் மார்த்தாண்டன்மேவ
விளம்புவாற்பாயுளென மீன்புரைகண்மாதே.

(இ - ள்) மீனைப்போலும் விளங்குகின்ற கண்களையுடைய பெண்ணே! லக்கினம், விருச்சிகமாகி, மூன்று ஆறுமிடங்கள் இவைகளில் பாபக்கிரகங்களெல்லாம் கூடியிருந்தால் அந்தக் குழவி உடனே மரிக்கும். லக்கினத்தில் அங்காரகனிருந்தாலும், செவ்வாய், எட்டு, ஆறுமிடங்களில் சனியுடன் கூடியிருந்தாலும் மரணமாகும். ஜென்மலக்கினத்திற்கு ஆறு, எட்டாமிடங்களில் சந்திரனிருந்து அவனைச் சுபக்கிரகங்கள் பார்த்தால் அக்குழவிக்கு வயது நான்கேயாகும். அங்காரகன் ஏழிலும், சூரியன், எட்டிலுமிருந்தால் அந்தக் குழந்தைக்கு அற்ப ஆயுசாகும் என்று பெரியோர் சொல்லுவர், எ-று. (72)

தேயுமதிலக்கினகேந் திரத்திலெட்டின்மேவிச்
செய்முதற்பாவரைக்கூடின் மரிக்குஞ்சன்மத்தில்
வயசசிக்கிருபாலும் பாவர்நிற்கிலெட்டேழ்
நான்கிடத்திற்றீக்கோள்க ணிற்கிலுற்றசேயும்
தாயுஞ்சாமெனவுரைப்பர் சுபக்கோள்பார்த்திடினே
தாயுடன்சீவிக்குமென வேசாற்றலாகும்
மாயகதிர்பாக்கியத்திற் சுபர்நோக்கிலாமல்
மருவசசிபருடனே மன்னலரிட்டமதாம்.

(இ - ள்.) தேய்பிறைச் சந்திரன் லக்கினத்திலும் கேந்திரத்திலும், எட்டாமிடத்திலு மிருந்து அங்காரகன் முதலிய பாபக் கிரகங்களோடுசேர்ந்தால் அக்குழவி பிறந்தவுடனே மரிக்கும். சந்திரனுக்கு இரண்டு பக்கங்களிலும் பாபக்கிரகங்க ளிருந்தாலும், எட்டு, ஏழு, நான்காமிடங்களில் பாபக்கிரகங்களிருந்தாலும் பிறந்த குழந்தையும், தாயும் சாகும், அச்சந்திரனை

சுபக்கிரகங்கள் பார்த்தால் குழந்தையும், தாயும் சீவிக்கும் சூரியன் பாக்கிய ஸ்தானத்தில் சுபக்கிரகங்களின் பார்வையைப் பெறுமலிருந்தாலும், சந்திரன் சுபக்கிரகங்களோடு சேர்ந்தாலும் அரிட்டமாகுமென்று பெரியோர் சொல்லுவார், எ - று. (73)

பிறந்த நட்சத்திர வார துர்ப்பலம்.

வேறு.

ஆயசித்திரையிற்றிங்க ளணிகுசனுத்திராடம்
ஞாயிறுபரணிகேட்டை நற்குருவாரமாகும்
ஏயபுதனவிட்டமிரேவதி சனியேயாகும்
தூயபூராடம்வெள்ளி யிதிற்கன்மந்துயரஞ்செய்யும்.

(இ - ள்.) சித்திரையிற் சேர்ந்த திங்கள்கிழமையிலும், உத்திராடஞ் சேர்ந்த செவ்வாய்க்கிழமையிலும், பரணி சேர்ந்த ஞாயிற்றுக்கிழமையிலும், கேட்டையிற் சேர்ந்த வியாழக்கிழமையிலும், அவிட்டத்திற் சேர்ந்த புதன் கிழமையிலும், ரேவதிற்சேர்ந்த சனிக்கிழமையிலும், பூராடத்திற் சேர்ந்த வெள்ளிக்கிழமையிலும் செனனமாளுல் மிகுந்த துன்பந்தருவதாகும், எ-று.

செய்யுமட்டமத்திற்பாவர் சேர்ந்திடினேளேழேயாம்
ஐயமாம்பிழைத்திருந்தா லவனுக்காங்கண்ணுக்கூனம்
மெய்யலக்கினத்திற்செவ்வாய் நிற்கினும்வியமாறெட்டில்
பையவேகாரிசெவ்வாய் பற்றின்மெய்க்கரிட்டம்பண்ணும்.

(இ - ள்.) லக்கினத்திற்கு எட்டாம் வீட்டில் பாவக்கிரகங்கள் சேர்ந்திருந்தால் ஏழுநாள் ஆகாததாகும், அப்படி தவறி பிழைக்குமாயின் கண்ணூனமாகும், லக்கினத்திற் செவ்வாயிருந்தாலும், பன்னிரண்டு, ஆறு, எட்டாமிடங்களில் சநி, அங்காரகன் இவர்களிருந்தாலும் தேகத்திற்கு அரிட்டமே செய்யும், எ - று. (75)

வேறு.

பண்ணுஞ்சன்மமுடனேழிற்பாவரிருக்கப்பாவர்கடாம்
அண்ணின்மதியமுடன் கூடவணியதாகவருமரிட்டம்
எண்ணுந்தேய்ந்தபிறை வியத்திலேழிலொன்றிற்பாவர்களு
நண்ணிலரிட்டங்கேந்திரத்தினட போரிருக்கவுய்வாரே.

(இ - ள்-) சன்மத்திலும், ஏழாம் இடத்திலும் பாவக்கிரகங்களிருந்தாலும், பாவக்கிரகங்கள் சந்திரனுடன் கூடியிருந்தாலும் சீக்கிரத்தில் அரிட்டமுண்டாகும்; தேய்ப்பிறைச் சந்திரனுனவன் பன்னிரண்டு, ஏழு, சென்மம் ஆகிய இவ்விடங்களில் பாபக்கிரகங்கள் பொருந்தியிருந்தால் அரிட்டமேயாகும். ஆனல், கேந்திரத்தில் சுபமித்துருக் கிரகங்களிருந்தால் உயிர்பிழைப்பர், எ - று. (76)

உய்யுயிரவிசனிசெவ்வாயுறுப் புக்குறைந்தமதிநான்கும்
மெய்யாம்வியம்பாக்கியமெட்டி லொன்றியவர்கண்மேவிடவே
பையவிந்தப்பதிகடமைப் பண்பாயரசன்பாரானேல்
ஐயவரிட்டம்பொன்னேக்க மானுமிருப்பனணிமயிலே.

(இ - ள்.) அழகிய மயில்போல்பவளே! சூரியன், சநி, அங்காரகன், தேய்பிறைச்சந்திரன் இந்நான்குகிரகங்களும், இலக்கினத்திற்கு பனிரண்டாமிடத்திலும், ஒன்பதாமிடத்திலும், எட்டாமிடத்திலுமிருந்து கூடினாலும் இந்த விடங்களை குரு பார்க்காதிருந்தாலும், அரிட்டமேயாகும். குரு பார்த்தால் உயிர் பிழைத்திருப்பர், எ - று. (77)

அவனிமெட்டைந்தொன்றி லானவியத்திற்பாக்கியத்தில்
தபனன்செவ்வாய்சனிமதியந் தாமுங்கூடிநின்றாலும்
கவனமுட னேதனித்தனியே கருதுமிவற்றினின்றாலும்
மவனும்பிறக்கிலிப்பாரின் மேவுமரிட்டமெய்துவனே.

(இ - ள்.) இவ்வுலகத்தில் எட்டு, ஐந்து, ஜென்மம், பன்னிரண்டு, பாக்கியம் ஆகியஇவ்விடங்களின், சூரியன், அங்காரகன், சநி, சந்திரன் இவர்கள், கூடி யிருந்தாலும் அந்தந்த வீடுகளில் தனித்தனியே முறையே யிருந்தாலும் அப்போது சென்மிக்குங் குழவி அரிட்டத்தை யடைந்தே தீரும், எ - று.

வேறு.

எண்ணியலக்கினத்தோன் பிரமலக்கினத்திலேறில்
ஒண்ணியேபாவர்தானு முற்றிடினுரோகியாவன்
திண்ணமாயிவர்கடாமுந் திரிகோணகேந்திரத்தில்
நண்ணிடின்மூர்க்கனுவன் நறைமலர்க்குழலின்மானே.

(இ - ள்.) வாசனையோடு கூடிய மலர்களையணிந்த கூந்தலுடையாளே! லக்கினாதிபதியானவன் எட்டாமிடம் அல்லது ஆயுள்தானத்திலேறினும், பாபக்கிரகங்களோடு சேர்ந்தாலும் அச்சாதகன் ரோகியாவான்; இந்தக்கிரகங்கள் திடமாகத் திரிகோண கேந்திரஸ்தானத்தில் சேர்ந்தால் மூர்க்கனுவான், எ - று. (79)

மானேகேள்குதிரைமூல மகமுதற்காலும்பின்னும்
ஈனரேவதியுங்கேட்டை யாயில்யமிவைபிற்காலும்
ஊனநாழிகையோர்நான்குட்டாதை மூன்றாய்ரெண்டுக்கும்
ஆனநற்றுணைவர்மூன்றினுன்கிற் சேய்க்குறுமரிட்டம்.

(இ - ள்.) பெண்ணே கேட்பாயாக! அஸ்வனிமூலம் மகநட்சத்திரத்து முதற்பாதத்திலும், ரேவதி, கேட்டை, ஆயில்யம் ஆகிய மூன்று நட்சத்திரங்களின் கடைப்பாகத்திலு முண்டாகும் நான்கு நாழிகைகளில் சென னமாயின் முதல்நாழிகையில் தந்தைக்கும், இரண்டாவது நாழிகையில் தாய்க்

கும், மூன்றாவது நாழிகையில் சகோதரர்களுக்கும், நான்காவது நாழிகையில் குழந்தைக்கு அரிட்டமாகும், எ - று. (80)

உறுஞ்சன்மலக்கினாதியுடன் சோமனுறைவீட்டாதி
பெறும்பகையென்னிலாண்டு பிறக்குஞ்சேய்பிழைத்திடாது
குறுஞ்சன்மலக்கினாதியுடன் குளிகனுஞ்சனியுங்கூடில்
அறைந்திடாய்கள்ளராலே யடிப்பட்டேயிறப்பானென்றே.

(இ - ள்.) லக்கினாதிபதியோடு சந்திரனுக்கும் வீட்டுக்கதிபனும் பகையாயின் அங்கே பிறக்கின்ற குழந்தை பிழைக்காது. லக்கினாதிபதியோடு குளிகனுஞ் சநியுஞ் சேர்ந்தால் கள்ளர்களால் அடிப்பட்டிருப்பானென்று சொல்லுவாயாக, எ - று. (81)

அன்றவனுதித்தநக்ஷத்திரந் திதிராசியந்தம்
ஒன்றிடினுடனே துஞ்சுமுற்றபொன்னோக்கெட்டேநாள்
வென்றிகொள்வெள்ளிநோக்க விரவுநாண்மூன்றுபொன்னை
நன்றிலாப்பாவர்நோக்கின் வந்தநாணவிந்துபோமே.

(இ - ள்.) செனனகாலத்தில் ஏற்பட்ட நட்சத்திரம், திதி, லக்கினம் இவைகள் அந்தமாயிருந்தால் அக்குழவி உடனே யிறக்கும், குருநோக்க எட்டேநாள், சுக்கிரன் நோக்க மூன்று நாள், அந்தக் குருவை கொடிய பாபக்கிரகங்கள் நோக்கச் செனித்த நாளிலேயே இறக்கும், எ - று. (82)

நலிவுசெய்யட்டமாதி லக்கினத்தாதிகூடி
வலியகேந்திரத்தினிற்க மருவியவெட்டினிலாரேனும்
பொலிவுறவொருவர்நிற்கப் பூமியிற்பிறந்தபாலன்
ஒலிகடலுலகிலெட்டாண் டுள்ளுயிர்க்கரிட்டஞ்சொல்வாய்.

(இ - ள்.) நோய் செய்கின்ற அட்டமாதிபதியானவன் லக்கினாதிபதியோடு கூடி பலம் பொருந்திய கேந்திரத்திலேறி நிற்க, அந்த அட்டமத்தில் வேறு யாராவதொருவர் பலமாயிருந்தால் பிறந்த குழந்தைக்கு எட்டு வருஷத்திற்குள்ளாக அரிட்டஞ் சொல்லுக, எ - று. (83)

உள்ளலக்கினமேயாதி யிருவர்லக்கினத்துனிற்க
மெள்ளவேயெட்டில்விந்து மேவிடக்காரிதானும்
தெள்ளுமட்டமஞ்சன்மங்க ளிரண்டையுஞ்செறிந்துநோக்கப்
பிள்ளைமெய்க்கரிட்டமென்றே பேசினர்பெருமையோரே.

(இ - ள்.) லக்கினாதிபதியும், இரண்டாமிடத்தானும் இருவரும் லக்கினத்தினிற்கவும், எட்டாமிடத்தில் சந்திரனிருக்கவும், சனி அட்டமஸ்தானத்தையும் சன்மத்தையுங் கூர்ந்துபார்க்கப் பிறந்த குழந்தைக்கு, அரிட்டமாகுமென்றே பெரியோர் சொன்னார், எ - று. (84)

வேறு.

பெருமைசெறிதேள்சென்மமதாய் பெரும்பாவர்கண்மூன்றுறிலுற
இருமைசெறிமின்றுறினக்லோ ரிருக்கின்றிட்டமிரவியொன்றில்
உரிமையுடனொன்பதிலிருக்க வொருவரிவரைப்பாராரேல்
அருமையுடனேயுதித்திடுஞ் சேய்க்கரிட்டமென்றேயறைவாயே.

(இ - ள்.) ஒரு சாதகனுக்குச் சென்மலக்கினம் விருச்சிகமாயிருந்து பாபக்கிரகங்கள் மூன்றுவீட்டினிலிருந்து பின்றுறுவீட்டில் சுபக்கிரகங்களிருந்தால் அரிட்டமேயாகும். சூரியன் லக்கினத்திலாவது ஒன்பதாமிடத்திலாவது இருந்து ஒருவரும் இவரைப் பாராதிருப்பாரேல் அப்படி பிறக்கும் குழந்தைக்கு அரிட்டமென்றே சொல்லுவாய், எ - று. (85)

அறையுங்ககர்தேள்சன்மமதாய் அட்டமத்திலுறைசனியும்
நிறையுஞ்சுபர்கண்பார்வையின்றி நிற்கிலரிட்டஞ்சன்மத்தில்
இறையாங்காரிபாம்பிருக்க வேழிற்சோமனிருந்திடினும்
நறையார்கதிரோன்சேய்கூடி னளீரைந்தினவிந்திறுமே.

(இ - ள்.) சொல்லுகின்ற மேஷமும், விருச்சிகமும் சென்மலக்கினமாய் அட்டமத்திலிருக்கும் சனியும் சுபகிரகங்களின் பார்வை யில்லாமலிருந்தால் அரிட்டமாகும். சென்மத்தில், குரு, சனி, இராகு, கேது இவர்களிருந்து ஏழாமிடத்திற் சந்திரனிருந்தாலும், சூரியனும் அங்காரகனும் சேர்ந்திருந்தாலும் பத்துநாள்களில் அக்குழவி வருந்தி மரிக்கும், எ - று. (86)

இறுமாந்துறுவெண்மதிக்கொரு பாலியாவரேனுமுறவொருபால்
கறைவாழரவமெதிர்த்துமதிக் கலேமேடனக்குந்தடமாக
நிறைவாஞ்சசிவாழரவிரண்டு நில்லாரன்றியக்கேரம்
அறையாலையினிற்கரும்பென்னவயிர் கத்திரியாலறுஞ்சிறுவன்.

(இ - ள்.) சந்திரனிருக்குமிடத்திற்கு ஒரு பக்கத்தில் எந்த கிரகங்களாயினு மிருக்க, மற்றொருபக்கத்தில் இராகுவும் எதிர்த்து அச்சந்திரனுக்கு மேல் நடக்கவும், சந்திரனும், இராகு, கேதுக்களும் நில்லாமல் மாறினும் அக்குழவி ஆலைவாய்க் கரும்புபோல் கத்திரியால் மடிவன், எ - று. (87)

சிறுவனுதித்தவிலக்கினத்திற் றேய்ந்தபிறையும்பாவிகளும்
அறிவாமவியத்திலிரண்டி லெட்டிலடைந்துபாவர்தாணிருக்க
உறுகேந்திரத்தைச்சுபர்பாராதொழியிற் குழவிக்குறுமரிட்டம்
பெறுமீன்கர்க்கிதேளுமிதிற்கேழிற்பாவர் பெறிப்பிணியாம்.

(இ - ள்.) குழந்தைபிறந்த லக்கினத்தில் தேய்பிறைச் சந்திரனும், பாபக்கிரகங்களும், பன்னிரண்டு, இரண்டு, எட்டு இவ்விடங்களிலும் பாபக்கிரகங்களும் சேர்ந்திருக்க, கேந்திரத்தைச் சுபக்கிரகங்கள் பாராதிருப்ப

ரேல் குழந்தைக்கு அரிட்டமுண்டாகும் மீனம், கார்க்கடகம், விருச்சிகம் இவைகள் தமக்கு ஏழாமிடத்திற் பாபக்கிரகங்களைப் பெற்றிருந்தால் ரோகம் பீடிக்கும், எ - று. (88)

பிணியாறேழிற்பாவருமாய்ப் பெருஞ்சென்மத்திவிரவியுரத்
துணியோமெட்டாமிடத்திற் கேந்திரத்திற்பாவர்சூழ்ந்திருக்க
அணியார்குழவியுடன்றாய்க்கு மரிட்டஞ்செவ்வாய்சனிகோணம்
பணியார்மதியைப்பொன்பாரா திருக்கவரிட்டம்பாலனுக்கே.

(இ - ள்.) ஆறு, ஏழாமிடங்களிற் பாவக்கிரகங்களும், சென்மத்தில் சூரியனுமிருக்கவும், எட்டாமிடத்திலும், கேந்திரத்திலும் பாவக்கிரகங்களும் சூழ்ந்திருக்க அப்போது குழந்தைக்கும் தாய்க்குமே அரிட்டமுண்டாம். அங்காரகன், சநி இவர்கள் திரிகோணத்தி லிருக்கவும் சந்திரனைக் குரு பாரா திருக்கவும் குழந்தைக்கு மாத்திரம் அரிட்ட முண்டாம், எ - று. (89)

பாலவெள்ளைமதியமொடு பயில்சன்மத்தும்பாவருறில்
ஆலுங்குழவிக்கரிட்டமதா மிரவியாறிலதற்கேழில்
சாலுஞ்செவ்வாய்சனிநிற்கத் தகப்பன்சிறுவருடனிருவர்
காலுங்கேய்ந்தமதிபாவர் நடுவாயிற்றாய்ச்சீவனும்போம்.

(இ - ள்.) சன்மத்தில் வளர் சந்திரனோடும் சன்மலக்கினத்திலும் பாபக்கிரகங்களிருந்தால் குழந்தைக்கு அரிட்டமே. சூரியன் ஆறாமிடத்திலும், அதற்கேழில் அங்காரகனும், சநியுமிருக்க தகப்பன், குழந்தையுடன் சாவர், தேய் பிறைச்சந்திரன் பாபக்கிரகங்களுக்கு நடுவே சேர்ந்திருக்குமானால் தாயு மிறப்பள், எ - று. (90)

போமேயாறுமிடப்பிறைக்கேழ் பொருந்திச்செவ்வாய்சனிநிற்க
ஆமேதாய்பிள்ளைக்கரிட்டமடா சென்மத்திற்பாம்புசனி
தாமார்நான்கிற்சேயேழிற் றபனனுறிற்சாற்றும்மரணம்
கோமார்சனிசெவ்வாயேழிற் குழவிக்கரிட்டஞ்சொல்வாரே.

(இ - ள்.) ஆறுமிடத்தி லிருக்கும் சந்திரனுக்கு ஏழில் அங்காரகனும், சநியுமிருந்தால் தாய்க்கும் பிள்ளைக்கும் அரிட்டமாம். சென்மத்தில் இராகு, கேது, சநி இவர்களும், நான்காமிடத்தில் அங்காரகனும், ஏழில் சூரியனுமிருந்தாலும் மரணமேயாகும். சனியும், செவ்வாயும் ஏழிலிருந்தால் குழந்தைக்கு அரிட்டமென்று சொல்லுவர் பெரியோர், எ - று. (91)

வாரார்முலையாய்சன்மமெட்டாமனைக் காறேழெட்டொடுவியத்தில்
கூரார்பாவர்தேய்பிறையைக் கூடவதற்குநான்கெட்டில்
ஓரார்பாவருறுறிற்குழவிக் கரிட்டம்பன்னொன்றொன்பதினில்
காரார்சனிசெவ்வாய்பாம்பு கலந்துற்றானுற்கடிதரிட்டம்.

(இ - ள்.) கச்சிறுக்கிய தனத்தை யுடையாளே! சன்மத்திலும் அட்டமத்திற்கு, ஆறிலும், எழிலும், எட்டிலும் பன்னிரண்டிலும் பாபக்கிரகங்கள் தேய்பிறைச் சந்திரனைக்கூட, அதற்கு நான்கிலும், எட்டிலும் பாபக்கிரகங்களிருந்தால் குழந்தைக்கு அரிட்டமாம், பதினொன்றிலும், ஒன்பதிலும், சனி, அங்காரகன், இராகு, கேது இவர்கள் கலந்திருந்தாலும் குழந்தைக்கு அரிட்டமாகும், எ - று. (92)

கடியசன்மந்தனிற்பிறையுங் கவின்சுக்கிரனுங்கலந்துநிற்க
நெடியவேழிற்சனிநிற்க விஃதல்லாமனீள்சனியும்
கொடியசசியுமொருகாலிற் கூடியிருக்கச்சன்மத்திற்
படியும்பிறையைச்சுபர்நோக்கா திருக்கிற்பாலன்றாயுடன்சாம்.

(இ - ள்.) சன்மத்தில் சந்திரனும் சுக்கிரனுங் கலந்திருக்கவும், எழில் சனியிருக்கவும், இஃதல்லாமல் சனியும், சந்திரனும் ஒரே நட்சத்திர காலிற் கூடியிருக்க சன்மத்தில் நின்ற சந்திரனைச் சுபக்கிரகங்கள் பாராதிருந்தால் குழந்தையும் தாயு மிறப்பார்கள், எ - று. (93)

காணுங்கேதுங்கரும்பாம்புங் கருதுநான்கிலுற்றிடவே
மாணுங்குழவிக்குறுமரண மாகுமொன்பதாமிடத்தில்
பானும்வியத்திற்கோளுறினும் பன்னுங்காரிகதிருடனே
பூணும்வியற்திலுற்றிடினும் புதல்வன்றாதையுடன்மரணம்.

(இ - ள்.) காண்கின்ற கேதுவும் இராகுவும், நான்காமிடத்திலிருக்க குழவி மரிக்கும் ஒன்பதாமிடத்திற் சூரியனும், பன்னிரண்டாமிடத்தில் வேறு கிரகங்க ளிருந்தாலும், சனி, சூரியனுடன் கூடி பன்னிரண்டாமிடத்திலிருந்தாலும் பிள்ளையும் தந்தையு மிறப்பார்கள், எ - று. (94)

மரணமைந்திற்கதிர்மதியு மந்தன்செவ்வாயுடன்கூடிக்
கிரணமுத்தேயிருந்தக்காற் கேளாய்குழவிபிதாமரணம்
முரணுமசுரகுருவெட்டின் மூன்றிற்பாவருடனிருக்கத்
திரமாம்பாவர்நோக்கமுறச் சேய்க்குமரிட்டஞ்செய்திடுமே.

(இ - ள்.) ஐந்தாமிடத்தில், சூரியன், சந்திரன், சனி, அங்காரகன் இவர்கள் கூடியிருந்தால் அக்குழவியும், தந்தையும் மரணமாவார். மாறுக சுக்கிரன் எட்டாமிடத்திலாவது, மூன்றாமிடத்திலாவது பாபக்கிரகங்களோடு இருந்தாலும் அவர்களுடைய பார்வையைப் பெற்றிருந்தாலும் குழந்தைக்கு அரிட்டமுண்டாகும், எ - று. (95)

செய்யும்பரிதிக்கெட்டதனிற் செவ்வாய்மந்தனுடன்கூடி
உய்யுஞ்சுபர்களுக்கமிலா துற்றாற்பிதாவோவுறுமரணம்
பையமதிக்கேழெட்டினவ பண்பாமிடத்திற்பாவர்களும்
ஐயமற்றேயிருந்தக்கா லாகுங்குழவிபிதாவிறுமே.

(இ - ள்.) சூரியனிருக்கு மிடத்திற்கு எட்டாமிடத்தில் அங்காரகனும் சனியும் கூடியிருந்து சுபக்கிரகங்களின் பார்வை யில்லாவிட்டால் தந்தை மரணமாவான், சந்திரனிருக்கு மிடத்திற்கு எழு, எட்டு, ஒன்பதா மிடங்களில் பாபக் கிரகங்களிருந்தால் குழந்தையும், தகப்பனும் சாகும், எ - று.

உறுமேபாவக் கிரகமுட னிருந்தமதியின் கிராணமெனின
இறுமேசன்ம மெட்டிற்கே யுற்றகுழவி தான்மரணம்
பெறுமேபரிதி கிராணமிதிற் பேசும்பாவ ருடன்கூடச்
சிறுவானென்றிற் சனிசெவ்வாய் சேரிற்றகப்பன் றாய்மடிவர்.

(இ - ள்.) பாவக்கிரகங்களுடனிருந்த சந்திரன் கிரணமானாலும், அச் சந்திரன் சன்மத்திற்கு எட்டாமிடத்திலிருந்தாலும் அந்தக் குழந்தை மரண மாகும். சூரிய கிரணத்தில் பாபக்கிரகங்களுடன்கூட எட்டாமிடத்தில் சனி, அங்காரகன் இவர்கள் சேர்ந்தால் தகப்பனும், தாயும் சாவார்கள், எ - று. (97)

வெண்பா.

பூராட முற்காலும் பூசத் திடையிரண்டும்
சீராகச் சித்திரையிற் செல்லவையும்—ஊர்நாட
உத்திரத்துக் காலு முயிரிழப்பர் தந்தைதாய்
புத்திரனைப் பெற்றெடுத்த போது.

(இ - ள்.) நாட்டுவள முடையானே! பூராடத்து முற்காலும், பூசத்து இடையே யுள்ள இரண்டு காலும், சித்திரையிற் சென்ற இருகாலும், உத்தி ரத்திற்கு ஒருகாலும் புத்திரனைப் பெற்றெடுத்தால் தாய்தந்தையர் உயிரிழப் பார்கள், எ - று. (98)

# நட்சத்திரபலன்.

## அச்சுவினி.

செய்கருமம் வழுவாமற் செய்வன்மட வார்நேயன் றியாகிதீரன்
பொய்சொல்லா னுபரணப் பிரியனற்ப கோபிபெரும் புகழேயுள்ளான்
றுய்யவிழி சிவந்திருப்பன் மார்பகல முளன்சமர்த்தன் றூயனாகும்
ஐயமிலா நெற்றியுயர்ந் தேயிருப்பன் சாந்தனசு பதியினானே.

(இ - ள்.) அச்சுவினி நட்சத்திரத்தில் பிறந்தவன் செய் தொழிலில் தவறில்லாமல் செய்வன், பெண்கள் விருப்பத்தன், தருமஞ் செய்வான், தைரியசாலி, பொய்யுரையான், சர்வாபரணத்திலும் விருப்ப முடையான், சிறுகோபி, மிக்க கீர்த்திமான், கண்கள் சிவப்பன், மார்பகன்றவன், மகா சமர்த்தன், பரிசுத்தன், சந்தேகமின்றி நெற்றி யுயர்ந்திருக்கப் பெறுவன், சாந்தகுணன் என்னும் இவ்வியல்களை யுடையவனாவான், எ - று. (99)

## பரணி.

அன்னைபிதா வுக்கினியன் ஞானியிற்ப நித்திரைய னற்பகோபி
தன்மவா னைச்சுவரியன் மானபுகழ்க் கோனாந்தாம் பூலநேயன்
மன்னுமுடைத் திடனிடம்பி னிடப்புறத்தின் மறுவனருஞ்சமர்த்தனா [கும்
பன்னியுரை யிற்பிரியன் மோவாய்க்கட் டைச்சிறியன் பரணியானே.

(இ - ள்.) பரணி நட்சத்திரத்திற் பிறந்தவன் தாய் தகப்பன்மாருக் கினியன், ஞானி, சிறு நித்திரையும், அற்ப கோபமு முடையான், தரும வான், செல்வன், பெருமையோன், தாம்பூலப்பிரியன், திடவாக்குடையவன், தேகத்தின் இடது பாகத்தில் மறு ஒன்று உடையவன், மிக்க சாமர்த்தியன், பெண் சொற்களில் விருப்பமுடையன், மோவாய்க்கட்டை சிறுத்திருப்பான், என்னும் இவ்வியல்களை யுடையவனாவான், எ - று. (100)

## கார்த்திகை.

கொள்ளுமிரச வர்க்கத்திற் பிரியனற்ப நித்திரையன் கூறுஞ் செஞ்சொல், தெள்ளியசா துரியன்பொய் சொல்லியமே பொருள் சேர்க்குந் திறந்தோன்புத்தி, உள்ளவன்மன் னனர்க்கினியன் சன்மா னென் றேகபல முடையகோமான், கள்ளமன னுரத்தின்மறு வழுக் குரைக்குந் துணிவான்கார்த் திகையினானே.

(இ - ள்.) கார்த்திகை நட்சத்திரத்தில் பிறந்தவன், ரசவர்க்கங்களில் விருப்ப முடையவன், அற்ப நித்திரையோன், சொற் சாதுரியன், பொய் பேசியும் பொருள் சம்பாதிக்கவும் வல்லமை யுடையோன், மிக்க புத்திசாலி, அரசர்களுக்குப் பிரியமான பரிசு பெறுவோன், திடகாத்திர முடையவன்

வஞ்சகன், மனத்தன், மார்பில் மறுவுடையோன், வழக்குத்தொடுக்குந் துணித்த மனமுடையோன் என்னும் இவ்வியல்களை யுடையோனாவான், எ - று. (101)

### உரோகணி.

நீரதிக தாகமுளன் சொன்னதுகேட் பான் புலவ னிருபனாகும்
பாரிலன்ன மிடுஞ்சீமா னிரும்புவியா பாரிநெய்பால் பக்ஷமுள்ளான்
நேருமிரு விழிபருத்துப் புருவமுஞ்சற்றேநெருங்கு நேயமினன்றும்
ஓரமுரை யானுள்ளங் காலுரைத்தன் றிடநடைரோ கணியினனே.

(இ - ள்.) உரோகணி நட்சத்திரத்தில் பிறந்தவன் தண்ணீர் அதிகம் விரும்புவான், சொன்னசொல் கேட்பான், பண்டிதனும் அரசனுமாவான், அன்னதானஞ் செய்வான், இரும்பு வியாபாரி, நெய், பாற்களில் விருப்ப முள்ளான், இரண்டு கண்களும் பருத்து நெற்றி நெருங்கி யுள்ளான், வஞ்சகம் பேசான், வலுத்த உள்ளங்கா லுடையோன், திடத்த நடையன் என்னும் இவ்வியல்களை யுடையோனாவான், எ - று. (102)

### மிருகசீரிடம்.

காலைமுழுக்குப் பிரியன் விசாலவிழிமயிரழகன் கல்வியுள்ளான்,
கோவியத்திண்டேகன்மனவன்மம் வெளிவிடானினியகூத்திற் பாட்
டிற், தாலவுஞ்சஞ்சாரனுந் தாம்பூலநேயனினைத் ததுமுடிப்பான்,
வேலாருங்கரனெற்றி யுயர்ந்திருக்குஞ் ஞானிமிருக சிரத்தினனே.

(இ - ள்.) மிருகசீரிட நட்சத்திரத்தில் பிறந்தவன், காலையில் ஸ்நானஞ் செய்வதில் விருப்ப முடையோன், பரந்த கண்ணுடையவன், மயிரில் அழகுடையவன், கல்விமான், திண்ணிய தேகத்தின் உட்கருத்தை வெளிவிடாதவன், கூத்திலும், பாட்டிலும், தாம்பூலத்திலும் விருப்ப முடையன், நினைத்த காரியத்தை முடிக்க வல்லவன், வேலாயுத மேந்திய கையோன், உயர்ந்த நெற்றி யுடையோன் ஞானி என்னும் இவ்வியல்களை யுடையவனாவான், எ - று. (103)

### திருவாதிரை.

பொய்யுரைசொல்வன் கீர்த்திமான் றரித்திரனெடியன்பொருத்து
நோயன், வெய்யசிலுகன்சுத்தவான் குஞ்சியழகனிருவிழி சிவப்பன்,
துய்யபலவான் கோபியுறவுடையனுயர்ந் திருக்குந் துண்டமுள்ளான்,
ஐயமறவுலகுதொழ வொருமணியாய் விளங்கியவா திரையினனே.

(இ - ள்.) திருவாதிரை நட்சத்திரத்தில் பிறந்தவன் பொய் பேசுவான்; கீர்த்தி யுள்ளவன், தரித்திரன், உயர்ந்தவன், கணுக்களில் நோயுடையவன், சிலுகன், சுத்த முடையன், குடுமி யழகுடையவன், கண்கள், சிவப்புடையவன், பலமுடையவன், கோபி உறவுடையவன், பெருத்த மூக்குள்ளவன் யாவர்க்குங் கண்ணியன் என்னும் இவ்வியல்களை யுடையவனாவான், எ - று. (104)

## புனர்பூசம்.

திருந்திசொற் சாதுரியனகங்காரி விசாலபுயன் சிக்கனத்தன்,
வருந்திநெடுவழிநடப்பன் கடினமொழியான் கள்ளின்மலர்போற் கை
யன், பரிந்தகுணபுத்திமான் பொய்சொல்லான் பித்தமுடன் பலர்க்கு
நேயன், பொருந்தியவைந்தாம்வயதிற் கான்முடமாவன் புனர்பூசத்தி
னானே.

(இ - ள்.) புனர்பூச நட்சத்திரத்தில் பிறந்தவன் சொற்சாதுரியன், அகங்காரி, பரந்தபுயத்தன், சிக்கனத்தன், நெடுவழி நடப்போன், கடினமாய் வார்த்தை யாடுவன், கள்ளன், வலர்போய் கையன், புத்திமான், பொய் சொல்லான், பித்ததேகி, பலர்க்கும் விருப்பமுடையான், ஐந்தாம் வயதில் கால்முடமாவன் என்னும் இவ்வியல்புகளை யுடையவனாவான், எ - று. (105)

## பூசம்.

வாசியுடையவன்வழக்கையுரைத்திடு கள்வன்குத்திரவசனமுள்ளன்
நேசமுடன்மாதாவைத் தந்தையைரக்ஷித்திடுவனெடியரூபன்
தேசொழுக்கந்தனவான்கண்மூக்கழகன் பசிபொறுன்றிகழுஞ்சாந்தம்
பூசிடிக்கப்பிரியன்குணவான் பாக்கியமுளன்பூசத்தினானே.

(இ - ள்.) பூசநட்சத்திரத்தில் பிறந்தவன் குதிரையுடையான், வழக்குரைக்கும் கள்ளன், குத்திரவசனன், தாய்தந்தையர்களை ரட்சிப்பன், நெடியன், ஒழுக்கமுள்ளான், தனவான், கண்களும், மூக்குமழகன், பசி பொறுக்கான், வாசனைவஸ்துக்களை தரிப்பதில் பிரியமுடையவன், நல்ல குணமுடையவன், செல்வவந்தன் என்னும் இவ்வியல்களை யுடையவனாவான், எ - று.

## ஆயிலியம்.

செஞ்சொற்சாதுரியன்சத்துருநேயன் மனதுக்கன்றிரிவான்காட்டில்
பஞ்சைபோற்சிறுதின்றிதின்பனன்னைபிதாக் கினியன்பக்தியுள்ளான்
வஞ்சகமிலாதெவர்க்குமேளிதஞ்சொல்வன் சுகவான்வலிமையோருக்
கஞ்சிடான்விழிபுருவமுயர்ந்தொதுங்கி யிருக்குமாயிலியத்தோனே.

(இ - ள்.) ஆயிலிய நட்சத்திரத்தில் பிறந்தவன்சொல் சாமர்த்தியன், பகையைவிரும்புவோன், மனத்தில் துக்கமுடையான், காட்டில் திரிவோன், சிற்றுண்டி விருப்பன், தாய்தந்தையர்களுக்குப் பிரியமுடையோன், புத்திமான், வஞ்சகமில்லாமல் எவரையும் எளிதஞ்செய்வோன் சுகமுடையவன், தன்னைப்பார்க்கிலும் வலிவுடையார்க்கும் அஞ்சாதவன், விழியும், புருவமும் உயர்ந்து ஒதுங்கியிருப்போன் என்னும் இவ்வியல்களை யுடையோனாவான், எ - று. (107)

## மகம்.

இலவுமுருக்கலர்விழிதொண்டை தூதளைபோற் செவ்விழார்
மாதே, பலதிசையிற் சஞ்சாரப்பிரியமுள்ளன் சௌந்தரியன்

பாண்மிகுந்த, புலவன்முழுக்குப்பிரியன் சுகந்தப் பரிமளப்பிரியன்
பொன் னுமுள்ளான், வலதுபுறமறுவுடையனியானற்ப நித்திரையன்
மகத்திஞனே.

(இ - ள்.) மகநட்சத்திரத்திற் பிறந்தவன் இலவமலர்போலும் முறுக்க மலர்போலும் விழியையும், தொண்டைபோலும் ஆதளைபோலும் செவந்த இதழையும் பெற்ற பெண்ணே! பலதிசைசளிலும் சஞ்சரிக்கப் பிரியமுள்ளான்; அழகுடையோன், இசைப்புலவன், ஸ்நானப்பிரியன், வாசனை வஸ்துக்களில் பிரியன் செல்வமுள்ளான், வலது பக்கத்தில் மறுவுடையான், நியாயஸ்தன் அற்ப நித்திரை செய்வோன் என்னும் இவ்வியல்களை யுடையோனுவான், எ - று. (108)

பூரம்.

இதமானவசனமுளான்கல்விமான் சிவந்திருக்குமிருகண்ணுளன்
மதியதனைவருத்தமாய்த்தேடு வன்வருங்கருமநினைவிற்காண்பன்
விதமானவியாபாரிகடினமொழிப் பலநினைவைவிரும்புநெஞ்சன்
பொனுமாதர்தனைவெல்வனகை அந்தவழகன்பூரத்திஞனே.

(இ- ள்.) பூரநட்சத்திரத்தில் பிறந்தவன் பிரியவசனமுள்ளான், கல்விமான், செவந்தகண்ணுடையான், வருத்தப்பட்டுச் செல்வந்தேடுவன், பின் வருங் காரியங்களை முன்னே நினைப்பவன், வியாபாரி, கடினவசனன், பல எண்ணமும் எண்ணுவோன், வேசிகள் பிரியன், சிரிப்பும், பற்களும் அழகுடையவன் என்னும் இவ்வியல்களை யுடையவனுவான், எ - று. (109)

உத்திரம்.

கையாதவுரையன் முன்கைவலியன் வித்தையுளனழகாங் கண்
வாயுள்ளான், மையார்கண்ணார் நேயன்முன்கோபி மறுமுகமார்பதனி
லுள்ளான், பொய்யாத சூரனீராடுவான் சிறுபசியன்பொருந்தும்
பத்தி, ஒய்யாரநடைதருமன் ஞானவானுகு முத்திரத்திஞனே.

(இ - ள்.) உத்திர நட்சத்திரத்தில் பிறந்தவன் வஞ்சகமில்லாமல் பேசுவோன், கைவலியுடையான், கல்விமான், அழகிய கண்களையும் வாயையுமுள்ளான், பெண்களிடம் விருப்பன், முன்கோபி, முகத்திலு மார்பிலும் மறுவுள்ளான், பொய்யிலாச்சூரன், ஸ்நான விருப்பன், அற்ப பசியுள்ளான், பத்தி செய்வோன், நடையழகன், தருமவான், ஞானி என்னும் இவ்வியல்களை யடையவனுவான், எ - று. (110)

அஸ்தம்.

வற்புறுதாமதன் கல்விமானற் பசியன்மனு வணங்கவாழ்வோன்
இன்பமுறுங் குறிப்புடையான்சூர னழகியன் கடினனிணிய புத்தி
பின்வயதிற் றனமுடையன் சிறுகன்மார்பகலன்பின் புறங்கானல்லோ
அன்புடனீராடல் குருபத்தியுளன்றரும னத்தத்திஞனே. [ன்

(இ - ள்.) அஸ்தநட்சத்திரத்தில் பிறந்தவன் கோபி, கல்விமான், சிறு பசி யுள்ளான், தருமவான், இன்பக்குறிப்புள்ளான், சூரன், அழகன், கடின வசனன் புத்திமான், பின்வயதிற்றனமுள்ளவன், சிலுகன், அகன்றமார்பன், பின்கால் அழகன், ஸ்நானவிருப்பன், குருபத்தியுள்ளான் என்னும் இவ் வியல்களை யுடையவனுவான், எ - று. (111)

சித்திரை.

பலமானசரீ ரவான்மார்பகல னடைகடியன் பரிந்துசொல்வான் டில, விபயநற்குணனடை நற்பிரியன் றமதபுத்திக்குரிசினண்பன், நிலைமைபெறுந்திட வசனன்முகத்துறுநன் மறுவுளனித்திரையுமற் பன், செலவுசெய்யான் சவுரியவான் றுக்கமுளான்கோபி சித்திரை யினுனே.

(இ - ள்.) சித்திரை நட்சத்திரத்தில் பிறந்தவன் பலமுள்ள உடலுள் ளான், அகன்றமார்பன், கடினமானநடையன், பிரியவசனன், நல்லகுணமுள் ளவன், தமோகுணன், யாவர்க்கும் நண்பன், திடவாக்குடையவன், முகத் தில் மறுவுள்ளவன், அற்பநித்திரை செய்வோன், செலவு அதிகஞ் செய் யான் சௌரியவான், துக்கமுள்ளவன், கோபி என்னும் இவ்வியல்களை யுடையவனுவான், எ - று. (112)

சோதி.

பல்லவற்கும்வசியன் போசனப்பிரியன் மறுதுடையிற் பற்ற வாழ்வோன், நல்வியல்சேர் தேவதாபத்தியுந் தன்னிச்சையுளான் ராசசேவைக்கல்வியுளான் றய்தந்தைதக்கினியன் விசுவாசமுளன் கடின தேகன், சொல்லுநெறியுளன் கரத்தாயுதம பிடிப்பன்றியாகவான் சோதியனே.

(இ-ள்.) சோதி நட்சத்திரத்தில் பிறந்தவன் பலபேரிடத்தும் பிரியன், போசன விருப்பமுடையான், துடையில் மறுவுள்ளான், தேவதாபத்தியும் சுதந்தர இச்சையு முள்ளான், ராஜசேவைக்குரியான், கல்வியுள்ளான், தாய் தந்தையர்களிடத்தில் பிரீதியுள்ளான், யாவரிடத்தும் விஸ்வாசி, வலுத்த தேகமுள்ளான், நெறியாய்ப்பேசுவோன், கையிலாயுதம் பிடிப்போன், தியாக மளிப்போன் என்னும் இவ்வியல்களை யுடையவனுவான், எ - று. (113)

விசாகன்.

வேறு.

சொல்லுமுகத்தின் மறுநெடிய னீதிதுயிற்பிரியன் சுற்றமரசர்க் கினியன் சொல்லடக்குங்குணத்தன், நல்வசனன் பொறையுடைய னன் நடையார்நேயன் நாடியமேதோர் தலைமார்பி னரையின் மறுவிள னும், செல்வமுளன் சதுர்வேதன் குணவான்கோபி சேவையுளான் விசாரமிலான் றெய்வபத்தியுள்ளான், வில்வாளுமேந்து காளுங்கயமு மாவும் மிகநடத்துந்தியாகியாம் விசாகத்தினுனே.

(இ - ள்.) விசாக நட்சத்திரத்தில் பிறந்தவன் முகத்தில் மறுவுடையான், நெடியன், நீதிமான், நித்திரைப்பிரியன், சுற்றத்தார்க்கும் அரசர்க்கும் இனியன், சொல்லையடக்குங் குணமுடையவன், நல்லவசனன், பொறுமையுடையோன் பெண்கள்நேயன், தலை மார்பு இடுப்பு இவைகளிலும் மறுவுடையன், செல்வமுள்ளான், சதுர்வேத நிபுணன், குணவான், முன்கோபமுள்ளான், தேவதாசேவை செய்வோன் விசனமில்லான், தெய்வபக்தியுள்ளான், வில்வாள் இவைகளைத் தாங்குங்கரத்தன், யானை குதிரை இவைகளைச் செலுத்துவோன், தியாகி என்னும் இவ்வியல்களையுடையவனுவான், எ - று.

அநுஷம்.

ஈனமில்லாநற்குணவான் றம்பூலப்பிரியன்
எவரெவரும்புகழ் சந்நாணினியபுத்தியுளனும்
நானிலமெலாந்துதிக்கு நீதிமான்றூயன்
நயனங்கள்சிவந்திருக்கு நராதிபர்கன்மானி
மானனையார்க்கினியன் மயிரழகன்மார்பகலன்
மாதாவைத்தந்தைதனை மகிழ்ந்திரக்ஷித்திடுவன்
ஆனைப்போல்வேகமுளன நற்சொல்லனல்ல
ஐஸ்சுவரியவான்லோபியா மனுஷத்தானே.

(இ - ள்.) அநுட நட்சத்திரத்தில் பிறந்தவன் நல்லகுணவான், தாம்பூலப் பிரியன், யாவராலும் புகழ்ப்படுங் கண்ணியன், பத்தியுள்ளவன், எல்லாருந் துதிக்கத்தக்க நீதிமான், பரிசுத்தன், சிவந்தகண்ணுள்ளான், நராதிபன், மானி, பெண்களுக்கினியன், மயிரழகன், மார்பகலன், மாதாபிதாக்களை ரட்சிப்போன், ஆனைபோலும் வேகமுள்ளான், நல்லவசனம் வசனிப்போன், ஐஸ்வரியவான், லோபி என்னும் இவ்வியல்களையுடையனுவான், எ - று.

கேட்டை.

தாட்டீகன்துஷ்டரிணக்கன் பொய்யனுபாயன்
தகுபத்தியுளனிரவான் குரூரகோபி
நாடிய வுண்ணுச்சுடனீ ராடிடவும்பிரியன்
வாற்புத்தியுளநெடியன் றமையனைரக்ஷிப்பன்
வாட்டமிலாச்சிற்றுண்டிதின்பன் மன்னர்க்கினியன்
மயிர்கடையும்விழிசிவப்பும் வலப்பாகமறுவன்
கேட்டமொழிதிறங்கொள்ளான் பொய்யைமெய்யாக்கிடுவான்
கேள்வியுளன்கடினச்சொலான் கேட்டையானே.

(இ - ள்.) கேட்டை நட்சத்திரத்தில் பிறந்தவன் தாஷ்டீகன், துஷ்டன், துஷ்டர்கள் நேசன், பொய்யன், உபாயன் புத்தியுள்ளான், இரக்க மாட்டான், மிகுந்தகோபி, உள்மூச்சுள்ளான், ஸ்நானப்பிரியன், நல்ல புத்தி

புள்ளான், நெடியன், தமயனை ரட்சிப்பான், சிற்றுண்டி பிரியன், அரசர்க் கினியன், மயிர் நுனியும் கண்களும் சிவக்கப்பெற்றவன், வலது பக்கத்தில் மறுவுடையான், கேட்டசொல்லைத் திறமாகக் கொள்ளமாட்டான், பொய் யை மெய்யாக மாற்றி விடுவான், நற்கேள்வியுள்ளான் கடினச்சொல்லான் என்னும் இவ்வியல்களை யுடையவனாவான், எ - று. (116)

மூலம்.

மண்டியநித்திரைப்பிரியன் புறந்தாளுநன்னதனும்
வழுவாமற்செய்கருமஞ் செய்பத்திமானும்
திண்டிறலாயுதந்தன்னற் சீவனஞ்செய்திடுவன்
திகழ்தந்தைதாய்க்கினியன் சிறந்ததவசீலன்
சண்டசிறுதின்றிதின்னப் பிரியவான்லோபி
கண்சிறுகிச்சிவந்திருக்குங் கல்விமானாகும்
மிண்டுகளேசெய்திடுவ னுறவினரைச்சேரான்
முன்கோபிகொடியனாகும் மூலத்தானே.

(இ - ள்.) மூல நட்சத்திரத்தில் பிறந்தவன், மிக்க நித்திரைப்பிரியன், புறங்கா லழகுடையன், செய்கருமம் வழுவாமற்செய்வோன், பத்திமான், ஆயு தத்தால் சீவிப்போன், தந்தை தாய்க்குப் பிரியன், தவநெறியுடையான், சிறி தின்றிதின்போன், லோபி, கண் சிறுத்துச் சிவந்திருப்போன், கல்விமான், கொடுமைகளையே செய்வோன், பந்துக்களைச்சேரான், முன் கோபமுள் ளான், மிகக்கொடியன் என்னும் இவ்வியல்களை யுடையவனாவான், எ - று.

பூராடம்.

மெய்ந்நெடியன்சிறுநெற்றியான் வாசப்பிரியன்
விசாரமுளனரசர் நண்பன்மேற்கருமம்பார்ப்பன்
செய்யசிற்றுண்டிப்பிரியன் மாதாவுக்கினியன்
சேர்ந்தவரைரக்ஷிப்பன் சிவந்தசிறுவிழியன்
கைகாலுநீட்சியுளன் சவுந்தரியன்விசாலன்
கள்வனும்வீரியவான் கரங்கள்புயம்வலியன்
பொய்சொல்லான் சஞ்சாரப்பிரியன்பின்னார்க்கினியன்
பொழிதானவானாகும் பூராடத்தானே.

(இ - ள்.) பூராட நட்சத்திரத்தில் பிறந்தவன் நெடியன், சிறுத்த நெற்றியுடையான், வாசனைப்பிரியன், விசனமுள்ளான், மன்னர்க்குச் சிநே கன், உயர்ந்த உத்தியோகஞ்செய்வன், சிற்றுண்டிப் பிரியன், மாதாவுக் கின் பன், தம்மை யடைந்தவரை ரட்சிப்பன், சிறுத்துச் சிவந்திருக்கும் கண்க ளுள்ளான், நீண்ட கைகால்களுள்ளான், சௌந்தரியவான், விசாலன், கள் ளன், சூரன், கரங்களிலும் புயங்களிலும் வலிவுள்ளான், பொய் சொல்லான், தேச யாத்திரைப்பிரியன் பெண்களுக்கினியன், தருமவான் என்னும் இவ் வியல்களை யுடையவனாவான், எ - று. (118)

### உத்திராடம் வேறு.

*தந்தைதமார்க்கினியன் முகத்துமறுவான் சரீரமுங்கெட்டி யான் பலவான், புத்திமானுயர்த்நாசி நல்வசனபோசனப்பிரியனீர்க் கஞ்சான், புத்திமானுறவுக்கினியவன்வர்ம்மி பார்பொருள்வேண்டிடா தூயன், உத்தமர்க்கினியனிறைந்த சொற்றியாகி யுன்னுமுத்தரா டத்தினானே.*

(இ - ள்.) நினைக்கின்ற உத்திராட நட்சத்திரத்தில் பிறந்தவன் பெண் களுக்கினியவன், முகத்தில் மறுவுள்ளான், சரீர பலமுடையவன், பலவான், புத்திமான், சுற்றத்தார்க்கு நல்லவன், நீண்ட மூக்குள்ளான், நல்ல வார்த்தை யாடுவோன், போசனப்பிரியன், சலத்திற்கு அஞ்சான், மர்மி, பிறர்பொருளை விரும்பான், தூயன், நல்லவர்களுக்கு நல்லவன், தியாக மீவோன் என்னும் இவ்வியல்களை யுடையவனாவான், எ - று.. (119)

### தி ரு வோ ண ம்

*தக்கதோர்கல்விமானொரு போக்கன்சற்றினிற்கோபமாறிடுவன்*
*பக்கமுமுன்பின்பார்த்து நடப்பன் பதிவுளங்கானுயாந்திருக்கு*
*மைக்கணார்க்கினியன்பரிமளப்பிரியன் மயிர்முடியழகனுற்சாகன்*
*சிக்கனவானேற்பவர்க்கீயான் றிகழ்திருவோணநாளானே.*

(இ - ள்.) விளங்குகின்ற திருவோண நட்சத்திரத்திற் பிறந்தவன், தகுந்த கல்வி யுடையோன், ஒரு போக்கன், கொஞ்சத்திற் கொஞ்சம் கோபம் வந்து மாறுவோன், முன்னும் பின்னும் பார்த்து நடப்பன், உள்ளங் கால் உயர்ச்சியைப் பெற்றவன், பெண்களுக்கினியன், வாசனை வஸ்துக் களிற் பிரியன், மயிரழகன், உற்சாகன், சிக்கினவன், ஏற்பவர்க்கீயான் என் னும் இவ்வியல்களை யுடையவனாவான், எ - று. (120)

### அ வி ட் ட ம்.

*நெறிபெருங்கருமந்தன் சொன்மேலானே னின்றவர்க்கஞ்சி டான்றியாகி, உறுபுறவடிநாசியுமுயர்ந்திருப்பனொருவர் சொற் பொறுனானூண்பிரியன், பெறுமவர்க்கினியன் மடந்தையர்க்கன்பன் பெரும்பொருடேடுவனவழகன், அறிவுனடங்கிப் பிறர்பொருள் வவ் வானவிட்ட நக்ஷத்திரந்தானே.*

(இ - ள்.) அவிட்ட நட்சத்திரத்தில் பிறந்தவன், நெறியானதொழில் செய்வோன், யாவர்க்கும் பயப்படான், தியாகி, புறவடி, நாசி இவைகள் உயர்ச்சியைப் பெற்றிருப்பன், ஒருவன் சொல்லையும் பொறுக்கமாட்டான், மாமிச பட்சணம் பிரியன், தந்தை தாய்க்குரியன், பெண்களுக்கினியன், செல்வ மீட்டுவன், அழகன், அறிவுள்ளோன், பிறர்பொருள் அபகரியான் என்னும் இவ்வியல்களை யுடையவனாவான், எ - று. (121)

## சதயம்.

பக்திநில்லாமல்வெகுண்டசொற்பொருதவான் பழுதிலாரோகா னினியன், புத்திமான்கைகால்வலியன் வாயழகன்பொய்பெருன் மன்னவர்க்கினியன், வித்வான்சூரன்மாதருக்கன்பன் மிகுந்துநீராடவும் பிரியன் சத்துருசயன்பொன்னுளன் வழக்குரைப்பான் சதயநக்ஷத் திரத்தானே.

(இ - ள்.) சதய நட்சத்திரத்தில் பிறந்தவன் கோபிக்குஞ் சொல்லைப் பொருதவன், ரோகவான், இனியன், புத்திமான், கைகால் வலியுள்ளோன், வாய் அழகன், பொய் பேசாதவன், அரசர்க்கினியன், வித்துவான், சூரன், பெண்களுக்கின்பன், ஸ்நானப்பிரியன், சத்துருவைச் செயிப்போன், செல்வ முள்ளோன், வழக்குரைப்போன் என்னும் இவ்வியல்களை யுடையவனுவான், எ - று. (122)

## பூரட்டாதி வேறு.

பூரட்டாதிபொருன் பிறர்பொத்துச்சொல்
கேரிட்டார்வழக்கன் பாலெய்க்கான்பிணை
வாரிட்டார் முலைமாதொருக்கீவிலான்
ஓரிட்டார்கல்வி மாசுசிபுன்னகன்.

(இ - ள்.) பூரட்டாதி நட்சத்திரத்தில் பிறந்தவன் பிறர்சொல்பொறுக் காதவன், வழக்குரைப்பான், பாலிலும், நெய்யிலும் பிரியன், பெண்களுக்கு வழங்கான், கல்விமான், ஆசிகூறுவோன், அழகுடையவன் என்னும் இவ் வியல்களை யுடையவனுவான், எ - று. (123)

## உத்திரட்டாதி வேறு.

நித்தநீராடிதமருளன்கோள நீதிபொன்பிறர்க்குபகாரி
வித்தைதாம்பூலப்பிரியன்சஞ்சாரன்விரிவுளகாதுமார்புடையன் [வான்
புத்திமான்மாதர்க்கினியசாதுரியன் பொய்யன்மற்றவர்தொழில்புரி
உத்தமர்க்கினியன்வழக்கினில்பலவா னுத்திரட்டாதிநாளானே.

(இ - ள்.) உத்திரட்டாதி நட்சத்திரத்திற் பிறந்தவன் நீராடற்பிரியன், சுற்றத்தாரை மிகுதி யுடையன், கோள் சொல்லுவோன், நீதியோன், பிறர்க்கு பொன்னுபகாரஞ் செய்வோன், வித்தையிலும் தாம்பூலத்திலும் பிரி யன், தேசசஞ்சாரி, சுரந்த காதுடையன், பரந்த மார் புடையவன், புத்தி சாலி, பெண்களுக்கினியன், சாதுரியன், பொய்யன், அந்நியர்களுடைய தொழிலை விரும்பிச் செய்வான், நல்லவர்க்கு நல்லவன், வழக்கு தொடுப் பதில் பலவான் என்னும் இவ்வியல்களை யுடையவனுவான், எ - று. (124)

ரேவதி.

மெல்லியரிடத்திற்சாலவேபிரியன் மிகுஞ்செல்வம்பாதிநாள்விளங்கும்
நல்லவன்பிறர் சொற்கேட்டுநற் குணவானயன சிங்கார சிமானும்
சொல்லுரையிற்சாதுரியந்தணரைத்தொழும் பத்திபுள்ளபுத்தியினன்
இல்லையென் றுரையான் பழிக்கிடங்கொடாதவியல்பினனி ரேவதியனே

(இ - ள்.) இரேவதி நட்சத்திரத்திற் பிறந்தவன் பெண்களிடத்தில் மிகவும், பிரியன் பாதிநாள் மிகுந்த செல்வத்துடனிருப்பன், நல்லவன், பிறர் சொல் கேட்பான், நல்ல குணவான், கண்கள் அழகுடையோன், வாய் சாதுரியன், பிராமணர்களை வணங்கும் பத்தியுள்ள புத்தியுடையோன், இரப்போர்க்கு இல்லை யென்னுதவன், பழிபாவத்திற்கு அஞ்சுவோன் என்னும் இவ்வியல்களை யுடையவனுவான், எ - று. (125)

நட்சத்திரப் பொதுப்பலன்
முற்றிற்று.

---

# நட்சத்திரப் பாதபலன்.

அச்சுவினி.

சீர்பெறுகோளன் சஞ்சலன்பாவி செறிந்திடும் ரூபமேயில்லான்
செப்பிய பிலுக்கனந் நியர்க்கன்பு செய்குவன் சுபதிமுதற்கால், தார்
செறிபிறரின் குணத்திதனையறிவன் சவுந்தரவானலம் புரிவன்-சாத்
திர முறைக்குஞ் ஞானமுட்பார்வைதரு மிருசாவினிற் சனித்தோன்
ஏர்பெறுகணித வித்தையிற் பிரியனினிதுளபுத்தியே புகல்வன்-
இசைந்திடுமூலரோகி நற்கருமமெண்ணிவன் மூன்றதாங்காலான்,
போர்செறிபுடம்புவனை தாமதிசு புத்திமான் சோதிடமறிவான்-புரந்
தரன் காமிசத்தியவானும் புகழுநாற்காலினி லுதித்தோன்.

(இ - ள்.) அச்சுவினி நட்சத்திரத்து முதற் பாதத்தில் பிறந்தவன் கோள் சொல்லுவோனும், மனச்சஞ்சலனும், பாவியும், நல்ல ரூப மில்லாதவனும், பிலுக்கனும், அந்நியர்களிடத்தில் பிரீதிகாட்டுபவனுமாவான். இரண்டாவது பாதத்திற் பிறந்தவன் பிறர் மனபாவங்களை யறிபவனும், அழகுள்ளவனும், நன்மை செய்பவனும், சாத்திரங்கள் முறையிமெம்படியான மெஞ்ஞானத்தில் உட்பார்வை யனுமாவான், மூன்றும் பாதத்திற் பிறந்தவன், சோதிட வித்தையிற் பிரிய முள்ளானும், நல்ல புத்திகளை எடுத்துச்சொல்லுவானும், மூலரோக முள்ளானும், நல்ல காரியங்களையெல்லாம் நினைப்பவனுமாவான். நாலாம் பாதத்தில் பிறந்தவன் போர் செய்தலில் உடம்பு சிறிது வளைப்பவனும், அதிக புத்தி யுள்ளவனும், சோதிடம் உணர்வானும், இந்திர போகனும், காமியும், சத்தியவானும் ஆவான், எ - று. (126)

### பரணி.

காலமாஞ்சிவப்பன் மிகுபராக்கிரமன் கனபலனீதியுமுள்ளான் - கருதலர்சிங்கஞ் செகந்திறமபிரான் காணுமே பரணியின்முதற்கால், கோலமானி நிபுணனும்வசியன் குணமுளன் புத்திமான்காமி - கூறிய தருமசாத்திரமுரைப்பன் குலவியபரணிகா லிரண்டாம், சாலவுங் கோபி யுருட்சியுள்கண்ணன் றன்னியன்மானிசந்தோஷி - சற்குணனெழுமோனுகு மூன்றாங்கால்சாற்றிய பரணியாமதன்மேல், தூலதேகத்தன் கோபியாமரசர் தன்னுசேவகத்துவமுள்ளான் - துர்ச்சனன் கருவியாகுமே பரணிதோன்று நாற்காலினுற் சொல்லே.

(இ - ள்.) பரணி நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் சிவப்பனும், பராக்கிரமனும், பலசாலியும், நீதியுள்ளவனும், பகைவர்களை ஜயிக்கும் கொளரிபோல் வெல்வோனும் செவந்த ரோமமுடையவனுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் மானியும், நிபுணனும், ஆலசியக்காரனும், நற்குணனும், புத்திமானும், காமியும், தருமவானும், தருமசாத்திரஞ் சொல்லுவோனுமாவான். மூன்றும் பாதத்தில் பிறந்தவன் கோபி, வட்டம் போன்ற கண்ணனும், தன்னியனும், மானியும், சந்தோஷசித்தனும், சற்குணனும், தேகதாட்டியனுமாவான். நாலாம் பாதத்தில் பிறந்தவன் ஸ்தூலதேகமுடையவனும், கோபியும் அரசரிடம் சேவகஞ் செய்வோனும், துர்ச்சனமுள்ளவனு மாவான், எ - று. (127)

### கார்த்திகை.

சொல்லுமாசாரன் வித்துவான் பிரபுதோன்றிய விலாபமுள்ளவனும் - சூரனுநேசன் புத்திமான்ரோகி தோன்றிடுமாலின் முதற்கால், வெல்லுமாசாரவீனன் மானிடர்கள் வெறுத்திடுகோபமுள்ளவனும் - வெற்றிசேர்பிறரைச் சோப்பனுமன்னை விரும்பிடான் கார்த்திகையிருகால், புல்லுவன்றட்டமடந்தையர் தன்னைப் புத்தியிலான் மிகுசூரன், பொருந்திடாக்கோபிகருவி பொல்லாங்கைப் புரிகுவனுமொரு மூன்றில் - அல்லுறுமிடியன்கலைபல வறியானுமனத்தாபமேயுள்ளான் - அடைந்திலான் பொறுமைதுக்கவான் ரோகியாகு நாற்காலதன் பொருளே.

(இ - ள்.) கார்த்திகை நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் ஆசாரமுள்ளவனும், வித்துவானும், பிரபுவும், இலாபசேகரனும், சூரனும், பசுப்பிரீதி யுள்ளவனும், புத்தியுள்ளவனும், ரோகியுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் ஆசாரவீனத்துவ முடையவனும், கோபியும் ஜெயசாலிகளைச் சிநேகராகச் சேர்த்துக்கொள்பவனும், சாத்திரங்களை விரும்பாதவனுமாவான். மூன்றும் பாதத்தில் பிறந்தவன் துட்ட பெண்களைச் சேருபவனும், புத்தியில்லாதவனும், மிகுந்த சூரனும், கோபியும்,

தீமையையே செய்பவனுமாவான். நான்காம் பாதத்திற் பிறந்தவன் தரித்திரனும், சாஸ்திரம் கல்லாதவனும், மலோஸ்தாபமுடையவனும், பொறுமையில்லாதவனும், துக்கவானும் ரோகியுமாவான், எ - று (128)

உரோகணி.

பொருளழகுள்ள னலைச்சலான்காமி புறத்தியார்க் கியற்றுவன்
துன்பம்-பொறையிலான்வர்மி ரோஷவான்ரோகி பொருந்துரோகணி
முதற் காலான், அருளுயர்சாத்த குணமுளான்ரோகி யாசாரன் சத்
தியவாக்கி-அமர்ந்தநேர்பெண்ணை மணப்பனவாய்ச்சால னன்புளனு
மிருகாலான், குருவருட்கணித வித்தைசங்கிதன் கூறியமந்திரன் சுக
வான்-குலவியபஞ்ச காவியமறியுங் கொள்கையானுரு மூன்றுங்கால்,
இருளிலாசத்தியவ னந்நியருடைமைக் கிச்சைசெய்புத்திய னினிய-
வந்திழைநேசலன் ரோகணிநாற்கா லினில்வருவோன்பல னுரைக்கில்.

(இ - ள்.) உரோகணி நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் பொருளும் அழகு முள்ளவனும், அலைச்சற் படுவோனும், அவாவும் அந்நியர்களுக்குத் துன்பஞ் செய்வோனும், பொறுமையற்றவனும், வர்மியும், குரோதவமும், ரோகமுள்ளவனுமாவான் இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் கிருபை பொருந்திய உயர்ந்த சாந்தகுண முள்ளவனும், ரோகியும் ஆசார முள்ளவனும், உண்மை பேசுவோனும், விரும்பிய பெண் ஒன்றையே விவாகஞ் செய்துகொள்பவனும், வாய்ச்சாலனும் ஆசையுள்ளவனுமாவான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் கணிதவித்தை யறிவோனும், சங்கீத முணர்வோனும், மந்திரவாதியும், சுகவானும், பஞ்சகாவியங்க ளறிவானுமாவான். நாலாம் பாதத்திற் பிறந்தவன் உண்மை பேசுவோனும், அந்நியர் சொத்தில் ஆசைகொள்வோனும் பெண் போகத்தில் விருப்பமுடையனுமாவான், எ-று.

மிருகசீரம்.

உரைத்திடத்தனவான்சத்துருசங்கார னுருதூல தேகனுங்கோபி,
உண்மையாசாரவீனன் ராக்ஷதனுமோங்குமான் றலைமுதற்காலான்,
தரைக்குநல்வழக்கை யுரைப்பனுத்தேசிசாது மனோகரம்பெற்றோன்-
சத்தியவாக்கி யரிவையர்லோலன் சாற்றிடு மிரண்டதாங் காலான்,
உரைக்குநல்லுதார குணமுளனல்ல னுத்தமன்சாதுசந்தோஷி, உசித
வாசாரன் புத்திமான்சீமா னுற்றமூன்றும்பதத் துதித்தோன்,
விரைத்தூறுபுத்திசத்தியன் சாதுமேவியதருமனற்காமி, வீரியன்
கோபிவஞ்சகனென்றே விளம்புநாற்பாதமாமினியே.

(இ - ள்.) மிருகசீரிட நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் சொல்லத்தக்க தனவானும், சத்துருக்களை ஜயிப்பவனும், ஸ்தூலதேகனும், கோபியும், ஆசாரபிரஷ்டனும், ராட்சதனுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் வழக்குரைப்பவனும், உத்தேசிப்பவனும், சாதுவும், மனோ

ரம்மியனும், உண்மை பேசுபவனும், ஸ்திரீலோலனுமாவான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் உதாரகுணமுள்ளவனும், உத்தமனும், சாதுவும், சந்தோஷ முள்ளவனும், ஆசாரனும், பத்திமானும், சீமானுமாவான். நாலாம் பாதத்தில் பிறந்தவன் புத்திமானும், மெய்யுரைப்பவனும், சாதுவும், தருமவானும், காமியும், கோபியும், வஞ்சகனுமாவான், எ - று. (130)

## திருவாதிரை.

இனியநல்வசன குணமுளான்மகாத்துமா யெளவன நாரியர்க்கினியன்-இயலுறுநல்ல வாதிரைமுதற்கா லினில்தருங்குணத்திறனென்ப-தனியுரைவாய்ச்சாலகனுநிட்டூரன் றருக்கியன்கருவிதீக்ஷையிலான் தகுதியாய்மடவா ருடன்புணர்ந்திடுவன் சாற்றியபாதமோரிரண்டில், குனியுநல்வாத ரோகமுமுள்ளோன் கோபிதண் கிருபையுமில்லான் கோளனுமஞ்சு நாரியர்தமக்கேகுணமிலான் காலொருமூன்றில், துணியுநல்விவேகி யுறவினர்பகையான் றோன்றியவினமாயனுத்தன்-தூர்ப்புத்தியூத்தை யுடம்புளான் பொல்லாத்துர்ச்சனனுரு நாலென்றே.

(இ - ள்.) திருவாதிரை நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் நல்ல பேச்சுள்ளவனும், நல்ல குணமுள்ளவனும், மகாத்துமாவும், மங்கையர்களுக்கு இனியனுமாவான். இரண்டாவது பாதத்திற் பிறந்தவன் பேசுவதில் சமர்த்தனும், நிட்டூரனும், தர்க்கவானும், தீட்சையில்லாதவனும், தக்க பெண்களோடு போகிப்பவனுமாவான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் குனிக்கின்ற வாதரோகமுள்ளவனும், கோபியும், தாட்சணியமில்லாதவனும், கோளுரைப்பவனும், பெண்களுக்குப் போககுணத்தைத் தராதவனுமாவான். நாலாம் பாதத்தில் பிறந்தவன் விவேகமுள்ளவனும், சுற்றத்தார்க்கு விரோதியும், ஈனபுத்தியுடையவனும், அழுக்குப்பட்டிருந்த உடம்புள்ளவனும், துர்ச்சனனுமாவான், எ - று. (131)

என்றுமெய்தூலப் பிலுக்கனற்போகி யிசைந்திடு செவிடனுங்காமி-வன்மயிர னினிபுநர்பூச மாமுதற்காலினி லிசைக்கோன், அன்றியபித்த னுட்டினதேகி சோமபலாசரமு மில்லான்-துக்கமேநிதந்தம் பொருந்துவனிருகா றோன்றியறிய நாட்பலன்மிகவே, அன்றிதீக்குட்டரோகியாஞ்சாதா மலைச்சலான்காவிய மறியான்-மந்துறுதந்தரோகவான் றீர்க்கவயதுளான் பாதமூன்றதனில், நன்றினிற் பிரியமுள்ளவன் குள்ளன்வல்லவ னழகுளானென்றே - நாடியபார்வை லக்ஷணமறிவனுற் பதமறிந்துரை தனக்கே.

(இ-ள்.) புநர்பூச நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் தூலதேகமுள்ளவனும், பிலுக்கனும், போகியும், செவிடனும், காமியும், பன்றிமயிர்

போலும் ரோமமுள்ளவனுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் பித்தஞ்சேர்ந்த உஷ்ணதேகமுடையவனும், சோம்பியும், ஆசாரமற்றவனும், துக்ககரனுமாவான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் குஷ்டரோகியும், சாதுவும், அலேச்சற்காரனும், காவியமறியாதவனும், தந்தரோகமுள்ளவனும், தீர்க்காயுசுள்ளவனு மாவான். நாலாம் பாதத்தில் பிறந்தவன் நல்ல காரியங்களில் பிரீதியுள்ளவனும், குள்ளனும், நல்ல அழகுள்ளவனும், பார்வை லக்ஷண முணர்ந்தவனுமாவான், எ - று. (132)

## பூ ச ம்.

தனக்கொடிமாதே சூலேநிட்டூரன் றருமவான் கோபி புத்தியுளான் தாழ்வுறாந்தீர்க்க வாயுளான்றீயன் றருபுனர் பூசநாண் முதற்கால், தினத்தினிற்பிரபு சர்வவியாபகனுஞ் செனங்களைத் தாபரித்திடுவான், செப்பியநிதானியங்நியர்சிநேகி சேர்ந்திடுமிரண்டதாம் பதத்தில், இனத்நினற்கினியன் புத்திமான்ஞானி யினிய சந்தோஷியா நேசன்-இனந்நினனல்ல காரியமுடிப்ப னெழில்பெறு மூன்றதாங்காலான், மனக்குறுசண்டை யுடையவன்கோபிவாஞ் சையா ரிரியர் தனக்கே - மகிழ்ந்திடுகமனன் பூசநன்னாற்கால் வரும் பல னறிக்துணர்மின்னே.

(இ - ள்.) தனபாரத்தைப் பொறாமல் கொடிபோல் துவளுகின்ற பெண்ணே! பூசநட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் சூலேரோகியும், நிஷ்டூரனும், தருமவானும், கோபியும், புத்திசாலியும், தீர்க்காயுசுள்ளவனும், கொடியனுமாவான். இரண்டாவது பாதத்திற் பிறந்தவன் பிரபுவும், சர்வ காரிய விக்கினனும், செனங்களை வருத்துவோனும், நிதானமுள்ளவனும், பர சிநேகனுமாவான். மூன்றாவதுபாதத்தில் பிறந்தவன் சுற்றத்தார் கினியனும் புத்திசாலியும், ஞானியும், சந்தோஷியும், பக்ஷபட்சமுள்ளவனும், சுற்றத்தாரால் நல்லகாரியம் முடிப்பவனுமாவான், நாலாம்பாதத்தில் பிறந்தவன் சண்டைக்காரனும், கோபியும், பெண்களிடத்தில் மிக்க பிரியனுமாவான், எ-று.

## ஆ யி லி ய ம்.

மின்னியதனமும் பெண்வடிவுள்ளான் மேன்புத்தி யுடையவன் சந்தோஷி-மிகுநலநாறு தொழில்புரிந்திடுவன் வேண்டுமாயி லியத்தின்முதற்கால், அன்னியரேவற் றொழில்புரிந்திடுவ னழகுள னேக்கமுமுள்ளான் - ஆசாரன்றீயநடையன் துர்ப்புத்தியுடையனுங்காலிரண்டதற்கே, நன்னியற்கோபி நாரியைவதைப்பன் ஞானியாலசியனுனிபுணன்-நலமிலாவார்த்தை பற்றவேயுரைப்ப னயமிகுபாத மூன்றதற்கே, பொன்கொலேநாசம் புரிபவன் சுபன்போல் லாங்குசெய் பவர்க்கினியன்-புலேச்சியர்சங்கம் பண்ணுவனேயைப் புணர்ந்திடு நான்கதாங்காலே.

(இ - ள்.) ஆயிலிய நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் மிகுந்த செல்வமுடையவனும், பெண்ரூபஸ்தனும் நல்ல புத்தியுடையவனும், சந்தோஷ சித்தனும், பற்பல வேலைகளைச் செய்பவனுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் அந்நியர்களிடம் வேலையைச் செய்வோனும், அழகுள்ளவனும், எக்கமுடையவனும், ஆசாரமுடையவனும், தீயவழியில் நடப்பவனும், துர்ப்புத்தி யுடையவனுமாவான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் கோபியும், மனைவியை வதைப்பவனும், ஞானியும், தாமதகுணத்தனும், நிபுணனும் நலமில்லா சொற்களைப் பேசுபவனுமாவான். நாலாம் பாதத்திற் பிறந்தவன் பொன்னை மிகுதியும் அழிப்பவனும், கொலைசெய்பவனும், சுககரனும், தீயவர்கட்கு நல்லவனும் பறைச்சியர் போகம் விரும்புவோனும், ரோகஸ்தனுமாவான், எ - று. (134)

## மகம்.

காலனைப்போலப் பயமுளசிவந்த கண்ணன்மிகு ராசையான்பூசி-
கருகிடுசிவந்த மெய்யினன்செவந்த குஞ்சியான் மகமுதற்காலான்,
போலியான்புத்தி யனல்வடுவுடையோன் பொருட்செலமான சந்
தோஷி-பொன்னிறக் கண்ணன் காதுநோயுடையோன்பொருந்திய
காலிரண்டதற்கே, சாலவும்பலவான் மிக்க நோயுள்ளான் சாதுபொல்
லாதவன் கடினன்-தாமிகவாசை யுடையவன் தூயன் தருதிகான்
மூன்றினிலுதித்தோன், சிலவனுரி பேச்சினைக்கேட்பன் சிரங்குட
னுறை முற்றிடுவன்-சிந்தைநோயுடையோன் மதுரவாசகனுந் தொனித்
துரை நாற்பதமாமே.

(இ - ள்.) மகநட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் எமனைப்போல் பயம்விளக்கும் சிவந்தகண்ணனும், மிகுந்த ஆசையுடையவனும், மதியூகியும், செவப்பவனும், செவந்தமயிருடையவனுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் நல்ல யுத்தியில்லானும், குற்றமுடையோனும், பொருட்செலவில் விருப்பமுடையவனும், பொன்போன்ற கண்ணனும், காதுநோயுடையனுமாவான். மூன்றாம்பாதத்தில் பிறந்தவன் பலசாலியும், நோயுள்ளவனும், சாதுவும், பொல்லாதவனும், கடினவார்த்தை யாடுவோனும், பேராசையுடையவனும் பரிசுத்தனுமாவான். நாலாம்பாதத்தில் பிறந்தவன் சீலமுடையவனும், பெண்கள் பேச்சைக் கேட்பவனும், சிரங்கும் வேறு ரோகங்களு முடையவனும், மனவியாகுலமுடையவனும், இனியவாக்குடையனுமாவான், எ - று.

## பூரம்.

ஆமெனுந் தீரனின்சொலன்கோபி யாசாரன்சவுரியன் சிறுவீ
டாக்கமில்லாதான் - வியாபாரஞ் செய்வா னனபூரம் முதற்கா
லான், தாமெனு முழவுத் தொழில்புரி குடிஞன் தாகமுங்கிலே
சமு முள்ளோன் - தானுறுசகாயம் பிரபலனில் லாதவனென்ப
திரண்டதாங் காற்கே, நாமெனுங் குணவா னருமேன் பாட்டா

மாகுகும் - காடியமூன்றும் பதமெனும் பொருளை நாட்டினி லுரைப்பர் நல்லோரே, தோமுறுந்துக்கக் குநவடுவுள்ளான் சொற்றிடு நிந்தையேபுரிவ - சோர்வறுமறையோர் தேவதூஷணத்தைச் சொல்வன் ஞன்கெனக் கருதே.

(இ - ள்.) பூரநட்சத்திரத்து முதற்பாதத்திற் பிறந்தவன் திரனும், இனியவசனனும், கோபியும், ஆசாரமுள்ளவனும், சௌரியவானும், சிறு வீட்டையுடையவனும், செல்வமில்லாதவனும், வியாபாரஞ் செய்பவனு மாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் உழவனும், தாகியும் கிலேச முள்ளவனும், பிறர் சகாயமில்லாதவனு மாவான். மூன்றும்பாதத்தில் பிறந்தவன் நற்குணனும், மேம்பாட்டையுடையவனும் கீர்த்திமானு மாவான். நாலாம் பாதத்திற் பிறந்தவன் துக்கமும். வடிவுள்ளவனும், நிந்திப்பவனும், பிராமணர்களையும் தெய்வங்களையும் தூஷிப்பவனு மாவான், எ - று. (136)

உத்திரம்.

கண்டெனமிருது வசனனுங்கீர்த்தி கன்னியன்றீர னிங்கிதனும் - சுருதியகிளைஞர் மேன்விருப்புடையான் காணுமுத்திர முதற்காலோன், கொண்டிங்காமி தரித்திரனூணன் கோதுறுசஞ்சல சித்தன் - கூறியநீத்த யாசகனுருக்குலவிய விருபதத்துதித்தோன், அண்டிடும் பிலுக்கன் பழுதிலாவுரையா னுக்களை மேய்த்திடுமவனும் - ஆனவாசாரமான தாமூன்றி லாகியபிறப்பையுடையவனே, வண்டனு நன்றி மறந்திடான் பிறரைமதித்திடான் தூஷணை மறைவன் - வாலிபந்தன்னிற்றாய் மரித்திடுவன் வழங்குமர் காலெனப் பெரியோர்.

(இ - ள்.) உத்திரநட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் இனிய வசன முரைப்பவனும், கீர்த்திமானும், கன்னியனும், தீரனும், நல்லவனும், சுற்றத்தார்மேல் வாஞ்சையுடையவனும் ஆவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் காமியும், தரித்திரனும், ஊண்விருப்பனும், குற்றமுள்ள சஞ்சல மனமுடையவனும், யாசகனுமாவான். மூன்றும் பாதத்தில் பிறந்தவன் பிலுக்கனும், உண்மை யுரைப்போனும், பசுமேய்ப்பவனும், ஆசாரமுடைய வனு மாவான். நாலாம் பாதத்தில் பிறந்தவன் நன்றி மறவாதவனும், பிறரை மதிக்காதவனும், தூஷணிப்பவனும், வாலிபத்தில் தாய் இறக்கப் பெறுவோனுமாவான், எ - று. (137)

அஸ்தம்.

பெரியதோர்கலகம் பண்ணிவித்திடுவன் பேசியபொய்யனும் கர்வி - பிலுக்கனுசாரன் பசுக்கடம்பிடத்திற் பிரியனுமத்தத்தின் முதற்கால், அரியதோர் குணவான் செய்தொழிலறிவா ளுனதோர் வாலிபந்தன்னில் - அன்னைபோம்பாட்டோ டாடலிற்பிரிய னதியுரை யுடையனுமிரண்டில், தரியலர்போலு மனத்தினன்தந்தை தான

நுஞ் சிறுவயதுதனில் - தந்திரவாதி ரோகிவியாபாரி சாற்றிடுமூன்ற தாங்காலான், உரியநன்னடையாளீகையானெடியோ னேதுசந்தோஷ வானாகும்-உசிதனுமன்னைக் கினியன்மெய்க் கீர்த்தி யுடையனாற் காற் பலமறியே.

(இ - ள்.) அஸ்த நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் கலகஞ் செய்வோனும், பொய்யனும், கர்வமுடையவனும், பிலுக்கனும், ஆசாரமுடையவனும், பசுப்பிரியனுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் சுகுணனும், செய்யுங்காரிய முணர்வோனும், வாலிபத்தில் தாயைச் சாக்கொடுப்பவனும், ஆடல்பாடல்களிற் பிரீதியுடையவனு மாவான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் பகைவர்போன்ற மனத்தனும், சிறுவயதில் தகப்பனைச் சாகக்கொடுப்பவனும், மகா தந்திரசாலியும், ரோகஸ்தனும் வியாபாரியுமாவான். நாலாம்பாதத்தில் பிறந்தவன் நன்னடக்கையுடையவனும், கொடையாளனும், நீண்டவனும், சந்தோஷமானவனும், மேன்மையானவனும், தாய்க்கு இன்பமுடையவனும், கீர்த்தியுடையவனுமாவான், எ - று. (138)

## சித்திரை.

அறிந்திடாய் பொல்லாக் காரியம்பண்ணு வறிகுவனேத்திர ரோகி-ஆக்குவான் வியாக்கியானஞ் சஞ்சாரி யாகிடுஞ் சித்திரைமுதற் கால், பறாந்தனிவசனன் தேகபோஷணையான் பெருமிடியானெடி யோனும் - பேணியதபசி சஞ்சலனென்றே பேசுவர் மாசிலாரிரண் டால், செறிந்திடுகீர்த்திமான் பராக்கிரமன் திடமுறும் வித்துவான் ஞானி - செப்புநன்னடையா னறிவுடையாளன் றிரிபதமதி லுதித் தோனும், எறிந்திடும் பகைவர் தமைவணங்கிடுதனியல்புத்தி யான்ஐய முள்ளான் - ஏதமற்றிடு நாற்காலினிற் றென்றேயியம்புவர் மேன்மை பெற்றோரே.

(இ - ள்.) சித்திரை நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் பொல்லாத காரியங்களைச் செய்பவனும், கண்ணோய்க்காரனும், வியாக்கியானஞ் செய்பவனும், சஞ்சாரியுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் நல்ல வார்த்தையாடுபவனும், தன் தேகத்தைப் போஷித்துக் கொள்ளுவோனும், தரித்திரனும், நெடியவனும், தபசியும், சஞ்சலசித்தனு மாவான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் கீர்த்திமானும், பராக்கிரமசாலியும், வித்துவானும், ஞானியும், நன்னடக்கையுடையவனும், நல்லறிவுள்ளவனுமாவான். நாலாம்பாதத்தில் பிறந்தவன் பகைவர்களை வணங்கும்படி செய்துக்கொள்வோனும், சுயபுத்தியுடையவனும், ஜெயசாலியுமாவன், எ - று. (139)

## சோதி.

பெற்றிடுதீரன் சொற்பனன்ஞானி பிரபுவை யடைந்தினி திருப்பன், பெருமைசேர் வித்தைப் பிரசங்கி சாது பேசிய சோதியின் முதற்கால், உற்றநற்றிடவா னாகும்வாய்ச் சாலன் புத்தி

மான் காரியவாதி, உண்மைய னந்தரங்கவான் காமியோனாகா லிரண் டதாம் பலனே, வெற்றிவிற் றொழிலன் குரூரனுங்குடிலன் மேவுநன் னடையிலான் கலகமியற்றுவான்சோதி விளம்புமூன்றுகுமெனும் பதத்துதித்திடுவோனே, சொற்றிறன்கோபி கலகமேற்பிரியன் துர்ச் சனன் சீலவான்காமி - சோரனுநான்காம் பதத்தினிலுதித்தோன் றோற்றிய வடிவமைத்தோளாய்.

(இ - ள்.) சோதிட நட்சத்திரத்து முதற் பாதத்தில் பிறந்தவன் தீர னும் சொப்பனங் காணுவோனும், ஞானியும், பிரபுநேச முள்ளவனும் வித்தியா சாதுரிய பிரசங்கியும் சாதுவுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் திடவானும், வாய்ச்சாலக்காரனும், புத்தி சாலியும், காரியக்கார னும், உண்மை பேசுவோனும், அந்தரங்கக்காரனும், காமியு மாவான். மூன் றாம் பாதத்தில் பிறந்தவன், வில்வித்தைக்காரனும், குரூரனும், முடக்கனும் தீயவழியில் நடப்பவனும், கலகஞ் செய்பவனுமாவான். நாலாம்பாதத்தில் பிறந்தவன் சொல் சாதுரியனும், கோபியும், கலகத்தி லாசை யுடையவனும், துர்ச்சனனும், சீல முள்ளவனும், காமியும், சோரனுமாவான், எ - று. (140)

விசாகம்.

அமைந்திடுவஞ்சன் கல்விமானுரு மறிவன் சோதிட சௌக்கிய வான் - அறிவுடைப்புலவன் வாணிபம்புரிவா னுதித்திடு விசாகத்தின்முதற் கால், தமைப்புகழ்ந்திடுவன்மந்திரன் காமிசத்தியனீதிமான் ரோகி - சரசவானுஞ் சந்தோஷிபிங்கலவான் சாற்றிடுநாற் பலனெனப்பாய், இமைந்திடுபலவான் சோரனுக்குள்ள னிலியகாரியமறிந்திடுவன் - எழில்பெறும் பரஸ்திரீகமனன் வாய்ச்சால னெனக்கூறுமூன்றதாங்கா லான், அமைப்பருப்புத்தி யுடையனுஞ்யோகியருத்தன முடையவன் ஞானி - அழகுறுந்தாரமொன்றுள னெடியோனுதும் வாய்ச்சாலனாம் பதமே.

(இ - ள்.) விசாக நட்சத்திரத்து முதற் பாதத்தில் பிறந்தவன் வஞ்சக னும், கல்விமானும், சோதிட முணர்ந்தவனும், சௌக்கிய வானும், புல வனும், வியாபாரியு மாவான். இரண்டாவது பாதத்தில்பிறந்தவன் தன்னைத் தானே புகழ்ந்து கொள்வோனும், மந்திர வாதியும், காமியும், உண்மை பேசு வோனும், நீதியோடு நடப்பவனும், ரோகியும், சரசக்காரனும், சந்தோ ஷித்தவனும், நல்லவனுமாவான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் பலமுள்ள வனும், சோரபோகப் பிரியனும், குள்ளனும், நல்ல காரியங்களை யெல்லாம் உணர்பவனும், அந்நியஸ்திரீ விருப்பமுடையவனும், வாய்ச்சாலக்காரனு மாவான். நாலாம் பாதத்தில் பிறந்தவன் அரிய புத்தி யுடையவனும், யோகியும், செல்வ முடையவனும், ஞானியும், ஒருதார முடையவனும், வாய்ச்சாலக்காரனுமாவான், எ - று. (141)

அநுஷம்

பதமுளனீதியிங்கிதமறிவான் பண்புறுசத்தியவானும் - பகரு மாசாரன் மந்திரசீலன் பற்றியவநுஷத்தின் முதற்கால், இதமுள

புள்ளாங்குழலினிற்பிரிய னிசைநவாய்ச் சாலனும்புத்தி-எய்திய சிறப்பன் மானிகாமியனு மிருபதப்பொருளெனவுரைப்பர், விதமுள புத்திமான் சவுந்தரியன் மென்குர லோசையானெழுதும்-வித்தைசா துரிய னெடுப்புளானென்றே விளம்புமூன்றும் பதமதற்கே, அகந் செயும் விஷவாக்கன் பரதுரோகியன்னியதமையர்க ளுள்ளான்-அன் புறுமோசை நாணமுமுடைய னவிர்சிரங்குடையனுந் தெரியே.

(இ - ள்.) அநுஷ நட்சத்திரத்து முதற் பாதத்தில் பிறந்தவன் நல்ல பதவி யுடையவனும், நியாயக்காரனும், சத்தியவானும், ஆசாரக்காரனும், மந்திரசுத்தி சொல்வோனுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் புள்ளாங்குழலிசையிற் பிரிய முள்ளவனும், நல்ல வாய்ச்சாலக்காரனும், சிறந்த புத்தியுடையவனும், மானியும் காமியுமாவான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் புத்திசாலியும், அழகுடையவனும், மெல்லிய குரலையுடைய வனும், வித்தியாசாதுரியனுமாவான். நாலாம் பாதத்தில் பிறந்தவன் நச்சுச் சொல்லுடையவனும், பரத் துரோகியும், தமையர்களை யுடையவனும், மோசஞ் செய்பவனும், நாணுபவனும், குடையுடையவனுமாவான், எ - று.

## கேட்டை.

தெரிந்தனுதா னெழுத வல்லவன்கர்வி செயும்பரி காசியாங் காந்தி செறிவிளையாட்டு நன்மைச் சந்தோஷி சீர்மிகுங்கேட்டையுன் முதல் கால், பொருந்து சங்கீதப்பிரியன் வாய்ச்சாலி புகழுகல் லீகையான் சுகவான்-போகிகண்மனத்தன் ரோகியாமென்றேபுகலுவரிரண்டதாங் காலே, திருந்துகண் ணோய் பசுவுளன்கலகன் செப்பியவீனபுத்தியி னுன்-செய்குவன் பிறர் காரியந்தனதென்றே சீர்பெறுஞ் சாதுமூன் றுங்கால், அருந்திறங்கலகப் பிரியன் முன்கோபி வஞ்சகன் குரூரமே புரிவன் - வர்த்திடுங் குலத்தின் மேன்மைகூறிடுவன் மன்னியவீரிரு தாளே.

(இ - ள்.) கேட்டை நட்சத்திரத்து முதற் பாதத்தில் பிறந்தவன் எழுத வல்லவனும், கர்வியும், பரிகாசஞ் செய்பவனும், விளையாட்டுச் செய் கையுடையவனும் சந்தோஷித்தவனுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் சங்கீதப்பிரியனும், வாய்ச்சாலக்காரனும், ஈகையுள்ளவனும், சுக வானும், போகியும், கண்மனத்தை யுடையவனும், ரோகியுமாவான். மூன் றாம் பாதத்தில் பிறந்தவன் கண்ணோயுள்ளவனும், பசுவுடையவனும், கலகக் காரனும், ஈனபுத்தி யுடையவனும், அந்நியர் தொழில்களைத் தனதென்று நினைத்துச் செய்பவனும், சாதுவுமாவான். நாலாம்பாதத்தில் பிறந்தவன் கலகஞ் செய்வதில் பிரீதி யுடையவனும், முன் கோபக்காரனும், வஞ்சகனும், குரூரத்தையே செய்பவனும், தன் குலமேன்மையைச் சொல்லிக் கொள்ளு வோனுமாவான், எ - று. (143)

## மூலம்.

*தானுனுமுனைவிற் கிழங்கின்மேற்பிரியன் சாற்றியபாபமே புரிவன் - தாழ்விலாரோகி யுன்மத்தனென்றே சாற்றுவர்மூலத்தின் முதற்கால், வானுயர்புலவன் பயிற்றிநோயுடையோன் சத்தியவான் புத்தியுளானும் - வளமுடைமானி பக்ஷமுள்ளவனு மருவுகாலிரண்டி னில் வந்தோன், ஈனமாம்பில் லிசூனியமறிவா னெழிலுளன்சோம்பலான் காமி - இனிபழற்கனிமேற் பிரியனுமூன்றி லெண்ணிய பலமிக்கென்ப, கோடினனும்பலவா னிபுணனுஞ்சாது கோபமேமிக்குறுவன், ஞானி - கூறுசத்துருவை யடக்குவன் கழுத்திற்கொண்ட நோயுள் ளனதனிற்றே.*

(இ - ள்.) மூலநட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன், கிழங்கு வகைகளிற் பிரியமுள்ளவனும், பாபத்தொழில்களையே செய்பவனும், ரோகவிதனும், பித்தங்கொண்டவனுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் வித்துவானும், வயிற்றுநோயுடையவனும், பொய் பேசுவோனும், நல்ல புத்தி யுள்ளவனும் மானியும், யாவரிடத்திலும் இன்பமுள்ளவனுமாவான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன், பில்லி, சூனியம், இவைகளைக் கற்றுக் கொள்பவனும், அழகுள்ளவனும், சோம்பலுள்ளவனும், காமியும், நல்ல பழங்களிடத்தில் பிரியங்கொண்டவனுமாவான். நாலாம்பாதத்தில் பிறந்தவன் நல்ல பலமுள்ளவனும், காரிய வல்லவனும், பகைவர்களை ஜெயிப்பவனும், கண்டமாலை யுடையவனுமாவான். (144)

## பூராடம்.

*ஈறிலாவணக்க முடையவன்சேயோ யிலாதவன் விகாதமே புரிவன்-இயம்பிடுசூரன்மத் திமவயதாமென்பர் பூராடத்தின் முதற்கால், பேதுறும்யோகி சவுந்தரியோனும் பெட்புறுஞ் சிநேகிதமில்லான் - பேதையாம்வேசை கமனனென்றுரைப்பர் பெரியவ ரிரண்டதாங்காற்கே, மாறிலாச்சுகவான் பாக்கியவான்மாதா வாலிபந்தன்னிலே மரிப்பள்-வளர்பெருநோயன் குணமுளன்றெளிவன் மன்னிய மூன்றதாங்காலே, வீறிலான்முதுகி னோயுளன் திருடன் விளம்பியவாதவான் பலவான்-மேவியதுரோகி சிறுவயதிற்சாம்விளம்பிய தந்தை நாற்காற்கே.*

(இ - ள்.) பூராநட்சத்திரத்து முதற் பாகத்தில் பிறந்தவன் மிக்க வணக்க முடையவனும், புத்திரப்பேறே இல்லாதவனும், சச்சரவே உண்டாக்குபவனும், சூரனும், நடுவயதுவரைக்கு மிருப்பவனுமாவான். இரண்டாவது பாதத்திற் பிறந்தவன் யோகியும், அழகுள்ளவனும், சிநேகர்களிருக்கப் பெறாதவனும், அறிவீனனும் வேசிலோலனுமாவான். மூன்றாம் பாதத்திற் பிறந்தவன் சுகவானும், செல்வமுடையவனும், வாலிபதசையில் தாயை

இறக்கப் பெறுவனும், பெரிய வியாதிக்காரனும், நற்குணனும், தெளிவுடையவனுமாவான். நாலாம் பாதத்தில் பிறந்தவன் பயமில்லாதவனும், முதுகு நோயுள்ளவனும், திருடனும், அபவாதம் சொல்பவனும், துரோகியும், தந்தையைச் சிறுவயதிலேயே இறக்கப் பெறுவனுமாவான், எ - று. (145)

உத்திராடம்.

ஏர்பெறுநல்ல புத்திமானீகையான் றகுநூல்பல வறிவன் -
எதிலாசாரான் றனையுபசரிப் புகலுத்திராடத்தின், ஓரதாங்காலி
லுயர்பெருவாக்கி யுலோபியாம பிலுக்கனாற்றிடவான் - உச்சிதமாய்க்
கருமம் ராச்சியத்தியற்று முடனிரண்டாகியகாற்கே, கூரியகர்வி
பெருமொழியாளன் குரூரனுங் கலங்கினமனதான்-கோபியாந்தூல
வடிவுளனென்ற கூறுமூன்றென்றதேர்காற்கே, வீரியனல்ல தன்
மம்முடிப்பன் விசேஷகாரியமுளான்லோக வியாபாரமுடையன்
பந்துபக்ஷமுள்ள வேண்டியகாற்பதம் வந்தோன்.

(இ - ள்.) உத்திராட நட்சத்திரத்து முதற்பாகத்தில் பிறந்தவன் அழகு வாய்ந்த நல்ல புத்திசாலியும், ஈகைக்குணமுடையவனும், பிரபல சர்வ சாஸ்திரங்களையும் அறிபவனும், குருவை யுபசரிக்கின்றவனுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் நல்ல வாச்சாதுரியனும், உலோபியும், பிலுக்கனும், திடவானும், மேன்மையான கருமங்களை ரகசியத்தில் நன்றாய்ச் செய்பவனுமாவான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் கர்வியும், பெருநோக்காய்ப் பேசுவோனும், குரூரனும், கலங்கிய மனத்தனும், கோபியும், ஸ்தூலதேகனுமாவான், நாலாம் பாதத்தில் பிறந்தவன் வீரியமுடையவனும், தருமஞ் செய்பவனும், விசேஷ காரியங்களுள்ளவனும், வியாபாரியும், சுற்றத்தார்களுக்குப் பட்சமுள்ளவனு மாவான், எ-று. (146)

திருவோணம்.

வந்திடும்புத்தி மான்றூலதேகி மைந்தரிலான் போகவானும்-
மன்னுமுற்சாகி கலகவான்கர்வி யாந்திருவோணத்தின் முதற்கால்,
சந்ததம்பிரம ஞானியாங்காமி தயவிலான்லோபியாஞ் சிநேகம்-தானி
லாதினென்றே சாற்றுவதிரண்டதாகிய காலதாம் பலனே, தந்திடுங்
காமி ரோகிதற்போகி தனமுளன் மெத்தவேயுதாரன்-தயவிலா னென்
றே யுரைத்திடுவார் கடரும்பத மூன்றினும்பயனே, சிந்தூர நுதல்
வேசையர் விருப்புடையான் சிலவான்தருமவான் றியாகி-சிதப்புளான்
தனவான் பயிரிடுவானுஞ் செப்புநாற் காற்பல வகையே.

(இ - ள்.) திருவோண நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன்புத்திசாலியும், தூலதேகியும், பிள்ளைகளில்லாதவனும், போகவானும், நிலைபெற்ற உற்சாகியும், கலகக்காரனும், கர்வியுமாவான். இரண்டாம்பாதத்தில் பிறந்த

வன் பிரமஞானியும், காமியும் தாட்சண்ணிய மில்லாதவனும், லோபியும், சிநேகமில்லாதவனுமாவான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் காமியும்ரோகியும், போகியும், செல்வமுள்ளவனும், உதாரகுணஸ்தனும், தயவில்லாதவனுமாவான். நாலாம்பாதத்தில் பிறந்தவன் வேசிலோலனும், சீலமுடையவனும், தருமஞ்செய்பவனும், கீர்த்தியுள்ளவனும், தனவானும், பயிரிடுவனுமாவான். எ - று. (147)

## அவிட்டம்.

வகையிலான்காமி பசிபொறுன்மனதில் வகையுறுகிலேசனிட்
டூரன் - வளம்பெறுதூலசரீரவான் கரியன்மருவிய வவிட்டத்தின்
முதற்கால், தகையிலான் மனதினிற் பேதகமுடையான் சத்தியன்
புத்திமான்மிடியன் - சாத்திரவாதி யூக்கமுள்ளோனுந் தருமவா
னிருபதமென்ப, திகைசெறிகுணவான் குறுகியமெய்யன் சேர்ந்திடு
திடமுளன்மானி - செப்பு நன்னடையான் செந்நிறவானுந் தெரிந்திடு
மூன்றதாங்காலில், தொகைமிகுதனவான் குரூரனுந் தூலதேகவான்
கர்விபேதகனும் - துலங்கியவுரோம வழகுடையோனுஞ் சோர்வறு
நாற்பாதந் தொட்டோன்.

(இ - ள்.) அவிட்ட நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் வகையில்லாதவனும், காமியும், பசிபொறுக்காதவனும், கிலேசனும், நிட்டூரனும், ஸ்தூலதேகனும், கறுப்பனுமாவானும். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் கெட்டவனும், வஞ்சகனும், சத்தியனும், புத்திமானும், தரித்திரனும், சாத்திரவாதியும், விடாமுயர்ச்சியோனும், தருமவானுமாவான். மூன்றாம்பாதத்தில் பிறந்தவன் குணசிலனும், இளைத்த சரீரமுள்ளவனும், திடவானும், நன்னடக்கை யுடையவனும், செவப்பனுமாவான். நாலாம் பாதத்தில் பிறந்தவன் தனவானும், குரூரனும், தூலதேகனும், கர்வியும், வஞ்சகனும், மயிர் அழகுடையவனுமாவான், எ - று. (148)

## சதயம்.

தொட்டகற்குணவா னழகுளானுதாரன் சுசியனும் விப்பிரர்
மேலும்-துலங்கியபசுக்கள் மேலுநற்பிரிய னிதியுளான் சதயமொன்
றூங்கால், பொட்டெனக்கோப முடையவன்கிலேசி பொருந்து
நற்பேதகம்புரிவான் - புனிதமதில்லா னிழிகுலந்தன்னிற் பொருந்து
பினிரண்டதாங்காலே, பட்டுநற்கருமப் பொருத்துடன் முடிப்பன்
பசியுடன் வயிற்றிநோயுள்ளான் - பண்புடன்பித்தன் சேவகாவிருத்தி
பண்ணுவான் மூன்றதாம் பதமே, நட்டணையுணர்வதா னுக்கிரசி
மானிநாடிய காரியமுடிப்பான் - நல்லவன்சுகவா னற்பதமென்றே
யுரைப்பர் நான் மறையோரே.

(இ - ள்.) சதய நட்சத்திரத்து முதற்பாதத்திற் பிறந்தவன் குணவானும் அழகனும், உதாரணம், சீலனும், பிராமணர்மேலும் பசுக்களிடத்திலும் பிரீதியுள்ளவனுமாவான். இரண்டாம் பாதத்திற் பிறந்தவன் கோபியும், கிலேசியும் வஞ்சகனும், ஆசாரமில்லாதவனும் இழிகுலத்தானுமாவான். மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் நல்ல காரியங்களை யெல்லாம் முடிப்பவனும், பசியுள்ளவனும், வயிற்றுநோயனும் பித்தனும் சேவகாவிர்த்தி செய்பவனும் புத்திசாலியுமாவான். நாலாம்பாதத்தில் பிறந்தவன் நட்டம் தெரிபவனும், உத்தேசியும், மானியும், நினைத்தகாரியம் முடிப்பவனும், நல்லவனும் சுகனுமாவான், எ - று. (149)

## பூரட்டாதி.

மறையவன்பரந்த முகமுளான் பலவான் மனைவிமேற் பிரியன் போர்புரிவான் - மனவுணர்வுடைய னுத்தேசிசுகவான் மன்னுபூரட் டாதிமுதற்கால், இறையவன்சிரேஷ்ட மந்திரமறிய னிளைத்திடான் மனதாமேவியால்கி - எவர்க்குமேவணங்கிக் காரியமுடிப்போனிருபதஞ் சந்தோஷவானும், பொறைபுரானல்ல நடையுடைப்புலவன் பிறர் மனைப் போசனப்பிரியன் - போதஞ்செய்பித்த ரோகியனாகும் புத்திமான் பேசிடுமூன்றில், துரைபுகழ்குணவான் சத்தியனழகன் றூழ்வதுசிநேகிதப்பிரியன் - சற்றொழில்புரியுஞ் சுகமுளன்சாற்று நாற்பதமுமாகாலே.

(இ - ள்.) பூரட்டாதி நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் பிராமணனும், அகன்றமுகத்தானும், பலவானும், பெண்சாதிமேற் பிரியனும், யுத்தம் புரிபவனும், நல்லுணர்ச்சி யுடையவனும், உத்தேசியும், சுகவானுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன் கடவுள் மந்திரமறிவோனும், மனயிளைக்காதவனும் யாவரிடத்தும் வணங்கிக் காரியமுடிப்பவனு மாவான் மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் சந்தோஷவானும், பெருமையுள்ளவனும், நல்ல நடையுடையவனும், புலவனும், அந்நியர் வீட்டுப் போஜனத்தில் பிரியமுடையவனும், பித்தரோகியும், புத்திமானுமாவான். நாலாம் பாதத்தில் பிறந்தவன் குணவானும், சத்தியனும், அழகுள்ளவனும், சிநேகிதமுள்ளவனும், நல்ல தொழிலுடையவனும், சீமானுமாவான், எ - று. (150)

## உத்திரட்டாதி.

நாடொறுங்கோபி சஞ்சலன்றூதா நாடியவுடம்பினின் மயிரன் - நவம்பெறுசிரேட்டன் பிரதானமென்றே நவில்வருத்திட்டாதி முதற் கால், நீடுறும்ரோசக்காரனும் சாதுநிறைந்திடுமிடப நற்குணவான் - நிலைத்தநன்னடையா னறிவுளானென்றே நிகழ்த்துவரிரண்டதாங் கார்த்தே, கோடுறுபுத்தி யிலான் பத்திமான் முன்கோபி சந்தோஷி செம்மயிரான்-கோளனுமூன்றுங் காற்பலமென்றே கூறுவர்மறைபுணர்

புலவர், பீடுறுஞ்சொற்கேட்டான் மிகவாடும் பேதியனுதாரனற் பயிரை-பேணுவான்கோபி கிலேசவானுதும் வெட்புநாற்காற்கபலன் றேனே.

(இ - ள்.) உத்திரட்டாதி நட்சத்திரத்து முதற்பாதத்தில் பிறந்தவன் கோபியும், சஞ்சலனும், தாதாவும், மயிர்நிறைந்த தேகனும், சிரேட்டனுமாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன், ரோஷமுடையவனும், சாதுவும், தரித்திரனும், நல்லகுணவானும், நன்னடையுடையவனும், அறிவுள்ளவனு மாவான். மூன்றும்பாதத்தில் பிறந்தவன், புத்தியில்லாதவனும், பக்திமானும், முன்கோபியும், சந்தோஷியும், செம்மயிருடையோனும், கோளுரைப்போனு மாவான். நாலாம்பாதத்தில் பிறந்தவன் புலவர் சொல்லில் வாட்டமுடையவனும், பேதியுடையவனும், குடும்பியும், கோபியும், கிலேசமுள்ளவனு மாவான், எ - று. (151)

ரேவதி.

தேன்மொழிகலகப் பிரியனுநிபுணன் செறிகுணவித்துவான் யாண்டும் - செப்பியகிலேசி சந்தோஷமுள்ளான் றிடம்பெறுரேவதி முதற்கால், தானெனுஞ்சோரன் தீரமாமனத்தன் சவுக்கியன்கோபி நற்காமி-சஞ்சலன் மிருதுவாஞ் சரீரத்தன்றுணிரு காற்பலனென்றே, யான்மொழிபுத்தி யிலாதவன்பாவிபடிறனே தனமிலானுதும்-பரிந்திடு முதாரன் குணமிலானென்றே பகருமூன்றும் பதமதற்கே, நானெனுந்தீரன் சத்தியவாக்கி நவின்றிடுங் குலத்தினிற்கேடன் - நாடியசுகவான் சத்துருசங்காரி நலம்பெறுசூரனுற் பதமே.

(இ - ள்.) ரேவதி நட்சத்திரத்து முதற்பாதத்திற் பிறந்தவன் கலகப்பிரியனும், நிபுணனும், வித்துவானும், கிலேசியும், சந்தோஷமுள்ளவனு மாவான். இரண்டாவது பாதத்தில் பிறந்தவன், சோரனும், தீரனும், சௌக்கியனும், கோபியும், காமியும், சஞ்சலனும், மெல்லிய சரீரமுள்ளவனு மாவான். மூன்றும்பாதத்தில் பிறந்தவன், புத்தியில்லாதவனும், பாவியும், வஞ்சகனும், தரித்திரனும், உதாரனும், நற்குணமில்லாதவனு மாவான். நாலாம்பாதத்தில் பிறந்தவன் தீரனும், சத்தியவசனனும், ஈனகுலஸ்தனும், சுகவானும், சத்துருவைச் செயிப்பவனுமாவான், எ - று. (152)

நட்சத்திரப் பாதபலன்

முற்றிற்று.

# இராசிகளிற் சந்திரனின்ற பலன்.

## மதிமேடத்தினின்ற பலன்.

பன்னிருராசிகடோறுஞ் சந்திரன்றுனின்றபலன் பகர்வார்மே டத்தின் மதிநிற்கப்பிறந்தோன், மின்னுவிழியிருண்டு சற்றேசிவந் திருக்குங்காமு மிகுதூரநடந்திடுவன் சீக்கிரசந்தோஷி, பொன்னை மிகத்தேடியுடனே செலவுபுரிவான் புயவலன்வீரியன்மடவார் கல விக்குவலியன், சென்னிதனின் மறுவடுவான் றுளன்சபலனாகும் சங்கண்டஞ் சுவன்முழந்தாட் செறிபிணியுள்ளவனும்

(இ - ள்.) மேடமுதலிய பன்னிரண்டு ராசிகளிலும் சந்திரனிருக்கும் பலனைப் பெரியோர் சொல்லுவர். அவற்றில் சந்திரன் மேடத்திலிருக்கப் பிறந்தவன், கண்கள் சிவந்திருண்டும், காமியும், தூரநடத்தலும், சீக்கிரசந் தோஷியும், திரவியந்தேடி யழிப்பவனும், வீரியனும், ஸ்திரீபோகவலியுடை யவனும், தலையில் மறுவுடையனும், சபலசித்தனும், சலத்திற்குப் பயப்படு வோனும், முழங்காலில் நோயுள்ளவனுமாவான், எ - று. (153)

## மதி இடபத்தினின்ற பலன்.

உள்ளமகிழ்ந்தருளுமதி யிடபத்திலிருக்க வுற்பவித்தோன் குணங்கிருபையுடனல்லருபன், தெள்ளியநாசியின் முகத்திற் பக்கத் தின் மறுவான் தியாகவான் றொடைவதனம் பருத்திருமலுளனும், பிள்ளைகண்முந்தியுள்ளான் பெண்பெறுவன் பொறுமை பெரும்பசிய னிருசொல்லன் பின்புசந்தோஷிப்பன், கள்ளவிழியார்க்கினிய னண்ப ருக்குநண்பன் கண்டிடுமத்திமவயதோன் சவுக்கியபாக்கியவான்.

(இ - ள்.) சந்திரன் ரிஷபத்திலிருக்கப் பிறந்தவன் நற்குணனும், கருணையுள்ளவனும், சௌந்தரியவானும், நாசியிலும், முகத்திலொரு பக்கத் திலும் மறுவுடையவனும், தியாகவானும், தொடையும் முகமும்பருத்து இருமலுள்ளவனும் பிள்ளைகளையும், பெண்களையும் பெறுபவனும், பொறுமைக்கார னும் பெரும்பசியனும், இருவார்த்தைக்காரனும், பின்சந்தோஷியும், பெண் களுக்கினியனும், சிநேகருக்குச் சிநேகனும் மத்திமவயதுடையவனும் பாக் கியவானுமாவான், எ - று. (154)

## மதி மிதுனத்தினின்ற பலன்.

வான்மிதுன சசிபலன் மின்னார்மகிழுஞ்சூதன் மகிழ்தூதன், சிவந்தக்கண்ணன்மயிர் சுருண்டேயிருப்பன், தான்மிகச்சூதுகள்

பெறுவனழகன் சத்தியவான்சாப்பாட்டி னிற்பிரியன் றகும்புத்தி மானும், பான்மைசெறி பட்டுடுக்கப்பிரியவான் முகத்திற் பரிக்கு மறுவுளன் பிரியவாக்குமிகுரசவான், தேனனைய மொழிமடவார் கொண்டாடிப்புகழ்வர் திடமாயுன் னதமாகச் செறிந்திருக்கு நாசி.

(இ - ள்.) சந்திரன் மிதுனத்திலிருக்கப் பிறந்தவன் பெண்களுக்கினிய னும், தூதனும், சிவந்தகண்ணனும், சுண்டமயிரனும், சூதனும், அழகனும், உண்மையாளனும், போஜனப்பிரியனும் புத்திசாலியும், பட்டுடுக்கப் பிரீதி யுடையவனும், முகத்தில் மருவுள்ளவனும், இன்பவசனனும், பெண்கள் புகழ விருப்போனும், திடத்துடன் செறிந்த மூக்குடையவனுமாவான், எ - று.

## மதிக் கார்கடகத்தினின்ற பலன்.

நாசமிலாக் கடகத்தின் மதியுலவச் சனித்தோன் நண்ணுபலன் மடவாரை நடைபுரிந்துசயிப்பன், வீசிவளைந்தோடுவ னன்புடைய நண்பருடையோன், வீடதிகமாய்க்கட்டி மேவுவன் மெய்குறளன், நேசமுறு மனக்கள்ள னுத்தேசமுள்ளான் நிலையில்லாத் தனம்படை த்து நீணிலத்திலிருப்பன், பாசமுட னனைவருக்கும் பருத்தகழுத் துளனுய் பரவுசாம வுபாயனெனவே பகரவேண்டும்.

(இ - ள்.) சந்திரன் கர்க்கடகத்திலிருக்கப் பிறந்தவன் பலசாலியும், பெண்களை வெல்பவனும், வளைந்தோடுபவனும், மிகுந்த சிநேகர்களையுடைய வனும், அதிக வீடுகளைக்கட்டி வாழ்பவனும், குள்ளனும், கள்ளனும், உத்தே சியும், மிக்க செல்வத்துடனிருப்பவனும், பாசமுள்ளவனும், பருத்த கழுத் துள்ளவனும், சமயோசிதவுபாயனுமாவான், எ - று. (156)

## மதி சிங்கத்தினின்ற பலன்.

வேண்டிடுஞ்சிங் கத்தினின்ற சந்திரனிருக் கும்பலன்கள் மிகு கொடியன் நெடுங்கதுப்பன் மின்னார்க்குப் பகைவன், நீண்டமலையிற் காட்டிற் சஞ்சரிக்கப்பிரியன் நேயமிலான்பசிதாக முடையனூண்பிரி யன், நீண்டிடுதாம்பூல நேயன்மனோதுக்கன் தியாகியெழில் பராக்கிர மன் திரபுத்தியுளனும், ஆண்டகர்வித நடையான் விசாலமுளவதனன் அற்பகாரியக்கோபி யாவனெனச் சொல்லே.

(இ - ள்.) சந்திரன் சிங்கத்திலிருக்கப் பிறந்தவன் கொடியனும், கதுப் பனும், ஸ்திரீகட்குப் பகைவனும், மலையிலும் காட்டிலும் வசிக்கப் பிரிய முடைவனும், நேசமில்லாதவனும், பசியும் தாகமுமுடையவனும், ஊண்பிரி யனும், தாம்பூலபிரியனும், துக்ககரனும், தியாகியும், பராக்கிரமசாலியும், ஸ்திரபுத்தியுள்ளவனும், கர்வியும், பரந்த முகத்தனும், அற்பகாரியத்திலும் கோபமுள்ளவனுமாவான், எ - று. (157)

## மதி கன்னியினின்ற பலன்.

சொல்லுங் கன்னியிற்சோமன் சூழ்பலன்கள்பகரில் சுகவான் சத்தியவாக்கி சுரதத்திற்பிரியன், கல்வியிற்சாத்திர வகையில் வல்லவனமெய் யிளைத்தோன் காயமுமுன்னதன் லச்சையுடன் படுகற்கருமன் வெல்லுமேம் பாடுடையான் றர்மசிந்தையாளன் சுதேசத்திற்சஞ்சாரி மிருதுவாக்கு முளனும், நல்லவர்கள் பல ராலே பூசிதம்பெற்றிடுவன் நாரியரே பிள்ளைகொஞ்சமா நவிலுங் காலே.

(இ - ள்.) சந்திரன் கன்னியிலிருக்கப் பிறந்தவன் சுகம், சத்தியம், சுரதம், கல்வி, சாத்திரவகை இவைகளில் வல்லவனும், அழகிய இளைத்த சரீர முள்ளவனும், லச்சையோடு கரும மியற்றிபவனும், மேம்பாடுடையவனும், தர்மவானும், சுதேசவாசியும், இனிய வசனனும், நல்லவர்களால் பூசிக்கப் பெற்றவனும், கொஞ்சம் பிள்ளைகளைப் பெறுபவனுமாவான், எ - று. (158)

## மதி துலாத்தினின்ற பலன்.

காலேகோவிடத்தினிற் சந்திரனிருக்கும பலன்கள் கன்னியமைச் சயித்திடுவன் கல்வியிற பண்டிதனும், மேலெவிஞ்சிதமோகி சுகனிதிய முடையோன் - விப்பிரர் தேவர்களிடத்திற்பிரியன் வெகு சாந்தன், கோலேபோ விளைத்தசையாப் பிரகிருதி யிலையான் - கொள்ளவும் விற்கவும்வல்லன் குலமாதருடையன், மாலேகேடமர் பகைவனுமங்கவீனன் - மனதிற்சந்தோஷமிலான் வன்மனுங்கண்டீர்.

(இ - ள்.) சந்திரன் துலாவிலிருக்கப் பிறந்தவன் பெண்களிடத்தில் வெற்றி, கல்வி, சாதுரியம், ரோகம், நிதியம், சுகம் இவைகளையுடையவனும், பிராமணர் தேவர்களிடம் பிரிய முள்ளவனும், சாந்தம் தளராவன்மையுள்ளவனும், பசுவியாபாரியும், வதுவைஸ்திரீயுடையானும், போரில் வல்லவனும், அற்ப வீனனும், சந்தோஷ மில்லாதவனும், மர்மனுமாவான், எ - று. (159)

## மதி விருச்சிகத்தினின்ற பலன்.

கண்டீர் சந்திரபகவான் விருச்சிகத்தின் பலன்கள் - கருதுங் காற்றிரண்டமுழங் காலுடையவனுவன், கொண்டாடும்வாலிபத்திற் பிதாவை யிழந்திடுவன் - கொடிய சேஷ்டையனச்சங் கொள்வானே யாளன், செண்டாடுஞ் செங்கோமன்னர் பூசித்தனுபிடுவன் - செனங்களறியாதொளித்துச் செய்குவன் பாபத்தை, மிண்டாரும் பக்ஷி மிருகம் பிடிக்குங்கையன் - விழிமார்பும் பருத்திருக்கு மெனப்பலன்கள் கூறே.

(இ - ள்.) சந்திரன் விருச்சிகத்திலிருக்கப் பிறந்தவன் திரண்ட முழங்காலும், வாலிபத்திற்றந்தையை யிழத்தலும், சேஷ்டையும், அச்சமும், மன்

னர் பூசித்தலையும், நோய் கோட்படுதலும், பாபஞ் செய்தலும், பட்சி மிருகங்களைப் பிடித்தலும், விழி மார்பு பருத்திருத்தலு முடையவனுவான், எ - று.

மதி தநுசுனின்ற பலன்.

கூறு தனுராசியிற் சந்திரனின்றபலன்கள்-கூன்முதுகுள்ள பலவான் குலவியகம்பீரன், வீறுநிதிக்கினியவனுற்சாகி சிற்பமறிவன் - மிகுமாசையுளன் வெல்லுஞ்சொல்லன் வீரியவான், தேறுபிதா நிதியதனைச் செலவுசெய்க்கியாகி-செய்யபுயந் திரண்டிருக்கும் திண்கவிதையறிவான், மாறுசெய்தேதமரைத் தூஷிப்பன் வசிகரனும்-மணிகளணிந்திடு கழுத்தும் வதனமு நீண்டிருப்பன்.

(இ - ள்.) சந்திரன் தனுசிலிருக்கப் பிறந்தவன் கூன்முதுகும், பலமும், கம்பீரமும், செல்வமும், உற்சாகமும், சிற்பமறிதலும், மிகுந்த ஆசையும், வெற்றி வசனமும், வீரியமும், பிதிரார்ச்சிதத்தைச் செலவு செய்தலும், திரண்ட புயமும், கவியறிதலும், தம்மவர்களைத் தூஷித்தலும், வசீகரமும், மணிகளணியும் கழுத்தும், நீண்டமுகமு முடையவனுவான், எ - று. (161)

மதி மகரத்தினின்ற பலன்.

நீண்டமகரச்சசிக்குப் பலந்தனமு மில்லான் நிறைந்த காவியந் தெளிவா னிதியுதவா வுலுத்தன், பூண்டசவுபாக்கியவான் கேடான சொல்லே புகலுங்காமியகாமன்புயபலவானுவான், வேண்டியவிச்சைகளுடையன் சோம்பனிச்சிதனும் மின்னனையார் புகழுநன் மெய்க்கிருபையில்லான், ஆண்டகையைமனைவியைத்தன் மைந்தரைக்கொண்டாடி அவனிமிசை யிருப்பனென வறிந்துரைகள் செய்வாய்.

(இ - ள்.) சந்திரன் மகரத்திலிருக்கப் பிறந்தவன் தரித்திர முண்மையும், காவிய முணர்தலும், உலுத்தத்தனமும், சௌபாக்கியமும், கெட்ட வசன முரைத்தலும், காமமும், புயபலமும், வேண்டிய விஞ்சைகளும், சோம்பலும், இதமும், பெண்கள் மகிழ்தலும், கிருபை யில்லாமையும், ஆண்டகையையும், மனைவியையும், பிள்ளைகளையும் கொண்டாடுதலும் உடையவனுவான், எ - று. (162)

மதி கும்பத்தினின்ற பலன்.

செய்யகும்பச் சசிபலன்க ளிடுப்பின்மறுவுளனுஞ் சிலகரும மழிக்கவுமாக்கவும் வலியன்சில்லோர், தையலுக்கு மகட்குமிச்சை யுறும்பாவிகொடியன் சரீரமதுநீண்டிருப்பன் காறுடையும்பெரியன், துய்யகழுத்தும் நெடியன் பெருமுதுகன் வழிகள் துலைவாக நடக்கவலன் சாந்த மலர்ப்பிரியன், மெய்யினாம் புயர்ந்துசிக்கென்ற மயிருள்ளான் விரவுபெருங் குறியனெனவே விளம்பவேண்டும்.

(இ - ள்.) சந்திரன் கும்பத்திலிருக்கப் பிறந்தவன் இடெப்பில் மறுவும் சில தருமங்களை அழிக்கவும் செய்யவும் வன்மையும், சிலர் மனைவியரிடத்தும் தன் பெண்ணினிடத்தும் இச்சை வைத்தலும், கொடுமையும் சரீர நீட்சியம், காலும் தொடையும் பெருத்திருத்தலும், கழுத்து நீட்சியும், முதுகு பெருத்தலும், தொலைதூரம் நடத்தலும், சாந்தமும், புஷ்பத்தில் பிரியமும், நரம்புயர்ந்து தெரிதலும், சிக்கான மயிரும், ஆண்குறி நீட்சியு முடையவனுவான், எ - று. (163)

மதி மீனத்தினின்ற பலன்.

விளம்பியமீனச்சசிக்குப் பலனீரிற்பிறக்கும் மீன்முதற் செந்துக்களின் மேன்மிகப் பிரியனுவன், வனம்பெரிய போகபாக்கிய வஸ்துக்களினும் மருவுகிரகங்களினு மனமுடையனுவன், உளமதனிற் பரதார விருப்புடையனழகன் உற்றகுலமகளிடத்து முறவுடையன் சமவான், இளம்பிறைநேர் நுதலைதனிற் சிந்தூரதிலதம் எழுதியிளையோர் மனதை யிழுக்குமடமானே.

(இ - ள்.) நெற்றியில் பொட்டிட்டு இளைஞர் மனதை மயக்கும் பெண்ணே! சந்திரன் மீனத்திலிருக்கப் பிறந்தவன் மீன் முதலிய செந்துக்களிற் பிரீதி யுடைமை, போகபாக்கிய வஸ்துக்களிலும் கிரகங்களிலும் பிரீதியுடைமை, பரதார விருப்ப முண்மை, அழகுடைமை, தன் மனைவியிடம் விரும்பம், சமத்துவம், பெண்களை மயக்குதல் முதலியவைகளை யுடையவனுவான், எ - று. (164)

இராசிகளிற் சந்திரனின்ற பலனு
முற்றிற்று.

---

# இராசிகளிற் சனிநின்ற பலன்.

---

சனி மேடவிரிச்சிகத்தின் பலன்.

வேறு

மேடத்திற் காரிநிற்கின் மிகுமாய ரூபிமூர்க்கன்
தேடிடா னுறவுசற்றும் பிரமிக்கச் சிறிதுசொல்வன்
ஓடுதேள் காரிக்கேகட் டுண்டுமெய்க் கிறதாவன்
நீடிய தனமுமில்லான் கொலைசெய்தே நிற்பன்றானே.

(இ - ள்.) மேடத்தில் சனி நின்றால் மாயரூபியும், மூர்க்கனும், உற்றாரை விரும்பாதவனும், பிறரைப் பிரமிக்கச் செய்வோனும், விரிச்சிகத்தில் சனி நின்றால் கட்டுப்படுபவனும், தேகம் அழியப் பெறுபவனும், தரித்திரனும், கொலை செய்பவனுமாவான், எ - று. (165)

சநி இடபதுலாத்தினின்ற பலன்.

நிற்குமோ ரிடபந்தன்னி னிற்கிற்பெண் கட்குலோலன்
நற்குணன் மறதியில்லா ஞரியர் பலரைச்சேர்வன்
முற்கோலிற் சவுரிநிற்கின் முற்றிய தனவானுவன்
சற்குணன் கியாதியுள்ளான் றருவனூர் மணியமாவான்.

(இ - ள்.) ரிடபத்தில் சனி நின்றால் பெண்கட்கு லோலனும், நற்குணமுள்ளவனும், மறதியில்லானும், பல பெண்களைப் புணர்வோனும், துலாவில் சனி நின்றால் தனவானும், நற்குணனும், கீர்த்திமானும், மணியக்காரனுமாவான், எ - று. (166)

சநி மிதுனகர்க்கடக கன்னியினின்ற பலன்.

ஆனதோர் மிதுனங்கன்னி தனிற்சனி யமர்ந்தகாலை
தானமாம் புதல்வரற்பந் தகைமையில் லார்க்குமாண்பன்
வானுறு நண்டிற்காரி மருவிற்றாய் மகன்பொன்னில்லான்
ஈனவான் ஞாதுருவீனன் மக்கினபல்லன் மூர்க்கன்.

(இ-ள்.) மிதுனத்திலும், கன்னியிலும் சனிநின்றால் பிள்ளைகள் கொஞ்சமும் தீயர்க்கு நல்லவனும், கர்க்கடகத்தில் சனிநின்றால் தாய், மகன், பெண் இவர்களிலாதவனும், ஈனகுணனும், அறிவீனனும், ஊத்தைப்பல்லனும், மூர்க்கனுமாவான், எ - று. (167)

சநி சிங்கத்தினின்ற பலன்.

மூலமாஞ் சிங்கவீட்டின் முனிவுறுஞ் சனிதானிற்கில்
சாலவாசாரமில்லான் சுகமில்லான் றாட்சியுள்ளான்
சீலமாங் குலம்விளங்கப் பெற்றிடுஞ் சேயுமில்லான்
வேலைவா ரிதிபைவண்டை முனிந்திடு விழியினாளே.

(இ - ள்.) சிங்கத்தில் சனிநின்றால் ஆசாரமில்லாதவனும், சுகமில்லாதவனும், தாழ்மை யில்லாதவனும், பிள்ளையில்லாதவனுமாவான், எ - று.

சநி தனுசுமீனத்தினின்ற பலன்.

விழிமீன தனுவிற்காரி மேவின்மன் னவருக்கன்பன்
மொழிசுக முடையன் மைந்தர் திரவிய முள்ளனுவன்
வழிவச மானபெண்டீ ருள்ளவன் மலர்க்கணேயான்
கழியபெண் டீர்மேற்பக்ஷங் காட்டிடுஞ் சிந்தையானே.

(இ - ள்.) மீனத்திலும் தநுசிலும் சனிநின்றால் இராசப்பிரியனும், சொற்சுகமுடையவனும், பிள்ளைகளும் திரவியமுடையவனும், வசப்பட்ட ஸ்திரீ யுடையானும், கண்ணேயுடையானும், பெண்கள்மேல் விருப்பமுடையானுமாவான், எ - று. (169)

சநி மகரகும்பத்தினின்ற பலன்.

சிந்துவாழ் மகரகும்பஞ் செறிந்துதன் காரிநிற்கில்
உந்திய நகரம்பட்டண முடையவ னுறுகணேயன்
சந்ததந் தனங்கள்சேர்ப்பன் செலவுளன் சரீரசுட்கன்
சுந்தரப் பரத்தைநன்பன் பலமுளன் சோரனுவான்.

(இ - ள்.) மகரத்திலும் கும்பத்திலும் சனி நின்றால் நகரத்தையும் பட்டணத்தையு முடையவனும், கண்ணோயனும், செல்வமீட்டுவோனும், செலவுக்காரனும், மெல்லிய சரீரனும், ஸ்திரீலோலனும், பலசாலியும், சோரனுமாவான், எ - று. (170)

இராசிகளிற் சனிநின்ற பலன்

முற்றிற்று.

---

# சந்திரனைக் கிரகங்கள் பார்த்த பலன்.

## மேடம்.

ஆட்டில்வெள் குடையைப்புந்தி யார்காணி லதிகவித்தை
பூட்டியபொன் சேய்காணில் புரமல னுகிவாழ்வன்
கூட்டிய பிருகுகாணிற் குணவானுங் காரிகள்ளன்
நீட்டிய பதங்கள்காணி லிணிய மில்லையென்னே.

(இ - ள்.) மேடத்திலுள்ள சந்திரனை புதன் பார்த்தால் அதிக வித்தையும், குரு, அங்காரகன் இவர்கள் காணில் அரசனும், சுக்கிரன் காணில் குணவானும், சனி காணில் கள்ளனும், இராகு கேதுக்கள் கண்டால் தரித்திரனுமாவான், எ - று. (171)

## இடபம்.

என்னையன் விடையிலேறு மிராமனைச் செவ்வாய்காணில்
பொன்னிலான் புந்திகள்ளன் பொன்காணிற் புகழுள்ளானும்
பன்னிய பளிங்குவேந்தன் பங்குபாதன் பொன்னுள்ளான்
துன்னிய கதிரோன்காணி லேவியதொழில் செய்வானும்.

(இ - ள்.) ரிடபத்திலுள்ள சந்திரனை அங்காரகன் காணில் தரித்திரனும், புதன் காணில் கள்ளனும், குரு காணில் கீர்த்திமானும், சுக்கிரன் காணில் அரசனும், சனி காணில் செல்வமுடையானும், சூரியன் காணில் ஏவலாளியுமாவான், எ - று. (172)

### மிதுனம்.

வான்றண்ட லோனையாரல் காணவல் விரும்புவிற்பன்
கான்முடப் புந்திகாணில் மன்னனுங் கனகன்காணின்
மேன்மைபண் டிதனுஞ்சுங்கன் காணினல் லச்சமில்லான்
மான்சனி தனிநூல்விற்பன் மார்த்தாண்டன் மிடியே தங்கும்.

(இ - ள்.) மிதுனத்திலுள்ள சந்திரனை அங்காரகன் காணில் இரும்பு வியாபாரியும், புதன் காணில் அரசனும், குரு காணில் பண்டிதனும், சுக்கிரன் காணில் பயமில்லாதவனும், சனி காணில் நூல் விற்பவனும், சூரியன் காணில் தரித்திரனுமாவான், எ - று. (173)

### கர்க்கடகம்.

தங்கிய தண்டுவிக்கு கன்னைவக் கிரன்முன்காணில்
பொங்கிய குசலைசெய்து பொரும்படை புதனில்வித்தை
துங்கமன் பார்க்குஞானி சுங்கன்பார் வைக்குமன்னன்
செங்கதிர் நோக்கக்கண்ணோய் திறல்சனி யிருமலுய்ப்பான்.

(இ - ள்.) கர்க்கடகத்திலுள்ள சந்திரனை அங்காரகன் காணில் பொரும் படை வெல்வோனும், புதன்காணில் வித்தியாசாலியும், குருகாணில் ஞானியும், சுக்கிரன் காணில் அரசனும், சூரியன் காணில் கண்ணோயனும், சனி காணில் இருமற்காரனுமாவான், எ - று. (174)

### சிங்கம்.

உய்யரி யிந்தைப்புந்தி பார்க்கச்சோ திடநூலோனும்
செய்யபொன் றனவான்வெள்ளி திருஷ்டிமன் னவனுங்காரி
மெய்யுற நோக்கினுநா விதத்தொழில வினைப்பன் வெய்யோன்
வையமே காணின்மன்னும் பயில்குசன் பாராள்விப்பன்.

(இ - ள்.) சிங்கத்திலுள்ள சந்திரனைப் புதன்காணின் சோதிடவல்லவனும், குரு காணின் செல்வவானும், சுக்கிரன் காணின் அரசனும், சனி காணின் நாவிதத்தொழில் செய்பவனும், சூரியன் காணின் அரசனும், அங்காரகன் காணின் உலக மாள்பவனுமாவான், எ - று. (175)

### கன்னி.

விற்பன மடந்தை வேண்டியே கணக்கன்காணில்
நற்புவி புரப்பன்பொன்னோக் கதிற்சேனா பதியேநாட்டும்
முற்பகர் சுங்கன்சால நிபுணன்சேய் முடவன்வெய்யோன்
பொற்புறக் காணிற்கன்னி யாற்பிழைப் புண்டாவானே.

(இ - ள்.) கன்னியிலுள்ள சந்திரனைப் புதன் காணின் அரசனும், குரு காணின் சேனாபதியும், சுக்கிரன் காணின் நிபுணனும், அங்காரகன், சனி, சூரியன் இவர்கள் காணின் ஸ்திரீயாற் பிழைப்பவனுமாவான், எ - று.(176)

### துலாம்.

ஆவன்கோ விடத்தலோனை மால்காணி னரசனவன்
மேவிய பொன்னிபார்வை மிகுசொர்ன வேலைசெய்வன்

தாவிய பிருகுகாணில் வியாபாரி சனிசெவ்வாய் வெய்யோன்
மூவர்கண் டிடில்வஞ்சிப்பன் பலரையு முறைமைபோல.

(இ - ள்.) துலாவிலுள்ள சந்திரனைப் புதன் காணின் அரசனும், குரு காணின் சொர்னவேலை செய்பவனும், சுக்கிரன் காணின் வியாபாரியும் சனி, அங்காரகன், சூரியன் இவர்கள் காணின் வஞ்சகனுமாவான், எ-று.

விரிச்சிகம்.

போலுந்தே ளிந்தைக்கண்ட புதனுக்குத் தந்தைரெண்டாம்
மேலுமே குருதிஷ்டிக்குப் பிராமண சீலன்வெள்ளி
சாலவே காணவண்ணன் பனிசநி வெய்யோன்செவ்வாய்
கோலமா மங்கவீனன் றரித்திரன் குணவேந்தாமே.

(இ - ள்.) விரிச்சிகத்திலுள்ள சந்திரனைப் புதன்காணின் இரண்டு தகப்பன்மாருடையவனும், குருகாணின் பிராமணசீலனும், சுக்கிரன் காணின் வண்ணனும், கேது, ராகு, சனி, சூரியன், அங்காரகன் இவர்கள் காணின் அங்கவீனனும், தரித்திரனும், அரசனுமாவான், எ - று.

தநுசு.

ஆந்தநு விராமன்றன்னைப் புதன்காண வறிஞன்ஞானி
போந்தபொன் காணமன்னும் பொருந்துசுக் கிரன்றிஷ்டிக்குச்
சேர்ந்துநின் றுசரிப்ப பலர்கூடிச் செவ்வாய்வெய்யோன்
ஏந்திய சநியுங்காண விருமலா யிருப்பன்கண்டீர்.

(இ - ள்.) தநுசிலுள்ள சந்திரனை புதன்காணின் அறிஞனும்,ஞானியும், குருகாணின் அரசனும், சுக்கிரன் காணின் பலர்கூடி ஆஸ்ரயிப்பவனும், அங்காரகன், சூரியன், சனி இவர்கள்காணின் இருமலுள்ளவனுமாவான், எ-று.

மகரம்.

கண்டிடு மகரந்தந்தைக் கணக்கனு மரசன்காணப்
பண்டிதன் சுக்கிரற்குப் பயிற்குரு நரேந்திரனுவான்
மொண்டிக்குத் தனவானுவன் முனிரவி தரித்திரந்தான்
மண்டிய குசனும்பார்க்கிற் பூபதி யாகிவாழ்வான்.

(இ - ள்.) மகரத்திலுள்ள சந்திரனை புதனும், குருவும் காணின் பண்டிதனும், சுக்கிரன் காணின் ஆசாரியனும், நரேந்திரனும், சனிகாணின் தனவானும், சூரியன் காணின் தரித்திரனும், அங்காரகன்காணில் பூவரசாள்பவனுமாவான், எ - று. (180)

கும்பம்.

வாழ்கும்பச் சசியைப்புந்தி காணப்பூ பதியுமாவன்
நீள்குரு நோக்கிற்பூமி நிருபர்போ லிடிவாழ்வன்

சூழ்குச னிரவிகாரி சுக்கிர னுல்வர்காணில்
தாழ்விலாப் பரதாரத்திற் முற்பரி யங்களுள்ளான்.

(இ - ள்.) கும்பத்திலுள்ள சந்திரனை புதன் காணின் அரசனும், குரு காணின் நீண்ட ஆயுளுடையவனும், அங்காரகன், சூரியன், சனி, சுக்கிரன் இவர்கள் காணின் பரதார கமனனுமாவான், எ - று. (181)

மீனம்.

உள்ளமீ னத்திலிந்தை யுறும்புந்தி கண்டகாலே
மெள்ளவே பிரிவாக்கி வேந்தற்கு வேந்தேயாகும்
தெள்ளிய வெள்ளிகாணப் பண்டிதன் செவ்வாய்வெய்யோன்
கள்ளமாங் காரிமூவர் காணவே பாவியாவன்.

(இ - ள்.) மீனத்திலுள்ள சந்திரனை புதன் காணின் பிரிய வசனனும், குரு காணின் அரசனும், சுக்கிரன் காணின் பண்டிதனும், அங்காரகன் சூரியன், சனி இவர்கள் காணின் பாபியுமாவான், எ -று. (182)

சந்திரனைக் கிரகங்கள் பார்த்த பலன்
முற்றிற்று.

---

# அங்கிசபலன்.

அங்கிசை யறியுந்தன்மை யசுபதி முதல்மும்மூன்றுப்
பங்குமொன் பதுவோர்பங்கிற் பாதமுந் நான்குதன்னில்
தங்கிய மேடராசி தான்முதன் மீனமட்டும்
பொங்கிய பதியுள்ளோரைப் பொருளெனக் கண்டுகூறே.

(இ - ள்.) அங்கிசை யறியவேண்டிய விதம் எப்படியென்றால், அச்சுவினி முதலிய இருபத்தேழு நட்சத்திரங்களையும் ஒன்பது கிரகங்களுக்குங் கொடுக்கக் கிரகம் ஒன்றுக்கு ஏற்படும் மும்மூன்று நட்சத்திரங்களையும் பன்னிரண்டு மாதமாக்கி பன்னிரண்டு ராசிகளாகிய மேஷமுதல் மீன மட்டும் கணக்கிட்டு பார்க்க ஏற்படும் கிரகமெதுவோ அந்த அங்கிச மென்றுணர்ந்து அதன் பயனை யாராய்ந்துரைக்க வேண்டும், எ - று. (183)

சூரியாங்கிசம்.

கூறியதோ ரிரவியங் கிசன்றனக்குக் கோபி
கோலவிழி மெய்சிவப்பன் குலவுசுசி யாளன்
வீறுடனே சுருண்டுநீண் டிருக்குமயி ருடலும்
மிகவயிறு பருத்திருக்குஞ் சத்தியமொழி யுடையன்

ஆறில்யாத் திரைப்பிரியன் மோவாய்நீண் டிருப்பன்
அழகன்மிகு சிநேகிதவா னவிர்புத்தி யுளனும்
தேறுதலை யுணர்ஞானி தியாகியாஞ் சாந்தன்
சீமானு கும்பித்த தேகமுளன் றானே.

(இ-ள்.) சூரியாங்கிசத்தில் பிறந்தவன் கோபம், சிவந்த விழி, சுசி, சுருண்ட நீண்ட ரோமம், பருத்த வயிறு உண்மை வசனம், யாத்திரைப் பிரியம், நீண்ட மோவாய்க்கட்டை, அழகு, சிநேகமுடைமை, மிக்க புத்தி, ஞானம், தியாகமீதல், சாந்தம், சீமான் குணம், பித்த தேகம் இவைகளை யுடையவனவன், எ - று. (184)

சந்திராங்கிசம்.

உள்ளமதி வித்தைசெல்வ னுமுகத்தின் மறுவான்
உறுந்தீர்க்கா யுளன்சிறிய விழியனென வுரையே
தெள்ளியநற் குணனழக னுஞ்சூரன் றியாகி
சிநேகிதன்மந் தனறிவு குன்றாதான் றீரன்
கள்ளமிலான் வாதசேத் துமரோக தேகன்
கருத்துள்ள பின்னிரக்க முளனீரா டப்பிரியன்
கள்ளமிலான் மோவாய்நீண் டேயிருப்ப னழகன்
இனியசிர ரோமனீண் டிருந்திடுவன் கண்டாய்.

(இ - ள்.) சந்திராங்கிசத்தில் பிறந்தவன் வித்தை, செல்வம், முகத்தில் மறு, தீர்க்காயுசு, சிறிய விழி, நற்குணம், அழகு, சூரத்துவம், தியாகமீதல், சிநேகிதம், மந்தம், தீரம், கள்ளமில்லாமை, வாதசீதன ரோக தேகம், பின்னிரக்கம், நீராடற்பிரியம் இவைகளை யுடையவனுவான், எ - று.

செவ்வாயங்கிசம்.

கண்டசெவ் வாய்கடுஞ் சொல்லன்பே டியாய்ருபன்
கழறுவாய் திக்குடைய மெய்சிவப்பன் கோபி
சண்டைவிருப் புடையனற்ப நிதிப்பித்த ரோகி
தரணிதிரிந் திடுவன்சிற் றுண்டிவிருப் பினனும்
மிண்டியவஞ் சகன்லோபி முதுகின்மறு வினனும்
வீரத்த் துவன்கிலேசி தீரன்பிர காசி
கண்டுமொழி மானேங்க டுக்கமுளா னிழிசொல
கழறிற்பொ ருன்பொய்யன் கனவான்கீர்த் தியினன்.

(இ - ள்.) செவ்வாயங்கிசத்தில் பிறந்தவன் கடுஞ்சொல், பேடிரூபம், வாய் குழறல், சிவந்த மேனி, கோபம், சண்டையில் விருப்பம், வஞ்சகம், லோபம், முதுகில் மறு, வீரத்துவம், கிலேசம், தீரம், கீர்த்தி, துக்கம், இழி சொல்லிற் பொருமை, பொய் பேசுதல், கனத்துவம் இவைகளை யுடையவனுவான், எ - று. (186)

### புதனங்கிசம்.

ஆனபுந்தி யங்கிசத்த னாந்தரும சீலன்
  ஐச்சுவரியன் வித்தைகயுட னரிவையருக் கன்பன்
ஞானியிசைத் தமிழோன்மெய் யாகுமொழி யாளன்
  நன்றிமரவான்கயம்போ னடையுடைய னழகன்
கானவித்தை யுளன்சூரன் பசியநரம் புடையன்
  காரியஞ்சற் றும்வழுவான் நகித்குண முள்ளான்
மானமுளன் றேவர்களைச் சந்ததமும் பணிவான்
  வன்மனத்த னச்சமிலான் மகிழ்ச்சியுள னாகும்.

(இ - ள்.) புதனங்கிசத்திற் பிறந்தவன் தருமம், சீலம், ஐஸ்வரியம் வித்தை பெண்களுக்கினிமை, ஞானி, இசைத்தமிழில் வன்மை, உண்மை வசனம், அழகு, கானவித்தை,சூரன், பச்சைநரம்பும், காரியம் வழுவின்மை, நற்குணம், தேவதாவணக்கம், வலியமனம், அச்சமின்மை, மகிழ்ச்சி இவைகளை யுடையவனாவான், எ - று. (187)

### குருவினங்கிசம்.

ஆதியநல் வித்தையுளன் பொன்போலு மெய்யன்
  ஆண்பெறுவன் செவ்விழிய னமைச்சனுமா குவனும்
வாகுசெறி ரோமமுளன் மேனோக்கன் செல்வன்
  மகிழ்வுடையன் சுசியுடையன் றவன்தூலதேகி
மோசமுடனீ ராடுவன் மோவாய் நீண்டோன்
  மொழிமதுரன் விசிட்டமுள னுயர்ஞானி யழகன்
போகமிகு சுகவானல் லறிவுடையன் விசயன்
  புகழுடையன் புத்தியுடன பொன்னங்கி சத்தோன்.

(இ - ள்.) குருவினங்கிசத்திற் பிறந்தவன் வித்தை, பொன்னிறத்த தேகம், ஆண்மகவு, செல்விழி, அமைச்சத்தொழில், ரோமம், மேனோக்கு செல்வம், மகிழ்ச்சி, சுசி, தவம், ஸ்தூலதேகம், நீராடல், விருப்பம், நீண்ட மோவாய், இனிய வசனம், விசிட்டமுண்மை, ஞானம், அழகு,போகம்,சுகம், நல்லறிவு, விசயம், புத்தி இவைகளை யுடையவனாவான், எ - று. (188)

### சுக்கிரனங்கிசம்.

பிரபலனா கியசுங்க னங்கிசத்திற் பிறந்தோன்
  பெருந்தூல சரீரனெழிற் பெருஞ்செல்வ முடையோன்
திரமாகச் செய்நன்றி யுணர்ந்திடுவன் றருமன்
  செப்பியவுத் தமன்சூரன் கல்வியுளன் சுகவான்

கருமயிர்தான் கருண்டிருப்பன் காந்தியுளன் சிநேகன்
கதிர்வடிவன் கால்வளமை யுடையன்கிளைக் குறவன்
ஆரன்பெருமை யோதவிருப் புளனுமன் புடையன்
ஆகுமென்றே யுரைத்திடுவ ரறிந்திடுநல் லோரே.

(இ - ள்.) சுக்கிரனங்கிசத்தில் பிறந்தவன் ஆலதேகம், அழகு, பெருஞ் செல்வம், செய்ந்நன்றி மறவாமை, தருமம், உத்தமகுணம், சூரத்துவம், கல்வி, சுகம், கருத்துச் சுருண்டரோமம், காந்தி, சிநேகம், சூரியரூபம், வளமையுடைய கால்கள், உறவருடைமை, சிவஸ்துதியில் விருப்பம், அன்பு இவைகளை யுடையவனுவானென்று பெரியோர் சொல்லுவர், எ - று. (189)

சநியங்கிசம்.

நல்லசநி யங்கிசத்தோன் கீர்த்தியிலா னுகும்
நவிலன்பொய் தள்ளாடி நடப்பன்கை வீசிச்
சொல்லியமெய்க் குறளன் ராக்ஷத ரூபனுவன்
தொடைபுறந்தான் பருத்திருக்குந் தாய்கருநிறத்தோன்
அல்லலுறுந் தரித்திரவா னிரக்கமிலா னுகும்
அன்னமெத் தவும்புசிப்ப னருகும்பொருளன் லோபி
வல்லபெருந் தனனீல தேகனஞ்சா மனத்தன்
மன்னுதய விளைச்சற்று மனத்தினில்லை யானே.

சநியங்கிசத்தில் பிறந்தவன், கீர்த்தியில்லாமை, பொய்யுரைத்தல், தள்ளாடி நடத்தல், குள்ளம், ராட்சசரூபம், தொடையும் புறங்காலும் பருத்திருத்தல், கறுத்தநிறம், தரித்திரம், இரக்கமின்மை, மிகுதியாய்ப் புசித்தல், பெருஞ்செல்வம், லோபம், நீலதேகம், அஞ்சாமனம், தயவில்லாமை இவைகளை யுடையவனுவான், எ - று. (190)

அங்கிசபலன்

முற்றிற்று.

# இலக்கினபலன்.

## மேடம்.

நாடியமேட லக்கினபலன்றான் ராசபூச்சியன் றிரபுத்தி-நகை
செய்பவனடிமையுள னுயர்கலிக்த மெய்தனமுளன் சமர்த்தன்,
நீடியதரும சாஸ்திரங்கேட்ப னீள்கழுத்தோ னெறிவசனன்-நிறைக்
திடுகோபியிளைத்திடு முழந்தாளினர் படுமிருகத்தைவதைப்பன்,
பாடியவைந்திற் றீப்பயமேழிற் பத்தினிற்சுர மிருபதிலே-மேவு
பாலவன்பாய் காதினோயிரண்டு வீறுபத்திரண்டினிற் பாம்பால்,
தேடியஐயைந்தினிற் சலகண்டஞ் செழித்தநாலேழினிற் பிளவை
ஜென்ம லக்கினத்தான் சுபக்கிரகங்க டெரிசனை வயதுநூறுண்டே.

(இ - ள்.) மேடலக்கினத்தில் பிறந்தவன் பலன் என்னவெனில் ராஜ பூஜ்ஜியனும், ஸ்திரபுத்தியுடைமை, நகைத்தல், அடிமை யுண்மை, உயர்ந்த தந்தமும் நலிந்ததேகமும் தனமுமுண்மை, சாமர்த்தியம், தருமசாஸ்திரங் கேட்டல், நீண்டகழுத்துடைமை, சத்தியவசனம், பெருங்கோபம், இளைத்த முழங்கால், மிருகத்தை வதைத்தல், ஐந்துவயதில் அக்கினிபயம், ஏழில் சலபயம், பத்தில் சுரம், இருபதில் வாய்நோய், காதுநோய், இருபத்திரண்டில் பாம்பால் பயம், இருபத்தைந்தில் சலகண்டம்,இருபத்தெட்டில் பிளவை இவைகளுண்டாம். ஆனால் சென்மலக்கினம் சுபக்கிரகங்கள் பார்வையானால் வயது நூறென்றறிக, எ - று. (191)

மார்கழி பூரணை மன்னிய வியாழம்
ஏர்பெறு ரோகணி யிரவொரு பத்தாம்
சீர்பெறு கடிகையிற் சேர்தலை நோயால்
நேர்பெறப் புகல்வர் நிரியாண மென்றே.

(இ - ள்.) இந்த லக்கினத்தான் மேற்சொல்லிய வயதில் மார்கழி மாதத்தில் பூரணைதிதியும், ரோகணி நட்சத்திரமுங்கூடிய வியாழக்கிழமை இரவு பத்து நாழிகைக்குள் தலைநோயால் மரணமாவானென்று பெரியோர் சொல்லுவர், எ - று. (192)

## இடபம்.

ஆண்டிடுமிட பலக்கினம் பரமர்க்கன்புறுபூசை சத்தியவான்-
அற்பபோசனவான் றாலகேசத்தி னடிமையாளன் புளிப்பிரியன்,
வேண்டியகணிதன் வஸ்திராபரணன் மெல்லியசெவியினன்புத்தி-
விரும்பிய குழவிபோல் விளையாடி வெறியாய்ப் பிறர்பொருள் கொள்
வன், தூண்டிடுமிரும வுளன்பெரு மைந்தர்சொல் விருப்பன்வய

தைந்திக்-கசிபயங்கழுத்திம் பினிபதினாறிற் றுலக்குபத்தொன்பதி லிருமல், தாவ்படிவிருப தாடனிருபத்தேழ் தன்னிலே சுரஞ்சுரபக் கிரகம்-காணுமேபார்க்க வயதெழுபத்தேழ் தலையினில்வாழ்ந் திருப் பாக்கள்.

(இ - ள்.) ரிஷபலக்கினத்தில் பிறந்தவன் பலன்களாவன, அன்பு, பூசை புரிதல், சத்தியவிரதம், மிகுபோசன், அலதேகம், அடிமையுடைமை, புணர்ச்சியில் பிரியம், கணிதவல்லமை, வஸ்திராபரண முண்டாதல், வெண்மையான மேனி, நற்புத்தி, குழந்தைபோல் விளையாட்டு, அந்நியர் பொருளைக் கொள்ளுதல், இருமல், பிள்ளைகள் சொல்லில் விருப்பம், ஐந்தாம் வயதில் நெருப்பினாலும், பதினாறில் கண்டமாலையினாலும், பத்தொன்பதில் இருமலாலும், இருபது இருபத்தேழில் சுரத்தாலும் பயமுண்டாதலாகிய பலன்களாம். ஆனால் சுபக்கிரகங்கள் பார்வையானால் எழுபது வருஷம் வாழ்ந் திருப்பன், எ - று. (193)

ஆவணி முற்பக் கத்திர யோதசி
சமவுதல் உத்தி ராடமூன் றங்கள்
தாவது சாயங் காலத்தி லோயினில்
ஓவறு சுரத்தால வரியாண முறுமே.

(இ - ள்.) இந்த லக்கினத்தான் மேற்சொல்லிய வயதில் ஆணிமாதம் சுக்கிலபட்சம் திரயோதசி, உத்திராட நட்சத்திரம் கூடிய திங்கட்கிழமை சாயங்காலத்தில் சுரபீடையால் மரணமாவான், எ - று. (194)

மிதுனம்.

இனியதோர் மிதுனபலன் புகழுடையோ னிலச்சையுமுளன் வெதுகபடி-இபனுமாசார பரவிருச்சொல்ல னியற்றுவன் விரதநல்வச னன், புனிதமாய்த்தனது காரியம்பார்ப்பன் பேரக்கிடுபித்தரோகிய மாம்-பொருந்தியசாமள வண்ணமேயப்பாளன் புகலுமூன்றினிலபமிருத் தாம், கனியுமோமாரைந் திலக்கினியயமா காவிரண்டாயுதபீடை நண் ணியபத்திற் சத்துருபயமா காடுமோரொன்பதில் வாதம், தனிமையா யிருபத்தெட்டினிற் கண்ணேய்தருஞ்சுப கிரகமே பார்க்கில்-தக்க தோர்வருஷ மறுபதுமைந்துந் தரையினிலுரைப்பனென் றுரைப்பார்.

(இ - ள்.) மிதுனலக்கினத்தில் பிறந்தவன் பலன்களாவன, புகழ், இலச்சை, கபடம், ஆசாரம், இருவிதச்சொல், விரதநோற்றல், நல்வாக்கு, தன்காரியம் பார்க்குந்திறமை, பித்தரோகம், சாமளவண்ணம், மூன்றும் வய தில் அபமிருத்துவாலும், ஐந்தில் நெருப்பாலும், 8-வது பிராயத்தில் ஆயு தத்தால் தீங்கும், 10-ல் பகையாளியால் சங்கடமும், பதினெட்டில் வாயுவா லும், இருபத்தெட்டில் கண்ணோயாலும் பயமுண்டாதலுமாகிய பலன்க ளாம். ஆனால் சுபக்கிரகங்கள் பார்வையானால் அறுபத்தைந்து வயது ஜீவித் திருப்பான், எ - று. (195)

சிங்க மதிமுற் பக்கச் சதுர்த்தசி
பொங்கு வெள்ளி புணருமோ ணத்தில்
மங்குல்பன் னொன்கின் மார்புநோ யாலே
தங்கு நிரியா ணம்மெனச் சாற்றே.

(இ - ள்.) இந்த லக்கினத்தான் மேற்சொல்லிய வயதில் ஆனிமாசத்தில் சுக்கிலபட்சத்தில் சதுர்த்தசி திதியில் திருவோண நட்சத்திரம் கூடிய வெள்ளிக்கிழமையில் இரவு பதினன்கு நாழிகைக்குமேல் மார்புநோயால் மரணமாவான், எ - று. (196)

கர்க்கடகம்.

உடையசெறிகடக லக்கினபலன்க ளுடன்மிகச் சிவப்புளன் சமர்த்தன், உரமொடுநடப்பன் வேசைபர்கமன னுயர்நவதானியன் தனவான், குருவிசுவாசன் பிதாவினுக்கிசையான் குறிமறுகண்டிடாவிடத்தில், கூறுவர்சிலநா டரித்திரன்வயதுங் குலவியவைந்திலீரெட்டில், இருபதிலிருபத்தைந்தி லிந்நாளிலெய்திடு மவமிருத்துவமே, இனியகோள் சன்மலக்கினம்பார்க்கி லிருந்துதொண் ணூறுமட்டுலகில், பரவியமாசி சுக்கிலபக்ஷம் பஞ்சமிபுந்திவாரத்தில், பண்பொடு மிருக சிரநடுவதனிற் பரமபதமடைந்திடுவானே.

(இ - ள்.) கடகலக்கினத்தில் பிறந்தவன் பலன்களாவன, சிவந்தமேனி, சாமர்த்தியம், பலத்தநடை, வேசையர் கமனம், நவதானியபுஷ்டியும், செல்வம், குரு விஸ்வாசம், தந்தைசொற் கேளாமை, கண்காணாவிடத்தில் மறு, கொஞ்சநாள் தரித்திரம், ஐந்துவயதில், பதினாறில், இருபதில், இருபத்தைந்தில், அவமிருத்தினாலும், பயமுண்டாதலாகிய பலன்களாம். இன்னான் சுபக்கிரகங்கள் பார்வையானால் தொண்ணூறுவது வயதில் மாசிமாதம், சுக்கிலபட்சம், பஞ்சமி, திதி, மிருகசிரநட்சத்திரம் கூடிய புதன்கிழமையில் மரணமாவான், எ - று. (197)

சிங்கம்.

அடைவொடுசிங்க லக்கினபலன்க ளமுதுசாலவும் புசித்திடுவன், அருச்சனைபுரிவன் றருமசிந்தையினொ னனுதினம் பெரும்பசியாளன், திடமுறும்புத்திமான் பிணிவந்துதீர்ந்திடு முடன்பெருமிற் பிரியன், செப்புமோரைந்துபத் திருபத்தேழ் செறிவயதிற் சுரம்வந்து, உடறனின்மருவி முப்பதுநாளும் போனபின் றீரும்லக்கினத்தை, உத்தமர் காணி லெண்பதுவயதும் பூமியிலிருந்து பங்குனியில், வடவறுமமர பக்கபாட்டிமையின் மன்னுமத்தத்திற் சுன்பகலில், மதிநதிமுடித்த சடையன்பொற் பதத்தில் வாழ்வனென்றுரைப்பர் மாதவரே.

(இ - ள்.) சிங்கலக்கினத்தில் பிறந்தவன் பலன்களாவன, அதிகபோஜனப் பிரீதி, அருச்சனைபுரிதல், தருமசிந்தை, பெரும்பசி, புத்தி, பிணிவந்து

தீர்த்தல், தொழிலில் பிரீதி, ஐந்து, பத்து, இருபத்தேழு இவ்வயதில் சுரம் வந்து முப்பதுநாள் பீடித்து நீங்குதல் என்னும் இப்பலன்களாம். இன்னோன் சுபக்கிரகங்கள் பார்வையானல் எண்பதாவது வயதில் பங்குனிமாதத்தில் அமரபட்சத்து பாட்டிமையில் அத்த நட்சத்திரத்தில் வெள்ளிக்கிழமை பகலில் ஈஸ்வரன் திருவடிகளை யடைவான், எ - று. (198)

கன்னி.

மாதேதன்னுங்கன்னி லக்கினபலன்கண் மகிழ்தருமன் றரித்திரவான், மாசிலாசார மூளன்பலகரும வகையறிந்திடுவன் பின்வயதில் மீதேதனந்தனங்க டேடுவனைந்தில் மேவியவக்கினிபயமாம், விளங்கிய பத்திற் சுரம்பதினெட்டின் மேவிடுமம்மை நோயென்ப, மேதருநல் லோர்காணினல்வயதோ விளைந்திடு மேழுபத்தேழாம், மேன்மை வைகாசிக்குறை பக்கப்பன்னென் றெணுந்திதி பிசைந்த சித்திரையில், கோதுருகுன்ம வியாதிவாதையினுற் குறிநிரியாணமேயாகும், குலவு சக்கரைகனிகண்டு தேன் பால்போற்கூறுசொற் கொவ்வையாய்க் கொடியே.

(இ - ள்.) கன்னியாலக்கினத்தில் பிறந்தவன் பலன்களாவன, தருமசிந்தை, தரித்திரம், ஆசாரம், பலகருமமறிதல், பின்வயதில் தனந்தேடுதல், ஐந்தில் அக்கினியாலும், பத்தில் சுரத்தாலும், பதினெட்டில் அம்மையாலும கண்டம் என்னும் இப்பலன்களாம். இன்னோன் சுபக்கிரகங்கள் பார்வையானல் எழுபத்தேழாவது வயதில் வைகாசிமாதம் தேய்பிறையில் சதுர்த்தசிதிதி சித்திரை நட்சத்திரத்தன்று குன்மவியாதியில் மரணமாவானென்றறிந்து பெண்ணே! சொல்லுக, எ - று. (199)

துலாம்.

கொடியனுங்காரிக்குச் சமாந்துலாத்தோன் குறித்திடுமனைவியிருவர், திரண்டகுலமபிமானி கூறுசம்பத்துளன்றனவான், நடியில் வாழ்மன்னர்க் கினியனற்சுகவான் பரிமளகந்தப்பூப்பிரியன், பற்றுளதமசோன் கருமசிந்தையினன் பாவுமே ழாண்டிரெண்டியாய்தீயால், கடியவியாருண்டதனில்வைசூரி காணுபத்தொன்பதிற் பகையால், கண்டகோர்ருபத்தெட்டில் லேவல்புனலாற் கண்டாற்பத்திரண்டினியர், நெடியபார்வையினொ டெண்பதோடைந்துநின்று தேள்குறைந் திதியாதில், நிறைகதிர்வாரம் விருத்தியோகத்தி னீருதயத்தினீங்குவனே.

(இ - ள்.) குருரச்சனிக் குச்சமாகிய துலாலக்கினத்தில் பிறந்தவனுக்கு இருமனைவியருண்மை, திரண்டசாதி அபிமானம், சம்பத்து,தனம்,மன்னர்க்கினிமை, சுகம், பரிமளவஸ்துக்களில் பிரியம், தருமசிந்தை, எழாண்டில் வியாதியாலும், பன்னிரண்டாண்டில் தீயாலும், பத்தொன்பதில் வைசூரியா

லும், இருபத்தெட்டில் பகையாலும், வேலாலும், நாற்பத்திரண்டில் சலத்தாலும் பயமுண்டாதலாகிய பலன்களாம். இன்னுன் சுபக்கிரகங்கள் பார்வையாலுல் எண்பத்தைந்தாவது வயதில் கார்த்திகைமாதத்தில் அமரபட்சத்தில் சஷ்டி திதி கூடிய ஞாயிற்றுக்கிழமை உதயத்தில் விருத்தியோகத்தில் மரணமாவான், எ - று. (200)

## விர்ச்சகம்.

நீங்கருக் கேதளாம் லக்கினபலன்க ளேணசனுக் தந்தைதாயிடத் தில், நேசமாய்மனைவி யிடத்தினிற்பிரிய மிரக்கரமினியசொற் பகா வன், பாங்குடன்றெருத்த காரியமுடிப்பான் பரவுநாலாண்டினிற் கழுத்தில், பரிவுநோயைந்திற் சுரஞ்சுளீரைந்திற் பன்னிரண்டிற் பதினெட்டில், ஓங்குமக்கினியாற் பயமதாநாற்பா னுறுசன்னி வாத முஞ் சுரமும், உத்தமர்செனம லக்கினங்காணி லேருபது குறைநூ றண்டாம், திங்களானி சுக்கிலபக்ஷத் துவாதசியுஞ் சனிக்கிழமை, திகழ் விசாகத்தி லந்திவேளையினிற் றிண்ணமாய் வருதிரியாணம்.

(இ - ள்.) விரிச்சிக லக்கினத்தில் பிறந்தவன் பலன்களாவன:—தந்தை தாயிடத்தில் நேசம், மனைவியிடத்தில் பிரியம், இனியசொல் பேசுதல், எடுத்தகாரிய முடித்தல், நாலாண்டில் கழுத்துநோய், ஐந்தில் சுரம், பத்தில், பன்னிரண்டில், பதினெட்டில் அக்கினிபயம், நாற்பதில் சந்நிவாதம் சுரம் இவைகளாகிய பலன்களாம். இன்னுன் சுபக்கிரகங்கள் பார்வையாலுல் தொண்ணூருவது வயதில் ஆனிமாச சுக்கிலபட்சத்தில் துவாதசி திதியும் விசாகநட்சத்திரமுங் கூடிய சனிக்கிழமை சாயுங்காலவேளையில் மரணமாவான், எ-று. (121)

## தநுசு.

### வேறு.

ஆணியெனுந் தநுசலக் கினபலன் மூத்தானுக்
கன்றுறுமிளை யோர்க்கஞ்சு வான்வன்மை புகழுறான்
பேணியநற் போகவான் சத்துருவை யறிவன்
பெரியவித்தை யிளவயதிற் பெற்றிடுவ னியம
நாணியச் சப்படுவ னடுவயதி லேதான்
நான்மூன்றிற் பதினைந்தில் நாலெட்டி னுற்றான்
காணுநேத் திரரோகஞ் சுபரெழுபத் தேழாம்
கருதிசிரி யாணந்தேட் டானபடி கண்டாய்.

(இ - ள்.) தநுசு லக்கினத்தில் பிறந்தவன் பலன்களாவன:—மூத்தவனுக்குப் பயப்படாமையும், இளையவர்களுக்குப் பயப்படுதலும், புகழ், போகம், சத்துருஜெயம், பெரியவித்தை, சிறுவயதிற்செல்வம், அலேச்சல், மூன்றுமாண்டில், பதினைந்தில், முப்பத்திரண்டில், நாற்பதில் கண்ணேய் காணலும் ஆனபலன்களாம். இன்னுன் சுபக்கிரகங்கள் பார்வையாலுல் எழுபத்தேழாம் வயதில் விருச்சிக லக்கினத்தோன்போல் மரணமாவான், எ - று. (202)

## மகரம்.

கண்டகுரு லக்கினங்கா ணாவிடத்தின் மறுவாய்
கண்களீண் டிருண்டிருக்குங் கமழ்புஷ்பப் பிரியன்
மண்டுதிர புத்தியபி மானிசுக சரீரன்
வருஞ்சிவந்த மெய்யுடையன் மனையாளுக் கினியன்
மிண்டுபக்ஷி கொன்றிடுவன் மேவுமொரு பத்தில்
விளம்புசுர நாலெட்டில் விதேசமுப்பத் தேழில்
உண்டிசர்ப்ப பயஞ்சுபக்கோ ளாக்கவறு பத்தேழ்
உயர்பாரில் வந்திடுவ னெனவுரைசெய் வாரே.

(இ - ள்.) மகரலக்கினத்தில் பிறந்தவன் பலன்களாவன:—காணாத விடத்தில் மறு, நீண்டகண், புஷ்பத்தில் பிரியம், திரபுத்தி, அபிமானம், சுகசரீரம், சிவந்தமெய், மனையாளுக்கின்பன், பட்சிகொலை, பத்தில்சுரம், முப்பத்திரண்டில் தேசபயணம், முப்பத்தேழில் சர்ப்பபயம் இவைகளுண்டாகும். ஆனால் சுபக்கிரகங்கள் பார்வையால் அறுபத்தேழுவயது ஜீவித்திருப்பான், எ - று. (203)

பூசமாதங் குறைபக்கப் பஞ்சமி
ஆதிவுத் திரட்டாதி யருக்கனாள்
வீசுகா லையின்மென் கொன்றைசூடிய
தேசிகன்னடி சேர்வது திண்ணமே.

(இ - ள்.) இந்த லக்கினத்தோன் மேற்சொன்ன வயதில் தைமாதத்தில் தேய்பிறையில் பஞ்சமிதியும், உத்திரட்டாதி நட்சத்திரமுங்கூடிய ஞாயிற்றுக்கிழமை காலையில் பெருமானுடைய திருவடிகளை யடைவான், எ - று. (204)

## கும்பம்.

பரிந்தகும்ப லக்கினத்தான் றன்னையே புகழ்வன்
பழிப்பன்மற் றோர்தம்மைக் குள்ளனற்ப வித்தை
தெரிந்தபித்த சரீரவான் செய்ந்நன்றி மறப்பன்
செங்கண்ணன் சுகமுள்ளான் ஸ்திரீகளுக்கு நண்பன்
பொருந்துபதி னோராண்டிற் சுரமாம்பத் தொன்பான்
புரிந்தசன்னி வாதசுரம் புண்ணியர்பார்த் திடினே
திருந்துவய தெண்பதுசித் திரையைந்தாந் திதியில்
திகழ்செங்கை பொன்வாரத் தந்தியிலந் தியமே.

(இ - ள்.) கும்பலக்கினத்தில் பிறந்தவன் பலன்களாவன:—தன்னைத் தான் புகழ்தல், பழிப்பு, குறுகியமெய், அற்பவித்தை, பித்தசரீரம், செய்ந்நன்றி மறத்தல், செங்கண், சுகம், ஸ்திரீகளுக்கு இன்பமுண்மை, பதினோராண்டிற் சுரம், பத்தொன்பதில் சந்நி வாதசுரம் இவைகளுண்டாகும். இன்

ளேன் சுபக்கிரகங்கள் பார்வையானல் எண்பதாவது வயதில் சித்திரை மாதம் பஞ்சமிதிதியும் திருவாதிரை நட்சத்திரங் கூடிய வியாழக்கிழமையில் சாயுங்கால வேளையில் மரணமாவான், எ - று. (205)

மீனம்.

அந்தமூறு மீனலக் கினந்தனவான் சூரன்
அழகியமெய் யன்ஞானி யகோரமிரு தாரன்
கந்தமலர்ப் பிரியன்றன் கண்கிருபை யாளன்
காதுநோய் பிறருடைமைக் காசிப்பன் கண்டே
முந்துசம யத்தன்பல் லூணருந்து மூர்க்கன்
மூந்நான்கி லிருப்ப தினின் மூன்றுமிகச் சுரமே
நொந்திரும லெழுநான்கிற் சுபக்கோளேக் கிடினே
நூறுண்டு கிரியாண நுவல்கும்பத் தடைவே.

(இ - ள்.) மீனலக்கினத்தில் பிறந்தவன் பலன்களாவன:—சூரத்துவம் உண்மை, ஞானம், அகோரம், இருதாரம், கந்தமலர் பிரீதி, கிருபை, காது நோய், பிறருடைமை விருப்பம், பலவுணவு அருந்துதல், பன்னிரண்டில், இருபதில் சுரம், இருபத்தெட்டில் இருமல் இவைகளுண்டாகும். இன்னேன் சுபக்கிரகங்கள் பார்வையானல் நூறுவது வயதில் கும்ப லக்கினத்தான் போல் மரணமாவான், எ - று. (206)

இலக்கின பலன்
முற்றிற்று.

---

# இலக்கினத்திற் கிரகங்கள் நின்ற பலன்.

ரவி, மதி, லக்கினத்தினின்ற பலன்.

வேறு.

லக்கினத் திரவிநிற்கி னுடிய சிவப்பனுவன்
நொக்கவே நீண்டமெய்ய னுடன்பித்த ரோகவானும்
மிக்கவே சசிக்கிளைத்த மெய்யன்மூச் சதிகன்றாயன்
தக்கனல் வசனன்புத்தி தருவன்பாக் கியவானுவன்.

(இ - ள்.) லக்கினத்தில் சூரியனிருந்தால் சிவப்பனும், நெடியனும், பித்தரோகியும், சந்திரனிருந்தால் இளைத்த தேகியும், மூச்சதிகனும், பரிசுத்தனும், தருந்தவனும், நல்ல வசனனும், புத்திமானும், பாக்கியவானு மாவான், எ - று. (207)

குசன் லக்கினத்தினின்ற பலன்.

குசனுறிற் பித்ததேகன் கூறுமூன் கோபிநல்ல
வசனமுஞ் சுட்டனுவன் வாயிச்சற் கொட்டலொத்த

வசனநல் லுதரந்தூல மாகுமேல் யிளைத்திருப்பன்
இசையுமேவ லையுநகைப்ப னிதயசஞ் சலனுவானே.

(இ - ள்.) அங்காரகன் லக்கினத்திலிருந்தால் பித்த தேகியும், முன் கோபியும், நல்ல வாக்கும், சிரேட்டனும், ஈசச் சற்குரலனும், தூலதேக மாய் இளைத்தவனும், எவரையும் கண்டு நகைப்பவனும், இருதய சஞ்சலனு மாவான், எ - று. (208)

புதன், குரு, லக்கினத்தினின்ற பலன்.

பண்புடன் புந்திநிற்கப் பரிகாச வசனஞ்சொல்வன்
நண்புடன் பிரியவாக்கி நாடிய ரோகமெய்யன்
விண்குரு தூலதேகி மெய்யிற்சேத் துமரோகத்தன்
கண்டலே மயிர்மேனேக்குங் காட்சியின் சிவப்புமெய்யன்.

(இ - ள்.) புதன் லக்கினத்திலிருந்தால் பரிகாசம் செய்பவனும், பிரிய வசனனும், ரோக தேகனும், குருவிருந்தால் ஸ்தூலதேகியும், சேத்தும ரோகனும், முறைத்த ரோமமுள்ளவனும், சிவந்தவனுமாவான், எ - று.

புகர், சனி, லக்கினத்தினின்ற பலன்.

சுக்கிர னிற்கிற்காந்தி சரீரவான் சுகவான்பித்தம்
ஒக்கவே வாதரோகி யுறுமயிர்க் கருஞ்சுருட்டை
மிக்கதோர் சனிக்குநீண்டு மெலிந்திடுமெய்யன் கையைத்
தக்கவீச் சிடுவனீலக் கண்ணன்தள் ளாடியாமே.

(இ - ள்.) சுக்கிரன் லக்கினத்திலிருந்தால் பிரகாசிக்குஞ் சரீரமுடை யானும், சுகவானும், பித்தவாத தேகியும், கருத்த சுருட்டைமயி ருடையவ னும், சனியிருந்தால் நீண்டு மெலிந்த சரீரமுள்ளவனும், கைவீசி நடப்பவ னும், நீலக்கண்ணுடையவனும், தள்ளாடுபவனுமாவான், எ - று. (210)

சந்திரன் லக்கினத்தினின்ற பலன்.

சந்திரலக் கினபலன்க டானுணருங் காலைச்
சந்திரன்மெய்ப் பலனறியுந் தகைகமைத்தனைக் கேளீர்
எந்தநா ளினுஞ்சசிபெண் கலைநிறைந்தா லானும்
எழினிறைந்த மதிபார்க்க விருப்பவர்தம் மிடத்தில்
வந்தகுற்றந் தீருமவை யெப்படியோ வென்னில்
மநுநீதி யரசனுந்தன் மாநிலத்துற் றவரைச்
சிந்தைமகிழ்ந் தருள்புரியும் வாறுபோல் வந்த
தீதகனுங் கொற்றமதிப் பார்வைசிறந் தார்க்கே.

(இ - ள்.) சந்திரன் லக்கினத்திலிருக்கும் பலன்களை யறியுமிடத்து எந்நாளிலும் அவன் பெண்களை, பூரணையானால் ஆண்களையாவான். சந்திரனைப் பார்க்க விருப்பவரிடத்தில் உண்டான குற்றங்கள் தீருவதெப்படியென்றால், மந்திரியோடு கூடியவரசனொருவன் தன் கீழ்க்குடிகளை மனமகிழ்ந்து பாதுகாப்பதுபோல் சந்திரன் பார்வையைப் பெற்றவர்களுக்குங் குற்றமகலும், எ - று. (211)

உள்ளபடி கலைகுறைந்த மதியேயா னாலும்
ஒன்னார்வீட் டினும்வியமெட் டுடனாறு மிடத்தும்
மென்னெனாதின் றிடிற்பொன்கேந் திரத்தினிலுற்றால்
வெண்மதிகுற் றந்தீரும் மலைதெவ்வா றெண்ணில்
கள்ளவிழும் பசுங்கொன்றைப் பான்றன்னன் பர்க்குக்
கனபாவந் தவிர்த்தின்பங் காட்டுதல்போ லாகும்
தெள்ளியநல் லோர்பார்வை பெற்றாசி குற்றந்
தினகரனைக் கண்டபனி போற்றீரு மென்னே.

(இ - ள்.) உள்ளபடியே தேய்பிறைச் சந்திரனுயிருந்தாலும் பகைவர் வீட்டிலும், பன்னிரண்டு, எட்டு, ஆறுமிடங்களிலுமிருந்து குருகேந்திரத்திலிருந்தால் சந்திரன் சுபனேயாவான். அது எப்படியென்றால், தேன்விழுங் கொன்றைமாலையைத் தரித்த சிவபெருமானனவர் தன்னடியார்களுக் குண்டான மிக்க பாவத்தை நீக்கி யின்பங்கொடுத்தல்போல், ஆகையால் சுபக்கிரகங்களின் பார்வையைப்பெற்ற சந்திரனும், சூரியனைக் கண்ட பனிபோற் குற்றந் தீருவான், எ - று. (212)

தீர்ந்துளுற்ற மில்லாத மதியுளதாய்ப் பிறந்தோன்
சீவனுடன் வாழ்ந்திருக்கச் செய்குவ னென்னெனில்
சேர்ந்தவிடை மாதின்பக் கொழுநன்மேல் வாஞ்சை
சிறைதல்போற் குழவிமே லேனசமதிக்குண் டே
கூர்ந்துகலை நிறைந்தமதி மேடத்தி னிற்கில்
குற்றமிலா ரமமதியைக் கூசாமற் பார்க்கின்
ஆர்ந்தசிறு வன்றனக்கே யாறெட்டாண் டென்றே
அறைவர்சோ திடத்துண்மை யறிந்தபெரியோரே.

(இ - ள்.) வளர்பிறை சந்திரனுயிருக்கப் பிறந்தவன் சீவனோடு வாழ்ந்திருக்கச்செய்வது எப்படியெனில், பார்வதிசமேதனுகிய நாயகன்மேல் ஆசையதிகரித்தமையால் சந்திரனுக்குக் குழந்தைமேல் ஆசையுண்டாமாகையால் அன்றி வளர்பிறைச் சந்திரன் மேடராசியிலிருந்தால் சுபக்கிரகங்கள் அச்சந்திரனை முழுப்பார்வையாகப்பார்த்தால் அந்தச்சிறுவன் நாற்பத்தெட்டு வருடம் பிழைத்திருப்பானென்று சோதிடநூல் வல்லவர் சொல்லுவர், எ-று.

சந்திரலக்கினம் பார்க்கும் வகை.

வேறு.

சந்திரனிருந்தவீடு சந்திரலக்கினமென்பார்
அந்தமான் சில்லோர்சென்ற கன்னலை யிராசியொன்றிற்

குந்திய வைங்தைந்தாகக் கொடுத்துவரு நிட்டபேற்றை
முந்திய மேடமாதி யெண்ணியே மொழிவர்சில்லோர்.

(இ - ள்.) உலகத்திற் சிலர் சந்திரனிருக்கும் வீடே சந்திரலக்கின மென்று சொல்லுவார்கள். ஆனால் செனனகாலத்தில் சென்ற நாழிகை மேடமாதிராசிகளுக்கு ஐந்தைந்தாகக் கொடுத்து வருகின்ற மிச்சவீடே சந்திரலக்கினமென்று சொல்லுவோர் சிலபேர், எ - று. (214)

இலக்கினத்திற் கிரகங்கள் நின்ற பலன்.

முற்றிற்று.

---

# கரண பலன்.

---

பவ.

அஞ்சிடான் சுகவானமெத்த வரசரா லாக்கமுள்ளான்
துஞ்சிடா கவிகோள்பார்க்குக் துறைதனிற் பிரியனுவன்
எஞ்சிடாமிடியன் புத்தி யாளனு மெழிலுளோனும்
பஞ்சுபோன் மயிருமுள்ளான் பவகரணத்தினுனே.

(இ - ள்.) பவகரணத்தில் பிறந்தவன் அஞ்சுதலில்லாதவனும், சுகவானும், அரசரால் செல்வமுடையவனும், சோதிடத்திற் பிரியனும், தரித்திரனும், புத்திசாலியும், அழகனும், மிருதுவான ரோமமுள்ளவனுமாவான், எ - று. (215)

பாலவ.

இந்திர போகமுள்ளா னிருந்தன முடையவனுவன்
சுந்தர முடையனுவன் றொழின்மிகு மற்பமுள்ளான்
சந்ததந் தியாகிமோகி தாழ்விலாக் குணவானுகும்
பந்துமேற் பிரியவனுவான் பாலவ கரணத்தானே.

(இ - ள்.) பாலவகரணத்தில் பிறந்தவன் இந்திரபோகனும், மிக்க செல்வமுடையவனும், அழகனும், அற்பத்தொழிலாளனும், தியாகமீவோனும், மோகிப்பவனும், நல்லகுணசாலியும், சுற்றத்தாரிற் பிரியனுமாவான், எ - று. (216)

கௌலவ.

அரசராற் பிரியனுவ னுசார முடையனுவன்
விரைசெறி யன்னைதந்தை மேல்விருப் புடையனுவன்
தரைமிகத் தேடவல்லன் சாலதாஷ் டீகனுதும்
கரிபரி யுடையனுவன் கவுலவ கரணத்தானே.

(இ - ள்.) கௌலவகரணத்திற் பிறந்தவன் இராஜப்பிரியனும், ஆசார முடையவனும், பெற்றோரிடத்தில் விருப்பமுடையானும், நிலஞ்சம்பாதிக்க முயல்பவனும், தாஷ்டீகனும், யானை குதிரைகளை யுடையவனுமாவான்; எ - று. (217)

## தைதுலை.

திடமிகு மிராசசேவை யுள்ளவன் செல்வமுள்ளான்
திடமிகு வேசைமீதில் வெகுசிந்தை யுடையனுவன்
அடன்மிகு விழியினுளை வறமிலான் கடியனுவன்
தடமெனுஞ் சுகவானுகுந் தைதுலா சரணத்தானே.

(இ - ள்.) தைதுலைக்கரணத்தில் பிறந்தவன் இராஜசேவை செய்பவனும், செல்வனும், பரஸ்திரீகமனனும், அதருமியும், வன்மனத்தனும், சுகவானுமாவான், எ - று. (218)

## கசம்.

நீர்க்கமாம் வேசைமீதிற் சிந்தைதா னுடையனுவன்
பார்த்திப ராலேமெத்தப் பாக்கிய முடையனுவன்
கார்க்குழ லாயொன்னாரைக் கலக்கிடும் வீரமுள்ளான்
கார்த்தரு மீகையாளன் கசகர ணத்தினனே.

(இ - ள்.) கசகரணத்தில் பிறந்தவன் வேசைப் பிரியனும், அரசரால் செல்வமுடையோனும், பகைவர்களை ஜெயிப்பவனும், தருமவானுமாவான்; எ - று. (219)

## வணி.

உக்கிர குணத்தானரு முற்றவர்க் கொன்றுமீயான்
இக்கென வார்த்தைசொல்வ னேந்திழை யார்கண்மீதின்
மிக்கநன் மோகவானும் விளம்புவன் கட்டுவார்த்தை
வக்கிரன் பங்கமுள்ளான் வணிகர ணத்தினனே.

(இ - ள்.) வணிகரணத்திற் பிறந்தவன் உக்கிரகுணனும், அதருமியும், இதர வார்த்தையாடுவோனும், பெண்கள்மீது பிரியனும், கட்டுமொழிசொல்வோனும், குற்றமுள்ளவனுமாவான், எ - று. (220)

## பத்திரை.

திரமிகு பாவிபொல்லான் சீர்கேடன் றீயசெய்வன்
தரமறு புருஷவீனன சலிப்புளன் றிரமையில்லான்
உரமிகு மழகன்வார்த்தை யுசிதமா யுரைப்பனல்ல
விரைசெறி குழலினுளே விருபத்திர கரணத்தானே.

(இ - ள்.) வாசனைவீசுங் குழலாளே! பத்திரை கரணத்திற் பிறந்தவன் பாவியும், கொடியனும், தீயமார்க்கனும், புருஷஈனனும், சலிப்புள்ளவனும் சத்தியற்றவனும், அழகனும், உசிதமாய்ப் பேசுவானுமாவான், எ - று.

## சகுனி.

கனமிக வுடையவனுவன் கருதிய வடிவமுள்ளான்
தனமிக வுடையவனுவன் றானிய முடையவனுவன்
அன்னநடை மாதே கேளா யறிவுளான் கல்விமானும்
சனமிக வுடையவனுவன் சகுனியாங் கரணத்தானே.

(இ - ள்.) அன்னநடைப் பெண்ணே! சகுனி கரணத்திற் பிறந்தவன் மிக்க கன்னியனும், நினைத்தரூப முள்ளவனும், செல்வனும், தானிய முள்ளவனும், அறிவு கல்வியுடையவனும், சனசேர்க்கையுள்ளவனு மாவான், எ-று.

## சதுஷ்பாதம்.

வார்த்தையோ நிலைமையில்லான் வறுமையுள்ளவனேயாவன்
தீர்க்கமாய் வேசைமீது நேசமுள்ளவனேயாவன்
ஆர்க்கனுங் கோபவானுந் துர்ச்சனனுவான் றத்துவ
சாத்திரப் பிரியனுவன் சதுஷ்பாதகரணத்தானே.

(இ - ள்.) சதுஷ்பாதகரணத்தில் பிறந்தவன் உறுதிமொழி யில்லானும், தரித்திரனும், வேசிலோலனும், கோபியும், துர்ச்சனனும், தத்துவ சாஸ்திரத்தில் பிரீதியுள்ளவனு மாவான், எ - று. (223)

## நாகவம்.

அல்லல்சே ரங்கமுள்ளா னற்பவான் கோபமுள்ளான்
நல்லமா னியுமேயுள்ளா னரிமேற் பிரியனுவன்
மல்லல்சேர் குழலினுளே மருளுற்ற குணமேயுள்ளான்
நல்லதோர் புசிப்புமுள்ளா னுகவ கரணத்தானே.

(இ - ள்.) கறுத்த கூந்தலாளே! நாகவகரணத்தில் பிறந்தவன் துன்ப தேகனும், கோபியும், அற்பியும், மானியும், பெண்பிரியனும், மயக்க புத்தியுள்ளவனும், நல்லபோசன முள்ளவனுமாவான், எ - று. (224)

## கிமஸ்துக்கினம்.

கலகவான் கடியமோகி கருதுதாய் தந்தைமூத்தோர்
இலகிய வேசைமீது மின்பமுற் றிடுவனென்ப
உலகிய லறிவான்யோகி யுயர்வுளா னுகுநல்ல
சிலைநுதன் மாதேகேட் கரணததானென்று செப்பே.

(இ - ள்.) வில்போன்ற நெற்றியுடையாளே! கிமஸ்துக்கினகரணத்தில் பிறந்தவன் கலகக்காரனும், மோகியும், தாய்தந்தையர், மூத்தோர், வேசையர் இவர்களிடத்துப் பிரியமுடையவனும், உலகவியவகாரம் அறிபவனும், யோகியும், உயர்ந்தவனுமாவான், எ - று. (225)

கரணபலன்
முற்றிற்று.

---

# முக்குண வேளை.

| மணி மினிட் | நாழிகை | ஞாயிறு புதன் | திங்கள் வியாழன் | செவ்வாய் வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|
| காலை 6-7½ | 3¾ | தாமசம் | சாத்மீகம் | ராஜதம் | தாமசம் |
| 9 | 7½ | சாத்மீகம் | ராஜதம் | தாமசம் | சாத்மீகம் |
| 10½ | 11¼ | ராஜதம் | தாமசம் | சாத்மீகம் | ராஜதம் |
| 12 | 15 | தாமசம் | சாத்மீகம் | ராஜதம் | தாமசம் |
| 1½ | 18¾ | சாத்மீகம் | ராஜதம் | தாமசம் | சாத்மீகம் |
| 3 | 22½ | ராஜதம் | தாமசம் | சாத்மீகம் | ராஜதம் |
| 4½ | 26¼ | தாமசம் | சாத்மீகம் | ராஜதம் | தாமசம் |
| 6 | 30 | சாத்மீகம் | ராஜதம் | தாமசம் | சாத்மீகம் |
| இரவு 7½ | 33¾ | ராஜதம் | தாமசம் | சாத்மீகம் | ராஜதம் |
| 9 | 37½ | தாமசம | சாத்மீகம் | ராஜதம் | தாமசம் |
| 10½ | 41¼ | சாத்மீகம் | ராஜதம் | தாமசம் | சாத்மீகம் |
| 12 | 45 | ராஜதம் | தாமசம் | சாத்மீகம் | ராஜதம் |
| 1½ | 48¾ | தாமசம் | சாத்மீகம் | ராஜதம் | தாமசம் |
| 3 | 52½ | சாத்மீகம் | ராஜதம் | தாமசம் | சாத்மீகம் |
| 4½ | 56¼ | ராஜதம் | தாமசம் | சாத்மீகம் | ராஜம் |
| 6 | 60 | தாமசம் | சாத்மீகம் | ராஜதம் | தாமசம் |

# முக்குண வேளையறிய.

வேளைகளறியத்திங்கள் வியாழஞ்சாத்வீகமாகும்
நீளுஞ்சுக்கிரன்செவ்வாய்க்கு நீண்டிராசதமேயாகும்
வாளைநேர்கண்ணாய்புந்தி மந்தன்செங்கதிர்வாரத்தின்
நாளுந்தாமதமாங்காலை நாழிகைநான்கதாமே.

(இ - ள்) திங்கள், வியாழம், சாத்துவீகமும், வெள்ளி, செவ்வாய் ராசதமும், புதன், சனி, ஞாயிறு தாமதமாகக் காலை நான்கு நாழிகை பரியந்தமிருக்கும், எ - று. (226)

பரவுசாத்விகவேளைக்குப் பளிங்கொளிநிறமுமுள்ளான்
விரவுநல்லறிவுபத்தி விதரணஞானமுள்ளான்
குரவர்மேற்புத்தியுள்ளான் கொடுமைசேர்துன்பமில்லான்
வரவுறுமின்பமெல்லாம் வருமவன்றனக்குமாதே.

(இ - ள்) சொல்லப்பட்ட சாத்துவீககாலத்தில் பிறந்தவன் பளிங்கு நிறத்தனும், நல்லறிவும், புத்தியும், விதரணமும், ஞானமுமுள்ளவனும், ஆசிரியர்மேல் பிரீதியுள்ளவனும், துன்பமில்லாதவனும், இன்பமுள்ளவனுமாவான். (227)

அன்பிராசதவேளைக்கே சனித்தவனறிவுமுள்ளான்
இன்பத்திலாசைபற்று மியலுநல்லுரைகற்பாளன்
பொன்புவிகலைகளிந்தப் புவிக்குபகாரமுள்ளான்
துன்பமற்றரசாய்நீதி செலுத்துவான்சுகமுமுள்ளான்.

(இ - ள்) இராசதகுணகாலத்தில் பிறந்தவன் அறிவுளனும், இன்பனும், நல்லுரை கற்பவனும், பொன், புவி, கலைகளுள்ளவனும், பூமிக்குபகாரியும், நீதியாய் அரசுசெலுத்துவோனும், சுகமுள்ளவனுமாவான், எ - று.

வலியதாமதவேளைக்குள் வந்துசன்மித்தோன்செய்கை
பொலியநித்திரையேப்போதும் புரிந்துளான்பொய்யேசொல்வன்
நலியவேமயக்கஞ்சோம்பு நண்ணிடுமந்தனாவான்
பலகலையறிவுமில்லான் பாவசிந்தையனேயாவான்.

(இ - ள்) தாமதகுண காலத்தில் பிறந்தவன் தூங்கு மூஞ்சியும், பொய்யனும், மயக்கமும், சோம்பலும் கூடியமைந்தனும், கல்வியில்லாதவனும், பாவியுமாவான், எ - று. (229)

இருந்துசாத்வீகந்தன்னிற் சாத்வீகந்துறவுசாந்தி
வருந்திடாவகையுற்சாகி மற்றதில்ராசதந்தான்
திருந்தியதானசிந்தை சிறந்திடுஞ்சாந்தமுள்ளான்
பொருந்தியதாமதத்தான் போதவேமந்தனாவான்.

(இ - ள்) சாத்துவீகத்தில் சாத்துவ்கசுண காலத்திற் பிறந்தவன், துறவியும், சாந்தனும், உற்சாகியுமாவான், சாத்துவீகத்தில் ராசதத்தில் பிறந்தவன் தருமியும், சாந்தனுமாவான். சாத்துவீகத்தில் தாமத்தில் பிறந்தவன் மந்தனுவான், எ - று. (230)

தக்கராசதத்தில்ராச தம்பெறிற்றருமனாகும்
ஒக்கவேயதனிற்றம தம்பெறிலிகழ்ச்சியுள்ளான்
திக்கெனப்பாவஞ்செய்யுஞ் சிந்தையனவன்கண்டீர்
மிக்கசாத்வீகமாயின் மெய்ஞ்ஞானிபிரக்கவானும்.

(இ - ள்) தக்க ராசதத்தில் ராசதகுண காலத்தில் பிறந்தவன் தருமியாவான். அதில் தாமதனுயின் இகழ்ச்சியுடையனும் பாவியுமாவான். அதில் சாத்துவீகனுயின் மெய்ஞ்ஞானியும், இரக்கமுள்ளவனுமாவான், எ - று. (231)

ஈறுதாமதத்திற்றம தம்பயமிகழ்ச்சிபாவம்
கூறுநித்திரைமயக்கங் குறித்ததிலாசையுள்ளான்
வேறுராசதங்களிப்பு வெகுளியுண்ணுததுண்டல்
சிறிலாசாத்துவீகஞ் செவ்விபோய்வருத்தஞ்செய்யும்.

(இ - ள்) தாமதத்தில் தாமதகுணகாலத்தில் பிறந்தவன் பயம், இகழ்ச்சி, பாவம், நித்திரை, மயக்கம், நினைத்ததிலாசை இவைகளுள்ளவனும், அதில் ராசதனுயின் சந்தோஷம், கோபம், உண்ணுத துண்ணல் இவைகளுள்ளவனும், அதில் சாத்துவீகனுயின் வருத்தமுடையவனுமாவான், எ - று. (232)

முக்குண வேளையறிய

முற்றிற்று.

அருக்கன் புகர்புந்தி யிந்துதான்
இருக்கும் கடிகை யிரண்டரையா
மரிக்கு மணஞ்செயு மக்களைப்
சிரிக்குஞ் சிறைப்படுஞ் செல்வமும்

(இ-ள்.) சூரியன், சுக்கிரன், புதன், சந்திரன், சநி, குரு, அங்காரகன் இவர்கள்
மாறி யிருப்பவர்கள். இந்த வோரைகளில் இறக்கும், கலியாணஞ் செய்யும்,
போர்புரியும் என்று அறிந்துகொள்க, எ-று. சுக்கிரன் புதன் சந்திரன் குரு

ஆதிவாரம் காலை 6-மணி முதல் 7-மணி வரையில் 2½-நாழிகையாகும்;
வோரையானதால்தான் அன்று முழுமையும் 60-நாழிகை அல்லது 24-மணி
முறையே அறியக்கடவாய். சந்திரன், புதன், குரு, சுக்கிரன் சுபர்கள். இதை
வோரைகள் அசுபம். விவரங்களை ஷை பாட்டின் அர்த்தத்தில் கண்டு

## பகல்.

| வாரம். | காலை மணி 6-7 | 7-8 | 8-9 | 9-10 | 10-11 | 11-12 | 12-1 | 1-2 | 2-3 | 3-4 | 4-5 | 5-6 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஞா | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி |
| திங் | சந் | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி | குரு | செவ் | சூரி |
| செவ் | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி |
| புத | புத | சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி | குரு | செவ் |
| வியா | குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத |
| வெ | சுக்கி | புத | சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி | குரு |
| சனி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | புத | குரு | செவ் | சூரி | சுக்கி |

# ஹோரை

மக்கறை டக்கணர் சேய்மி
மிக்க ஹோரை களில்
பெற்று மகிழ்ந் திருக்கும்
பொழுதெனத் தேர்ந்து கொள்ளே.

மேல்விறுத்த கிரமப்படியே நாளொன்றில் இரண்டரைக் கடிகை வீதம் மாறி பிள்ளைகளைப் பெற்று மகிழும், சிரிக்கும், சிறைப்படும், செல்வமுண்டாம், இவர்கள் சுபர். சூரியன் செவ்வாய் சனி இவர்கள் அசுபர். (233)

சூரிய உதயமுதல் $2\frac{1}{2}$-நாழிகை அல்லது ஒருமணி நேரம் வரையில் சூரிய வரையில் ஞாயிற்றுக்கிழமை முடிவாகும். இவ்வாறே மற்ற வாரங்களுக்கும் மணிமாலிகாவெனத் தெரிந்து சுபகாரியங்களைச் செய்ய உத்தமம். மற்ற கொள்க.

## இரவு.

| மாலை மணி 6-7 | 7-8 | 8-9 | 9-10 | 10-11 | 11-12 | 12-1 | 1-2 | 2-3 | 3-4 | 4-5 | 5-6 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத |
| சுக்கி | புத | சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி | குரு |
| சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி |
| சூரி | சுக்கி | புத | சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி |
| சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி | குரு | செவ் | சூரி |
| செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி |
| புத | சந்தி | சனி | குரு | செவ் | சூரி | சுக்கி | புத | சந்தி | சனி | குரு | செவ் |

24-மணி நேரத்துக்கும் ஹோரைகள்.

# திதித்தியாச்சியம்.

வேறு.

செப்புதிதித்தியாச்சியத்தின் வகையுரைக்கக்கேணீ
திகழுகின்றபிரதமைக்கே நாலாறதாகும்
ஒப்பரியதுதியைக்கி ராறுதிரிதிகைக்கே
உயரைம்பதுடனைந்தா மோதிடுபஞ்சமிக்கும்
தப்பறிசட்டிக்குமைம் பானொடுநான்காம்
தக்கசதுர்த்திக்குநவ மிக்குதகுமைந்தாம்
முப்பானொடொன்றென்றே மொழிந்திடுசத்தமிக்கே
உன்னுமனைவட்டமிக்கே நாலைந்தாயுரைப்பர்.

(இ - ள்) திதித் தியாச்சியத்தின் விதத்தை உரைக்கக் கேட்டால், பிரதமைக்கு இருபத்துநான்கு நாழிகைக்கு மேலும், துதியைக்கு பன்னிரண்டுக்கு மேலும், திரிதியைக்கு ஐம்பத்தைந்துக்கு மேலும், பஞ்சமிக்கும், சஷ்டிக்கும், ஐம்பத்துநான்குக்கு மேலும், சதுர்த்திக்கும், நவமிக்கும், ஐந்துக்கு மேலும், சத்தமிக்கு முப்பத்தொன்றுக்கு மேலும், அட்டமிக்கு இருபதுக்கு மேலும், எ - று. (234)

உரைத்திடுவர்தசமிக்கு முப்பதுடன்மூன்றும்
ஒன்றுமேகாதசிக்கே யோதுதுவாதசிக்கே
விரைக்குழலாயொருபதோ டைந்தாகுமேழாம்
மேவுசதுர்த்தசிக்காகும் விளம்பிருபத்தாறும்
திருத்ததிரயோதசிக்கே யிருபானோடொன்பான்
திகழ்கின்றபூரணைக்காஞ் செப்பிடுமோராறே
புரைத்கவிருநேற்றிடுமோ ரமாவாசைக்கென்றே
புகலுவர்நாற்கடிகைவிட மெனப்புலவர்புகழ்ந்தே.

(இ - ள்) தசமிக்கு முப்பத்து மூன்றுக்கு மேலும், எகாதசிக்கும், துவாதசிக்கும் பதினைந்துக்கு மேலும், சதுர்த்தசிக்கு எழுக்குமேலும், திரயோதசிக்கு இருபத்தாறுக்கு மேலும், பூரணைக்கு இருபத்தொன்பதிற்கு மேலும், அமாவாசைக்கு ஆறுக்கு மேலும் நாற்கடிகை நேரம் தியாச்சியமென்று சோதிடநூல் வல்லவர் சொல்லுவர், எ - று. (235)

# நட்சத்திரத் தியாச்சியம்.

புகலுவர் பூராடமுடன் பரணியுத்திரட்டாதி
பொருந்திருபா னுடனான் காம்புநர் மகங்கோணி
இகலுமங்கினை தனக் காறைந்தாஞ்சோதிவிசாகம்
இயம்புமகசிரங்கேட்டை யிவைக்கீரேழாகும்
தகைபெண்ணே யோண மவிட்டம்மொழியதாகும்
சாற்றுருநாள் பூரஞ் சித்திரையுத்திராடம்
நகைதருநாலைந்தாகு நாகிலெட்டாயிலியம்
நாலைந்தோ டிரண்டென்றே நாட்டிடுகவ்விக்கே.

(இ - ள்.) பூராடம், பரணி, உத்திரட்டாதி இவை இருபத்துநான்கு நாழிகைக்குமேலும், புனர்பூசம், மகம், ரேவதி, கார்த்திகை இவை முப்பதுக்கு மேலும், சோதி, விசாகம், கேட்டை, மிருகசீரிடம் இவை பதினுன்குக்குமேலும், அநுஷம், திருவோணம், அவிட்டம் இவை பத்துக்குமேலும், பூசம், பூரம், சித்திரை, உத்திராடம் இவை இருபதுக்கு மேலும், ஆயிலியம் முப்பத்திரண்டுக்கு மேலும், அஸ்தம் இருபத்திரண்டுக்கு மேலும், எ - று.

நல்விழி யாய்சதய முத்திரமீ ரொன்பான்
நல்லபரி நாடனக்கே நவிலுவனைதம் பானே
திவ்வியமாம் ரோகணிக்கே நாற்பானு மென்ப
திருந்தியநல் லாதிரைக்கே செப்புபதி னென்றும்
கவ்வுமிரு பத்தொன்று மாமென்ப மூலம்
கருதுமிரு பானுடனைம் பத்தாறும் பத்தோ
டொவ்வியவா றும்பூரட் டாதியிலற் றின்மேல்
உறுகடிகை நான்குவிட மெனவுரைப்ப ருயர்ந்தோர்.

(இ - ள்.) மான்போலும் கண்ணுளே! சதயம், உத்திரம் இவை பதினெட்டுக்கு மேலும், அஸ்வினிக்கு ஐம்பதுக்குமேலும், ரோகணிக்கு நாற்பதுக்குமேலும், திருவாதிரைக்கு பதினென்றுக்குமேலும், இருபத்தொன்றுக்கு மேலும், மூலத்திற்கு இருபதுக்கு மேலும், ஐம்பத்தாருக்கு மேலும், பூரட்டாதிக்கு பதினுறுக்கு மேலும் நான்கு கடிகைநேரம் தியாச்சியமென்று பெரியோர் சொல்லுவர், எ - று.

வருஷாதி நூற்படிபார்க்கின் திருவாதிரைக்கு இருபத்தொன்றுக்கு மேலும், மூலத்திற்கு இருபத்தைந்துக்கு மேலுமென் றேற்படுகின்றது. ஆதலின் இச்செய்யுளிலுள்ளபடி வரைந்தனம். (237)

# வாரத்தியாச்சியம்.

வேறு.

வெய்யவனு லெட்டாகும் வெண்மதிக்கா றேழாகும்
செய்யகற் புதனு மொப்பாஞ் சேயவன் முப்பத்தொன்றாம்
துய்யபொன் னவனு மொப்பாஞ் சூழ்புகர் மூவேழாகும்
மையுறு சநியுமீரேழ் வாரத்தியாச் சியமேனுன்னே.

(இ - ள்.) ஆதிவாரம் முப்பத்திரண்டு நாழிகைக்குமேலும், திங்கட்கிழமைக்கும் புதன்கிழமைக்கும் நாற்பத்திரண்டுக்கு மேலும், செவ்வாய்க்கும் வியாழத்திற்கும் முப்பத்தொன்பதுக்கு மேலும், வெள்ளிக்கு இருபத்தொன்பதுக்கு மேலும், சநிக்கு பதினான்குக்கு மேலும் நான்கு கடிகை தியாச்சியமாகும், எ - று. (238)

நாட் கண்டம்.

இரவிசே யிருக்கானு மேழுபத் தியன்மூவைந்தும்
பரவிய மதிமாற் கெட்டும் பதினெட்டு மிருபானான்கும்
விரவிய புகர்பொன் னுக்கு மேவுமொன் பானுமேழும்
கரியவன் றனக்கோரைந்தும் பன்னொன்று மிருபத்தாறே.

(இ - ள்.) சூரியனும் அங்காரகனும் இருந்த நட்சத்திரத்திற்கு ஏழு, பத்து, பதினைந்தும் சந்திரன், புதன் இவர்களுக்கு எட்டும், பதினெட்டும், இருபத்து நான்கும், சுக்கிரன், குரு இவர்களுக்கு ஒன்பதும், ஏழும், சநிக்கு ஐந்தும், பதினொன்றும், இருபத்தாறும், எ - று. (239)

ஆறதா மரவுக்கேழு மாகுமே கண்டமென்ப
வீறதாஞ் செவ்வாயோரை மேவிடிற் சநிகண்டத்தில்
பெறதாம் பிள்ளைதானும் பெருஞ்சிறைப் படுவனென்றே
சீறிய வரவேரல்குற் றேமொழி மாதேசெப்பாய்.

(இ - ள்.) சர்ப்பப் படம்போலும் அல்குலும், இனியவசனமு முடைய பெண்ணே! ராகு, கேது இவர்களுக்கு ஏழும் கண்டமென்று சொல்லுவர். ஆனால் சநிகண்டத்தில் செவ்வாயோரை வந்தால் பிள்ளை சிறைப்படுவானென்று சொல்வாய், எ - று. (240)

# திரேக்காணம்.

வேறு.

பரவுதிரேக் காணமது லக்கினத்தை மூன்றாய்
பகுத்திடுநன் மேடமுதற் கோவதுவே யாகும்
விரவிரண்டிற் கைந்தாகு மூன்றினுக்கொன் பானும்
மினிரிடப முதற்கொன்பா னிரண்டற்கவ் வீட்டோன்
பொருமூன்றிற் கைந்தாகு மிதுனமுதற் கைந்தாம்
புகலிரண்டிற் கொன்பானு மூன்றினுக்கவ் வீட்டோன்
வருட்ராசி மும்மூன்றிற் கிவ்வாறே யாகும்
வகையுடனே புணர்ந்துநன்றாய் வகணிப்பாய் நனிநீ.

(இ - ள்.) திரேக்காணம் என்பது ஜென்மலக்கினத்து மொத்த நாழிகையை மூன்றாகப் பகுத்து ஜென்ம நாழிகை எந்தப் பங்கில் வருகிறதோ அதைக் கணித்தலாம். மேஷலக்கினத்து முதற்பங்குக்கு மேஷமேயாகவும், இரண்டாவது பங்கிற்கு அதற்கு ஐந்தாம் வீடும், மூன்றாவது பங்கிற்கு அதற்கு ஒன்பதாவது வீடும், ரிடபத்திற்கு முதல் பங்குக்கு அதற்கு ஒன்பதாவது வீடும், இரண்டாவது பங்குக்கு அதே வீடும், மூன்றாவது பங்குக்கு ஐந்தாவது வீடும், மிதுன முதற் பங்குக்கு அதற்கு ஐந்தாம் வீடும், இரண்டாவது பங்குக்கு ஒன்பதாவது வீடும், மூன்றாவது பங்குக்கு அந்த வீடும் திரேக்காணமாகும். இப்படியே மற்றைய ராசிகளுக்கு மாறி சொல்லுக, எ - று.

நனிதிரய முதற்காணங் கண்டமட்டே யாகும்
நாபியளவாமிரண்டு மூன்றைப்பா னட்டும்
வினவியதோ ரிவ்விடத்திற் பாவர்களே நின்றால்
விரணமுண்டாஞ் சுபக்கிரக மேவின்மறு வாகும்
புனிதமுறு சுபர்பார்வை யுறினுமறு வாகும்
பொருந்துநிறந் தெரிந்ததனைப் புகன்றியவேண் டிடினே
இனிமையுட னிருந்தகிர கத்தின்வணக் காலே
இருந்தபடி யேயிருக்கு மெனவியம்பு வீரே.

(இ - ள்.) இந்தத் திரயத்தில் முதற்காணம் கண்டமட்டும், இரண்டாங் காணம் நாபியளவும், மூன்றாவது காணம் அதற்கப்புறமாகும். இந்த இடங்களிற் பாபக்கிரகங்க ளிருந்தால் விரணமுண்டாம். சுபக்கிரகங்க ளிருந்தால் மறுவுண்டாம். சுபர் பார்த்தாலும் மறுவே யுண்டாம். நிறத்தைச் சொல்ல வேண்டுமானால் ஆங்கிருக்குங் கிரகத்தின் நிறத்தைப் பார்த்து சொல்லுவீர், எ - று.

வீரமுறுங் கதிரிருந்தால் விலங்கினத்தி னாலும்
விளங்குசனி யிருந்தக்கால் மெய்விரணங் கொம்பால்
பார்மகனிற் றிடிலங்கி யாற்படையி னாலும்
பாகனுறிற் பூமிநிமித் தம்விரணம் பற்றும்
ஆரியனுங் குருசுக்க ருறில்விரண மில்லை
ஆக்காரி யுறிற்கல்லால் வாதசேத் துமத்தால்
கூறியசோ ரிரணமுண்டா நல்லோர்கள் கண்டால்
கூறுமிர ணந்தீர்ந்தே குலவும்வடு வாமே.

(இ - ள்.) அந்த இடங்களில் சூரியனிருந்தால் மிருகத்தாலும், சனி யிருந்தால் கொம்பாலும், அங்காரகனிருந்தால் அக்கினியாலும், ஆயுதத்தாலும், புதனிருந்தால் பூமி நிமித்தத்தாலும் விரணமுண்டாம். குரு சுக்கிரர்களிருந்தால் விரணமில்லை. சனி யிருந்தால் கல்லாலும் வாத சிலேஷ்மத்தாலும் விரணமுண்டாம். சுபக்கிரகங்கள் பார்த்தால் விரணந் தீர்ந்து வடுவுண்டாகும், எ - று. (243)

வடிவிலார் சிரத்திரவி முகந்நின்மதி யாகும்
மார்பிற்சே யுறின்மருவு மின்னுமிர ணந்தான்
முடிபரச னுதரத்திற் புந்திபிடைதனிலே
மூரிநெடுங் காரியுரு அடைதனிலே யாகும்
கடுவுறையுங் கருநாகங் கரந்தனிலே யாகும்
காலிரண்டிற் செம்பாம்பு தான்கனத்து நிற்கும்
நடுமுதுகிற் சுக்கிரனு மாம்விரணம் பாவர்
நண்ணுமிடந் தன்னிலென்றே நாட்டுவர்நல் லோரே.

(இ - ள்.) மேற்சொல்லிய விடங்களில் சூரியனிருந்தால் தலையிலும், சந்திரனிருந்தால் முகத்திலும், அங்காரகனிருந்தால் மார்பிலும், குருவிருந்தால் வயிற்றிலும், புதனிருந்தால் இடுப்பிலும், சநி யிருந்தால் இரண்டுதுடைகளிலும், ராகுவிருந்தால் கையிலும், கேதுவிருந்தால் இரண்டு கால்களிலும், சுக்கிரனிருந்தால் நடுமுதுகிலும், பாவர் நண்ணுவதானல் விரணமாமென்று பெரியோர் சொல்லுவர், எ - று. (244)

திரேக்காணம்

முற்றிற்று.

# நவாங்கிச லக்கினமறிய.

உதித்திடுநற்சன்மலக்கி னங்கடமைக்கண்டே
ஒன்பதுபங்காக்கியிவ னுதித்திடும்பங்கினுக்கே
விதித்தநவாங்கிசமேடந் தனக்குமேமேடம்
மேவிடபராசிக்கு மகரமுதலாகக்
கதித்தமிதுனந்தனக்குத் துலாமுதலாகக்கொண்டு
கணக்கிடுவாயிவ்வாறே கடகமுதற்றொட்டுப்
பதித்தமற்றராசிக்கு முன்புசொன்னமுறையை
பார்த்துரைப்பாய்பான்மொழியே பன்னுநவாங்கிசமே.

(இ - ள்.) ஜென்மலக்கின நாழிகைதொகையை ஒன்பது பங்காக்கி இவன் ஜென்மித்த நாழிகை எத்தனையாவது பங்காகி வருகின்றதோ அந்த பங்குச் செனனம் மேஷம், சிங்கம், தநுசு இந்த இராசிகளானால் மேடம் முதலாகவும், ரிஷபம், கன்னி, மகரம் இந்த இராசிகளானால் மகரம் முதலாகவும், மிதுனம், துலா, கும்பம், இந்த இராசிகளானால் துலாமுதலாகவும், கடகம், விருச்சிகம், மீனம் இந்த இராசிகளானால் கடக முதலாகவும் முன் சொன்னமுறையே கணக்கிட்டுச் சொல்லுவது நவாங்கிசமாகும், எ - று.

---

## துவாதசாங்கிசம்.

### வேறு.

கருதுபன்னிரண் டங்கிசங்காணவே
மருவுலக்கினத்த தவகுத்தபடி
வருவதாகியபங்கை வருடைதொட்
டொருவிலாததோ ரோரைகணித்திடே.

(இ - ள்.) பன்னிரண்டங்கிசத்தைக் காணவேண்டின் ஜெனன லக்கினத்தைப் பன்னிரண்டாக வகுத்து மேடமுதற்கு பங்கிட்டு அந்த ஓரையைக் கணிக்க வேண்டும், எ - று. (246)

---

## திரிசாங்கிசம்.

### வேறு.

செய்யலக்கினந்தன்னை முப்பதாய்ப்பிரித்து
செவ்வாய்க்கோரைந்துபங்காஞ் சனிக்குப் பங்கைந்தாம்

துய்யகுருவுக்கெட்டு புகனுக்கேழாம்
  சுக்கிரனுக்கைந்துபங்காய்ச் சொல்லொன்றைநனக்கே
யையவர்ககிரட்டைலக்கி னக்கணக்குப்பங்கு
  பகர்சுக்கிரன்றனக்கை யைந்துபுகற்கேழாம்
தையலேகேளாசர்க்கெட்டு சனிக்கைந்தாம்
  சாற்றுகுசற்கைந்துபங்காந் தான்சாற்றுங்காலே.

(இ - ள்.) செய்ய ஆண் லக்கினமானால் அந்த லக்கினத்தை முப்பதாய் பிரித்து அங்காரகனுக்கு ஐந்து பங்கும், சனிக்கு ஐந்துபங்கும், குருவுக்கு எட்டுபங்கும், புதனுக்கு எழுபங்கும், சுக்கிரனுக்கு ஐந்துபங்கும், பெண் லக்கினமானால் சுக்கிரனுக்கு ஐந்தும், புதனுக்கு எழும், குருவுக்கெட்டும், சனிக்கைந்தும், அங்காரனுக்கு ஐந்து பங்குமாகப் பாகித்தல் வேண்டும், எ-று.

---

## உச்சபலன்.

உச்சமெனநவக்கிரக மிருகக்குமுண்மையதாம்
  உணர்ந்தறியும்படிமேடத் துறையும்வெய்யோனும்
மெச்சுமிடபத்திற்சந் திரன்மகரச்செவ்வாய்
  விரவியதோர்கன்னிதனின் மேவியநற்புதனும்
அச்சமறகடகத்தி லரசனும்வந்திருக்க
  அணிமீனராசிதனி லமர்ந்திடுஞ்சுக்கிரனும்
வச்சிரமாந்துலாமதனில் காரியெனுங்கோனும்
  வந்திருந்தாலுச்சமெனவே வழுத்தலாமே.

(இ - ள்.) நவக்கிரக உச்சஸ்தானங்களை உணருமிடத்தில் மேடத்தில் சூரியனும், இடபத்திற் சந்திரனும், மகரத்தில் அங்காரகனும், கன்னியில் புதனும், கடகத்தில் குருவும், மீனத்தில் சுக்கிரனும், துலாத்தில் சனியுமிருந்தால் உச்சமென்று சொல்லலாம், எ - று. (248)

வழுத்தியசெங்கதிருச்சம் பெறவிதிற்றோன்றுனும்
  மன்னவனும்பிரதாப சாலிமகாபலவான்
பழித்திடும்புன்றொழிலிலான் றனதான்யமுள்ளான்
  பவித்வாகனுடலிற் பழுதொன்றுமில்லான்

செழித்திடுஞ்சந்திரனுச்சஞ் சகலசனப்பிரியன்
செல்வகுணம்புத்திசுவ தானியமுஞ்சேரும்
விழித்துமயலளித்துமன முருக்குமடமாதே
வெகுபேரைப்புணருகின்ற மிகுபோகியாவான்.

(இ - ள்.) சூரியனுச்சம் பெற்றவன் அரசனும், பிரதாபியும், பலவா னும், அல்பநோயில்லாதவனும், தனதானியமுள்ளவனும், பலவித வாகன முள்ளவனும், உடற்பழுதில்லாதவனும், சந்திரனுச்சம் பெற்றவன் சகல ஜனப்பிரியனும், செல்வனும், புத்திசாலியும், சுவதானியனும், ஸ்திரீலோலனு மாவா னென்றறிவாய் பெண்ணே, எ - று. (249)

ஆகுஞ்செவ்வாயுச்சங் கீர்த்திபிறர்க்கினியான்
அவனிதனினெடுங்கால மாயுளுடையவனும்
வாகுடையன்பித்கன்பிதிர்க் திரவியங்களுள்ளான்
மருவுமிகுபுத்திமான் மன்னவனுயிருப்பன்
மோகமுறும்புதனுச்சஞ் சகலகலைவல்லன்
மூறைமையுறுசங்கீதப் பிரியன்வெகுகுணவான்
சேகரமாம்புத்திமான் கணிதவகைதெரிவோன்
திண்புவிக்கோரரசனா முண்டிருக்குஞ்சீமான்.

(இ - ள்.) செவ்வாயுச்சம் பெற்றவன் கீர்த்தி, பிறருக்கினிமை, தீர்க் காயுள், வெற்றி, பிதிரார்ஜிதம், மிகுபுத்தி, அரசத்துவம், இவைகளுள்ளவ னும், புதனுச்சம் பெற்றவன், சகலகலைவன்மை, சங்கீதப்பிரீதி, கணிதந் தெரிதல், அரசாட்சி, தீர்க்காயுசு இவைகளுள்ளவனு மாவான், எ - று.

ஆமரசனுச்சத்தில் வெகுசம்பத்துள்ளான்
அரசன்மிகுபோகவா னணிகனமுமுளனும்
காமரசவனிதையா கனம்வித்தைபுதல்வர்
கனகமாமருவுமுப காரனுயிருப்பன்
பூமலிசுக்கிரனுச்சந் தனம்வித்தைபுதல்வர்
போகமிகவுளன்காரி யுச்சமதிற்பலவான்
எம்மாரோக்கியந்தீர்க்க காயுணன்மையுடனே
இரணியங்கிராமஞ்சேனை யிவைகளுளனுமே.

(இ - ள்.) குருவுச்சம் பெற்றவன் வெகுசம்பத்து, அரசாட்சி, மிகு போகம், தானம், பரஸ்திரீ, வாகனம், கல்வி, புத்திரர் உபகாரஞ் செய்தல் இவைகள் உள்ளவனும், சுக்கிரனுச்சம் பெற்றவன் தனம், கல்வி, பிள்ளைகள் போகம், இவைகளுள்ளவனும், சனியுச்சம் பெற்றவன் பலம், செல்வம்,

ஆரோக்கியம், தீர்க்காயுள், நல்லவழியி லீட்டியபொன், கிராமம், சேனை இவைகளுள்ளவனு மாவான், எ - று. (251)

உள்ளதொரு கிரகமுச்ச மேவிற்கிரா மணியாம்
 உபயமுச்சம் பெற்றிற்பலவூர்க் கிராமணியு மாவான்
தெள்ளியதோ ரொருமூன்று கிரகமுச்ச மானாற்
 செங்கோன்மன் னவனாகிச் சிறிதவனி புரப்பன்
நள்ளியதோ ரிரண்டு கிரகமுச்சமானாற்
 நவிலொருமண் டலந்தனக்கு நாயகனே யாவன்
புள்ளிசெறி யோரைந்து கிரகமுச்ச மானால்
 பூலோக நாயகனு மெனப்பலன்கள் புகல்வர்.

(இ - ள்.) ஒரு கிரகமுச்சமானால் கிராமாதிகாரியும், இரண்டுச்சமானால் பலவூர்க்கதிபதியும், மூன்றுச்சமானால் அரசனாகிச் சிற்றூராள்வானும், நான்குச்சமானால் மண்டலாதிபதியும், ஐந்துச்சமானால் பூலோகாதிகாரியென்றும் பெரியோர் சொல்லுவர், எ - று. (252)

புகல்சனன காலயினிற் சுபக்கிரக மெல்லாம்
 பொருந்துநீ சஞ்சத்துரு ராசிதனிற் சேர்ந்தே
இகலுறநின் றிடுபலன்க ளுரைத்திடவுங் கேளாய்
 இருந்ததலந் தனைவிட்டே யேகுவிக்குந் தூரம்
விகலுற்ற நாசமிக வுற்பவிக்குமென்றே
 மெய்யதனிற் குரூரமாம் வியாதிகளுண் டாகும்
அகன்மரண துக்கசோ கங்களிவை செறியும்
 அனங்கண்டு சாரநடைசொல் லானவிழியாளே.

(இ - ள்.) சொல்லுகின்ற சனனகாலத்தில் சுபக்கிரகங்க ளெல்லாம் நீசம், பகை இந்த ஸ்தானங்களிலிருக்கும் பலன்களைச் சொன்னால், பெண்ணே! இடத்தைவிட்டு அாரமாகத் தூரத்தும், மிகுந்த கேடுகளுண்டாம், தேசத்திக்குக் குரூரமான வியாதிகளுண்டாம், மரணதுக்கமுண்டாம், என்றறிவாய், எ - று. (253)

ஆரேனு மூவருச்ச மாகிலமைத் தோளி
 அணுகுமர சன்கூட மூவருச்சமாயின்
வாரேறு முலைமடவாய் மந்திரியு மாவன்
 மற்றுமொரு மூவர்நீ சத்தான மருவில்
பாரேறுந் தனியொருவர்க் கேயடிமை யாவன்
 பகர்மூவ ரத்தமனம்பால னுயிர்க்கரிட்டம்
சீரான சசிக்கிருபால் பாவர்கடாம் வந்து
 சேரிற்கத்திரி யோகஞ் சேயுடனே மரிக்கும்

(இ - ள்.) எந்தக் கிரகமாவது மூன்றுச்சமானால் அரசனாவான் இன்னு மூவருச்சமானால் மந்திரியாவன். மற்று மொருமூவர் நீசஸ்தானஞ் சேர்ந்தால் அடிமையாவான். மூவரத்த மனமானால் பாலனுக்கு அரிட்ட முண்டாம். சந்திர னிருப்பிடத்திற்கு இருபக்கமும் பாபக்கிரகங்கள் வந்து சேர்ந்தால் கத்திரி யோகம் ஆகையால் குழந்தை உடனே சாகும் என் றறிந்து சொல்வாய் பெண்ணே! எ - று. (254)

மரியாதி ரிடனிரண்டு கிரகமுச்சமாகி
மன்னியோ காங்கிசையில் வந்திருக்கின் மன்னும்
பிரியாத விவரிருவர் மித்துருவே யானால்
பெருமைசெறி முழுராஜ யோகமெனப் பேசு
பரிவே யில்லாத பகையானா லற்பமதாம்
பாக்கியவா னுமுச்சமே படைத்த சுபக்கோள்
தறியாத நீசாங்கிசத்தி லற்பயோகம்
தாழ்வான நீசருச்சந் தானே றிப்பலனே.

(இ - ள்.) இரண்டு கிரகங்களுச்சமாகி யோகாங்கிசையில் வந்திருந் தால் அரசனும், அவர்கள் நட்பினராகவே யிருந்தால் முழுராச யோகமும், அவர்கள் பகையானால் அற்ப பாக்கியவானுமாவான். அன்றி உச்சத்தி லிருந்த சுபக்கிரகங்கள் நீசாங்கிசத்திலுற்றால் அற்ப யோகமும், நீசம்பெற்றி ருந்தவர்கள் உச்சமேறில் மிக்கயோகமு முண்டாகும், எ - று. (255)

கிரகமாலிகா யோக பலன்.

வே று.

எண்ணிய லக்கினங்கண் முதலேழு வீட்டி
லிடைவிடாமற் கிரக மாலையென்ன
நண்ணிடில் வல்லகி யோகம் பலன்கள்கூறி
னலமுள னுற்சாகி பரனீதியாளன்
புண்ணிய சம்பன்ன னறிவுடைய கோமான்
புகழ்செறியும் பிரசங்கி வித்துவானும்
திண்ணியநற் குலமுடைய நிபுணன்சீலன்
றிரள்யோக வானென்றே செப்புவாரே.

(இ - ள்.) லக்கின முதல் ஏழு வீடுகளில் வரிசையாகக் கிரகங்களிருந் தால் வல்லகி யோகமாம். அதன் பலன்களாவன, நல்லவன், உற்சாகி, நீதி மான், புண்ணிய சம்பன்னன், நல்லறிவாளன், பிரசங்கி, வித்துவான், நற் குலன், நிபுணன், சீலன், திரண்ட யோகவான் என்று பெரியோர் சொல்லு வர், எ - று. (256)

வேறு.

வாருலவு முலையாய்கேள் லக்கினங்கண் முதலா
யாறுமனையாறு வீட்டிற்கேணிற்கப்
பாருலவு சக்கிரதர யோகத்தினென்னப்
பகருபலன் றனைத்தெரிந்து பார்த்திடும்போது
சீருலவு மன்னவனுஞ் சுகதேகன் சிமான்
சினமிலான் கிருபையுளன் சேர்ந்தபிரதாபன்
எருளவாக்கியன் ஞானவான் புத்திமானும்
இனியதா தாவென்றே யியம்பிடுவர் கண்டீர்.

(இ - ள்.) கச்சிறுக்கிய தனபார முடையாளே! லக்கின முதலிய ஆறு வீடுகளில் வரிசையாக கிரகங்களிருந்தால் சக்கிரதர யோகமாம். அதன் பலன்களாவன, மன்னவன், சுகதேகி, சிமான், கோபமற்றவன், கிருபையுள்ளவன், பிரதாபன், நல்வசனன், ஞானி, புத்திமான், தருமிஷ்டி, தாதா என்று சொல்லுவர் பெரியோர், எ - று. (257)

கண்டிட லக்கினங்கண் முதலைந்துவீட்டிற்
கருணையுடனே கிரகஞ் சேர்ந்து நிற்கில்
ஒண்டொடி நற்பாச யோகத்தினென் றதனை
யுரைப்பர்பலன் மேதாவியுற்சாகியாகும்
தண்டமிழின்பலகலையுந் தெரிந்துரைகளைபகர்வன்
சகலசனங்களும்புகழத் தான்மிகவே வாழ்வன்
எண்டிசைகள்புரந்திடு மன்னவராற் பூச்சியவான்
இனியதனவான் வீட்டிற் கருமமெல்லாம்பார்ப்பன்.

(இ - ள்.) ஒள்ளியதொடி யுடையாளே! லக்கின முதலிய ஐந்து வீடுகளில் வரிசையாகக் கிரகங்களிருந்தால் பாச யோகமாம். அதன் பலன்களாவன, நல்லறிவன், உற்சாகி, தமிழ் வித்துவான், சசலரும் புகழ வாழ்வன், அரசாற் பூசிக்கப் படுவான், தனவான், இல்லறக் கீர்த்தியத்தில் வழுவாது நடப்பவன் என்று சொல்லுவர் பெரியோர், எ - று. (258)

வேறு.

பார்க்கில்லக்கினந்தன்னோடு பயினான்குமனைக்குள்ளாக
எற்கவேகிரகநின்றாலிதுவே கேதாரயோகம்
தீர்க்கமாய்க்கிருஷிபண்ணித் தனந்தேடுந்திடவான்சுற்றத்
தார்க்கன்பன்சுகவானராச பூச்சியன்றகைமையுள்ளான்.

(இ - ள்.) லக்கின முதலிய நான்கு வீடுகளுக்குள் கிரகங்களிருந்தால் கேதார யோகமாம். இதன் பலன்கள், உழுது பணந்தேடுதலும், சுற்றத்தார்க் கன்பாயிருத்தலும், சுகவானும், ராஜ பூச்சியனும், நல்ல குணமாயிருத்தலுமாம், எ - று. (259)

உள்ளதோர்மூன்றுவீட்டி லுற்றிடிற்சூலயோகம்
மெள்ளவேபலனநேக வித்தையுள்ளவ னுற்சாகி
தெள்ளியபோகவானுந் திரவியந்தேடுஞ்செல்வன்
கொள்ளவும்விலைகள்கூறி விற்கவுங்குறிப்புளாளன்.

(இ - ள்.) லக்கினமுதலிய மூன்று வீட்டிற்குள் கிரகங்களிருந்தால் சூலயோகமாம். அதன் பலன்கள், அநேக வித்தை யுள்ளவனும், உற்சாகியும், போகவானும், திரவியந்தேடுஞ்செல்வனும், வியாபாரியுமாயிருத்தலாம், எ - று. (260)

ஆள்சன்மமிரண்டிலேழு கிரகமுமமர்ந்துநிற்கில்
நிலகயோகமென்ப ரதன்பலனி நிமான்மிக்கோர்
தாள்தொழுதிறைஞ்சிநிற்குஞ் சரசவான்றீர்க்கசீவி
கேள்சுபகாமன்சென்மத் தேழுநிற்கவுளயோகம்.

(இ - ள்.) இலக்கினத்திற்கு இரண்டாம் வீட்டிலே எழுகிரகங்களு மிருந்தால் அகயோகமாம். அதன்பலன்கள் நீதிமானும் பெரியோரை வணங்குவோனும், தீர்க்காயுசுள்ளவனும், சுபகாரியகர்த்தனுமா யிருத்தல்; சென்மத்திலேயே எழுகிரகங்களு மிருந்தால் கவுளயோகமாம், எ - று.

யோகமாங்கவுளயோக முறுதனஞ்சற்றுமில்லான்
பாகமாயிளைத்திருப்பன் செலவுளான்பசிற்சோம்பன்
தோகைகேள்பொல்லான்சிற்ப காரியத்தொழிற்குவல்லன்
வாருடன்புவிசஞ்சார வல்லமையுள்ளனாமே.

(இ - ள்.) அதன் அதாவது கவுளயோகத்தின் பலன்கள், தரித்திரனும், இளைத்த சரீர முள்ளவனும், செலவுக்காரனும், சோம்பலுள்ளவனும், பொல்லாதவனும், சிற்பியும், புவிசஞ்சாரவல்லவனுமாயிருத்தல், எ - று.

உச்சபலன்

முற்றிற்று.

---

## சகடயோக பலன்.

அகமுடன் மன்னனுக் காறெட் டொடுவியத்
திகழ்மாமதி யெய்தி யிருந்திடின்
சகடயோ மிதிற்பிறந் தார்க்கெலாம்
விகடதுன்பம் விளையு மரிட்டமே.

(இ - ள்.) குருவுக்கு ஆறு எட்டு பன்னிரண்டு இவ்விடங்களில் சந்திரனிருந்தால் சகடயோகமாம் இந்த யோகத்தில் பிறந்தவர்களுக்கெல்லாம் துன்பமும் அரிட்டமுமுண்டாகும், எ - று. (263)

# யோகபலன்.

---

வேறு.

விளையும் புதனுஞ் சூரியனும் விரும்பி யெட்டினன் கொன்றில்
வளையக்கூடின் மன்னவனு மதியுங் கதிரு முடின்கூடி
இளையா தன்மகன்மத்தி விரண்டி லிருக்கக் கீர்த்தியுளன்
கிளையா ரவிபொன் பன்னொன்றிற் கேடில் சன்மத்துறிலரசே.

(இ - ள்.) புதனும், சூரியனும், எட்டு நான்கு லக்கினம் இவ்விடங்களில் கூடில் அரசனவன். சந்திரனுஞ் சூரியனுமொன்றாய்க் கூடி கெடாது தர்ம கர்மத்திலும் இரண்டாமிடத்து மிருந்தால் கீர்த்தி யுள்ளவனவன். சூரியன் குரு பதினொன்றில் குற்றமில்லாது லக்கினத்திலிருந்தால் அரசனவான், எ - று. (264)

அரசே யெட்டோன் பதுபத்தி லணிசன் மத்தி விரவிபுககர்
சிரசா யிருக்கப் பூபதியாஞ் சேருஞ் சநியுஞ் சூரியனும்
நிரைசேர்ந் தொன்றாய் நவமாறி னிற்கிற் கீர்த்திமா னவன்
உரைசேர் மற்றே ரிடத்திவர்க ளுறையிற் கூத்தாடியு மாவான்.

(இ - ள்.) சூரியனும், சுக்கிரனும் எட்டு ஒன்பத்து பத்து லக்கினம் அவ்விடங்களிலிருந்தால் அரசனவான். சனியுஞ் சூரியனும் சேர்ந்து ஒன்பது ஆறு இவ்விடங்களிலிருந்தால் கீர்த்திமானவான். இவர்கள் மற்ற விடங்களிலிருந்தால் கூத்தாடியாவான், எ - று. (265)

ஆமம் வெள்ளி யிரவிசெவ்வா யனுகிற் பத்திற் பன்னொன்றில்
தாமே யைந்தொன் பதுமெண்டிற் றரிக்கி லரசா திபனவன்
தோமார் செவ்வா யிரவிபுந்தி யெங்கேயனுந் தொடர்ந்து நிற்கில்
ஓமேசெல்வம் படைத்திருப்ப னுதவான் றமருக்கொருகாசும்.

(இ - ள்.) சுக்கிரன், சூரியன், அங்காரகன் இவர்கள் சேர்ந்து பத்து பதினொன்று ஐந்து, ஒன்பது இரண்டு இவ்விடங்களிலிருந்தால், அரசனவான் அங்காரகன், சூரியன், புதன் எங்கேயாவது தொடர்ந்திருந்தால் சுற்றத்தார்களுக் கொருகாசு முதவாமல் செல்வம் அதிகமாகப் பெற்றிருப்பான், எ - று. (266)

காசம்பொதிந்த யிரவிகுரு கலைவெண் மதியங் காரிகுசன்
நேசமுடனே யொருவீட்டி னிற்சிலாகு ரனுமாகி
தேசந்தன்னி லிருந்தமன்னர் தேடும்பொருளிற் சிந்தைவைத்துப்
பூசல்புரிந்தே கைக்கொண்டு பூமிக்கரசா யிருந்திடுவன்.

(இ - ள்.) சூரியன், குரு, பூரணச்சந்திரன், சனி, அங்காரகன் இவர்கள் ஒரே வீட்டில் கூடியிருந்தால் அசாதாரணப் தேசங்களில் அரசர் தேடும் பொருள்களி லாசைவைத்துச் சண்டைசெய்து அவைகளைக் கொண்டு அரசு செலுத்துவோனவான், எ - று. (267)

இருக்கதிர்சந் திரனுச்ச மெய்தக் குருநண் டினிலிருக்கத்
திருந்துகுடத்திற் சநியிருக்கச் செவ்வாய் மேதை யேழிலுறப்
பொருந்தில்ராச யோகமதாம் பொன்னும்பிருகு முச்சமதாய்
இருந்தாற்பூமிக் கரசாகி யிப்பார்பரப்ப னெனச்சொல்லும்.

(இ - ள்.) சூரியன் சந்திரன் இவர்கள் உச்சத்திலிருந்து குரு கடகத்தி லும், சனி கும்பத்திலும், செவ்வாயும் புதனும் ஏழிலிருந்தால் ராசயோக மாம். குருவும் சுக்கிரனும் உச்சம்பெற்றிருந்தால் பூமிக்கரசனா யரசாள் வான் எ - று. (268)

சொல்லுமூன்று கிரகங்க ளுகமாயுச்ச மானாலும்
வில்லிலரசன் மேஷத்தில் வெய்யோனுச்ச மாயினும்
நல்லபிருகு பொன்மதியு நயந்தேகூடி யேழிலுற
அல்லலறவே புவிபுரக்கு மரசனாகுங் கண்டீரே.

(இ - ள்.) மூன்று கிரகங்கள் உச்சமானாலும், தநுசில் குரு ஆகியி னும், மேஷத்தில் சூரியன் உச்சமானாலும், சுக்கிரனும் குருவும் சந்திரனும் சிநேகமாய்க் கூடி எழாமிடத்திலிருந்தாலும் அரசனே யாவான், எ - று.

கண்டபாக் கியாதிபனுங் கருதுவெள்ளி யிருவோரும்
மிண்டுசன்மத் திருந்திடினும் வேந்தன்பாக் கியாதிபத்தில்
அண்டியுறினும் பிறர்தேசத் தரசாய்த்தனவா னாகியுமே
பெண்டொன்றை மணம்புரிந்து பிரதாபங்கள் பெறுங்குணவான்.

(இ - ள்.) பாக்கியாதிபதியும் சுக்கிரனுங் கூடிச் சன்மத்தி லிருந்தா லும், குரு பாக்கியஸ்தானத்தி லிருந்தாலும், பிறர் தேசத்தில் அரசனாகித் தனவானாய் ஒரு பெண்ணை மணம்புரிந்து பிரதாபங்களைப் பெறுங் குணவா னவான், எ - று. (270)

குணமார்தன் மகன்மாதி கூறுஞ்சுபக்கோ ளுடன்கூடி
மணமார்தன் மகன்மத்தின் மருவியிருக்கின் மன்னவனாம்
உணர்வாயிவர்க ளிருவருட னைந்தாதி யுடன்கூடிப்
புணர்வாரெங்கே யிருந்தாலும் பூமிபுரக்கும் புரவலனாம்.

(இ - ள்.) தர்மகர்மாபதி சுபக்கிரகங்களுடன் கூடி தன்ம கர்மத்தி லேயே யிருந்தால் அரசனவான். இந்த இருவரோடு ஐந்தாம் வீட்டுக் கதி பனும் ஒன்றாய்க் கூடி யெங்கே யிருந்தாலும் அரசனே யாவான், எ - று.

புரக்கும்வாயு யோகத்தைப் புகலும்புகர்க்குங் காரிக்கு
நிறைக்குந்திரிகோ ணங்கடனி னிருபனிருக்க வவர்க்கைந்தில்

பரக்குமதியக் தானிருக்கப் பரிதிமதி கேந் திரத்திருக்க
விரைக்குங்குயமார் முலையாளே வினவாயிதற்குப் பலன்சொல்வாம்.

(இ - ள்.) சுக்கிரனுக்கும் சனிக்கும் திரிகோணத்தில் குருவிருக்க அவர்களுக்குக் கைந்தில் சந்திரனிருந்து சூரியனுஞ் சந்திரனும் கேந்திரத்திருந்தாலும் வாயு யோகத்தைச் சொல்லுவார் வாசங் கமழும் முலையாய்! இதற்குப் பலனைக்கேள், எ - று. (272)

சொல்லும்விசால நேத்திரமுந் துலங்குன்னதமார் செசுரூபனுமாய்க்
கல்வியுளனாய்த் தனவானாய்க் கதித்தகீர்த்தி பிரபலனும்
நல்லகுணமுந் தருமனுமாய் நாடுங்கிரய விக்கிரய
வல்லவனுமாய்ப் பரதாரம வஞ்சித்திருக்கும் வஞ்சனுமாம்.

(இ - ள்.) விசால நேத்திரமும், அழகிய ரூபகரனுமாய் கல்வி யுள்ளவனாய், தனவானாய், கீர்த்திவானும், பிரபலனுமாம், நல்லகுணனும், தருமிஷ்டியுமாய், வியாபார பிரீதியுடையவனாய், பரதாரவஞ்சகனுமாயிருப்பானும், எ-று.

வே று.

வஞ்சமற்ற புதயோகஞ் சன்மத்தி லிறையும்
மன்னவன்கேந் திரத்தின்மதி மதிக்கிரண்டிற் குசனும்
விஞ்சுகுசற் கொருமூன்றிற் சனியிருக்கும் பலன்கள்
மிகுபலசாத் திரமறிவன் விரவுபராக் கிரமன்
செஞ்சொல்பெறு புத்திசா துரியன்மிகு சமர்த்தன்
செய்யநக ரம்புரக்குஞ் சிமானு மாவான்
கஞ்சமுகை தமனியவெற்பும் மிபக்கோ டென்னக்
கதித்துவிம்மும் புளகமுலைக் கன்னியரே கேளாய்.

(இ - ள்.) லக்கினத்தில் குருவும், குரு கேந்திரத்தில் சந்திரனும், அவனுக்கிரண்டில் அங்காரகனும், அவனுக்கு மூன்றில் சனியுமிருப்பது புதயோகமாம். அதன் பலன், பல சாஸ்திரமறிபவனும், பராக்கிரமனும், மோட்ச சாதுரியனும் மிகுந்த சாமர்த்தியனும், அரசனுமாவானென்று தாமரை மொக்கையும் பொன்மலையையும் யானைக்கொம்பையு மொத்துக் கதித்து விம்மும் முலையை யுடையாளே! நீ கேட்பாயாக, எ - று. (274)

சந்திரன்செவ் வாய்கூடிச் சத்தமத்தி லிருக்கச்
சந்திரமங் களயோகந் தரணியர சாள்வன்
இந்திருக்கும் லக்கினகேந் திரத்திற்பொன் னிருக்க
இருங்கசகே சரியோக மெழிநிறைந்த மதிக்குச்
சுந்தரஞ்சேர் லக்கினத்தா றேழெட்டா மிடத்தில்
சுபக்கிரகம் பார்க்கினிற் சொலுராஜ யோகம்

பந்தமுறு லக்கினத்திற் சசிசெவ்வாயிருக்கப்
பானுகுருபத்தொன்ப தாறில்ராஜயோகம்.

(இ - ள்.) சந்திரனும், செவ்வாயுங்கூடி சத்தமவீட்டிலிருந்தால் சந்திர மங்கள யோகமாகும். அதனால் அரசாள்வான். சந்திரனிருக்கும் லக்கினகேந்திரத்தில் குருவிருந்தால் கசகேசரியோகமாம். அந்தபூர்ண சந்திரலக்கினத்திற்கு ஆறு, எழு, எட்டாமிடங்களில் சுபக்கிரகங்கள் பார்த்தாலும், இருந்தாலும் ராஜயோகமாம். லக்கினத்தில் சந்திரனும்செவ்வாயுமிருந்து, சூரியனும் குருவும், முறையே பத்திலும் ஒன்பதிலு மிருந்தாலும் ராஜயோகமாம் எ-று.

வேறு.

சோமனார் தனக்கிரண்டிற் சனியுறிற்சுனபாயோகம்
தாமிதமா முன்றந்தை யார்ச்சிதத் தனங்களில்லைக்
காமுறு சிறுவன்றானுங் காசினிக் கரசனாகித்
தாமிகு தனங்கட்டடுத் தகுதிபெற் றிடுவன்றானே.

(இ - ள்.) சந்திரனுக்கு, இரண்டாமிடத்தில் சனியிருந்தால் சுனபா யோகமாகும், அதன் பலன் பிதுர்ராஜ்ஜித தனமில்லை ஆனால், அச்சாதகன் ஒரு அரசனைச் செல்வமீட்டித் தகுதியாய் வாழ்வன், எ - று. (276)

வருசசி கேந்திரன் மன்னவ னிற்கவந்த
அரசன்றன் கேந்திரத்தி லம்புலி தானுநிற்கில்
விரவுமற் றிடத்தின்மற்றோர் மேவியதோஷம் யானை
ஒருசிங்கங் கண்டவாறு மோதுகேசரியாம் யோகம்.

(இ - ள்.) சந்திர கேந்திரத்தில் குரு நிற்கவும், குருகேந்திரத்தில் சந்திரன் நிற்கவுமானால் மற்றவிடத்தில் மற்றக்கிரகங்கள் நிற்கும் தோஷமானது சிங்கத்தைக்கண்ட யானைப்போலாதலாகிய கேசரியோகமாகும். எ-று.

வேறு.

இரவிக்குப்பன்னிரண்டிற் சுக்கிரன்றான்கூடி
இருந்தக்காலதுவேசி யோகமெனவிசைப்பர்
புரவலராற்பூச்சியமு நால்வகையோசனைக்கும்
புத்திநல்லோரெல்லாம் புகழ்ந்திடு நற்புகழும்
பரவிய பூமிவெகுபரப்புகளைப் புரப்பன்
பயிலுஞ்சுக்கிரன்லாபப் பதியுறினுநன்மை
விரிவுதிரிகோணங்களாமைந் தொன்பானில்
வெள்ளிபுதன்குருவிருக்கில் வெகுபலனுண்டாமே.

(இ - ள்.) சூரியனுக்குப் பன்னிரண்டில் சுக்கிரனிருந்தாக்கால் அதுவே சிவயோகமாம். அதன் பலன், அரசரால் பூசிக்கப்படுதல், நால்வகை யோச

னைக்கும் புத்தி, நல்லோரால் புகழப்படுதல், பூமியாட்சி இவைகளும், சுக்கிரன் ஸ்வஸ்தானத்திலும், திரிகோணங்களாகில் ஐந்து ஒன்பதாமிடங்களில் சுக்கிரனும், புதனும், குருவும் கூடியிருந்தாலும் வெகு பலன்களுண்டாம்.

படிவுடன் கர்க்கடகத்திற் பொன்னவன் றனிருந்து
வண்மையுடன் லக்கினத்தின் வான்சசியைப்பார்க்க
படிமிசையோர்காண்பார்க ளங்கிசயோகமென்றே
பலனிதற்குவெகுபலனும் பாக்கியமுமுரித்தாய்த்
துடியிடை மாதர்கள்பலரைத் தாகமணம்புரிந்தே
தொண்ணூற்றாறும்வயது தொடங்கவருமளவும்
கடிகமழுமலரணைமே லனுராகப்புரிந்தே
காசினியிலிருப்பனெனக் கருதிடுமந் நூலே.

(இ - ள்.) குரு கடகத்திலிருந்து லக்கினத்திலிருக்குஞ் சந்திரனைப் பார்த்தால் அங்கிச யோகமென்று சொல்லுவார்கள். அதன் பலன் வெகு பலனும், பாக்கியமு முண்டாய் பெண்கள் பலரை விவாகம் புரிந்து தொண்ணூற்றாறு வயது வரைக்கும் மலரணைமேலிருந்து அநுராகம்புரிந்து பூமியில் இருப்பனென்று இந்நூல் சொல்லும், எ - று. (279)

உறுசன்மத்தாரகையிற் சென்றநாழிகையை
ஓரைத்திற்கழித்த பலனுதயமுதலாகப்
பெருஞ்சசியின்லக்கினமா மோராலக்கினமும்
பிறந்தசன்மலக்கினமும் பறையிந்தவீடும்
மறுவிலாவிந்நான்கு மனையுச்சவீடாய்
வயங்கவிறையோகமெனவே வழுத்தவேண்டும்
கறையகலக்கலைநிறைந்த நன்மதியம்போலும்
கமலமலர்போலுமுகக் கன்னியமேகேளாய்.

(இ - ள்.) ஜென்ம நட்சத்திரத்திற் சென்ற நாழிகையை ஐந்தைந்தாக ராசியொன்றுக்கு உதயமுதலாகக் கழிந்துவந்த மிச்சம் சந்திர லக்கினமாம். அந்தச் சந்திர லக்கினமும், ஓராலக்கினமும், ஜென்மலக்கினமும், சந்திரனிருக்கும், வீடுமாகிய இந்நான்கு உச்சவீடாயிருந்தால் இராசயோகமென பூர்ண சந்திரனைப்போலும் தாமரை மலர்போலும் முகத்தையுடைய யுடைய பெண்ணே! சொல்லக் கேளாய், எ - று. (280)

வேறு.

ஓராலக்கினங் கடிகாலக்கின முதித்தசன்மம்
நேராயிம் மூன்றுவீடு முச்சமாய் நின்றோர்காணப்
பாராளும் ராஜயோக மிருமனை பார்க்கின்மன்னும்
பேராயோர் மனையைக்காணிற் றனவானாய்ப் பேசுங்காலே.

(இ - ள்.) ஓராலக்கினத்தையும், ஜென்மலக்கினத்தையும், கடிகாலக்கினத்தையும் உச்சர்கள் காணின் ராஜயோகமாம். இரண்டு வீட்டைப் பார்க்கில் அரசனும். ஒரு வீட்டைப் பார்க்கில் தனவானும், எ - று. (281)

சோமனுக் காறேழெட்டிற் சுபக்கிர கங்களின்றால்
பூமலியதிகயோக மிதன்பலன் புகலுங்காலை
சேமியோன் சவுரியங்க ணுறைசிவன் பலமுமுள்ளான்
தீமையாம் பகையைவெல்லுஞ் சேனாதிபதியுமாவான்.

(இ - ள்.) சந்திரனுக்கு ஆறு, எழு, எட்டாமிடங்களில் சுபக்கிரகங்களிருந்தால் அதிக யோகமாம். அதன் பலன்: சக்கிரதரனும், சவுரியங்கள் நிறைந்தவனும்; பலமுள்ளவனும், பகைவர்களை ஜெயிக்கும் சேனாதிபதியுமாவானும், எ - று. (282)

இந்துவுக் கிரண்டாம்வீட்டி லினியர்கோ ளிருந்தகாலை
முந்திய சுனபாயோக மிதன்பலன் மொழியுங்காலை
சந்ததந் தனவான்ராஜ சன்மானன் புத்தியுள்ளான்
சுந்தரப் புவிகளெல்லாந் துதித்திடுங் கீர்த்திமானும்.

(இ - ள்.) சந்திரனுக்கு இரண்டாவது வீட்டில் சுபக்கிரகங்களிருந்தால் சுனபாயோகமாம். அதன் பலனைச் சொன்னால் எப்போதுந் தனவானும், ராஜசன்மானனும், நல்ல புத்தியுள்ளவனும், உலகமெல்லாம் துதிக்கும் கீர்த்திமானு மாவானும், எ - று. (283)

வேறு.

விஞ்சுபுந்தி குருவுச்ச மெய்திடச்
செஞ்சொற் சுக்கிரன் கோலினைச் சேர்ந்திட
இன்சொன் மேஷங் குசனுற வெய்தினோன்
அஞ்சி டானவ னம்புவி யாள்வனே.

(இ - ள்.) புதனும், குருவும், உச்சர்களாகவும், சுக்கிரன் துலாவிலேறவும், அங்காரகன் மேஷத்திலிருக்கவும் பிறந்தவன் யாவர்க்கும் அஞ்சாமல் அரசாள்வான், எ - று. (284)

ஆளும் லக்கினத் தொன்பதி லானநற்
கோளு திற்சிங்க டாடவி யோகமாம்
தூளி காற்றெனக் கோபன் சுகமுளான்
நீளு மற்ப நிதியுளன் பாவனே.

(இ - ள்.) லக்கினத்திலும், ஒன்பதாமிடத்திலும் சுபக்கிரகங்களிருந்தால் சிங்கடாடவியோகமாம். அதன் பலன்: மிக்க கோபியும், சுகமுள்ளவனும், அற்ப செல்வனும், பாவியுமாவனும், எ - று. (285)

பாவ மற்றிடு லக்கினப் பார்த்திபற்
கேவும் ரெண்டிற் சுபர்மூன் றி லெய்திடில்
காவு நான்கினுந் தானகற் கோளுறில்
கோவு மாகிக் குலாவி யிருப்பனே.

(இ - ள்.) லக்கினாதிபதிக் கிரண்டிலும், மூன்றிலும்; நான்கிலும் சுபக் கிரகங்க ளிருந்தால் அரசனாகி வாழ்வான், எ - று. (286)

வேறு.

குலவுமிரண்டாம்ராசி யுச்சமானாலும்
குளிர்மதிபொன் புகரிவரி லெவர்நின்றாலும்
இலகிதழாயிரண்டதாமிடஞ் சரமேயாயின்
இராஜயோகத்திற்கா லாந்திரமதாயின்
உலவுமரையுபயம் பூரணராஜயோகம்
உரைசெய்யுமிவர்லாபத் துறினுமினிதாகும்
புலவகலநெய்குளித்த வடிவேலைநிகராய்
புவியிலிளையோர்மயங்கப் புரிகயற்கண்ணாளே.

(இ - ள்.) புலால்நாற்றம் நீங்க நெய்குளித்த வேலையும் உலகத்தில் வாலிபர்களை மயக்குதலையும் பெற்ற கயலையும் ஒத்த கண்களை யுடையாளே! லக்கினத்திற்கு இரண்டாம் வீடு உச்சமானாலும், அல்லது அந்த வீட்டில், சந்திரன், குரு, சுக்கிரன் இவர்களில் யாராவது இருந்தாலும், அந்த வீடு சரராசியா யிருந்தால் கால் ராஜயோகமும் ஸ்திர ராசியா யிருந்தால் அரை ராஜயோகமும், உபய ராசியா யிருந்தாலும் பூரண ராஜயோகமுமாகும். அன்றி இக்கிரகங்கள் லாபஸ்தானத்திலிருந்தாலும் நல்லதேயாகும், எ - று.

ஆமூன்றிற்பத்தாறிற் பன்னொன்றிற்பாவர்
அமரிலோவுபசமயா மான திரிகோணத்
தாமூன்றுகேந்திரத்தி லுச்சங்கடன்னில்
தன்மனையிற்சுபர்நிற்கற் றகுராஜயோகம்
தேமூன்றுமமுதசசி யிருந்தராசிக்குள்
செறியுமதிபதிதனையுஞ் சென்மராசிக்குள்
பாமூன்றினதிபதியு மற்றோர்பாராமல்
பகைத்தசனிபார்க்கிற் சந்நியாசியெனப்பகரே.

(இ - ள்.) லக்கினத்திற்கு மூன்று, பத்து, ஆறு, பதினொன்று மிடங்களில் பாபக்கிரகங்க ளிருந்தால் உபசயமாம். திரிகோணத்திலாகின்ற மூன்று கேந்திரங்களிலும் சுபக்கிரகங்களிருந்தால் ராஜயோகமாம். மூன்றி

லும், சந்திரனிருந்த வீட்டிலும் அந்த இடாதிபதியையும், ஜென்ம ராசியில் மூன்றாமிடத்தானையும், வேறெவரும் பாராமல் சநிமட்டும் பார்த்தால் சந்நி யாசி யென்று சொல்லவேண்டும், எ - று. (288)

பகருமந்தனுக்கிரண்டா மிடத்திலிருந்து
பண்புடன்மூன்றாமிடத்தி லரசன்றானும்
சகமறியவேயிருந்தால் ராஜயோகம்
சன்மலக்கினங்கள்விரிச் சிகமேயாதி
நிகரிலங்கமனையைச்சேய் நின்றுபார்க்கில்
நிலமெலாம்புரந்தருளும் ராஜயோகம்
நகர்கடகலக்கினத்திற் சசிக்கேழ்செவ்வாய்
நண்ணிடில்ராஜயோக மென்பார்நல்லோர்.

(இ - ள்.) சநிக்கு இரண்டாமிடத்தில் சந்திரனும், மூன்றில் குருவு மிருந்தால் ராஜயோகமாம். ஜன்மலக்கினம் விரிச்சிகமாயிருந்து அந்த வீட்டை அங்காரகன் இருக்கிலும் பார்க்கிலும் உலகமெலாமாளும் ராஜ யோகமாம். அன்றி கடகலக்கினத்துச் சந்திரனுக்கு ஏழில் அங்காரகன் இருந்தாலும் ராஜயோக மென்றே பெரியோர் சொல்லுவர், எ - று. (289)

வேறு.

நல்லதோர்கன்னிஜென்ம லக்கினமாகச்சுக்கன்
மெல்லவேயுச்சமாக வில்லிடைவேந்தன்மேவச்
சொல்லியபாவர்கூடிச் சூழ்ந்திடா திருக்கின்மன்னாய்
வல்லதன்புவியுமற்ற மன்னர்களுடிமாள்வன்.

(இ - ள்.) கன்னியாலக்கினம் ஜென்மமாக சுக்கிரன் உச்சமாகவும், குரு துலாவிலிருக்கவும், பாபக்கிரகங்கள் பாராதிருந்தால் மன்னவனாவான். அப்படியானால் தன்னுலகத்தையும் வேற்றரசர்கள் நாட்டையு மாள்வான், எ - று. (290)

ஆளுங்கர்க்கடகஞ்ஜென்ம மாகவேயிரவிபொன்னும்
கோளுமேயுச்சமாகக் குளிர்புதன்வெள்ளிதாமும்
நீளுந்தன்வீட்டினிற்க நீண்டபாக்கியாதிதாமும்
மீளுங்கேந்திரத்தினிற்க வேணராச்சியம்புரப்பன்.

(இ - ள்.) கர்க்கடகஞ் ஜென்மமாக சூரியனும், குருவும் உச்சமாகவும், புதனும், சுக்கிரனும் சுயக்ஷேத்திரத்தி லிருக்கவும், பாக்கியாதிபதி கேந்தி ரத்தி லிருக்கவும், அநேக ராஜ்ஜியங்களை யாளுவன், எ - று. (291)

புரக்கும்புதனுந்தானுச்சம் பொருந்துமிரண்டாமிடம்வெள்ளி
இருக்கவளரும்பிறையாக னிருவர்கூடிப்பலவானுய்த்

தருக்கியிருக்கவெகுபூமி தனக்குமன்னனன்றாகிப்
பெருக்கும்வித்தைதிரபலமே பிரசங்கிக்குந்துரையாவான்.

(இ - ள்.) புதன் உச்சமும், இரண்டா மிடத்தில் சுக்கிரனும், வளரும் பிறைச் சந்திரனும், குருவும் கூடிப் பலமா யிருக்கவும் வெகு பூமிக்கு அரசனாய் வித்தியா சாமர்த்தியனாய் பிரசங்கிக்குந் துரையு மாவான், எ - று.

துரையாஞ்சனிக்குஞ்சுக்கிரர்க்கு நடுவேசோமன்றானிருந்தால்
உரையாயனபாயோகமிதிற் பலன்கணீதியுள்ளன்போகி [ன்
தரையாண்மன்னர்கைப்பொருளைத் தான்கைக்கொள்வன்குலசிரேட்ட
புரையாசாரபாவன்றானிய வான்புறக்கிராமணியாமே.

(இ - ள்.) சனிக்கும், சுக்கிரனுக்கும் நடுவே சந்திரனிருந்தால் அனபா யோகமாம். அதன் பலன்; நீதியுள்ளவனும், போகியும், பிற அரசர்கள் கைப்பொருள்களைக் கொள்ளுவோனும், குல சிரேஷ்டனும், ஆசாரனும், தானிய முள்ளவனும், கிராமாதிகாரியு மாவனும், எ - று. (293)

வேறு.

உதித்தருளுஞ் சென்மாதிபதிலாபாதி
ஒருமித்தைந்தாமிடத்தி லுகந்துநிற்க
விதித்தருள்வாகனத்தாதி மூன்றாம்வீட்டில்
மேவிடவவ்வீட்டுக்குப் பத்தாமாதி
துதித்தசன்மாதிபனுடனே யைந்தின்மேவத்
தோன்றியிமசேதளவுஞ் சூழ்புவிக்குள்
கதித்ததுரையாய்ச்செங்கோல் செலுத்தியிந்தக்
காசினியெல்லாம்புரப்பன் காணுங்கண்டாய்.

(இ - ள்.) சென்ம லக்கினாதிபதியும், லாபாதிபதியும் கூடி ஐந்தாமிடத்தில் மித்துருவா யிருக்கவும், வாகனாதிபதி மூன்றாம் வீட்டி லிருக்க, அவ்வீட்டுக்குப் பத்தாம் வீட்டோன் சன்மாதிபதியோடு ஐந்தில் மேவினால் இமசேதளவும் சூழ்கின்ற புவிகளுக்கரசனாய் செங்கோல் செலுத்தி உலக மாள்வான், எ - று. (294)

கண்டருளுநீசபங்க ராசயோகம்
காணும்வகைநீசத்தா னத்துவேந்தும்
திண்டிறல்சேர்ந்திடுமம்மனை யுச்சவேந்தும்
திங்கள்கேந்திரந்தன்னிற் சேர்ந்தானாகில்
மண்டியிடுநீசபல னொழிந்துகீர்த்தி
மகாராஜராஜனென வாழ்ந்திடுவன் பூவில்
கொண்டபலர்நீசத்தி லிருந்தாலுமொருகோள்
குறிநீசங்கெடிலெல்லாக் கோளுநன்றாமே.

(இ - ள்.) நீசபங்க ராஜயோகமாவது நீசஸ்தானாதிபதியும் அந்த வீட்டுக்கு உச்சனும், சந்திரகேந்திரத்திலிருந்தால் நீசபலன் நீங்கி கீர்த்தியோடு மகாராஜனென உலகில் வாழ்வன். அநேக கிரகங்கள் நீசத்தி லிருந்தாலும் ஒரு கிரகம் நீசங் கெட்டாலும் எல்லாக்கிரகங்களும் நன்றாகும், எ-று. (295)

வேறு.

கோலேலக் கினமாயந்தக் கோவிற்சுக் கிரனுமேவ
மாலேவெண் மதியமாறு மிடத்தினின் மருவிநிற்கச்
சாலவே குருவுச்சத்திற் றங்கியே மதியைப்பார்க்கில்
சீலமெய்ஞ் ஞானியாகச் செகமெலாம் புரப்பன்றானே.

(இ - ள்.) துலாவே லக்கினமாயிருந்து அதில் சுக்கிரனிருக்கவும், சந்திரன் ஆறுமிடத்திலிருக்கவும், குருவுச்சத்திலிருந்து சந்திரனைப் பார்க்கவுமானல் மெய்ஞ்ஞானியாய் உலகத்தை யாள்வான், எ - று. (296)

வேறு.

தானமெனுமாதுருத் தானத்தானந்தத்
தானத்தி லேயிருக்குந் தகைமைகேளீர்
வானசெவ்வாய்ருசியோ கம்புதன்பத்திரயோகம்
மகிழ்குருவங்கிசயோகஞ் சுக்கிரனேயாகில்
மானமுளமாளுவயோ கஞ்சனிதனக்கே
வருஞ்சகரயோகமென வேவழுத்தலாகும்
ஈனமறவிவர்தம்மி லேயொருவர்நிற்கில்
இதுராசயோகமென வேவியம்பலாமே.

(இ - ள்.) மாதுர்ஸ்தானாதிபதி அந்த ஸ்தானத்திலேயே யிருக்கும் தன்மையைக் கேளீர். அவன் செவ்வாயின் ருசியோகம், புதனுயின் பத்திரயோகம், குருவாயின் அங்கிசயோகம், சுக்கிரனுயின் மாளுவயோகம், சனியாயின் சகரயோகம் என்று சொல்லலாம். இவர்களில் ஒருவர் நின்றாலும் ராஜயோகமென்றே சொல்லலாம், எ - று. (297)

ஆமேடமெருதுசிறு நண்டுகன்னி
ஐந்திடத்துங்கருநாக மமர்ந்துநிற்கில்
பூமேடைதனிற்றுயிலும் ராஜயோகம்
போற்றிடுவர் வேறின்னம் புகலக்கேளாய்
ஏமாறுதேநான்கு கேந்திரத்தும்
இடைவிடாமற்கிரக மிருந்ததாகில்
தேமேவுபர்வதமாம் யோகமாகும்
சீமானுகுவன்ராஜ யோகஞ்செப்பே.

(இ - ள்.) மேடம், இடபம், மகரம், கடகம், கன்னி என்னும் இவ்வைந் திடங்களில் யாதாமொருவிடத்து கருநாகமாகிய இராகு அமர்ந்து நிற்பது மல்லாமல் இன்னமும் கட்டாயமாய் அவ்விராகுக்கு 1-4-7-10-ஆகிய நான்கு கேந்திரங்களிலும் இடைவிடாமல் எந்த கிரகமாவதிருந்தால் பர்வத யோக மாகும். அதனால் பூமேடையில் நித்திரை செய்யும் சீமானாகுவன். அதுவே ராஜயோக மென்றுஞ் சொல்லுக, எ - று. (298)

வேறு.

செப்பிய திரிகோணத்திற் றிரிகோணத் தானத்தாதி
தப்பற வுச்சமாய்த் தலத்துறில் ராஜயோகம்
ஒப்புட னிரவிபக்க மிரண்டினு முயர்கோளுற்றால்
அப்படி யுபயவெண்சா மரையுடை யரசனாமே.

(இ - ள்.) திரிகோணத்தில் அந்த ஸ்தானாதிபதி உச்சமாய் அதிலே யிருந்தால் ராஜயோகமாம். சூரியனுக்கு இருபக்கமும் சுபக்கிரகங்க ளிருந்தால் இருவெண் சாமரமுடைய அரசனாவான், எ - று. (299)

அரசனா மேழிற்செவ்வாய் யாறிற்பன் னொன்றிற்காரி
இரவிபு மூன்றுநான்கி லிராகுவு மிவராரேனும்
பரவியே நிற்பராகிற் பாஸ்கர யோகமென்பாம்
இரவிமுன் பனிபோற்குரூர மிராதென வியம்புமானே.

பெண்மே! குரு எழிலும், செவ்வாய் ஆறிலும், சனி பதினொன்றிலும், மூன்று, நான்கில் சூரியன் இராகு இவர்களில் யாரேனு மிருந்தால், பாஸ்கர யோகமென்று சொல்லி, இவர்களுக்கு சூரியன்முன் பனி போற் குரூர மிராதென்றுஞ் சொல்லுக, எ - று. (300)

எயலக் கினமீனத்தோர்ற் கெழிற்றண்டி னண்டெருத்தில்
நேயமாய்க் கருங்கோளொன்று நின்றிடில் ராஜயோகம்
ஆயலக் கினமேகும்ப மதனிற்பொன் னனுகப்புந்தி
தூயநல் லுச்சமாகத் துரைநல்வாக் கரசாய்ச் சொல்வாய்.

(இ - ள்) மீனலக்கினத்தோர்க்கு மிதுனத்திலும், கடகத்திலும் ரிஷபத்திலும், இராகுவொன்று நின்றால் ராசயோகம், கும்ப லக்கினத்தில் குரு விருக்க புதன் உச்சமாக நல்ல துரையாகி அரசனென்று சொல்லுவாய், எ - று. (301)

சொல்லிய சென்மந்தன்னிற் சோமனுங் குருவுங் கூடி
நல்லதோர் பத்துநாலிற் சுக்கிர னயந்துநிற்க
அல்லலற் றிவரையுச்ச மானதோர் சனியுங்காண
வல்லமை யரசர்க்கொப்பாய் வாழ்வன்மா னிலத்தின்மாதே.

(இ - ள்) பெண்ணே! லக்கினத்தில் சந்திரனும், குருவுங் கூடியிருந்து பத்து, நாலாமிடத்தில் சுக்கிரனிருந்து இவர்களை உச்சனான சனி கண்டால் அரசனுக் கொப்பாக வாழ்வன், எ - று. (302)

மாதேவுடன்மயோகவகை கன்மமன்னனோடு
தானதுடுங்கூடியெந்தத் தலத்தினிலிருந்தபோதும்
ஓதியவொருவர்வீட்டி லொருவர்மாறியிருந்த
போதுமாறாதசெல்வம் பொருந்திடும்ராஜயோகம்.

(இ - ள்.) பெண்ணே! கேள் தன்மவியோகவிதம் கர்மாதிபதியோடு ஒன்பதாமிடத்தானுங் கூடி எந்தவிடத்தி லிருந்தபோதிலும், அன்றி ஒருவர் வீட்டிலொருவர் மாறி மாறி யிருந்தபோதிலும் மாறாத செல்வமிருக்குமாம், ராஜயோகமாம், எ - று. (303)

யோகமாமிலக்கினாதி யிருந்தவீடுடையோனுச்சச்
ஆககேந்திரத்தாற்றாலும் பர்வதயோகமாமே
ஏகமாமனையோன்றானு மிருந்தவங்கிசத்தோன்றானும்
வாகுகேந்திரகோணத்தில் வரின்மன்னர்மன்னனாமே.

(இ - ள்.) இலக்கினாதிபதியிருந்த வீட்டுக்குடையவன் உச்சமாயினும் கேந்திரத்திலிருந்தாலும், பர்வதயோகமாம். லக்கினாதிபதியும், அங்கிசாதிபதியும் கேந்திரகோணத்தி லிருந்தால் இராஜாதி ராஜனாவான், எ - று.

மன்னியசன்மமுன்பின் மனைக்கிறையிருவர்கூடி
பன்னுகேந்திரத்திருக்கிற் பர்வதயோகமென்ப
மின்னனையார்க்குநேயன் வெகுசவுக்கியவான்வேந்தன்
துன்னியகீர்த்தியுள்ளான் றாகாதிபதியுமாவான்.

(இ - ள்.) சன்மலக்கினத்திற்கு முன்பின் வீடுகளுக்கதிபர்கள் சேர்ந்து கேந்திரத்திருந்தால் பர்வதயோகமாம். அதன் பலன், ஸ்திரீலோலனும், சௌக்கியனும், அரசனும், கீர்த்திமானும், தாராதிபதியுமாதலாம், எ - று.

ஆனதோர்பணபரத்தி லடுத்தலக்கினத்திற்சோமன்
தானுறக்கேந்திரத்திற் றமணியன்றானுமேவ
வானவர்க்கரசயோக மதிமகனுச்சமாகக்
கூனவில்லங்கிசத்திற் றோன்றிடிற்செங்கோல்வேந்தாம்.

(இ - ள்.) பணபரத்திலும், லக்கினத்திலும், சந்திரனிருந்து கேந்திரத்தில் குருவிருந்தால் இந்திரயோகமாம், புதன் உச்சமாக, தநுர் அங்கிசத்தி லிருந்தால் அரசனாவான், எ - று. (306)

வேறு

ஆகியமகத்தின் முதற்பதத் திரவிய சுபதிமுதலினிற்செவ்வாய், அந்தமூன்றாங் காலிடத்திற் புந்தியவிட்ட மாந்திரயபாதத்தில், வாகுசேர் சோதியுபய தாளிடத்து மருவிய மந்தனாயிருக்க, வண்சேர் மூலமுதலடிக்கரசன் மருவுரோகணியிருந்தாலும், பாகுசேர்மொழி

யாய் சித்திரை மூன்றும்பாதத்தினுஞ் சுக்கிரனுறையும், பலந்திரபக் காணங்கவாங்கிசையும் பரவியதுவாத சாங்கிசையும், மோகமாந்தி ரிங்கி சாவைங்கிசைராசி முதலிந்தவகைக் கெலாங்காணும், முறையி னிலுதித்தோனரசனுமென்றே மொழிவர் முன்னூலுணர்ந்தவரே

(இ - ள்.) மகத்து முதற்பாதத்தில் சூரியனும், அஸ்வினி முதற்பாதத் தில் அங்காரகனும், அஸ்தம் மூன்றும் பாதத்தில் புதனும், அவிட்டம் மூன் றும் பாதத்திலும், சுவாதிஇரண்டாம் பாதத்திலும், சனியும், மூலமுதற்பாதத் தில் குருவும் ரோகணி இரண்டாம் பாதத்திலும், கற்கண்டையொத்த வினிய சொல்லை யுடையாளே! சித்திரை மூன்றும் பாதத்திலும் சுக்கிரனும் இருக்கவும் திரேகாணம், நவாங்கிசம், துவாதசாங்கிசம், திரிசாங்கிசம், இந்தராசிகளி லிருக்கவும் பிறந்தவன் அரசனுவானென்று வேதமுணர்ந்த பெரியோர் சொல்லுவர், எ - று. (307)

மொழிந்திடுஞ்சிங்கத் தரசனுமிருக்க, முறையினில் வெள்ளிகும் பத்தில், முயன்றுமாலிந்து முச்சமாயிருக்கமுதலிவர் நால்வருமு டைவே, ஒழிந்துறுமுச்சமெய்திட ராஜயோகமாங் கடகராசியினில், ஒண்மதியரசன்கூடவு மரசனொருவனு மேழினிருக்கக், கழித்தவல்ல கத்துளொருவரைக் காணக்கழறுவரி ராஜயோகமதாம், கருதிடு மொருகோளுச்சமாய் மற்றோர்காணுநட் பாட்சியிலிருக்க, வழிந்தி டுங்கருணை வெள்ளிமீனத்தின் மன்னவன்காரி வில்விடத்தில், மதுந் துதற்கன்னி யிடத்தின்மாலிருக்க மன்னனொருவனே.

(இ - ள்.) சொல்லப்படும் சிங்கத்தில் குருவும், கும்பத்தில் சுக்கிரனும் புதன் சந்திரனிவர்கள் உச்சத்திலிருக்கவும், அன்றி இவர்கள் நால்வருமே உச்சமாயினும் இராஜயோகமாம். கடகராசியில் பிரகாசம் பொருந்திய சந் திரனும், குருவும் கூடினும் குருத்தனியே யேழிலிருந்தாலும் மற்றைய வீட் டினருள் ஒருவர்காணவும் இராஜயோகமென்று சொல்வர். ஒரு கிரக முச்ச மாய் மற்றவர்கள் நட்பு ஆட்சிகளிலிருந்து சுக்கிரன் மீனத்திலும், குருவும், சனியும், தநுசிலும், புதன் கன்னியிலுமிருக்கப் பிறந்தவன் அரசனுவான், எ - று. (308)

ஆகுவாகனத்தோனருளினுற் கடகத்தரசனுமிரவி மேஷத்தில், அம்புலிமகன் சுக்கிரனொருத்தேறவரசர்கள் யோகமென்றுரைப்பார், வாருசேர் வெள்ளிலக்கினத்திருக்கமாமதி யுச்சமாயிருக்க, மன்ன வன் கதிரோன் றன்னகத்திருக்க மருவுநல்லரசயோகமதாம், ஏகமா மதிக்காறேழுட னெட்டிலெழிற் புதன்பிருகருகிருக்க, இராஜயோகம தாம் மாம்பலாதேழுவரினிய தன்னகத்துரியன்முன்போல், மோக மால்வெள்ளி யுச்சமாய்த்தநுசின் முனிவிலாசசிகுருவிருக்க, முந்து தேளிடத்தங்காரகனிருக்க மூன்றயோக மென்றுரைப்பார்.

(இ - ள்.) பெருச்சாளி வாகனத்தையுடைய கணபதியின் கிருபையால் கடகத்தில் குருவும், மேஷத்தில் சூரியனும், சந்திரன் குமாரனாகிய புதனும் சுக்கிரனும், ரிஷபத்திலுமிருக்க ராஜயோகமென்று சொல்லுவர். சுக்கிரன் லக்கினத்திலும், சந்திரன் உச்சமாகவும், குருவும் சூரியனும் சுயக்ஷேத்திரத்திலு மிருக்கவும் ராஜயோகமாம். சந்திரனுக்கு ஆறு, எழு, எட்டாமிடங்களில் புதனும், சுக்கிரனுமிருக்கவும் ராசயோகமாம். இராகு கேதுக்கள் தவிர மற்றைய எழுகிரகங்களும் சுயக்ஷேத்திரங்களிலேயே யிருக்கவும், சுக்கிரன் உச்சமாய், தநுசில் சந்திரனும், குருவுமிருந்தாலும், விருச்சிகத்தில் அங்காரகனிருந்தாலும் ராசயோகமென்றே சொல்லுவார், எ - று.

உரைசெறி தருவும் புவிகதிருச்ச முயர்குசன் புந்தியேழிடத்தில், உறைந்திடசநியுஞ் சுறவுறாராஜயோகமுச்சங் கதிர்பெறவும், அரசனுந்தனுசிலுறினு மேஷத்திலம்புலி பொன்புகரிருக்க, அரசயோகமதாமே திலக்கினமாயம்புலி திறைபுகண்டேறப், பாவியவாறுகோளு மம்மதியைப் பார்க்கவந்தியத்தின் மன்னவனும், பாக்கிய தனலாபாதி சந்திரனும் பண்போடுங் கேந்திரத்திருக்கப், பிருகு லாபத்திலாட்சியா யிருக்கப் பிரபலராஜயோகமதாம், பெருகுமால் வெள்ளிசநிபுமேகூடிற் பெறுமுகசவுந்தரமுளனும்.

(இ - ள்.) குரு சந்திரன் சூரியன் இவர்கள் உச்சத்திலும், அங்காரகனும் புதன் எழிலும், சநி மகரத்திலுமிருந்தால் ராசயோகமாம். சூரியன் உச்சமடையும் குரு தநுசிலும், மேஷத்தில் சந்திரனும், குருவும், சுக்கிரனுமிருந்தாலும் ராசயோகமாம். ரிஷபலக்கினமாய்ச் சந்திரன் கடகத்திலும், மற்றைய ஆறு கிரகங்களும் சந்திரனைப் பார்க்கவுமானால் அந்தியத்தில் ராசயோகமாம். பாக்கியம், தனம்,லாபாதிகளும், சந்திரனும் கேந்திரத்திலிருக்க சுக்கிரன் லாபஸ்தானத்தில் ஆட்சியாயிருக்க பிரபலமான ராசயோகமாம். அன்றி புதனும், சுக்கிரனும் சநியும் கூடினால் முகத்தில் சுந்தரமுள்ளவனாவான், எ - று. (310)

உள்ளதோர்கடக லக்கினமாகவுயர் குசன்குரு விருவருமாய், உற்றதோர் மேஷநண்டுக்கேனு முறைந்திடப்பாவரை யொழித்துக், தெள்ளிரையாக வுறைந்திடிற்றீர்க்க சீவியாந்துரகாதிபதியாம், செய்யலக்கினமா றேழுடனெட்டிற் செப்புமித்தலங்களுங்கினிலும், கள்ளமாய்ப்பாவ ரன்றிநல்லோர்கள் காதலித்திடைவிடா திருக்கில், கருதியகாபியோ கமாமிதற்குக்கனபலன் மந்திரியாகி, வள்ளலாய்ச் சேனைத்தலைவராய்க் கலவிமாதர்கள் பலர்க்குநாயகனும் வாலிப முதலாய் வெகுதனம் படைத்து வாழ்வனென்றுரைப்பார் மாதவரே.

(இ - ள்.) லக்கினம் கடகமாக அங்காரகன், குரு இருவர்களும் மேடாதிபதியும், கடகாதிபனும் இவர்களோடுசேர்ந்து பாபக்கிரகங்களோடு சேராமலிருந்தால் தீர்க்காயுசுள்ளவனும். அன்றிக் குதிரைச்சேனைக் கரசனுமாவான். லக்கினம், ஆறு, எழு, எட்டு இவ்விடங்களில் நல்லோர்கள் இடை

விடாதிருந்தால் நாபியோகமாம். இதற்குப் பலன் மந்திரி, வள்ளல், சேனைத் தலைவர்களில் எவ்வனப் பெண்களுக்கும் நாயகனாய் வாலிபமுதல் மிக்க செல்வம் பெற்று வாழ்வனென்று சொல்லுவர் பெரியோர், எ - று. (311)

மாறுகேண்மாலா யோகமம்புலிக்கு மன்னியபத்தினிற் குருவும், வந்துதானிருக்கிற் றனபதியாகிய மருவுசேனைக்கதிபனுமாம், ஐந்தி னிரண்டி லிருவருமைந்திலுபயருங் கூடியேயிருக்கில், உரைப்பர்கத் தரியோக பலன்கருமமொன்றையுமாக வொட்டாது, தீதறவொன்றி னான்கு பத்தேழிற் சேரவொன்பதின் மருமிருக்கில், செப்பிடுமரச கேந்திரயோகந் தெரிபலன் மகம்புரிந்திடுவன்- நீதியாய் தனங்கடேடி வாழ்ந்திருப்பனை யிபிறமர் முதற்பலரும் நேயமாய்த்துதிக்கத் தரிமனுஷனுமாய் திருபர்கொண்டாடவே யிருப்பான்.

(இ - ள்.) பெண்ணே கேள்! சந்திரனுக்குப் பத்தில் குருவிருந்தால் மாலா யோகமாம். இதின் பலன் தனவானாய் சேனாதிபதியுமாவானாம். இரண்டிலும் ஐந்திலும் இருவருமே கூடினால் கத்திரியோகமாம். எக்கருமத் தையு மாகவொட்டாமல் தடை செய்யும். ஒன்று, நான்கு, பத்து, எழில் ஒன்பது பேருமிருந்தால் அரசகேந்திர யோகமாம். இதன் பலன் யாகஞ் செய்தல், நீதியாய்த்தனம் தேடுதல், சுற்றத்தார்களும் அரசரும் புகழ்வாழ் தல் என்பவைகளாம், எ - று. (312)

இருமைசேர்பத்தினான்கி னிற்கிரகமிருந்திடில் விக்கயோகம தாம், திரன்பலன்சூதாடக்கதுதான் றிரிந்தேதாயின்னலாற் கலகமிட் டிடுவன், ஒருமைசேர்சன்மத்தனிலேபாவ ரோரேழிலுக்கமரிருக்க வுதிடுமவை யோகங்கள் பொய்புரைப்பனுமுசிறை வெகுதினமிருப் பன், பருமைசே ருச்சகேந்திரத்தன்னிற் பாவர்கண் மேவியே யிருக் கில், பாவியாங்குரூரமன்னவனுகிப்பார்தனக்கரசனுயிருப்பன், அமை சேரொன்றைந் தொன்பதிற்கிரக மனுகிற்சிங்கடா டவியோகம், அதன்பலன் றீர்க்க வாயுளுண்டாகி யம்புவிதன்னி லுற்றிடுவன்.

(இ - ள்.) பத்தில் நான்கில் கிரகமிருந்தால் விக்கயோகமாம். இதின் பலன் சூது நடத்தல், கலகஞ்செய்தல், துன்பப்படுதலும், சன்மத்தில் பாவ ரும் எழில் சுபருமிருந்தால் அவயோகமாம். இதின் பலன் பொய் பேசுத லும், வெகுநாட்சிறை யிருத்தலுமாம். உச்சகேந்திரங்களில் பாவிகளிருந் தால்பாவி, குரூரமுள்ளவனும், ஒன்று, ஐந்து ஒன்பதாமிடங்களில்கிரகமிருந் தால் சிங்கடா, டவி யோகமாம். இதன் பலன், பூமியில் தீர்க்காயுசோடிருத் தலாம், எ - று. (313)

உற்றமெய் லாயமதிற்கிரகங்க ளுறிவிலேயோகமா முழவன், ஒரு மைநல்லோரொன்றேழினிலிருக்க வுண்மைசேர் வச்சிரயோக, மற்ற தற்பலன் றீர்க்காயுளுங்கீர்த்தி மன்னியகிருபை யுள்ளவனும், மன்ன

வன் சனிசெவ்வாய் கதிர்நால்வர் மருவியமூன்று மிடத்திருக்கப், பெற்றிடு முச்சாங்கிசஞ் சுயாங்கிசங்கள்பெறின் மகாராஜயோகந் தான்; பெருமையிந்நால்வர் சென்மமீதிருக்கப் பிறைதனதகத்து நிற்புவியில், குற்றமிலா மகாராஜன் மெய்யிற் குறைவற மறைந்திருக்க, கோமெனாருநால்வர் மதிதனைக்காணக் கொற்றவனுமெனக்கூறாய்.

(இ - ள்.) சரீரம் லாபம் இவைகளில் கிரகமிருந்தால் இலையோகமாம். உழவனும், சுபர், ஒன்று எழிலிருந்தால் வச்சிரயோகமாம். தீர்க்காயுளும், கீர்த்திமானுமாதலும், குரு, சனி, அங்காரகன், சூரியனிவர்கள் மூன்றி லிருந்தாலும், உச்சாங்கிசம் சுயாங்கிசம் பெற்றாலும், மகா ராஜயோகமாம். இந்நால்வரும் சன்மத்திலிருந்து சந்திரன் தன் வீட்டிலிருந்தால் குற்றமற்ற ராசனும், வளர்பிறைச் சந்திரனிருந்தாலும் மேல் நான் கிரகங்கள் அவனைப் பார்த்தாலும் அரசனுமாவான் என்று சொல்லுக, எ - று. (314)

கூறுமிமதிசே யுச்சமாய்ச்சன்மந் நுலவு மின்மிதுன மேற்பாரில், கொற்றவன்சென்மத் திங்கொடுசனியுங் குசனுமேகூட வில்லதனில், ஏறிடக்கதிர்மே ஷத்துறமன்று மிமையக்கமுன் புராதனபூமி, இழந்து போய்விடுவ னிடபலக்கினமா யிதிற்பிறை சசிகுருவெய்யோன், பேருடனிருக்கில் ராஜயோகமதாம் பின்னுமேகன்னிலக் கினமாய்ப், பிறைமகனுச்ச மாகநாலிடத்திற் பிருகுசந்திரன்குருவிருக்க, வீறுடனைந்தா மிடத்தினிற்சனிசேய் மேவியேயிருவரு மிக்க, வெற்றிநற் குணங்க ளுள்ளமன்னவனு மேதினிநீதியாய்ப் புரப்பன்.

(இ - ள்.) சந்திராங்காரர்கள் உச்சம், சன்மம், தநுசு, மிதுன மிவை களிலானால் கொற்றவனும், சென்மத்தில் சந்திரனோடு சனியும் அங்காரக னும் கூடி தநுசில் ஏறவும், சூரியன் மேடத்துறவும், அரசனும், புராதன பூமியை யிழப்பவனும், ரிஷபலக்கினமாய் அதில் சந்திரன், சனி, குரு, சூரி யன் இவர்களிருந்தால் ராஜயோகமும், கன்னிலக்கினமாய் புதன் உச்சமாயும் நான்கில் சுக்கிரன், சந்திரன், குரு இவர்களும், ஐந்தில் சனி அங்காரகர்களு மிருந்தால் மேதினியை நீதியோடாளும் வெற்றியுள்ள அரசனுமாவான், எ - று. (315)

புரக்குமேகன்னி லக்கினமதனிற் புந்தியும்பத்தினிற் புகரும், பொன்பிறைமூவர் கூடியேயிருக்கப் பூபதியாகியு மிருப்பன், பரக்கு மெய்சிங்க மாயதிற்செவ்வாய் பரிந்துலவேழிடந் தன்னில், பணிமதி யாச னிருக்கவேதனுசிற் பானுவின்புத்திரன் மேவ, இரக்கமாய் மைந்தர் தானுமில்லாம லிப்புவிபுரக்குமன் னவனும், எண்ணியபத் திற் சநிபதிஜென்றி லெழிற்சனி லக்கினத்தரசன், வருக்கமாயிரண் டிற் புதன்குசனிருக்க வாகனந்திரவிய மருவ, மாநிலம்புரக்கு நரேந் திரனுவன் வாளயில்போல்விழி யாளே.

(இ - ள்.) கன்னிலக்கினத்தில் புதனும், பத்தில் சுக்கிரனும், குருவும் சந்திரனும் கூடியிருந்தால் பூபதியும், சரீரம் சிங்கமாய் அதில் அங்காரகனும் எழிற் சந்திரனும், குருவும், தநுசில் சனியுமிருந்தால் பிள்ளையில்லாத அரசனும், பத்தில் சந்திரனும், பதினொன்றில் சனியும், லக்கினத்தில் குருவும், இரண்டில் புதனும் அங்காரகனுமிருந்தால் வாகனம் திரவிய முதலியவையுள்ள அரசனுவானென்று வேல்போல் கண்ணாய்! நீ அறிக, எ - று.

வேறு.

நாடியகேந்திரத்தா னத்ததிபனுந்
தேடியமூலத்திரி கோணத்ததிபனும்
கூடியகேந்திர மீங்கொளநின்றிடில்
ஊடியதூரகத் தரசனென் றோதே.

(இ - ள்.) கேந்திரஸ்தானபதியும் மூலத்திரிகோணாதிபதியும் கேந்திரத்தேறினுல் குதிரைக் கரசனென்று சொல்லுக, எ - று. (317)

உரைத்திடலாப மொன்பதுபத்தும்
விரித்திடுமந்த வீட்டினிற்கதிபனைப்
பொருந்தியதுகைப்படி பொருந்துமவ்வீட்டோன்
வருத்தமில்கேந்திரம் வந்துறின்மன்னனும்.

(இ - ள்.) லக்கினதிபதி லாபம், ஒன்பது, பத்தாமிடங்களின் தலைவர்களை பொருந்தி அவ்வீட்டோன் கேந்திரத்திருந்தால் அரசனுவான், எ - று.

மன்னியலக்கினம் வருதேள்சிங்கம்
பன்னியலாப மாமைந்தொன்பதில்
அன்னியமூவரி லாரேனுமிருந்து
மின்னியகேந்திர மேவிடிலரசே.

(இ - ள்) லக்கினம், விருச்சிகம், சிங்கம், லாபம், ஐந்து, ஒன்பது, இவ்விடங்களில் இவ்வீடுகளுக் கன்னியர்களாகிய மூவரில் யாராவதொருவர் இருந்து கேந்திரம் ஏறினுல் அரசனுவான், எ - று. (319)

மேவுமேழொன்பதாம் வீட்டினல்லதிபன்
ஏவுமேழொன்பான் வீட்டினிலிருக்கத்
தாவியசுங்கன் றனுறுநன்மனை
ஆவலாய்நாலே ழாண்டிலரசே.

(இ - ள்.) எழு, ஒன்பதாமிடங்களுக்குத் தலைவர்கள் அவ் வீடுகளிலேயே யிருக்கச் சுக்கிரன்மட்டும் தனது வீட்டிலிருந்தால் இருபத்தெட்டாண்டில் அரசனுவான், எ - று. (320)

ஆண்டினிற்கேந்திரவா னதினல்லோன்
ஊண்டிடும்பாவர்களொன் றுவிட்டொன்றுறில்
தாண்டியசக்கர யோகத்தனபதி
நீண்டியபவபர மாயதினிச்சயமே.

(இ - ள்.) கேந்திராதிபதி நல்லவனும், பாபக்கிரகங்கள் ஒன்றுவிட்டொன்று அவனைக்கூடிவந்தால் சக்கிரயோகத் தனபதியாவது பின்வயதிலாகும் எ - று. (321)

வே று.

நிச்சயக்கிரகநான் மனையுற்று நின்றிடிற்கேதார யோகம்
இச்சையன் பைங்கூழ்வழி நடைச் சஞ்சாரனுழி லுபகாரமேசெய்வன்
மெச்சுமோரைந்துவீட்டினிற் கோள்கண்மேவிடிற்பாசயோகம்
விச்சைசேர்சவுக்கியன்றனபதியழகன் வெகுஜனமுள்ளவனாமே.

(இ - ள்.) கிரகங்களெல்லாம் நான்கு வீடுகளில் நிறைந்ததாயின் கேதார யோகமாம். பலன், இன்பனும், உழவனும், நடைக்கஞ்சாதவனும், உபகாரியு மாவன். ஐந்து வீட்டில் நிறைந்தால் பாசகயோகமாம். பலன், சவுக்கியவானும், தனபதியும், அழகுள்ளவனும், வெகு சனமுள்ளவனுமாவான், எ - று. (322)

வே று.

ஆமேகிரகமேழுமனையமர்ந்தால் வீணையோகமினித்
தாமேநிபுணனெழிலுடையன் சப்தகீதப்பிரியமுளன்
தோமினுலேழொன்றிலுறச் சொல்லுமதிகயோகபலன்
மாமேவரசன்பிரதாபிவந்தே யாண்டுநூறிருப்பான்.

(இ - ள்.) கிரகங்களெல்லாம் எழு வீடுகளில் நிறைந்தால் வீணையோகமாகும். பலன்: நிபுணனும், அழகனும், கீதப்பிரியனுமாவான். இவைகள் நான்கு, எழு, ஒன்று இவ்விடங்களில் நிறைந்தால் அதிக யோகமாம். பலன் துரகாதிபதியும், பிரதாபியும், நூறுவயதிருப்பவனுமாவான், எ - று. (323)

இருபத்தினுன்கிற்கோளிருக்கப் பக்ஷியோகபலன்
பொருந்துந்தேசசஞ்சாரம் புகலுஞ்ஞானிகலகமுளன்
வருந்துசசியினிருபுறமும்வரவே நல்லோர்துரியோகம்
திருந்துயோகனயிச்சுவரியன் றேசஜனத்துக்கதிபதியே.

(இ - ள்.) இரண்டு பத்து நான்காமிடங்களிற் கிரகங்களிருக்கப் பட்சி யோகமாம். பலன், தேசசஞ்சாரியும், ஞானியும், கலகக்காரனுமாவான், சந்திரனுக்கு இரண்டு பக்கத்திலும் சுபக்கிரகங்கள் வந்தால் துரியோகமாம். பலன்: யோகனும், ஐஸ்வரியனும், தேசசனங்களுக்கு அதிபதியுமாவான். எ - று. (324)

என்றுமேலொன்றேழ்சுபரிருக்க வினிநால்பத்திற்பாவர்களும்
அன்றியுறில்வச்சிரயோக மாதியந்தத்தைசுவரியம்
நின்றெசூரத்துவமுநிகழும் வயதிற்றனபதியாம்
நன்றேமாறிக்கோள்வரினு நாடுமினியவயோகம்.

(இ - ள்.) லக்கினத்திலும் எழிலும் சுபகிரகங்களும் நான்கிலும் பத்திலும் பாபக்கிரகங்களுமிருக்க, வச்சிரயோகமாம். பலன்: ஆதியிலும் அந்தத்திலும் ஐஸ்வரியமும், சூரத்துவமும் வயதில் தனாதிபதியுமாவான். கிரகங்கள் மாறி மாறி வந்தால் அவயோகமாகும், எ - று. (325)

யோகஞ்சுகமாம்லக்கினத்துக்கொன்றே நல்லோர்முனியிருக்கப்
போகன்றனவான்வாழரசன் பொருந்தும்பின்னேகிரகமுறில்
ஆகுமஸ்வயோகமதாமணி சன்மத்தினிருபுறமும்
தாகமுடனேசுபரிருக்கிற் றானுமரசனெனவருமே.

(இ - ள்.) லக்கினத்திற்கு முன்னால் சுபக்கிரகங்களிருந்தால் சுபயோகமாம். பலன்: போகனும், தனவானும், அரசனுமாவான். லக்கினத்துப் பின்னால் சுபக்கிரகங்களிருந்தால் அஸ்வயோகமாம். அன்றி, சன்மலக்கினத்திற் கிரண்டு பக்கமும் சுபக்கிரகங்களிருந்தால் அரசனாவான்; எ - று.

வருமேசென்மலக்கினாதிவந்து மித்திரன்றன்வீடும்
பொருமேயுச்சமனையிரண்டிற் புகருங்கூடிற்றனவானும்
தருமேசென்மஞ்சிங்கமறு கன்னிற்பரிதிதானிருக்க
அரிவைமனையிற்புதனிருந்தா னனீசவரசனுமாம்.

(இ - ள்.) சென்மலக்கினாதிபதி மித்துருஸ்தானத்திலும், இரண்டில் உச்சஸ்தானத்திலும் சுக்கிரனோடு கூடியிருந்தால் தனவானாவான். சென்மத்திலும், சிங்கத்திலும் சூரியனிருக்கக் கன்னியிற் புதனிருந்தால் நீசவரசனாவான், எ - று. (327)

அரசேமூன்றிலீரைந்திலாறி லிருக்கச்சென்மாதி
பிரசாய்நல்லோர்தனைப்பார்க்கச் செகத்துக்கதிபனாகுமிவன்
சரமாந்துலாத்திற்புகர்மேஷந்தன்னிற் செவ்வாய்கடகங்குரு
பொரவேவிற்கத்தனபதியாய்ப் பொருந்துமரசன்கண்டீரே.

(இ - ள்.) மூன்று, பத்து, ஆறு, இவ்விடங்களில் லக்கினாதிபதி யிருக்கவும், அவனை சுபக்கிரகங்கள் பார்க்கவும் செகத்துக்கதிபனாவான். சரராசியாகிய துலாத்தில் சுக்கிரனும், மேடத்தில் அங்காரகனும், கடகத்தில் குருவுமிருந்தால் செல்வத்தோடு கூடிய அரசனாவான், எ - று. (328)

கண்டரிஷபஞ்சென்மமதாய்க் காணுமதியாந்தானிருக்கக்
கொண்டுபரிதிசிங்கத்திற் கூறுந்தேளிற்குருவிருக்க

மன்றுகும்பச்சனியினுஞ் சார்கால்ராஜயோகபலன்
பண்டையுள்ளபூபதியாய்ப் பாருக்காசாதிக்கிடுவான்.

(இ - ள்.) ரிடபலக்கினம் சென்மமாகவும் அதில் சந்திரனிருக்கவும், சூரியன் சிங்கத்திலும், விருச்சிகத்தில் குருவும் கும்பத்தில் சநியு மிருந்தா லும் ராசயோகமாம். பலன்: புராதன அரசனும் பூமிக்கிறைவு மாவான், எ - று. (329)

திடமாஞ்செனன்மமகரமதாய்ச் செப்புங்காரிதானிருக்க
அடைவேசெவ்வாய்மதிகூடி யான கடகந்தானுறவே
தொடார்சேர்பரிதிசிங்கத்திற் சொல்லுமிதுனம்புந்தியுற
வடிவார்தோலிற்புகரிருக்க வாழுந்துர்க்கத்தரசனிவன்.

(இ - ள்.) சென்ம லக்கினம் மகரமாகவும், அதில் சநியும், அங்காரக னும், சந்திரனும் கூடிக் கடகத்திலும், சூரியன் சிங்கத்திலும், புதன் மிது னத்திலும், துலாவில் சுக்கிரனுமிருந்தால் துர்க்கத்திற் கரசனுவான், எ-று.

இலக்கினசன்மநான்கொன்ப தெல்லாக்கிரகமிருந்திடவே
அவனேசாங்கியயோக மதற்குப்பலன்கள்சவுரியவான்
தவமெய்ஞ்ஞானிபாக்கியவான் றன்னிற்குணவானுமென்றே
நவமாயுரைத்தார்சோதிடத்தோர் நறைறமென்கமலமுகத்திருவே.

(இ - ள்.) லக்கினம் நான்கு ஒன்பதா மிடங்களில் எல்லாக்கிரகங்களு மிருக்கச் சாங்கியயோகமாம். பலன்: சௌரியவானும், தவசியும், மெய்ஞ் ஞானியும், பாக்கியவானும், குணசாலியு மாவானென்று புதுமையாகச் சோதிடர்கள் சொன்னார்கள் பெண்ணே!, எ - று. (331)

திருவேயிரண்டாம்வீடுமுதற் செறியுமனைக்கொன்றொன்றொழிந்து
வரவேகிரகந்தானிருக்க வாழுஞ்சமுத்திரயோகபலன்
பொரவேசேனைக்கதிபதியாய்ப் பொருந்தும்பாரியனேகருளன்
தருபொன்கீர்த்திக்கதிகாரி தனவானரசன்வெகுபிள்ளை.

(இ - ள்.) இரண்டாவது வீடு முதற்கொண்டு இடையே ஒவ்வொருவீடு விட்டுக் கிரகங்களிருந்தால் சமுத்திரயோகமாம். பலன் சேனாதிபதியும், அநேக மனைவிய ருள்ளவனும், பொன்கீர்த்தி இவைகட்கதிகாரியும், தனவா னும், அரசனும், வெகு பிள்ளைகளைப் பெறுவோனுமாவானும், எ-று. (332)

பிள்ளையனுஷமகபடதியின்பின் பாமவிட்டந்தனிற்சேயும்
துள்ளுஞ்செனன்மமோருபத்திற் சூழ்ந்தேபரிதியுறவதனைத்
தெள்ளுமதியங்குருநோக்கிற் செறிமூன்றைந்திற்கிரகமிளா
தள்ளியிருக்கிற்பேரனைப்போற் றனத்துக்கதிபனெனச்சொல்லாய்.

(இ - ள்.) அருடம், அஸ்வினி, அவிட்டம் இவைகளின் கடைப்பாதத்தில் அங்காரகனும், சென்மத்திலும் பத்தா மிடத்திலும் சூரியனு மிருக்க, அவர்களைச் சந்திரனும், குருவும் பார்த்தாலும், மூன்றிலும் ஐந்திலுங் கிரகமில்லா திருந்தாலும் குபேரன் போலும் தனபதியாவான், எ - று. (333)

சொல்லுஞ்சென்ம மைந்ததனிற் றொடர்ந்தேபரிதி தானிருக்க
வெல்லுநான்கேழ்ப்பத்ததனில் விரும்பிச்செவ்வாய் மேவிடினும்
ஒல்லும்லாபம் பன்னிரண்டி லுடனேபலனுய்ப் புகர்மேவ
நல்லவிந்திர யோகமென நவில்வர்தமிழ்நூற்கினியோர்கள்.

(இ - ள்.) லக்கினத்திலும் ஐந்திலும் சூரியனிருக்க, நான்கு ஏழு பத்து இவைகளில் அங்காரகனுமிருந்து, லாபம் பன்னிரண்டு இவைகளில் சுக்கிரன் பலவானு யிருந்தால் இந்திரயோகமென்று தமிழ் நூல்வல்லவர் சொல்லுவர், எ - று. (334)

இனியமகரஞ் சென்மமதா யிருக்கச்செவ்வா யதனிலுச்சம்
தனிலேலகவததின் பன்னிரண்டிற் றணிந்தே புகரும் தானிருக்க
இனமாமிந்து கதிர்கூடி யேழினிற்கப் பிரபலமாய்த்
தனமேதிரளா யார்ச்சித்துச் சம்மானடத்து மானபரன்.

(இ - ள்.) சென்மலக்கினம் மகரமாகவும், அங்காரகன் அதனில் உச்சனுகவும், ஒன்பதிலும் பன்னிரண்டிலும் சுக்கிரன் தனியாயிருந்து சந்திரனும், சூரியனுங்கூடி ஏழிலிருக்க அதிக செல்வமும் கப்பலுடையவனு மாவான், எ - று. (335)

ஆனபரிதி சோமனிவ ரமர்ந்துசுபாங் கிசமேறித்
தானபலவா னுகியிவர் தக்கவியத்தி லடையாமல்
ஆனவுச்ச வாங்கிசையி லமர்ந்தேசநியை மிகநோக்கில்
ஈனமறவே திக்கு பலவியைந் தின்புறுவன் சந்நியாசி.

(இ - ள்.) சூரியன் சந்திரன் இவர்கள் சேர்ந்து சுபாங்கிசத்திலேறிப் பலவானுய்ப் பன்னிரண்டா மிடத்தில் சேராமல் உச்சாங்கிசையிற் சேர்ந்து சநியை முழுபார்வையாகப் பார்த்தால், பல தேசங்களிலுஞ் சஞ்சரிக்கும் சந்நியாசி யாவான், எ - று. (336)

சீலலக்கினுதிபதி செறியுஞ்சுக்கிரன் முனுகி
நாலிற்காரி நின்றமனை நாடிச்சுக்கிரன் முநோக்க
வாலசன்னியாசி யெனமகிழ்ந்தே விதேசசஞ்சாரம்
கோலுங்கொண்டே திரிவனெனக் கூறுங்கணிதவல்லோரே.

(இ - ள்.) லக்கினுதிபதி சுக்கிரனுயிருந்து அவனுக்கு நாலில் சநியிருக்கும் வீட்டைச் சுக்கிரன் பார்த்தால் பால்ய சந்நியாசியாவான். திரிதண்டமேந்தி பலதேச சஞ்சாரஞ் செய்துகொண்டு திரிவான், எ - று. (337)

வல்லோர்சென்மச் செம்பாம்பு வரவேயதற்கேழ் சோமனுற
செல்லுஞ்சோமற் கெட்டதனில்வெய்யோன் சுமத்திரயோகபலன்

சொல்லுங்கிராமபுரந்தானுந் துரையாம்வந்துக்ஷகனும்
நல்லவருஷமிருபதின்மேனடக்கும் யோகமிருமூன்றே.

(இ - ள்.) சென்மத்தில் கேதுவிருக்க அதற்கேழில் சந்திரனிருக்க அவனுக்கெட்டில் சூரியனிருக்க சமத்திரயோகமாம். பலன்: கிராமாதிகாரியும் துரையும், ரட்சகனும், இருபது வயதுக்குமேல் ஆறுவருஷம் யோகத்தை யநுபவிப்பவனு மாவான். எ - று. (338)

நடத்தும்பத்துக்கதிபதியு நான்கிலிருக்கநான்காதி
எடுத்தபத்திலுடனிற்க லக்கினாதியுச்சமுறில்
அடுத்தசரபயோகபல னனேகஞ்சேனைக்கதிபதியாம்
கொடுத்தநாலாதன்மீதிற் கூறும்யோகமேழாண்டே.

(இ - ள்.) பத்தாமிடத்தான் நாலிலிருக்கவும் நாலாமிடத்தான் பத்திவிருக்கவும், லக்கினாதிபதி உச்சமுற்றால் சரபயோகமாம். பலன்: அநேக சேனைக்கதிபதியும், இருபத்து நான்குவயதுக்குமேல் எழுவருஷம் யோகத்தை யநுபவிப்பவனுமாதலாம், எ - று. (339)

ஆண்டுமூவேழதன்மீதி லானசக்கரயோகபலன்
நீண்டசீவனுள்ளளவு நிறைந்தேபத்திற்கருநாகம்
பூண்டபத்தாமிடத்ததிபன் பொருந்துசன்மந்தனிலிருக்க
வேண்டுஞ்சென்மன்பாக்கியத்தில் விளங்கிற்றேசாபதியாவன்.

(இ - ள்.) லக்கினத்திற்குப் பத்தாமிடத்தில் இராகுவும் பத்தாமிடத்தான் சன்மத்திலுமிருந்தால் சக்கரயோகமாம். பலன்: இருபத்தொரு வயதுக்குமேல் ஆயுளுள்ளவரைக்கும் இருக்குமாம். அன்றி சென்மாதிபதி பாக்கியஸ்தானத்திலிருந்தால் தேசாதிபதியுமாவான், எ - று. (340)

ஆவன்பத்தாதிபனிருந்த வங்கிசாதிசென்மத்தோன்
மேவும்பத்தையிருவோரும் விரும்பநாகயோகபலன்
கோவாம்வித்தைதனவானுங் கூறின்வயதுபதினாறின்
பூவுக்கரசாய்மூவாண்டு பொருந்திநடக்கும்தானிதுவே.

(இ - ள்.) பத்தாமிடத்தானிருந்த அங்கிசாதிபதியும் லக்கினாதிபதியும் பத்தாமிடத்தை யிருவோரும் விரும்ப நாகயோகமாம். பலன்: அரசனும் வித்தையும் தனவானுமாவான் வயது பதினாறுக்குமேல் பூமிக்கரசனாய், வருடம் அரசாட்சி செய்வான், எ - று. (341)

இதுவேகுருவுமொன்பதினி லிருக்கவொன்பதினாதிபதி
துதிசேரேழிலிருந்திடவேசோமன் சுபரோடெங்குறினும்
கதிசேர்நாகயோகபலன் கண்டவயதுபதினாறின்
புதிதாய்மூன்றுடளவுமிகப் பொனைஞ்ஞூறுதேடுவனே.

(இ - ள்.) குரு ஒன்பதாமிடத்திலும், ஒன்பதாமிடத்தான் எழிலும், சந்திரன் சுபக்கிரகங்களுடன் சேர்ந்து எங்கேயாயினுமிருந்தால் நாகயோகமாம் பலன்: பதினாறு வயதுக்குமேல் மூன்றுவருடம் வரைக்கும் ஐந்நூறு பொன் தேடுவோனாவான், எ - று. (342)

தேடும்லாபன்றனபாவத் திறல்சேரதிபனுச்சனெனின்
நாடுமைந்தாம்வீட்டாதி நன்னுந்தனத்தைப்பார்த்திடவே
கூடும்பெரியோகபலன் குதிரையானைதேர்சேரும்
ஊடுமாறுதன்மேலே யோங்கும்வருஷநாலளவே.

(இ - ள்.) லாபாதிபதியும் தனாதிபதி ஸ்தானத்திற்குத் தலைவனும் உச்சர்களாயும், ஐந்தாமிடத்தான் தனஸ்தானத்தைப் பார்க்கிலும், பெரியோகமாம். பலன்: ரதகஜதுரகபதாதி சேனைகளோடு முப்பத்தாறுவயதுக்குமேல் நான்கு வருடம் வரைக்கும் ஆளுவான், எ - று. (343)

அளவேயொன்பான்றனிற்புகரு மர்க்கேயொன்பானதிபதி
வளமாமதிக்கேயொன்பதினில் வந்தாற்பதுமயோகபலன்
தளமோடரசர்புடைசூழத் தானும்பாராண்டகத்திலிருந்
துளவாந்தானைம்பதின்மே லோங்கும்வருஷமைந்தளவே.

(இ - ள்.) ஒன்பதாமிடத்தில் சுக்கிரனும், ஒன்பதாமிடத்ததிபன் சந்திரனுக் கொன்பதிலும் வந்தால் பதுமயோகமாம். பலன்: ஐம்பது வயதுக்கு மேல் ஐந்துவருடம் வரைக்கும் தளங்கள் சூழ வீட்டிலிருந்தே உலகமாண்டிருப்பவனாதலாம், எ - று. (344)

ஓங்கும்லக்கினாதிபதி யுற்றவீட்டிற்கதிபதிதான்
பாங்காய்க்கேந்திரந்திரிகோணம் பற்றிமூலத்திரிகோணம்
தாங்குமுச்சனானாலுந் தக்கபுரத்துக்கதிகாரம்
வீங்கும்பர்வமேழைந்தின் மேலொன்பானுமாண்டுளதே.

(இ - ள்.) லக்கினாதிபதியிருக்கின்ற வீட்டுக்குடையவன் கேந்திரம், திரிகோணம், மூலத்திரிகோணம், பெற்று உச்சம் இவ்விடங்களிலானால் முப்பத்தைந்து வயதுக்குமேல் ஒன்பது வருடம்வரைக்கும் ராஜாதிகாரஞ் செய்வன், எ - று. (345)

உளதேலக்கினாதிபதியுற்ற வீட்டுக்குடையோனும்
அளவாமதிவீட்டதிபதியுச்சனாகிச் சோமனுமேலெழிற்
களவேகேந்திரமேறிவரக் காகளயோகந்திரவியவான்
வளவனுகுநாலேழ்க்கேல் வயதுள்ளளவும்ரசவாதி.

(இ - ள்.) லக்கினாதிபதியிருக்கின்றவீட்டுக்குடையவனும் சந்திரன் வீட்டுக்குடையவனும் உச்சர்களாகிய, சந்திரன் நாலிலும், எழிலும், கேந்திரத்திலும், ஏறிவந்தால் காகளயோகமாம் பலன்: திரவியவானுமாவான், இருபத்தெட்டு வயதுக்குமேல் அரசனாகி ஆயுள்வரைக்கும் இரசவாதியாயுமிருப்பன் எ - று. (346)

வாதிரண்டாமைந்தாதி வருமேபாக்கியாதிபனும்
ஓதுஞ்சென்மத்தனிலுற்ற யோங்குமாசன்பார்வையுறில்
ஈதுதாந்திரியோகபல னிவனைவெகுதேசாதிபதி
நீதிநடத்தும்பன்னிருமே னேரும்வயதோராறளவே.

(இ - ள்.) இரண்டு, ஐந்தாதிபர்களும், பாக்கியாதிபனும் சென்மத்தி லிருந்து குருவின் பார்வையைப்பெற்றால் தாந்திரியோகமாம், பன்னிரண்டு வயதுக்குமேல் ஆறு வருடம் வரைக்கும் வெகு தேசாதிபதியாய் நீதி நடத்து பவனாவான், எ - று. (347)

வயதாறெட்டின்மேன்மூன்று வருஷமிருதங்கயோகபலன்
சுபலாபாதியத்துச்சன் சுங்கன்கூடியிருந்தமனை
நபவீட்டுடையோன்பத்தேழு நான்கிலொன்பானமர்ந்திடவே
செயமாயரசர்க்கதிபதியாஞ் செப்புஞானிதனவானே.

(இ - ள்.) லாபஸ்தானத்தில் உச்சனும், சுக்கிரனுங் கூடியிருந்து, அவ் வீட்டுக்குடையவன் பத்து, எழு, நான்கு ஒன்பது இவ்விடங்களிலிருந்தால் நாற்பத்தெட்டு வயதுக்குமேல் மூன்று வருடம் வரைக்கும் மிருதங்க யோக பலனாகிய அரசர்க்கதிபதியாதல், ஞானி, தனவானென விருப்பன், எ - று.

செப்பும்லக்கினவர்க்கேற்ற செறிந்தேயிருக்கச்சென்மாதி
ஒப்புஞ்சுபர்களுடன்கூடி யுறுஞ்சன்மாதிசன்மத்தைத்
தப்பாமுழுநோக்காகவிது சக்கிரயோகஞ்சவுக்கியவான்
அப்பாலைம்பானெட்டின்மே லானவருஷநான்கினிதே.

(இ - ள்.) சென்மாதிலக்கின வர்க்கமேறி சுபக்கிரகங்களுடன் சேர்ந்து சன்ம லக்கினத்தை முழுப்பார்வையாகப் பார்த்தால் சக்கிரயோகமாம். பலன் ஐம்பத்தைந்து வயதுக்குமேல் நான்கு வருடம் வரைக்கும் சவுக்கியமா யிருத்தலாம், எ - று. (349)

இனிதாங்கன்னிசென்மமதா மிரண்டோடொன்பானுதிபதி
தனியேசுங்கனிருந்தங்கி சத்தோனுமரசனுடன்கூடி
மனுவாந்தனபாவத்திருக்க வயதுபதினாறதன்மேலே
நனியார்சீவனுள்ளளவு நடக்குஞ்சாம்ராச்யயோகம்.

(இ - ள்.) சென்மலக்கினம் கன்னியாய் இரண்டு ஒன்பதாமிடத் ததி பர்களும் சுக்கிரனிருந்த அங்கிசத்தோனும் குருவுடன் கூடி இரண்டாம் வீட்டிலிருக்கப் பதினாறு வயதுக்குமேல் உயிருள்ள வரைக்கும் சாம்ராச்சிய யோகம் நடக்கும், எ - று. (350)

யோகமாதியந்தமெனு முயராதிருந்தங்கிசாதிபதி
பாகசென்மத்திரிகோணம் பத்திலிருக்கச்சேயுச்சம்

வாருபெறவேபத்தாதி வந்தேழிருக்கத்துர்க்காதி
யோகமுடனேவனங்களுக்குந் தனியேயரசாய்ப்பொருந்திடுவன்.

(இ - ள்.) லக்கினத் தங்கிசாதிபதி சென்மம் திரிகோணம் பத்து இவ்விடங்களிலிருக்க அங்காரகன் உச்சம்பெற பத்துக்கதிபன் ஏழில்வந்திருக்க ஆத்யந்த யோகமாம். பலன்துர்க்கையாதி தேவதைகளும் வாழத்தக்க வனங்களுக்கு அரசனாயிருப்பன், எ - று. (351)

பொருந்திவெய்யோன்பாக்கியத்திற் புகத்துடனான்காதிபதி
திருந்தியிருக்கப்பத்தாதி சேர்ந்தோரிரண்டேழிலுற
வருத்தாந்துர்க்கத்ததிபதியால் வையமுழுதுமாசாளத்
தெரிந்தேயோகபலனென்று செப்புங்கணிதமாதவனே.

(இ - ள்.) சூரியனானவன் பாக்யஸ்தானத்திற்போக அவனோடு நான்காம் வீட்டோன் சேர்ந்து இருக்க அவனுடன் பத்தாம் வீட்டோன் சேர்ந்து இரண்டிலாவது ஏழிலாவது யிருக்க துர்க்காதிபதியாய் உலக முழுதும் அரசாள்வானென்று கணிதநூல் வல்ல மாதவன் சொல்லுவன், எ - று.

மாதேநான்காமாதிபதி வந்தேயிரண்டாமாதியுடன்
மீதேகூடிப்பாக்கியத்தில் விரைந்தேயிருக்கப்பத்தாதி
போதுமிரண்டிற்பலவானாய்ப் பொருந்தியிருக்கலாபாதி
ஓதும்லக்கினாதிபதி யுச்சங்கோடியிலயிஸ்வரியன்.

(இ - ள்.) பெண்ணே! நான்காம் வீட்டோன் இரண்டாம் வீட்டானோடு கூடிப் பாக்கியஸ்தானத்திலிருக்க பத்தாம் வீட்டோன் இரண்டாமிடத்தில் மிகுந்த பலசாலியாயிருக்க லாபாதிபதியும் லக்கினாதிபதியும் உச்சர்களாயிருக்க ஐஸ்வரியனாவான், எ - று. (353)

சுரவேசென்மந்திரமாகச் சுங்கனிருக்கச்சென்மாதி
வரவேதிரிகோணத்துற்றான் மன்னனாகுஞ்சிலபூமிக்
குமவோன்சேனைக்கதிபதியா மொருமைஞானிதூரகாதி
இரப்போர்தமக்கும்வேதியர்க்கு மீவான்சீவபரியந்தம்.

(இ - ள்.) மகரமே சென்மமாகவும் ஸ்திரத்தில் சுக்கிரனிருக்கவும், சென்மலக்கினாதிபதி திரிகோணத்துற்றால் அரசனாவன். அன்றி, சேனைக்கதிபதியும், ஞானியும், தூரகாதிபதியும், தருமிஷ்டியும், சீவபரியந்தம் இரப்பவர்க்கீவோனுமாவான், எ - று. (354)

அந்தநான்காமிடந்தனக்கு மதிபனுச்சனவ்வீட்டோன்
வந்துமைந்தாபதிபனுடன் மகிழ்வாய்க்கூடப்பாக்யாதி
முந்துஞ்சமரயோகமென மொழியும்பலன்கள்சேனாதி
சொந்தவருஷமைம்பதின்மேற் றுலங்குமரசனாவானே.

(இ - ள்.) நான்காமிடத்தோன் உச்சனாகவும், அந்த உச்சவீட்டோன் ஐந்தாம் வீட்டோனோடுகூடிப் பாக்கியாதிபத்தி லிருந்தால் சமரயோக மென்று சொல்லுவர், அதன் பலன், ஐம்பது வயதுக்குமேல் அரசனுவான், எ - று. (355)

ஆவாரைந்தாமதிபதியு மன்பாம்லாபத்ததிபனும்
போவாரொன்பானறனிலிருக்கப் பொருந்தும்பத்தாமதிபதினிலிருக்கில்
கோவேயாகுஞ்சிவயோகங் குதிரையானைகாரர்தேரும்
மேவும்வெகுதேசாதிபதி விளங்குபரமாயுள்ளவனும்.

(இ - ள்.) ஐந்தாம் வீட்டோனும், லாபாதிபதியும் ஒன்பதாமிடத்தி லிருக்க பத்தாம் வீட்டோன் ஐந்திலிருக்கச் சிவயோகமாம் நால்வகைச் சேனைகளுடனே பூமியை யாளும் அரசனுவான், எ - று. (356)

உள்ளபத்தாமதிபதியு மொன்பானங்கிசந்தானேறி
மெள்ளயிரண்டாமிடத்திலுற விரும்பியொன்பான்றனஞ்சேரில்
கள்ளவிஷ்ணுயோகபலன் கதித்தவரசரடிதொழவே
கொள்ளும்லக்ஷம்பொன்றேடக் குலாவியிருப்பனீரேழ்மேல்.

(இ - ள்.) பத்தாமிடத்தோன் ஒன்பதாமிடத்தோனது அங்கிசத்தேறி இரண்டாமிடத்தி லிருக்க ஒன்பதாமிடத்தோன் இரண்டாம் ஸ்தானத்தைச் சேர்ந்தால் விஷ்ணுயோகமாம். பலன், மேலான அரசர்களெல்லாம் தன் னடி தொழ பதினான்கு வயதுக்குமேல் லட்சம் பொன் சம்பாதித்திருப்பன், எ - று. (357)

மேலாம்பாக்கியகேந்திரத்தின் மேவிக்குருவும்லாபத்திற்
கேலுங்கேந்திரச்சுக்கிரனுங்கிட்டியிருவர்மனைமாறிச்
சாலவிருக்கவயன்யோகந்தனவான் கீர்த்திப்பிரதாபன்
மாலாய்வளரொன்பதின்மேலும் வயதுள்ளமன்னவனும்.

(இ - ள்.) பாக்கியகேந்திரத்தில் குருவும், லாபகேந்திரத்தில் சுக்கிரனு மிருந்து இருவர் வீடுகளிலும், மாறி பரிவர்த்தனமாயிருக்க பிரமயோகமாம், அதன் பலன் தனவானும், கீர்த்திப்பிரதாபனுமாயிருந்து ஒன்பது வயதுக்கு மேல் ஆயுள்வரைக்கும் அரசனுயிருத்தலாம், எ - று. (358)

மன்னுபத்தாதிபனிருந்த வங்கிசாதிபத்தில்
மின்னுமுச்சமாயிருக்க விலக்கினுதிபுடன்கூடச்
சொன்னகவிரியோகபலன் றுரையாங்கீர்த்தியுதாரகுணன்
பொன்னுமணியுமாறுறிற் பொருந்துமாண்டுபன்னிரண்டே.

(இ - ள்.) பத்தாம் வீட்டோனிருந்த அங்கிசாதிபதி பத்திலேயே உச் சமா யிருக்கவும் இலக்கினுதிபதியோடு கூடவும் கவுரியோகமாம். அதன் பலன் முப்பத்தாறு வயதுக்குமேல் பன்னிரண்டு வருடம் வரைக்கும் துரை யும், உதார குணனும், பொன்னுமணியும் உண்டாயிருத்தலாம், எ - று.

ஏயபாக்கியாதிபதியிருந்த வங்கிசையோனொன்ப
தாயவிச்சனைந்நாதி தொடர்ந்தேகூடியுறநோக்கக்
காயலக்ஷிமியோகபலன் கனத்ததுரையாய்த்தனவானாய்ப்
பாயும்பரியும்நாற்பதின்மேற் படைப்பன்பத்தாண்டிவன்பாரில்.

(இ - ள்.) பாக்கியாதிபதியிருந்த அங்கிசத்தோன் ஒன்பதிலும், அவ் வீட்டுக் குச்சன் ஐந்தாம் வீட்டோனுடன் யிருந்தாலும் பார்த்தாலும் லட்சுமி யோகமாம். அதன் பலன், நாற்பது வயதுக்குமேல் பத்து வருடம் வரைக் கும் துரையாய்த் தனவானாய் அரசபுரிவானும், எ - று. (360)

பாரிலாபாதிபனிருந்த வங்கிசாதிலாபத்தில்
ஊருங்கோனுமுச்சமதாய்ப் பாக்கியாதியுடன்கூடப்
பேரும்பாரதியோகபலன் பெரியகண்ணன்சிற்றாணன்
நாரிவெருவாமறுநான்மே னுடும்வயதெட்டினில்யோகம்.

(இ - ள்.) லாபாதிபதி யிருந்த அங்கிசாதிபதி லாபத்திலும், அவ் விடத்ததிபதி உச்சமாய்ப் பாக்கியாதிபதியுடன்கூடச் சரஸ்வதி யோகமாம். அதன் பலன், இருபத்துநான்கு வயதுக்குமேல் எட்டு வருடம் வரைக்கும் பெருங் கண்ணன், சிற்றாணனுகிய இவனுக்கு நல்ல யோகமாம், எ - று. ()

யோகமூன்றுதிலாபாதி யொருமிதசேழுறவேழாதி
வாகுபன்னிரண்டிற்கவரசன் பனிரண்டாதியிவர்
ஏகபாக்கியந்தன்னிலுறவிதுவே கலாநிதியோகபலன்
போகியரசன்மதிமந்திரிபொருந்தும் பதினாறெட்டுளதே.

(இ - ள்.) மூன்றாமிடத்தோனும் லாபஸ்தானாதிபதியும் சேர்ந்து ஏழா மிடத்திலிருக்க ஏழாம் வீட்டோனும் பன்னிரண்டிலுமிருக்க குருவும், பன் னிரண்டாம் வீட்டோனும், முதல் வீட்டினும் பாக்கியஸ்தானத்தி லிருக்க கலாநிதியோகமாம். அதன் பலன் பதினாறு வருடம் அரசன், மந்திரி இப் படிப்பட்ட வாழ்க்கை பொருந்தி யிருப்பதாம், எ - று. (362)

உள்ளசன்மாதிலாபத்திலுறவே யந்தலாபாதி
தள்ளுஞ்சன்மந்தனிலிருக்கத் தனத்தானத்தான்பத்திலுறக்
கொள்ளும்தத்தோனிரண்டுறவே கொண்சன்மந்திரமாக
வள்ளவிந்திரயோகமெனவழுத்தும் பலன்களினிதுரைப்பாம்.

(இ - ள்.) லக்கினாதிபதி லாபத்திலும், லாபாதிபதி லக்கினத்திலும், தனாதிபதி பத்திலும், பத்தாமிடத்தோன் இரண்டிலும், இருந்து சென்மம் ந்திர ராசியானால் இந்திரயோகமாம், எ - று. (363)

உரைப்பாமதுராகல்லசனமுயர்ந்த துர்க்கத்ததிசதிபதியாய்ப்
பரப்புநிரைந்தவெகுபூமிபதியிற் கரசாய்ப்பேரிகையும்

இரைக்குமல்லரிவாத்தியமு மினியதனவான்ஸ்திரீலோலன்
நரைக்குமுன்னையாறுநினல்கும வருடமெட்டாமே.

(இ - ள்.) இதன் பலன் முப்பத்தாறு வயதுக்குமேல் எட்டு வருடம் வரைக்கும் நல்ல வாக்கும், தூர்க்கத்ததிபதியும், வெகு பூமிக்கதிபதியாய் பேரிகை மல்லரி வாத்தியமு மொலிக்க விருப்பவனும், ஸ்திரீ லோலனுமா யிருத்தலாம், எ - று. (364)

ஆமேதேளுமிலக்கினமா யரசன்சுங்கனிருவருறத்
தாமேலாபப்புதனுச்சந் தரிக்குமதனயோகபலன்
காமர்வனிதையிச்சிக்குங் கருணையுள்ளசவுந்தரியன்
தோமின்மனோகரமந்திரியாய்த் துலங்குமிருபான்மேலெட்டே.

(இ - ள்.) விருச்சிகம் லக்கினமாய் குருவும், சுக்கிரனும், அதிற் பொருந்த புதன் லாபமாகிய உச்சத்திலு மிருக்க மதன யோகமாம். அதன் பலன்: இருபது வயதுக்குமேல் எட்டு வருடம் வரைக்கும் அநேக பெண்கள் இச்சிக்கத்தக்க சௌந்தரியனும் குற்றமற்ற மந்திரியுமா யிருப்பதாம், எ-று.

எட்டிவருமபதினைந்தி னிதன்மேல்யோகங்கலாநிதியாம்
மட்டேசென்மஞ்சராங்கிசத்தில் வரவேயோன்பான்செனமமுறத்
தொட்டநான்கோனரசனுடன் றுலங்கவைந்திற்பத்தாதி
ஒட்புருக்கலாபத்தி லோங்குமரசன்வெகுதேசம்

(இ - ள்.) சென்ம லக்கினம் சராங்கிசமாகவும், ஒன்பதாமிடத்தோன் சென்மத்திலும், நான்கா மிடத்தோன் குருவுடன்கூடி ஐந்திலும், பத்துக் குடையவன் லாபத்திலு மிருக்க கலாநிதி யோகமாகும். அதன் பலன் பதினைந்து வயதுக்குமேல் எட்டு வருடம் வரைக்கும் வெகு தேசத்தை யரசாள்வன், எ - று. (366)

தேசக்குருவுக்கொருமூன்றிற் செறிந்தேசுங்கன்றனிருக்க
வாசஞ்சுங்கற்கொன்பதினின் மதிதானுற்வேபத்தாதி
நேசநான்கிலுறத்தனவா னிருபனுகிழுவொன்பான்
போசனெனமேன்மூவாண்டு பொருந்துநகரநாட்டரசே.

(இ - ள்.) குருவுக்கு மூன்று மிடத்தில் சுக்கிரனும், சுக்கிரனுக்கு ஒன்பதில் சந்திரனும், பத்துக்குடையோன் நான்கிலு மிருக்க, இருபத்தேழு வயதுக்குமேல் மூன்று வருடம் வரைக்கும் நகரமாளும் அரசனு யிருப்பன் எ - று. (367)

அரசேலாபமிரண்டொன்பா ளுதியவரவர்தம்மனையிற்
கிரசாயிருக்கமால்யோகஞ் சேனைக்கதிபன்பூபாலன்

பொறேவேகீர்த்திக்கதிபதியும் பூமிக்கரசனமைச்சனுமாய்த்
தரைசேர்முப்பத்தாறின்மே லெட்டுவருஷந்தனஞ்செயனே.

(இ - ள்.) லாபம், இரண்டு, ஒன்பது இவ்விடத்துக்கதிபர்கள் அவ்வவர்கள் வீட்டில் ஆக்ஷியாயிருக்க மால் யோகமாம். அதன் பலன்: சேனுதிபதியும், பூவரசனும், கீர்த்திமானும், மந்திரியுமாய்ப் பின்னர் முப்பத்தாறு வயதுக்குமேல் எட்டு வருடம் வரைக்கும் தனஞ்சயனுய் வாழ்வான், எ - று.

செயமேமேஷஞ்சென்மமதாய்ச் செங்கதிருறவேசனிபத்தில்
தயவாயிருக்கவொன்பதனிற் குருவுமதியுந்தானுறவே
நயமேவிசுவாவசுயோக நடக்குந்தனவான்றேசாதி
கயமுநடத்தும்பதினுன்மேற் கண்டவருடம்பதினைஞ்சே.

(இ - ள்.) ஜன்ம லக்கினம் மேஷமாய் அதில் சூரியனிருக்க, சநிபத்திலும் குருவும் சந்திரனும் ஒன்பதிலுமிருக்க விஸ்வாவசு யோகமாம். அதன் பலன்: தனவான், தேசாதிபதி, இது பதினுன்கு வயதுக்குமேல் பதினைந்து வருடம் வரைக்கும் நடப்பதாம், எ - று. (369)

அஞ்சேபாக்கியாதிபதி யிருந்தவங்கிசாதிபதி
துஞ்சாதுச்சமவனுடனே சொல்லுமலக்கினுதியுற
விஞ்சாகாளயோகபல னெல்லார்க்கரசன்ஸ்திரீலோலன்
வஞ்சமறவேகுருபத்தி வழுத்துமாலேழ்பதினெண்ணே.

(இ - ள்.) பாக்கியாதிபனிருந்த அங்கிசாதிபதி உச்சனுடன்கூடி லக்கினுதிபதியோடிருக்க காளயோகமாம். அதன் பலன்: எல்லாருக்கும் அரசனும் ஸ்திரீலோலனும் குருபத்தி யுள்ளவனுமாக நாற்பத்திரண்டு வயதுக்குமேல் பதினெட்டு வருஷம் வரைக்கும் இருப்பதாம், எ - று. (370)

எண்ணும்லக்கினங்கிசையில் பத்தாமிடத்தாதிபனிருக்க
ஒண்ணும்பத்தாமங்கிசையி லுறச்சன்மாதியாசனுடன்
நண்ணுமிவரையவர்பார்க்க நாடுங்கார்முகயோகபலன்
பண்ணுஞ்ஞானிமூவொன்பான் பாரிலெட்டுவித்தையுளன்.

(இ - ள்.) லக்கினத்தங்கிசையில் பத்தாமிடத்தானிருக்க லக்கினுதிபதி பத்தாமங்கிசையி லிருக்கவும், சன்மாதிபதியும் குருவும் ஒருவருக்கொருவர் பார்க்கக் கார்முகயோகமாம். அதன் பலன்: ஞானியாவான் இருபத்தேழு வயதுக்குமேல் (எண்வித வித்தை யுள்ளவனுவான்.) எட்டு வருடம் வரைக்கும் வித்தையை அப்பியசிப்பவனுவான், எ - று. (371)

வித்தைலாபத்ததிபனைந்தின் மேவவைந்தாமாதிபதி
புத்திலாபத்திருந்திடவே புகருநான்கோண்மதியுடனே

பத்தியிருக்கமசபதிபோற் பாரைமுழுதுமரசாள்வன்
உத்தபோகியேழாறில் யோகநடக்கும்பதினாறே.

(இ - ள்.) லாபாதிபதி ஐந்திலும் ஐந்துக்கதிபதி லாபத்திலு மிருந்து சுக்கிரனும் நான்காம் வீட்டுக்குடையவனும், சந்திரனும் கூடி எங்கிருந்தாலும் தேவேந்திரன்போல் உலகத்தை யெல்லாம் அரசாள்வான். யோகியுமாவான். நாற்பத்திரண்டு வயதுக்குமேல் பதினாறு வருஷம் வரைக்கும் நல்ல யோகம் நடக்கும், எ - று. (372)

பதியாமரசன்மதிபுகரும் புரிந்துமூவர்தனத்துறவே
விதியாம்பாக்கியாதிபதி விரும்புநோக்கமுற்றிடவே
கதிர்சேர்யோகஞ்சேதாரி காணும்பராதியானைபரி
துதிசேரைம்பானிரண்டாண்டு தொடங்கியேழும்பிரபலமே.

(இ - ள்.) குரு சந்திரன் சுக்கிரன் இம்மூவரும் இரண்டாம் ஸ்தானத்திலிருந்து பாக்கியாதிபதியின் பார்வையைப் பெற்றால் சூரிய யோகமாம். ஐம்பத்திரண்டு வயதுக்குமேல் ஏழு வருஷம் வரைக்கும் சதுர்வித சேனைகளுடன் பிரபலனாய் அரசாள்பவனாவான், எ - று. (373)

பலமாம்பத்திற்கருநாகம் பத்தாமாதிசனியிருவர்
பலமாய்மூன்றிலுற்றிடவே பகருஞ்சண்டமாருதமாம்
தலமேதோறுந்தன்மங்க டானஞ்செய்புஞ்சாத்திரவான்
உலவியுண்பான்பராக்கிரமன் யோகம்பதினைந்தன்மேலே.

(இ - ள்.) பத்தாமிடத்தில் ராகுவும் பத்தாமிடத்தானும் சனியும், மூன்றிலு மிருந்தால் சண்டமாருத யோகமாம். அதன் பலன்: தலங்கள்தோறும் தருமதானங்கள் செய்பவனும், சாத்திரவாராய்ச்சியுள்ளவனும், உலாவியுண்பவனும் பராக்கிரமசாலியு மாவான். இந்த யோகம் பதினைந்து வயதுக்குமேலுண்டாவதாம், எ - று. (374)

மேலேபாக்கியாதிபதி மேவுமங்கிசநாதன்றான்
ஏலவெநாதாங்கிசையேறி யிருந்தவங்கிசத்தோனேனும்
தூலமந்தவங்கிசையிற் றுலங்குமுச்சனானாலும்
சாலலக்கினாதிகேந்திரத்திற் சுங்கனுடனேதானுறவே.

(இ - ள்.) பாக்கியாதிபதி யிருக்கின்ற அங்கிச வீட்டாதிபன் தன்னுடைய அங்கிசத்திலேறி யிருந்தாலும் அந்த வங்கிசத்தில் உச்சனானாலும் லக்கினாதிபதி சுக்கிரனுடன் உறவாய்க்கூடி கேந்திரத்திருந்தாலும், எ - று.

வேறு.

தானுறும்பலன்கள்பாரி சாதமாந்தனவான்யோகம்
மானனையார்க்குநேயன் மன்னவர்கப்பங்கட்டும்

தேனுநெதன்னிகோடையான் காத்திரிசேயுளனல்லூண்கிர்த்தி
ஆனதோரிருபதின்மே லாயுளின்பரியந்தந்தான்.

(இ - ள்.) அதற்குப் பலன்கள் பரிசாதம்போல் தனவான் யோகமாம். அவன் ஸ்திரீகட்கு நேயனும் இராஜாதிராஜனும் காத்திரி சேயுள்ளவனும் நல்லூண்கிர்த்தி இவைகளும் இருபது வயதுக்குமேல் ஆயுள்பரியர்தம் அனுபவிப்பவனு மாவான், எ - று. (376)

வேறு.

அந்தலாப னுற்றமனைக் கொன்பான திபன் சோமனுடன்
வந்தலாபந்தனிலிருக்க வஞ்சன்மாதி நோக்கமுற
விந்தகேதாரயோகபலன் மேவும்பேரிமல்லாரி
சொந்தகரிமாவிருபதுமூன் றுடன்மேல்வருடமிருபதுமே.

(இ - ள்.) லாபாதிபதி யிருந்த வீட்டுக்கு ஒன்பதாம் வீட்டுக்கதிபன் சந்திரனுடன்கூடி லாபத்திலிருந்து லக்கினாதிபதியின் பார்வையைப் பெற்றால் கேதார யோகமாம். அதன் பலன் இருபத்துமூன்று வயதுக்குமேல் இருபது வருஷம்வரைக்கும் சதுர்வித சேனைகளோடு அரசுபுரிவதாம், எ-று.

துலங்கும்பாக்கியாதிபதி சூழ்ந்தங்கிசாதிபதியுச்சம்
இலங்கியிரண்டி லுற்றிடவே யிரண்டாமாதிபாக்கியத்தில்
பலங்கள்கொடுக்குஞ்சுபயோகம் படிப்பனீதியரசாள்வன
குலங்கள்போற்றுமையென்பான் கூறுமிருபத்தோராண்டே.

(இ - ள்.) பாக்கியாதிபதியானவன் அங்கிசாதிபதியோடு சேர்ந்து உச்சத்திலும் இரண்டாமிடத்திலும், இரண்டாமிடத்தோன் பாக்கியத்திலு மிருந்தால் சுபயோகமாம். அது நாற்பத்தைந்து வயதுக்குமேல் இருபத்தொரு வருஷம் வரைக்கும் படிப்பிலும் நீதி நீதியரசாள்பவனுமா யிருப்பன், எ - று.

ஒன்றேயேழாமாதிபதி யொன்பானிருக்கவொன்பதோன்
நன்றேயேழிற்றாரகையின் ராசிக்கதிபதிபனிவர்களுடன்
ஒன்றியிருக்கச்சரிதாம யோகமரசாஞ்சேனையுளன்
என்றேநீதிமுப்பதின்மே லியங்கும்வயதோவையாறே.

(இ - ள்) ஏழாம்வீட்டுக்குடையோன் ஒன்பதிலும் ஒன்பதுக்குடையோன் ஏழிலும் நட்சத்திர ராசிக்கதிபன் இவர்களுடனும் கூடியிருந்தால் சரிதாமயோகமாம். அதன் பலன் முப்பது வயதுக்குமேல் முப்பது வருடம் வரைக்கும் சேனைகளோடுகூடி நீதிசெலுத்துவோனுவான், எ - று. (379)

ஐயாவிரண்டிற்குருவிருக்க வமர்ந்தேநான்கிற்சுங்கனுறப்
பொய்யாதேழிற்சேய்மதியும் பொருசனிமாதிசுபருடனே

தையா நிருக்கவிதன்பலன்க ளாதிக்காம்பயோகமதாம்
வைடம்புகுந்திர்பத்திரண்டு வருஷமாறுஞ்சவுக்கியமே.

(இ - ள்.) இரண்டா மிடத்தில் குருவும், நான்கில் சுக்கிரனும், எழில் அங்காரகனும் சந்திரனும் லக்கினாதிபதி சுபருடனும் கெடாமலிருந்தால் காம்ப யோகமாம். அதன் பலன் இருபத்திரண்டு வயதுக்குமேல் ஆறுவருஷம் வரைக்கும் வையமரசாண்டு சௌக்கியமா யிருப்பதாம், எ - று. (380)

மேயவைந்தாமதிபனொன்பான் வீட்டிலிருக்கலாபத்தோன்
தாயமதியுமிரண்டிலுறச் சோடசதானம்பண்ணுவனே
ஆயவரசர்சன்மான மதிகம்பெறுவனளயோகம்
காயபலன்களையொன்பான தன்மேன் மூன்றாண்டாங்காணே.

(இ - ள்.) ஐந்தாம் வீட்டுக்குடையோன் ஒன்பதிலும், லாபஸ்தானாதிபதியும், சந்திரனும் இரண்டிலு மிருக்கச் சோடசதானம் செய்வோனும், அரச சன்மானனும், எழிலான் ஙளயோகத்தை நாற்பத்தைந்து வயதுக்கு மேல் மூன்று வருஷம் வரைக்கும் பெறுவான், எ - று. (381)

காணும்லாபாதியநுச்சன் கண்டசுக்கனுடன்கூடி
வேணுஞ்சென்மாதி கேந்திரன் மேவியிவர்களிருந்திடவே
நாணும்பிரபையோகபல னடத்துந்தியாகிவெகுபோகி
தானுவரசன்சேனைதனி மூவைந்தினெட்டாண்டே.

(இ - ள்.) லாபஸ்தானத்திற்கு உச்சனான சுக்கிரனுடன்கூடி லக்கினாதிபதி கேந்திரத்திலேறியிருந்தால் பிரபை யோகமாம். அதன் பலன் பதினைந்து வயதுக்குமேல் எட்டு வருஷம் வரைக்கும் தியாகியும், வெகுபோகியுமாதலாகிய சேனைகளோடு கூடிய அரசனாவான், எ - று. (382)

ஆண்டமதியுங்குருவிருவ ரமர்க்கேகியோன் றிலுற்றிடவே
பூண்டவிரண்டோன்லாபத்திற் பொருந்தியிருக்கச்சென்மாதி
நீண்டசுபர்களுடன்கூடி நிற்கச்சுகபாயோகபலன்
வேண்டும்வருஷநாற்பான்மேல் விளம்புமூன்றாந்தேசாதி.

(இ - ள்.) சந்திரனும் குருவும் லக்கினத்திலிருக்க இரண்டா மிடத்தோன் லாபத்திலிருக்க லக்கினாதிபதி சுபக்கிரகங்களோடு கூடியிருக்க சுகபா யோகமாம். அதன் பலன் நாற்பது வயதுக்குமேல் மூன்றுவருஷம் வரைக்கும் தேசாதிபதியா யிருத்தலாம், எ - று. (383)

சாதிலக்கினாதிபதியிருந்த கிசையோனுடன்சசியும்
ஓதும்வரைப்பத்திடத்தோ னெங்கும்பார்வைநோக்குறவே
வாதயூபயோகபலன் மந்திரிமண்டலாதிபதி
நீதிநடத்தும்பதினொன்றின் னேரும்வருஷமூன்றினுமே.

(இ - ள்.) லக்கினாதிபதியிருந்த அங்கிசத்தவனோடு சந்திரனும், இவருக்குப் பத்தா மிடத்தோனும் இவரைப் பார்க்கவும் யூபயோகமாம். அதன் பலன்: பதினொரு வயதுக்குமேல் மூன்று வருஷம் வரைக்கும் மந்திரியும் மண்டலாதிபதியுமா யிருத்தலாம், எ - று. (384)

இனிதாம்லக்கினத்ததிப னிருந்தங்கிசாதிதிரிகோணம்
மனிவாயுற்றேறகுருசுங்கன் வரவேயிவர்கடாமிருக்க
நனியார்பத்திற்சனியுச்ச மாகிற்றூமயோகபலன்
தனியேபத்தொன்பான்மேலே தரணியாள்வனுண்டொன்பான்.

(இ - ள்.) லக்கினாதிபதி இருந்த அங்கிசத்தவன் திரிகோணத்திலிருந்து குரு சுக்கிரனிவர்கள் லாபஸ்தானத்தி லிருக்கவும், பத்தில் சனியும் உச்சமா வானால் தூமயோகமாம். அதன் பலன்: பத்தொன்பது வயதுக்குமேல் ஒன்பது வருஷம் வரைக்கும் உலகமாளுதலாம், எ - று. (385)

ஆறுநமைந்தாமதிபதிதா னைந்தேழொன்பானமர்ந்திடவே
தாறுமரசன்மாதி தானுங்கூடியங்குறினும்
கீளுஞ்சோமனொன்பதனி னிற்கக்கதிரோனுச்சமெனக்
கேளுங்காந்தர்வயோகமெனக் கிடைக்கும்பலன்களுரைத்திடுமே.

(இ - ள்.) ஐந்தாம் வீட்டோன் ஐந்து ஏழு ஒன்பது இவ்விடங்களிலிருந்து குருவும், லக்கினாதி பதியும் சேர்ந்து அங்கே யிருந்தாலும் சந்திரன் ஒன்பதிலும், சூரியன் உச்சனாகவு மிருந்தால் காந்தர்வ யோகமாம். இதன் பலன்கள் சொல்லு மிடத்து, எ - று. (386)

உரைக்கும்பலவானபிரசித்த னொக்கும்புத்தியுள்ளவனும்
தரைக்குமரசனுபரணந் தானும்வெகுவாய்ப்பூண்டிடுவன்
துரைக்கும்புத்திசொல்லிடுவன் சுகந்தகீதப்பிரியனென
விரைக்குமறுபத்தாறதன்மேல் விளங்குவருடமெட்டுளதே.

(இ - ள்.) பிரசித்தவானும் பலவானும் புத்தி சாலியும் அரசனும் ஆபரணாலங்கிருதனும் யாவருக்கும் புத்தி சொல்பவனும், சுகந்த வஸ்துக்களிலும் சங்கீதத்திலும் பிரிய முள்ளவனுமாய் அறுபத்தாறு வயதுக்குமேல் எட்டு வருஷம் வரைக்கும் அனுபவிப்பவனாவான், எ - று. (387)

உளதேபத்தாமதிபதிதா னுற்றவங்கிசத்தோன்பத்தில்
அளவேசுங்கனுடன்கூட வானராசிக்கதிபதிதான்
கலவாயிருந்தங்கிசநாதன் காணுமுச்சம்பிரத்திமமாம்
இளகாவரசன்பூபால னீரெட்டதன்மேலெழன்ப.

(இ - ள்.) பத்தாம் வீட்டோனிருக்கும் அங்கிசத்தோன் பத்தாமிடத்திலேயே சுக்கிரனுடன் அவனிருக்கும் ராசிக்கதிபதி மறைந்திருந்து அங்கிச

நாதன் உச்சமானால் பிரத்திமயோகமாம். அதன் பலன் பதினாறு வயதுக்கு மேல் ஏழு வருஷம்வரைக்கும் பூவைப்புரக்கும் அரசனாயிருப்பதாம், எ - று.

பதிசேர்பாக்கியாதிபதி யிருந்தங்கிசாதிபதிநான்கில்
துதிசேர்நிற்கநான்காதி துலங்குகேந்திரமுச்சத்தில்
விதியாநிற்கின்முதியோகம் விளங்குமரசர்சன்மானன்
கதிசேர்சுகவான்பாக்யவான் காணுமிருப்பான்கொற்றவன்மேல்.

(இ - ள்.) பாக்கியாதிபனிருந்த அங்கிசாதிபதி நான்கிலும் நான்காமிடத்தோன் கேந்திரத்திலும் உச்சத்திலுமிருந்தால் முதியோகமாம். அதன் பலன்: அரசசன்மானனும், சுகவானும் பாக்கியவானுமாயிருந்து இருபது வயதுக்குமேல் அரசனாவதாம், எ - று. (389)

தவமாஞ்சன்மத்துச்சனுறத் தரணிசுதனுமுழுநோக்க
நவமாமிடத்தோன்காரியுட னணைப்புலவனிதன்பெயரோ
கவனசண்டயோகபலன் கருணையரசர்மதிமந்திரி
இவனாம்வயதுபன்னிரண்டா மிதன்மேன்மூன்றுந்தனபதியே.

(இ - ள்.) சன்மத்தில் உச்சனிருக்க அவனை அங்காரகன் முழுப் பார்வை பார்க்க ஒன்பதாமிடத்தோன் சனியுடனிருக்கச் சண்டயோகமாம். அதன்பலன்: கருணையுள்ளஅரசனுக்கு மதிமந்திரியாகவிருந்து பன்னிரண்டு வயதுக்குமேல் மூன்று வருஷம் வரைக்கும் தனபதியாயிருப்பதாம், எ - று.

பதிசேரோன்பானதிபதி பண்பாய்மூன்றிலிருந்திடவே
துதிசேரரசன்முழுநோக்கச் சொல்லுங்கானயோகபலன்
அதிசேரூபன்முத்தழகு னுடைபணிதியுள்ளவனும்
கதிசேர்வயதுபதினாறிற் காணுமூன்றின்முகமசிவம்.

(இ - ள்.) ஒன்பதாமிடத்தோன் மூன்றிலிருக்க அவனை குரு முழுப் பார்வை பார்க்க கானயோகமாம். அதன்பலன்: அழகிய ரூபலாவண்ணியனும், ஆடையாபரணங்களு முள்ளவனுமாயிருந்து பதினாறுவயதுக்குமேல் மூன்று வருஷம் வரைக்கும் முகவசிய முண்டாவதாம், எ - று. (391)

வசயமைந்திற்குருவிருக்க வைந்தாமாதிசுபரிருவர்
நசையாய்க்கூடித்தானிருக்க நாடும்பத்திற்சனியுறவே
பொசியுமகிடயோகபலன் புடவிவனத்துக்கதிபதியாம்
முசியும்வருஷமுப்பத்தின்மேன் மூன்றுமெட்டுமேயரசாம்.

(இ - ள்.) ஐந்தாமிடத்திற் குருவும் ஐந்தாமதிபன் இரண்டு சுபக்கிரகங்களுடன் கூடியிருக்கவும் சனிபத்திலுமிருக்க மகிடயோகமாம். அதன்பலன்: பூமிக்கும் வானத்துக்கும் தலைவனுயிருந்து முப்பது வயதுக்குமேல் எட்டு வருஷம் வரைக்கும் அரசாள்வதாம், எ - று. (392)

வேறு.

பனிரெண்டுராசியென்னும பதிலக்கினமாகக்கொண்டு
இனியதாய்தந்தைபுத்திர ரிசைமனையுடன்வந்தோர்கள்
தனியுமாமத்தாயங்க டனலாபவாகனங்கள்
முனிபுப்பாக்கியகர்மங்கண் முதற்பலன்மொழிந்திடுவே.

(இ - ள்.) பன்னிரண்டு ராசிகளையும் அதற்குத் தக்கவாறுரைத்த கிரமப்படி அந்தராசியை முதல் லக்கினமாகக்கொண்டு தாய்தந்தையர் புத்திரர் மனைவி சகோதரர்கள், ஆயுள் பங்காளிகள் தனம் லாபம் வாகனம் பாக்கியம் கர்மம் முதலிய பலன்களைச் சொல்லுவீராக, எ - று. (393)

பாக்கியத்திறைபுங்கர்மத் தாதியும்லக்கினத்தோனும்
தாக்கியேகூடினுந் தயவுடனொன்றிற்கொன்று
நோக்கியகண்ணுற்றாலு நுண்ணியவறிவுகேள்வி
வாக்குகள்செறுத்துக்கோவாய் மண்ணினில்வாழ்வன்கண்டீர்.

(இ - ள்.) பாக்கியஸ்தானத்தானும் தர்மாதிபதியும் லக்கினாதிபதியும் சேர்ந்திருந்தாலும், ஒன்றிற்கொன்று பார்வைபெற்றிருந்தாலும், நுண்ணிய அறிவு நல்லகேள்வி நல்லவசனம் இவைகளையுடைய அரசனாய் இவ்வுலகத்தில் வாழ்பவனாவான், எ - று.
(394)

ஒன்பதற்கொன்பதோனு மொருபத்திற்குப்பத்தோனும்
தன்பதியைந்துமேழுந் தானத்துவீட்டோன்தன்னோ
டன்புடன்லக்கினாதி யனுகிடவலதுநோக்கத்
துன்பமற்றன்றிச்செல்வஞ் சூழ்மன்னவனாவன்சொல்லே.

(இ - ள்.) ஒன்பதிற்கொன்பதனேனும் பத்திற்குப் பத்தாவனேனும் ஐந்து எழு இவ்வீட்டவர்களுடன் கலந்து லக்கினாதிபதியோடு கூடினாலும் அல்லது பார்வையைப் பெற்றாலும் துன்பமற்ற செல்வமிக்க மன்னவனாவான், எ - று.
(395)

ஆறுடனேழுமாதி யவருடன்லக்கினாதி
பேறுடன் கூடினாலும் பெருமையாய்க்க ணுற்றாலும்
வீறுடன்மிக்கசெல்வ மேன்மையாம்பாக்கியங்கள்
சேறுசெய்திருந்துவாழ்வன் செகத்துக்குமன்னனாவன்.

(இ - ள்.) ஆறுஎழு இவ்வீடுகளுக் கதிபர்களோடு லக்கினாதிபதி சேர்ந்தாலும் பார்த்தாலும் மிக்க செல்வமும் மேன்மையும் பாக்கியங்கள் சேர்ந்து செகத்துக்கரசனாய் வாழ்வான், எ - று.
(396)

கேந்திரத்தானத்தாதி திரிகோணத்தோனுங்கூடிச்
சேர்ந்திடவலதொன்றுக்கொன் றிகழவேநோக்கினாலும்

பார்த்தவர் திசைகடன்னில் பூறுமந்திரி யோகங்கள்
சார்ந்திடுமந்தச் சகல பாக்கியமென்றோதே.

(இ - ள்.) கேந்திராதிபதியும் திரிகோணாதிபதியுங் கூடினாலும் அல்லது ஒருவருக்கொருவர் குறைந்தபார்வை பார்த்தாலும் அவர்களுடைய திசைகளில் மந்திரியோகம் சாரும். அன்றிச் சகல பாக்கியமும் சேரும், எ - று. (397)

வாகனாதியுங் கோணாதி னாதியுங்கூடமற்றும்
தாகமாயொன்றுக்கொன்று சார்ந்துடன்பார்ப்பராயின்
ஏகமாய்ப்பதுமத்துற்ற விலக்குமி யோகமென்பர்
போகவான்சகலபாக்கியம் பூணும்பூபாலன்கண்டீர்.

(இ - ள்.) வாகனாதிபதியும் திரிகோணத்ததிபதியும் கூடினாலும் ஒருவருக்கொருவர் பார்த்தாலும் இலட்சுமி யோகமென்று சொல்லுவார்கள். அதன்பலன் போகவானும் சகல பாக்கியங்களும் நிறைந்த அரசனுமாவான், எ - று. (398)

தனபதிபாக்கியத்தோன் லாபத்தோன் சந்திரகேந்திரம்
தனின்மிகவிவர்களாற சார்ந்திடப்பன்னொன்றைந்தும்
வினவியகுருவினாட்டி வீட்டினிற்செல்வமுள்ளன்
புனையிழையாளேலட்சுமி யோகமாய்ப்புகலுவாயே.

(இ - ள்.) புனைந்த ஆபரணமுடையாளே! தனாதிபனும் பாக்கியஸ்தானாதிபனும் லாபாதிபதியும் சந்திரகேந்திரத்திலிருந்து பதினொன்றும் ஐந்தும் குருவின் ஆட்சிவீட்டாயிருந்தால் செல்வமுள்ளவனாவான். லட்சுமியோகமென்று சொல்லுவாய், எ - று. (399)

ரண்டினிற்கதிபன் பாக்கியத் தன்னிலும்லாபந்தன்னில்
கண்டிடாப்பாக்கியாதி தானுறிலாபத்தாதி
ஒன்றொடிடனின்றாலு மூயராஜயோகமென்று
கொண்டகற்கிரகஞ்சேர்ந்தக் கிரகமுற்றிருக்கின்மன்னும்.

(இ - ள்.) இரண்டாமிடத்தோன் பாக்கியத்திலும், லாபஸ்தானத்தில் பாக்கியாதிபதியும், அன்றி லாபாதிபதி கூடவேயிருந்தாலும், ராஜயோகமாம். மூன்று சுபக்கிரகங்கள் ஆட்சியாயிருந்தாலும் அரசனாம், எ - று.

யோகபலன்

முற்றிற்று.

# தரித்திரயோகம்.

## வேறு.

கண்டசன்மலக்கினங்கள் காரிமனையாயதிற்சோமன்
மண்டிருக்கவவன்றனக்கு வளர்பன்னொன்றிலரசனுறக்
கொண்டதரித்திரங்கடகம் குருலக்கினமாயதிற்காரி
மிண்டியிருக்கப்பன்னொன்றில் வேந்தனிருக்கத்தரித்திரமே.

(இ - ள்.) சென்மலக்கினம் சனிவீடாய் அதில் சந்திரனிருக்க அவனுக்கு பதினொன்றில் குருவிருக்கத் தரித்திரனாவான். சென்மலக்கினம் கடகமாய் அதில் சனியிருக்க பதினொன்றில் குருவிருக்கவும் தரித்திரனாவான், எ - று. (401)

மேவுங்குடும்பந்தனிற்பாவர் மெவருமாய்ப்பலன்களன்றியுறப்
பாவக்கிரகந்தான்பார்க்கப் பரவுஞ்சன்மங்குடும்பத்தின்
கோவும்பலன்களற்றிருக்கக் குறைவேயடைந்துதானுண்ணத்
தாவுமன்னங்கிடையாமற் சோம்பித்திரிப்பன்சுகமில்லான்.

(இ - ள்.) குடும்பஸ்தானத்தில் பாபக்கிரகங்கள் பலனற்றிருக்கவும், அன்றிப் பாபக்கிரகங்கள் பார்க்கவும், சன்மத்திலும் குடும்பத்திலும் பலனொன்றுமில்லாதிருக்கவும், வறுமையடைந்து உண்ண அன்னங்கிடைக்காமல் சோம்பித் துக்கியுமாவான், எ - று. (402)

தரித்துஞ்சன்மலக்கினத்துஞ் சசிதானிருந்தலக்கினத்தும்
பரித்துமுபயபாரிசத்தும் பாவரிருக்கத்தரித்திரமாம்
விரித்துமுன்னோர்பாரிசத்தின் மேவிலுடனே தரித்திரமாம்
தெரித்துப்பின்னையுறில்பாலியத்திற்றரித்திரஞ்சேரும்.

(இ - ள்.) சென்மலக்கினத்திலும் சந்திரனிருந்த லக்கினத்திலும் அன்றி அவற்றிற்கு இரண்டு பக்கங்களிலும் பாபக்கிரகங்களிருந்தால் தரித்திரமாம் முன்னே யொருபக்கத்தில் பாபக்கிரகங்களிருந்தால் உடனேயும் பின்னேயிருந்தால் பாலியத்திலும் தரித்திரமுண்டாகும், எ - று. (403)

சேருஞ்சன்மகேந்திரத்திற் றிரிகோணத்திற் குடும்பத்தில்
மேருவியத்திற்பாவர்நிற்கின் மிகவுந்தரித்திரயோகம்
வாருஞ்சன்மலக்கினத்தின் மதியுஞ்சனியுமருவுகினும்
நேருஞ்சன்மந்தனிற்பாவர் நிற்கிற்றரித்திரநிறையும்.

(இ - ள்.) சன்மத்திலும், கேந்திரத்திலும், திரிகோணத்திலும், குடும்பத்திலும், பன்னிரண்டாமிடத்திலும் பாபக்கிரகங்களிருந்தால் தரித்திர

யோகமாம். சென்மலக்கினத்தில் சந்திரனும் சனியுஞ்சேர்ந்திருந்தாலும். பாபக் கிரகங்களிருந்தாலும், நிறைந்த தரித்திரமுண்டாகும், எ - று. (404)

நிறையுமிரண்டாமிடத்திற்கோ ணீங்கமூன்றதாமிடத்தில்
உறையுங்கிரகமுண்டாயி லுதுங்கேமுத்திரயோகம்
குறையும்பலனேனையயங்கைக்கொண்டே யுண்ணுங்குறைவுடையோன்
நறைசேர்குழலாயிரண்டிற்கோ னண்ணிவில்லைநல்குரவே.

(இ - ள்.) இரண்டாமிடத்தில் எந்தக்கிரகமு மில்லாதிருக்க மூன்று மிடத்தில் கிரகங்களிருந்தால் கேமுத்திரயோகமாம். அதன்பலமாவது, பிச்சை யெடுத்துண்பதாம். அன்றி இரண்டாமிடத்திற் கிரகமிருந்தால் அப்படிப்பட்ட தரித்திரம் வருவதில்லை, எ - று. (405)

குரவர்மதிக்குமுன்பின்னுங் குணமாகவேலார் குடியாகாரேல்
வரவான்மதியின்கேந்திரத்தின் மருவிஞலுமிருபுறமும்
உறவோர்காமில்லாதிருந்தா லுண்டாங்கேமுத்திரயோகம்
திரவேற்கண்ணுப்வெகுபாவஞ் செய்தார்க்கிந்தசெயலாமே.

(இ - ள்.) சந்திரனுக்கு முன்னும் பின்னும் சுபக்கிரகங்கள் இராவிட்டால் அன்றிச் சந்திரகேந்திரத்திலிருந்தாலும் இரண்டு பக்கமும் மித்துருக் கிரகங்களில்லாதிருந்தாலும் கேமுத்திர யோகமாம். இப்படிப்பட்ட யோகம் வெகுபாவம் செய்தவர்களுக்கே உண்டாவதாகும், எ - று. (406)

செயலாருடலைச்சனிநோக்கத் திகழ்மேஷத்திற்சேய்மதியும்
இயலாயிருக்கப்பிறந்தவனு மிரந்தே யுண்பனெந்நாளும்
பயிலார்சென்மமெட்டிடத்தைப் பங்குபாதன்பார்த்திடினும்
கயலார்விழியாய்சீர்கேடன் காணுமெனவே கருதிடுமே.

(இ - ள்.) சரீரஸ்தானத்தைச் சனிபார்க்கவும், மேஷராசியில் அங்காரகனும் சந்திரனுமிருக்கவும் பிறந்தவன், எந்நாளும் இரந்துண்பவனே யாவான். அன்றி லக்கினத்தையாவது எட்டாமிடத்தையாவது சனி பார்த்தாலும் ஓ பெண்ணே! சீர்கேடனுவானென்று உணர்தல் வேண்டும், எ - று.

மேலாங்கிரகமெட்டுமொரு வீட்டிலொன்றியிருந்திடவே
சாலுங்கோள்கள்யோகமிது சாற்றுஞானி தரித்திரனும்
மாலாயிரண்டுவீட்டிலுற வண்மைநான்காகையோகங்கள்
நீலாய்மந்தனிட்டுரனில்லா னவனேலச்சையிலான்.

(இ - ள்.) நல்ல கிரகங்கள் எட்டும் ஒரேவீட்டிற் சேர்ந்திருக்க என்ன யோகமென்றால் கோள்கள் யோகமெனப்படும். அதன்பலன்ஞானியாவான். ஆனால் தரித்திரனுவான். அந்த எட்டு கிரகங்களும் நந்நான்காக இரண்டு வீடுகளிலுமிருந்தால் கையோகமுண்டாகும். அதன்பலன் திட்டேரனும் மந்தனும் லச்சை யில்லாதவனுமாவன், எ - று. (408)

ஆனான்மூன்றிராசிதனி லனுக்கிரகமிருந்திடவே
தானேசூலயோகமதாஞ் சரீரந்தன்னிற்காயவடு

மாலைசூலக்கிற்பாதகந்தான் வருமேபிவன்றன்காமத்தால்
லைப்படுக்குந்தரித்திரவா னவான்றருமருந்தின்வசமாம்.

(இ - ள்.) மூன்று வீடுகளிலுமே அந்தக் கிரகங்களெல்லாம் நிறைவி னின்றால் சூலயோகமாம். அதன்பலன் சரீரத்தில் காயவடுவும் குலபாதக முடையவனும் இவன் கையால் ஒருகாசும் உதவாதவனும் தரித்திரனு மாவான், எ - று. (409)

வாசமேழெட்டொன்பதுபத்தின் வருமிருக்கிற்றிரியோகம்
நீசமாயினத்தொழில்புரிவன் சோம்பனீசனடையுடையன்
தசமேலாபமொன்றுபன்னிரண்டிற்கிரகந்தாமுறவே
வசையாயினத்தொழில்புரிந்து மன்னுசெலவுகொஞ்சமதாம்.

(இ - ள்) இந்தக் கிரகங்களெல்லாம் எழு எட்டு ஒன்பது பத்தாமிடங் களிற் கூடியிருந்தால் திரியோகமாகும். அதன்பலன், ஈனத்தொழில் செய் பவனும் சோம்பியும் நீசடக்கையுடையவனுமாவான். பத்தாமிடத்திலும் லாபஸ்தானத்திலும், லக்கினத்திலும், பன்னிரண்டாமிடத்திலும் கிரகங்க ளிருந்தால் ஈனத்தொழில்செய்து அதனால் வயிறாரவுண்ணாது சொற்பதிரவி யம் ஈட்டினவனாவான், எ - று. (410)

தானேசன்மஞ்சசியுறவே தானுங்கேந்திரங்காரியுறில்
ஆமேவ்யத்திற்குருவிருக்கி லையமெடுப்பனெனப்புகல்வர்
தோமேவியமாறெட்டதனிற் றொடர்சன்மாதிதானிருக்கத்
தீமைபுரியுங்கோள்கூடத் தேசமெலாநடந்திடுவனே.

(இ - ள்) லக்கினத்தில் சந்திரனிருந்தாலும் கேந்திரத்தில் சனியிருந் தாலும் பன்னிரண்டாமிடத்தில் குருவிருந்தாலும், பிச்சையெடுப்பானென்று சொல்லுவர். அன்றி பன்னிரண்டு ஆறு எட்டாமிடங்களில் லக்கினாதிபதி யிருந்தால் பாபக்கிரகங்கள் அவனைக்கூடினால் சர்வதேசமுந் திரிபவ னாவான், எ - று. (411)

நடக்குந்தனபாக்கியமெட்டைந்தேனு நல்வீட்டிற்பாவருறக்
கொடுக்கும்வெகுவாய்த்தரித்திரங்கள் கூறுமூன்றுமனையாயின்
கொடுக்குமுக்காலிரண்டிலரை குலவுமொன்றிற்காலாகும்
விடுக்குமிதனிலுறப்பாவர் விரவியிருக்கிற்றரித்திரமே.

(இ - ள்) தனம் பாக்கியம் எட்டு ஐந்தாமிடங்களில் பாபக்கிரகங்க ளிருந்தால் மிக்க தரித்திரமுண்டாகும். இப்படிச் சொல்லப்பட்ட நான்கு வீடுகளில் மூன்றில்மாத்திரமிருந்தால் முக்கால்தரித்திரமும் இரண்டிலிருந் தால் அரைதரித்திரமும் ஒன்றிலிருந்தால் கால்தரித்திரமுமுண்டாகும், எ - று. (412)

மேவுமொன்பானதிபதியைவிட வெட்டாதிபலவானாய்த்
தாவியிருக்கத்தரித்திரமே தபனனீசரக்ஷர்தன்னில்
மேவியிருக்கலாபாதிவிரவத் தரித்திரயோகம்
ஏவும்விழியாய்சோதிடக்கோ ரியம்பும்பலன்களிவையாமே.

(இ - ள்.) ஒன்பதாம் வீட்டோனைவிட எட்டாம்வீட்டான் அதிக பலவானானால் மிக்க தரித்திரயோகமாம். சூரியன் நீசாங்கத்திலிருந்து அவனை லாபாதிபதி கலந்திருக்கவும் தரித்திரயோகமாம். அம்மைப்பொருவும் கண்மடவாய்! சோதிடர்கள் சொல்லும் பலன் இதுவேயாகும், எ - று. (413)

# அங்கவீனம்.

வேறு.

கண்டபன்னிரண்டாம்வீட்டோன் கனத்திரிகோணமேறிக்
கொண்டகேந்திரத்தினிற்க லவனோடுகூடிராகு
அண்டியேநிற்கப்பாவ ரவர்களைப்பார்த்திருக்க
எண்டிசையுலகிலங்க வீனனாயிருப்பனென்னே.

(இ - ள்.) பன்னிரண்டாம் வீட்டுக்குடையவன் திரிகோணத்திலேறிக் கேந்திரத்திலிருக்க அவனோடு ராகுவும் கூடியிருக்க அவர்களைப் பாபக்கிரகங்களும் பார்த்திருந்தால் எட்டுத்திக்குகளுக்கு ளடங்கிய இவ்வுலகத்தில் அங்கவீனனா யிருப்பானென்றுரைக்க, எ - று. (414)

சோமனாறிற்பன்னிரண்டில் றொடர்ந்தேநிற்கவோரிரண்டில்
ஆமேசெவ்வாய்தானுறவே யவரைப்பாவர்மிகநோக்கப்
போமாமங்கவீனமெனப் புகல்சேர்நல்லோர்பார்வையுறில்
தீமையில்லைத்தீர்க்காங்கஞ் செப்பாய்பலனீசிந்தித்தே.

(இ - ள்.) சந்திரனானவன் ஆறிலும் பன்னிரண்டிலும் தொடர்ந்திருக்க இரண்டாமிடத்தில் அங்காரகனிருக்க இவ்விருவரையும் பாபக்கிரகங்கள் முழுப்பார்வையாய்ப் பார்க்கவும் அங்கவீனமேயாகும். ஆயின் சுபக்கிரகங்கள் பார்த்தால் தீர்க்காங்கமாகும் என்று பலன் சொல்லுக, எ - று. (415)

சிந்தைகாரிகுருபரிதி செவ்வாய்ராகுகேந்திரத்தில்
அந்தமுடனேதிரிகோணத் தனுகாதிருக்கப்பலனில்லார்
வந்தாலங்கவீனமுறு மருவும்விதேசசஞ்சாரம்
நொந்தேபுதல்வர்நாசமுறு நொய்யன்மிடியன்கண்டதே.

(இ - ள்.) சனி குரு சூரியன் அங்காரகன் ராகு இவர்கள் கேந்திரத்திலும், திரிகோணத்திலும் சேராதிருந்து அந்த விடங்களில் பலனில்லாதவர்கள் வந்து சேர்ந்தாலும் அங்ஙனமேயாகும். அன்றி தேசசஞ்சாரம் புதல்வர் நாசம் நொய்தல் தரித்திரம் முதலியவை யுண்டாமென் றுணர்வீராக, எ - று. (416)

வேறு.

இந்துவோடசுபர்கூ டிரண்டெய்திற்கள்ளன்
மூன்றிரண்டிற்சேய்மாந்தி முழுப்பாவருறிற்றீயோயன்
அந்தமறப்பொய்யன்பெண்டிர் வியபிசாரியாண்மையில்லான்
சிந்தனைவியபிசாரத்த னிசமிலான்றீயவூணன்.

(இ - ள்.) சந்திரனுடன் பாபக்கிரகங்கள் சேர்ந்து நான்காமிடத்தி லிருந்தால் கள்ளனும் இரண்டாமிடத்தில் அங்காரகன் குளிகனோடு முழுப் பாவரோடு கூடியிருந்தால் கொடிய நோயனும் பொய்யனும் வியபிசாரமனை வியை யுடையவனும் ஆண்மையில்லாதவனும், இவனும் வியபிசார முள்ளவனும் கொடிய ஊணுண்பவனுமாவான், எ - று. (417)

வே று.

விடுமிலக்கின மிதிற்குசனுற
உடனிரண்டிடத் தோனுமாறதிபன்
திடமுடனிவர் சேர்ந்திடிற்சாதகனும்
கொடியபாம்பினை றோதிற்கொப்படும்.

(இ - ள்.) லக்கினத்தில் அங்காரகனிருந்து இரண்டா மாறாமிடத் ததிபதிகள் பலமாய் ஒன்று சேர்ந்திருந்தால் காதறுபடும். இவர்களோடு ராகுவும் சேர்ந்தால் அறுபடுவான், எ - று. (418)

---

# நித்தியபலன்.

வே று.

செங்கதிருறு நக்ஷத்திர முதலாய்த் திங்கணக்ஷத்திரமட்டும்,
சேரவே யெண்ணியிரண்டினிற் பெருக்கித் தெரிந்தவன்சன்ம நாண்
முதலாய்ப், பொங்குமாயற்றை நக்ஷத்திரமளவும் பொருந்திய
தொகையுடன்வாரம், போத மொன்றாகவுங்கூட்டி யொன்பதினிற்
பொற்புடன்கழித்தசேடங்கள், இங்கிவந்தெறிபுமிரவி சந்திரன்சே
யிராகுபொன்சநி புதன்கேது, இனியசுக்கிரனு மகாதிசைப்படியே
யிசைதொகைபாதி நாழிகையாம், அங்கதுநித்திய பலனதுபோல
வறிந்து நித்திய பலனுரைமின.

(இ - ள்.) சூரியனிருக்கும் நட்சத்திரமுதல் சந்திரனிருக்கும் நட்சத்திரம் வரைக்கு மெண்ணிவந்த தொகையை இரண்டாற் பெருக்கி வைத்துக் கொண்டு அத்துடன் அவனுடைய சென்ன நட்சத்திரமுதல் அன்றைய வாரம் வரைக்கு முண்டான நாட்களையும் ஒன்றாகக்கூட்டி ஒன்பதுபேருக்குக் கொடுத்தால் ஈவையே சூரிய சந்திர செவ்வாய் இராகு குரு சனி புதன் கேது சுக்கிரதிசை வரிசைப்படி அவ்வவர் திசைத்தொகைகளின் பாதி நாழிகையாக திசைப்பலன் போலவே நித்தியபலனும் சொல்லுக, எ - று.

வே று.

இரவிராகுபுகரொருமூன் றதாம்
குருமதிரவமாங்கிசன் பன்னிரண்

டொருபுதனைக்காறுஞ்சனிகேதுவெட்
டிறுதிசைக்குறிநாழிகையோதிடே.

(இ - ள்.) சூரியன் ராகு சுக்கிரன் இவர்களுக்கு மும்மூன்று நாழிகை யாகவும், குரு சந்திரன் இவர்களுக்கு ஒன்பதொன்பது நாழிகையாகவும், அங்காரகனுக்கு பன்னிரண்டு நாழிகையாகவும், புதனுக்கு ஐந்து நாழிகை யாகவும், சனி கேது இவர்களுக்கு எட்டெட்டு நாழிகையாகவும் அவ்வவர்கள் திசைகட்கு நித்திய நாழிகை சொல்லுக, எ - று. (420)

---

# துவாதசபாவ பலன்கள்.

## முதலாம் பாவம்.

### இலக்கின பலன்.

ஆடரியேறில்வெய்யோன் மற்றக்கோள்கள்
நாடியேயுபயலக்கினத்திலும் பலமாய்நண்ணில்
கூடியகுழவிரண்டாங் குசனேழிற்கதிரோனெட்டில்
நீடிடுஞ்சரத்தின்மற்றோர் நின்றிடிற்பலன்களில்லை.

(இ - ள்.) மேஷம் சிங்கம் ரிஷபம் இவ்விடங்களில் சூரியனும் மற்றக் கிரகங்கள் உபயராசிகளிலும் பலமாயிருந்தால் இரட்டைப்பிள்ளை பிறக்கு மாம். அங்காரகன் எழிலும் சூரியன் எட்டிலுமிருந்து மற்ற கிரகங்கள் சரராசியி லிருந்தால் பலன்களில்லையாம், எ - று. (421)

சந்திரன்பாவராசிதனிற் குசன்றிரேக்காணத்
துந்திடிற்சசிக்கிரண்டிலுற பன்னிரண்டினல்லோர்
வந்துதானிருக்கிற்பெற்ற மகவுடன்பிறக்கும்பாம்பு
செந்திருமாதேபாம்பாய்ச் செனிக்கினுஞ்செனிக்குந்தானே.

(இ - ள்.) லட்சுமிபோல்வாளே! சந்திரன் பாவராசியிலும் அங்கார கன் திரேக்காணத்திலு மிருந்து அந்தச் சந்திரனுக்கு இரண்டு பன்னிரண் டாமிடங்களில் சுபக்கிரகங்களிருக்கப் பிறக்கும் பிள்ளையுடன் பாம்பும் பிறக்குமாம். அன்றி அந்தப்பிள்ளையே பாம்பாய்ப் பிறந்தாலும் பிறக்கு மாம், எ - று. (422)

நாலிடத்ததிபன்பாக்கியாதிப னிலக்கினத்தில்
சாலவேநல்லோர்பார்க்கத் தானுறில்ராசபூச்சியன்
கோலியசனியொன்றேழிற் குசனுறச்சுங்கனிந்து
மாலிவன்வியத்துணிற்க மருவுவன்றகப்பனூரில்.

(இ - ள்.) நாலாம் வீட்டுக்குடையோன் பாக்கியஸ்தானாதிபதி லக்கி னத்தில் சுபக்கிரகங்களின் பார்வையைப் பெற்றிருந்தால் ராஜ பூஜ்ஜியனா வான். சனி ஒன்றிலும் எழில் அங்காரகனும் சுக்கிரன் சந்திரன் புதன் இவர்கள் பன்னிரண்டிலு மிருக்கப் பிறந்தவன் தகப்பன் ஊரில் வசிப்பான், எ - று. (423)

பண்ணும்லக்கினத்தையிந்து பாராமலிருக்கவிந்து
கன்னியராசி லக்கினஞ்சரராசியாக
மன்னியகுஜன் சராங்கிசம்பெற வுதிக்கானாகில்
தின்னமாய்த்தகப்பன்றேசாந் திரத்திற்றிரிவன்றானே.

(இ - ள்.) லக்கினத்தைச் சந்திரன் பாராமலும் அவனிருப்பது சரராசியாகவு மிருந்து செவ்வாய் சராங்கிசத்தையும் பெற பிறந்திருந்தால் இவன் தகப்பன் தேசாந்திரம் திரிவான், எ - று. (424)

பரிதிக்கிரண்டிற் பாவக்கிரகங்கள்பாவராசி
மருவிடிற்றந்தைக்கே தேசாந் திரத்துறைய மற்றும்பாவர்
உரிமையாம்பாவராசி யுறிற்கதிர்க்கைந்தேழொன்பான்
பெரும்பாவர்நிற்கத்தந்தை சிறையுளான்பரதேயத்தில்.

(இ - ள்.) சூரியனும் இரண்டாமிடத்தில் பாவக்கிரகங்களிருந்து அதுவும் பாவராசியானால் இவன் தந்தை தேசாந்திரியாவான். அன்றி பாபக்கிரகங்கள் பாவராசியிலிருந்து சூரியனுக்கு ஐந்து ஏழு ஒன்பது இவ்விடங்களில் பாபக்கிரகங்களே யிருந்தாலும் இவன் தந்தை அன்னிய தேசத்தில் சிறைப்பட்டிருப்பான், எ - று. (425)

செய்க்குப்பன்னொன்றிலிருந்து சேர்கின்றகுழவிக்கீனம்
ஆக்கியநல்லோர்காணி லவனைமற்றோர்வளர்ப்பர்
விக்கியபாவர்காணில் வியமதாங்குழவியுமே
பாக்கியரிந்துவைக்காணிற் றகப்பன்வாழ்பதியிற்செனனம்.

(இ - ள்.) அங்காரகனுக்கு பதினொன்றில் சந்திரனிருந்தால் குழந்தைக்கு ஈனமாம். அவனைச் சுபக்கிரகங்கள் பார்த்தால் அக்குழந்தையை அந்நியர் வளர்ப்பார்கள், பாபக்கிரகங்கள் பார்த்தால் குழந்தை மரிக்கும் பாக்கியர் சந்திரனைக்கண்டால் அக்குழந்தை தகப்பனூரில் பிறக்கும், எ-று.

நீசத்தானத்தினல்லோர் நின்றுசந்திரனைக்காணில்
பேசுவர்மரத்தின்கீழே பிறந்திடும்பிள்ளையென்றே
பூசல்செய்பாபர்நீசம் பொருந்தியசசியைக்காணில்
ஏசுறுநீசர்வீட்டிற்பிறந்ததே யெனச்சொல்வாரே.

(இ - ள்.) நீசஸ்தானத்தில் சுபக்கிரகங்களிருந்து சந்திரனைக்கண்டால் அப்பிள்ளை மரத்தின்கீழ் பிறக்குமென்று சொல்லுவார்கள். பாபக்கிரகங்கள் நீசம்பெற்ற சந்திரனைக் கண்டால் அக்குழந்தை நீசர் வீட்டிலேயே பிறந்ததென்பர், எ - று. (427

இந்துவுநல்லோர்சரராசியி லிருக்கிற்காண்கில்
பந்தமாமனிதரில்லாப் பதியிலுற்பவிக்கப்பண்ணும்
சந்திரற்கேழிற்காரி தபனனுக்கேழிற்சேயும்
வந்திடத்தந்தைதாய்க்கு வருத்தமுமரிட்டமாமே.

(இ - ள்.) சந்திரனும் சுபக்கிரகங்களும் ஒரேவீட்டி லிருந்து லக்கினத்தைக் கண்டால் யாருமில்லா வூரில் பிறக்கும்படிச் செய்யும், சந்திரனுக்கு ஏழில் சனியும் சூரியனுக்கு ஏழில் அங்காரகனு மிருக்க, தாய் தந்தையர்களுக்கு அரிட்டமுண்டாம், எ - று. (428)

சனிக்கேழிடத்திற்செவ்வாய் தானுறிற்குழவிக்கீனம்
பனிகொளிலக்கினாதி பாவரோடிசைந்தாறெட்டில்
உதமிகுபன்னிரண்டி லுற்றிடில்ரோகவானும்
நலமிசென்மலக்கினாதி பலமிலாதிருக்கில்நோயாம்.

(இ - ள்.) சனிக்கு ஏழில் அங்காரகனிருந்தால் குழந்தைக்கு ஈனமாகும். லக்கினாதிபதி பாபக்கிரகங்களோடு சேர்ந்து ஆறு, எட்டு, பன்னிரண்டா மிடங்களி லிருந்தால் ரோகவானாவன். லக்கினாதிபதி பலமற்றவனாயிருந்தால் நோயுண்டாகும், எ - று. (429)

ஆறுடனிரண்டிடத்தி னதிபனுங்குசனுமூன்றில்
விறடலினக்கினத்தின் மேவிற்காதறுமறுகல்
சிறியசெவியில்ரோகஞ் சேருநற்கணக்கன்வீட்டில்
பேருடன்காரிநிற்கின் புஞ்சனாய்ப்பிறப்பன்காணே.

(இ - ள்.) ஆறு இரண்டா மிடங்களின் தலைவர்களும் அங்காரகனும் மூன்றிலும் லக்கினத்திலு மிருந்தால் காதறுபடும். அப்படி அறுவிட்டால் காது நோயாவதுண்டாகும். புதன் வீட்டில் சனி இருந்தால் பேடியாய்ப் பிறப்பான், எ - று. (430)

புந்திவீட்டினிற்பிறக்கப் புதனாறாமிடத்தினிற்க
அந்தவாறுமிடத்தி னதிபன்லக்கினத்தினிற்க
நிந்தையாமலியுமாவ னில்வுசன்மாதினிற்க
மந்தனும்புதனுங்கூடில் வடிவினிற்குள்ளனாவான்.

(இ - ள்.) புதனுடைய ஆட்சி வீடு லக்கினமாய்ப் பிறந்து அந்த லக்கினாதிபதி ஆறாமிடத்திலும் அவ்வீட்டோன் லக்கினத்திலிருக்க அந்தக் குழந்தை பேடியாவான். அன்றி லக்கினாதிபதியோடு சனியும் புதனும் கூடினால் குள்ளனாவான், எ - று. (431)

வடிவுளதகரிற்றேளின் மங்கலனிருக்கவேதான்
முடவன்லக்கினத்தினிற்க மூன்றினிற்பிருகுமேவ
உடல்சிறுகுள்ளனாவ னுயர்குசனோரையாகில்
அடல்சனிதிரேக்காண மாகிடிற்சிறையிலொன்றும்.

(இ - ள்.) மேஷத்திலும் விருச்சிகத்திலும் அங்காரகனிருக்கவும், சனி லக்கினத்தி லிருக்கவும், மூன்றாமிடத்தில் சுக்கிரனிருக்கவும் பிறந்தவன் மிக்க குள்ளனாவன். அன்றி அது அங்காரகனோரை யாகவும் சனி திரேக்காணத்திலுமானால் அவன் சிறையாளனாவான், எ - று. (432)

வேறு.

ஒன்றேழெட்டோடுவியத்திற் சசிபாவருடனே
 உத்தமர்நோக்கறனிற்கி லுயருங்கேந்திரத்தில்
நன்றிபவியன்றிப்பிறக்குஞ் சேய்குருடுதானே
 நவில்வியமெட்டாறுதி பாபர்களேயாயின்
லென்றியோடெங்கிருக்கி லவன்றுர்ப்பலனேயாவன்
 மேவியசன்மாதிபதி தான்பாவனுகிக்
கொன்னுமுடியோனனுளா லேவியமாறெட்டிற்
 கூடி னல்லமென்றென்றே கூறுவர்பாவலரே.

(இ - ள்.) லக்கினம் எழு, எட்டு, பன்னிரண்டா மிடங்களில் பாபக்கிரகங்களோடு கூடிச் சுபக்கிரகங்களின் பார்வையில்லாமல் சந்திரனிருந்தால் அந்தக் கேந்திரத்தில் பிறக்குங் குழந்தை குருடாகும். பன்னிரண்டு எட்டு, ஆறுமிடங்களி னதிபர்கள் பாபர்களாய் எங்கே யிருந்தாலும் அவன் துர்ப்பலனேயாவான். லக்கினுதிபதியே பாவியாய் பன்னிரண்டு ஆறு எட்டில் இருந்தால் நல்லதென்றே சுக்கிரனருளாலே சொல்லுவர் பெரியோர், எ-று

பாவலர்கள்சன்மத்திலுஞ் சன்மாதி
 பலமின்றிப்பாரிலேநோய் கேந்திரகோணத்
தீவர்களுற்றுங்கோபி யாவன்சென்மத்
 திறைநின்றவீட்டோ னெட்டாறீராறில்
மேவிதுர்ப்பலன்சன்ம கன்மனெட்டோன்
 மிகைச்சனியிந்நால்வர் திசையெய்தும்போது
மேவிடுந்துர்ப்பலர் திசைக்குட்சனிசஞ்சா
 மெய்திடேோவரிட்ட மெனவிளம்புவாரே.

(இ - ள்.) பாபக் கிரகங்கள் சன்மத்திலும் சன்மாதிபதி பலமில்லாமலுமிருந்தால் ரோக முண்டாகும். கேந்திரத்திலும், கோணத்திலும் பாபக்கிரகங்க ளிருந்தால் கோபியாவான். சென்மாதிபதி யிருந்த வீட்டுக்குடையவன் எட்டு, ஆறு, பன்னிரண்டிலிருந்தால் துர்ப்பலன், சன்மன், கர்மன், (பத்தாமிடத்தோன்,) எட்டிடத்தோன், சனி இந்நால்வர் திசைகள் வரும்போதும் துர்ப்பலர் திசைகளில் சனி சஞ்சாரஞ் செய்தாலும் அரிட்டமென்றே சொல்ல வேண்டும், எ - று. (434)

ஆறிற்சென்மாதிபதிக்கு சனிசெவ்வாய்நிற்கில்
 அரிட்டமாகுங்காரி யரவொடுசென்மத்தும்
வீறுசெவ்வாய்நான்கிற் செங்கதிரோனேழின்
 மேவியநாடனிலுடனே வியமதேயாகும்
கூறுசசிக்கிருபாலுந் தீயரேநிற்கில்
 குழவியொடன்னைக் கரிட்டமேகூறலாகும்

சீறுகர்க்கிலர்ரனமாய் மூன்றாறிற்றீயோர்
செம்மையோர்பன்னிரண்டிற் றீதென்பருளோர்.

(இ - ள்.) ஆறில் சூரியனும், அதற்கேழில் சனியும் செவ்வாயுமிருந்தால் அரிட்ட முண்டாகும். சனியும், ராகுவும் சென்மத்திலும், அங்காரகன் நான்கிலும், சூரியன் எழிலும், இருந்தால் உடனே சிலநாளில் மரிக்கும். சந்திரனுக்கு இரண்டு பக்கங்களிலும் பாபக்கிரகங்களேயிருந்தால் குழந்தைக்குந் தாய்க்கு மரிட்டம் சொல்லவேண்டும், கடக லக்கினமாயிருந்து மூன்று ஆறா மிடங்களில் பாபக்கிரகங்களும், பன்னிரண்டில் சுபக்கிரகங்களு மிருந்தாலும் தீமையே யென்று சொல்லுவர் பெரியோர், எ - று. (435)

அருஞ்சன்மத் திலக்கினாதிபதி பாவனாய்வியமாறெட்டில்
மருவின்மெய்தனக்குநன்மை வருஞ்சவுக்கியமுமுண்டாம்
உருவமாமிலக்கினாதிபதி யுத்தமத்ததிபனாகிப்
பெருமைசேரைந்தொன்பானிற் பலனெனவிரைவிற்சொல்வாய்.

(இ - ள்.) சென்மலக்கினாதிபதி பாவியாய் பன்னிரண்டு ஆறு எட்டா மிடங்களிருந்தால் சரீரசுகமும், சவுக்கியமு முண்டாகும் இலக்கினாதிபதி உத்தம ஸ்தானத்திற்குத் தலைவனாய் பெருமைபொருந்திய ஐந்து ஒன்பதா மிடங்களி லிருந்தால் நல்ல பலனுண்டாமென்று சொல்லுவாயாக, எ - று.

வேறு.

விரவியசீதார்சரீரகாரகனும் வெய்யோன்
வியமாறெட்டிற்சனிதன் வீட்டிலுற்றால்
உருவுகுறைந்திடு மங்கத்தூனமாகும்
ஒன்பதுபன்னொன் றிரண்டிலுற்றிட்டாலும்
பரவியதோரரிமேடத் தொன்றினும்மெய்யிற்
பழுதறவேசவுந்தரிய பரனுமாவான்
வரியுலங்குழற்கொவ்வை மதுரச்செவ்வாய்
மட்டுலவுஞ்செங்கமல மலரின்மானே.

(இ - ள்.) சரீரகாரகனாகிய சூரியன் பன்னிரண்டு எட்டாமிடங்களாய், சனியின் வீட்டிலிருந்தால் உறுப்பு குறைந்து அங்கவீனனாவன். அன்றி ஒன்பது, பதினொன்று, இரண்டாமிடங்களி லிருந்தாலும், சிங்கம் மேஷம் இவைகளி லிருந்தாலும் அங்கவீன மில்லாமலே ரூபலாவண்ணியத்துடன் பிறப்பானென்று வண்டு மொய்க்குங் கூந்தலையும் செவ்வாயையு முடைய லட்சுமிபோல்பவளே! நீ அறியக்கடவை, எ - று. (437)

வேறு

இடபமேடநண் டிம்மூன் றிராசியும்
அடரும்லக்கின மாகவுதனுளே

தொடருமாவிடராகுறச் சூழ்ந்திடப்
படருமுத்தமமென்று பகர்வரே.

(இ - ள்.) ரிஷபம், மேஷம், கடகம் இம்மூன்றும் லக்கினமாய் அதில் ராகு இருந்தால் உத்தமமென்று சொல்லுவர், எ - று. (438)

பகருலக்கினமன் பத்தில்ரெண்டினில்
வகையினிற்க வலதுலாபாதியும்
இகலிற்பத்தி ரெண்டிலிருந்திடத்
துகளிருபதிற் றோன்றுஞ்சுகமதே.

(இ - ள்.) லக்கினாதிபதி, பத்து, இரண்டாமிடங்களில் நிற்கவும், அல்லது லாபாதிபதியானவன் பத்து இரண்டாமிடங்களி லிருக்கவும் இருபது வயதில் சுகமுண்டாகும், எ - று. (439)

வேறு.

சுகந்தருஞ்சன்மலக்கின ஞ்சரமாய்த் தோன்றிலாபத்தினாதிபனும்
மிருந்திடுந்திரமேற்பாக்கியாதிபனும் விரும்பியவுபயலக்கினமேல்
உகந்திடுமேழாமதிபதிமூவரு திசை வாதைசெய்விக்கும்
பகர்ந்திடுமூவர்பதியுமிம்மூவர் பற்றியவிடங்களுந்தீதே.

(இ - ள்.) சன்மலக்கினம் சரராசியாயிருந்து லாபாதிபதி திரராசியிலும், பாக்கியாதிபதி உபயராசியிலுமிருந்தால் ஏழாமிடத்தான் இவர்கள் மூவர் திசைகள் வரைக்கும் வாதை செய்விக்கும். ஆகையால் மூவரிடங்களும், இவர்கள் இருக்கிற விடங்களும் தீமையையுடையதே யாகும், எ - று.

தீதுறுஞ்சென்மகாலமிலெட்டிற் செங்கதிர்நிற்கிலேசுரமாம்
கோதருதிங்களுறிற்சலகண்டங் குசனுறிலாயுதபீடை
சோதிசேர்புந்திவியாதிபொன்மிருத்யு சுக்கிரனுற்றரித்திரமாம்
ஓதியசனிதாயர்க்குறுந்தோஷமொருவருநிற்கவொண்ணாதே.

(இ - ள்.) சென்மகாலத்தில் எட்டாமிடத்தில் சூரியனிருந்தால் சுரமும் சந்திரனிருந்தால் சலத்தால் கண்டமும், அங்காரகனிருந்தால் ஆயுதத்தால் பீடையும், புதனிருந்தால் வியாதியும், குருவிருந்தால் மிருத்தியுவும், சுக்கிரனிருந்தால் தரித்திரமும், சனியிருந்தால் தாய்க்குத் தோஷமு முண்டாகும். ஆகையால் அவ் வெட்டாமிடத்தில் யாவரு மிருக்கக்கூடாது ஆனால் எட்டுக்கிறைவனே நின்றால் ஒருவாறு நல்லதே, எ - று. (441)

தேவர்கள்முதசந்திரன்முதலாய்ச் செங்கதிரளவுமட்டெண்ணி
மேவியதொகையைமூன்றினிற்கழித்து மீந்ததொன்றுக்கவன்பிதா
ஏவியதாழ்ச்சியிரண்டதேயாயி னினியதாதைக்கிணையோகம்
பூவுன்மூன்றுறிற்பிதாவினுக்கதிகம் புத்திரற்கென்றறிந்திடுமே.

(இ - ள்.) சந்திரன் முதல் சூரியனிருக்குமிடம் வரைக்கும் வந்த தொகையை யெண்ணி மூன்றாற் பாகித்து கழித்து மிகுந்தது ஒன்றானால் தந்தைக்குத் தாழ்ந்த யோகவானும், இரண்டானால் தகப்பனுக்கு சமயோகமும், மூன்றானால் பிதாவுக்குமேல் அதிக யோகவானென்று சொல்லக்கடவாய், எ - று. (442)

வே று.

ஆறிந் தலக்கினத் தாதிபனுச்சமே
செறிந்து கேந்திரஞ் சேர்ந்துநல்லோருடன்
உறைந்துதூய ருறைமனையுற்றிட
நிறைந்தசீவன் பெறுவனு நிச்சயம்.

(இ - ள்.) லக்கினாதிபதி யுச்சனாயிருந்து கேந்திரத்திலேறி நல்லோர்களோடு சேர்ந்து சுபர்கள் வீட்டிலிருந்தால் நிறைந்த ஆயுள் பெறுவதுண்மை; எ - று. (443)

வே று.

நிச்சயமாய்ச்சன்மாதிபதி திரலக்கினத்தும்
நீடுதிரவங்கிசத்து மவைதான்கேந்திரமாய்
இச்சையுடனிருக்கிலவ னிருந்தலக்கினந்தன்னில்
இனியவொருபலன்பெறுவ னவைசுபாங்கிசமாய்
அச்சமறநிற்கிலவன் சிவபரியந்தம்
ஆபரணத்துடன் கூடியம்புவியில்வாழ்வன்
மெச்சியசன்மாதிபல மறக்கேந்திரத்தில்
மேவிற்கோபியுமாகி வியாதியுமுற்றிடுவன்.

(இ - ள்.) லக்கினாதிபதி திரலக்கினத்திலும், திரவங்கிசத்திலு மிருந்து அவையும் கேந்திரமா யிருந்தால் அவனிருந்த ஸ்தலத்திலேயே அநேகபலன்களைப் பெறுவன். அவைகள் சுபக்கிரகங்களின் அங்கிசமானால் ஆயுள் வரைக்கும் ஆபரணலங்கிர்தனாய் வாழ்வன் லக்கினாதிபதி பலமற்றவனாய் கேந்திரத்திலிருந்தால் கோபம். வியாதியு முறுவான், எ - று. (444)

உற்றிடுஞ்சென்மத்தாதி யீரைந்திலிருக்க
உண்மையுடன்பத்தாதி யுறுபலவினனுமாய்ப்
பற்றிடும்வியமாறெட்டிற் சுபர்நோக்கநிற்கில்
பயில்தத்துபுத்திரனும் பகருவெகுவயதே
வெற்றிகொளும்லக்கினத்தின் மிகுபாவிருக்க
மேவியசன்மாதிபதிமிகுபலவானுக்க
குற்றமுறும்பிணிகொள்வன் சுபர்சன்மங்கண்டால்
குணமாப்பிணிவேறு கொடுமையுஞ்செய்யாதே.

(இ - ள்.) லக்கினாதிபதிபத்திலும், பத்துக்குடையோன் பலவீனப்பட்டுப் பன்னிரண்டு எட்டாமிடங்களில் சுபக்கிரகங்களின் பார்வையைப் பெற்றிருந்தால் மிக்க வயதுள்ள தத்து புத்திரனுவான். லக்கினத்தில் பாபிகளிருக்கவும், லக்கினாதிபதி மிக்க பலவானாகவு மிருந்தால் நோய்க்கோட்படுவான். சுபக்கிரகங்கள் பார்த்தால் அந்நோய் நீங்கி வேறெந்த கொடுமையும் செய்யாது சுகமடைவான், எ - று. (445)

செய்யபுதன்பாவரங் கிசையினின்றாலும்
செறிக்குந்தவுபாயவங் கிசத்தினாலாலும்
ஐயமறவேதிற்கிற் பிள்ளையிரட்டையதாம்
ஆந்தனுவேலக்கினமாய்ப் பிற்பாதியாகில்
உபயவதனின்றவர்சிங் காங்கிசத்திற்றானே
பரிந்துநிற்கப்புதன் சனியப் பதியினைப்பார்க்கத்
துய்யகருக்கொண்டிருந்த பையுடன்கூடத்
தோன்றவெளிவருமுவிதான் றேன்றுந்தானே.

(இ - ள்.) புதன் பாவரங்கிசையி லிருந்தாலும், உபயவங்கிசத்தி லிருந்தாலும் இரட்டைப்பிள்ளை பிறக்கும், தனுவே லக்கினமாயிருந்து அதில் பிற்பாதியானால் அதிலிருந்தவர்கள் சிங்கவங்கிசத்தி லிருந்தாலும், புதனும், சனியும் அவ்வீட்டைப் பார்த்தாலும், கருப்பையோடுகூட குழவி வெளிப்பட்டுவிடும், எ - று. (446)

வேறு.

தோன்றுஞ்சன்மத்திரவிபுதன் வெள்ளியரசன்
தொடர்ந்தெயுற்றிடில்வலப் பக்கத்தின்மறுச்சொல்லே
ஊன்றுசெவ்வாய்திங்கள் சனிக்குலவுமிடப்பக்கத்
துறையுமறுவென்றென்றே யுரைப்பதைக்கேண்மின்
ஏன்றசுடர்க்கதிபனுற்றால் வயிற்றின்மதிசிரத்தில்
இயல்செவ்வாக்கிருப்பிடத்தி லெழிற்புதன்பக்கத்தில்
ஆன்றமறுவரசனுக்கு முகத்தில்வெள்ளிதுடையில்
அருஞ்சனிக்குக்காலிடத்தி லாமறுவாமென்னே.

(இ - ள்.) சன்மலக்கினத்தில் சூரியன் புதன் சுக்கிரன் குரு இவர்களிருந்தால் அச்சாதகனுக்கு வலப்பக்கத்தில் ஒரு மறுவுண்டு. அன்றி அங்காரகன், சந்திரன், சனி இவர்களிருந்தால் இடப்பக்கத்தில் ஒரு மருவுண்டு. அன்றி சூரியனிருந்தால் வயிற்றிலும், சந்திரனிருந்தால் தலையிலும், செவ்வாயிருந்தால் இடுப்பிலும், புதனிருந்தால் பக்கத்திலும், குருவிருந்தால் முகத்திலும், சுக்கிரனிருந்தால் துடையிலும், சனி யிருந்தால் காலிலும் மறுவிருக்கும், எ - று. (447)

மறுவிலாச்செங்கதிர்நின்றி டத்தனுவிற்பிறந்தான்
வார்த்தைப்பிரசண்டனதி சூரனுமாயிருப்பன்

உறுகலையிகன் றனமு மில்லாச்சிங்கத்தில்
உதித்திரவனிராக்கயிலான் மேடத்திரவிதிங்கட்
பிறந்தவன் கண்டத்திமிராய்த் தனக்கிரனார்த்திப்பன்
பிறைவீட்டிலக்கினமாய்க் கதிரிருக்கப்பிறந்த
சிறுவன்விழியுன்னதவான் றிரவியவான்மேலை
சென்மமாய்க்கதிர்நிற்கத் திரவியங்கண்ணிலனே.

(இ - ள்.) தநுசு லக்கினமாய் அதில் சூரியனிருக்கப் பிறந்தவன் பிரசண்ட வார்த்தையாளனும் அதிசூரனுமாயிருப்பன், சிங்கத்தில் சூரியனிருக்கப் பிறந்தவன் வஸ்திர ஈனனும் தரித்திரனுமாவான். மேஷத்தில் சூரியனிருக்கப் பிறந்த இராத்திரியிற் கண்ணில்லாதவனாவான். கர்க்கடகத்தில் சூரியனிருக்கப் பிறந்தவன் கண்டத்திமிராய் அதிக தனமும், அழகிய கண்களையுடையவனுமாவான், துலாம் ஜென்மமாம் அதில் சூரியன் நிற்க திரவியமும் கண்ணுமில்லாதவனுமாவான், எ - று. (448)

வே று.

கன்றூரிடபக்கர்சிங் கங்கண்டசென்மலக்கினமாய்ப்
பன்றூர்சனிசெவ்வாய்கூடி பார்கிற்கொடிரண்டுளதாகும்
தன்றூர்செவ்வாய்கண்பார்வை தான்செங்கொடியோன்றேசுற்றும்
எண்ணூர்சவுரிபார்வைக்கே யிருக்குங்கரியகொடியொன்றே.

(இ - ள்) ரிஷபம், மேஷம், சிங்கம் இவை லக்கினங்களாகில் அதை சனி செவ்வாய் இருவருஞ் சேர்ந்து பார்த்தால் இரண்டு கொடியுண்டாகும் அங்காரகன் பார்த்தால் செங்கொடியாகும், எ - று. (449)

கொடியபாம்பினுடனிரவி கூடியிருக்கிற்கொடிதலையாம்
கெடியசன்மமெட்டாதி கெருக்கில்ரோகசரீரனுமாம்
படியிற்செவ்வாய்சனிசென்மம் பற்றியிருக்கிற்கல்லெரிப்பாம்
உடையவன்றன்விழிதனக்கே யுறக்கமிதியுண்டாமே.

(இ - ள்.) ராகு கேதுகளுடன் சூரியனுங்கூடியிருந்தால் தலையில்கொடியுண்டாகும் லக்கினாதிபதியும், எட்டாமிடத்தரசனும் சேர்ந்தால் ரோகஸ்தனாவான். அங்காரகனும், சனியும் சென்மத்திலிருந்தால் கல்லெரிப்புண்டாகும் அன்றியும் அதன் கண்ணுக்குப்பார்வை குறைவுமுண்டாகும், எ-று.

உண்டாஞ்சன்மந்திரமாயினதிலே சன்மத்தோனுமுறப்
பண்டேசனித்தகிராமத்தின் பதியாயிருப்பனட்டமந்தான்
மிண்டார்திரமாகிச்சனித்த வீட்டின்மரிப்பன்சன்மசரம்
கண்டால்வீதேசசஞ்சாரங் காணுமென்றேகருதிடுமே.

(இ - ள்.) சன்மலக்கினம் ஸ்திரமாயிருந்து அதில் சன்மாதிபனும் இருந்தால் இறந்தவூருக் கரசனாயிருப்பன், லக்கினத்துக்கு எட்டாம்வீடு

ஸ்திரமாயிருந்தால் பிறந்த அவ்வீட்டிலேயே யிறப்பான். சன்மலக்கினம் சரமானால் விதேச சஞ்சாரமுண்டாம், எ - று. (451)

கருதுஞ்சன்மமுபயமதாய்க் கண்டார்சிலநாள்விதேசத்தில்
பரிதிசன்மாதிபனுகிற் பரவுங்கிரியிற்சஞ்சாரம்
சிரோரோகஞ்சற்றுண்டென்பர் செவ்வாய்சன்மாதிபனுகில்
உருவாயுதத்தாலக்கினியா லுறுநோய்காட்டுமுண்மையிதே.

(இ - ள்.) சன்மலக்கினம் உபயராசியானால் சிலநாள் விதேச சஞ்சாரமும் சூரியன் லக்கினுதிபதியாயின் மலையின் சஞ்சாரமும், சிரரோகமும் உண்டென்பார். அன்றி அங்காரகன் சென்மாதிபதியானால் ஆயுதத்தாலும் அக்கினியாலும் ரோயுண்டாவது உண்மையாகும், எ - று.

உண்மைப்புதன்சன்மாதிபனே வுளதுவித்தைக்கணிதமுடன்
வண்மையாபாரத்தொழிலைவரும் பொன்வெள்ளிமனையானல்
பண்மைசுருதியுணர்தனவான் பாங்கிற்சனித்தபதிநீங்கான்
தண்மைபகாரத்தலைவனென்றேசாற்றிடுமே.

(இ - ள்.) புதன் சன்மாதிபதியா யிருந்தால் வித்தை, கணித வியாபாரத் தொழில் இவைகளுண்டாகும். சன்மம் குரு, சுக்கிரனுடைய வீடானால் சுருதியுணர்வோனும், தனவானும், பிறந்த விடத்தைவிட்டு நீங்காதவனும், சுபகாரியத் தலைவனுமாவான், எ - று. (453)

சாற்றுமதிசன்மாதிபனே சரீரகாந்தியுளன்சுகவான்
தேற்றுச்சரக்கைவிற்றுண்பன் னிலவு சன்மத்தைப்பார்க்கில்
போற்றுந்தந்தையருகிருக்கச் சனித்தானென்றேபுகல்வார்கள்
ஆற்றுஞ்சரத்தின்மதியிருக்க வந்தான்றந்தையன்றெனவே.

(இ - ள்.) சந்திரன் சன்மாதிபதியாயிருந்தால் சரீரகாந்தியும், சுகமுள்ளவனும் சரக்கு வியாபாரியுமாவான். அன்றி அச்சந்திரன் சன்மவீட்டைப்பார்க்க தந்தையிருக்கும்போது பிறந்தவனென்றுஞ் சரராசியில்சந்திரனிருந்தால் தகப்பன்பிறந்த அன்றைக்கு வாதனென்றுஞ்சொல்லுவர், எ-று.

எனவும்வெள்ளிபுதனடுவி லிந்துவிருக்கவந்தருகே
வினவிற்றந்தையிருந்திடுவன் வெய்யோன்சரத்தின்மதிபத்தில்
தனதாயிருக்கப்பிதாவிருக்குந் தலத்திற்சனித்தான்றுனென்பர்
தினமார்சனிசென்மத்தேழிற்செவ்வாயேனும்பிதாதேசம்.

(இ - ள்.) சுக்கிரனுக்கும், புதனுக்கும் மத்தியில் சந்திரனிருந்தால் சமீபத்தில் தந்தையிருப்பான். சூரியன் சரராசியிலும் சந்திரன் பத்திலும் இருக்க பிதாவிருந்த விடத்திலேயே சனித்தவனவன் சனிசன்மத்திலும் அங்காரகன் ஏழிலுமிருந்தாலும் தகப்பனூரேயாகும், எ - று. (455)

தேசார்மனி லக்கினமாய்ச் செவ்வாய்ப்பார்க்கச் சனித்தவனும்
மாசார்மக்கரையிற் பிறந்தவ புதக்கய குருஞ்சனிசெவ்வாய்
நேசார்திரிகோணத்தின்மதி நிற்கப்பிறந்தகையனையே
கூசாளன்னை யறிவாளிப்பருதைக் குருநோக்கிற்கைக்கொள்வானே.

(இ - ள்.) மிதுனம், கன்னி, துலாம், கும்பம் என்னும் இலக்கினங்களாய் இவைகளை அங்காரகன் பார்க்கப் பிறந்தவன் மசானக்கரையிற் பிறந்தவனென்றே சொல்லலாம். சனியும், அங்காரகனும் நேசமாய் இவர்கள் திரிகோணத்தில் சந்திரனிருக்கப் பிறந்தவனைத் தாய் எறிய கூசாளாம். அந்தச் சந்திரனைக் குருபார்த்தால் கைக்கொள்வான், எ - று. (457)

கொள்ளும்பாவமதிசங்கமங்கூடச் செவ்வாய்சனியேழில்
மெள்ளவிருக்கிற்குருநோக்க விரும்பியெடுத்தார்வளர்க்கவுய்வன்
தெள்ளும்புதன்பாமபாசன் மதிசேர்ந்துசன்மத்திருந்திடவே
பிள்ளைபிறக்கில்வம்சத்தைக் கெடுப்பனெனவும்பேசுவரே.

(இ - ள்.) பாபச்சந்திரன் சன்மத்தில் சேரவும், அங்காரகனும் சனியும் ஏழிலிருக்கவும், அவர்களைக் குருவும் பார்த்தால் பிறர்வளர்க்க வளர்வன் புதன் ராகு கேது குரு இவர்கள் சந்திரனுடன் சேர்ந்து சன்மத்திலிருக்கப் பிள்ளை பிறந்தால் வமிசத்தைக் கெடுப்பவனுவன், எ - று. (457)

பேசுப்லக்கினஞ்சலக்கினம் பிறங்கத்தூமனிருந்திடவே
வீசும்வாழுள்குறையும்விதி பாதனிருக்கிற்புகழ்நாசம்
மாசில்பரிவேடனறக்கமதி போஞ்சக்கிரசாப னுறின்
மேசின்குலங்கணசிக்குந்து சன்மேனிற்றனம்போமெனப்பேசே.

(இ - ள்.) ஜன்ம லக்கினம் சந்திர லக்கினத்தில் தூமனிருந்தால் ஆயுள் குறையும் விதிபாதனிருந்தால் கீர்த்தி நாசம். பரிவேட னிருந்தால் புத்தி போகும் சக்கிர சாமனிருந்தால் குலங்கள் நசிக்கும். துசனிருந்தால் தனம் நாசம் என்று சொல்லுக, எ - று. (458)

பேசும்லக்கினமீனண்டிற் பிறந்தவர்களுக்கெல்லாம்
பாசமாம்மகாதிசையின் பலன்களைப்பார்க்கும்போது
தேசுறுகரியபாம்பின் றிசைவரிற்பாக்கியங்கள்
தூசுபொன்சோபநற் சுபபலன்பெறுவர்தாமே.

(இ - ள்.) லக்கினம், மீனம், கடகம், இவற்றில் பிறந்தவர்களுக்கெல்லாம் மகாதிசைப் பலன்களைப் பார்க்கும்போது ராகுதிசை வரும்போது நற்பாக்கியங்களையும், வஸ்திரம் பொன் சோபனம் சுபகாரிய நடாத்தல் முதலிய பலன்களைப் பெறுவர், எ - று. (459)

தார்சேறிமகரங்கன்னி தனிற்பிறந்தோர்கட்கெல்லாம்
ர்சேறிமகாதிசையின் பலன்களைப்பார்க்கும்போது

சீர்பெறுகேதுவான திசைவரும்போதுசெல்வம்
ஊர்திசாராசராற் சன்மானமுண்டாங்கன்னேர.

(இ - ள்.) மகரம் கன்னி இவற்றில் பிறந்தவர்களுக்கெல்லாம் மகா திசைப் பலன்களைப் பார்க்கும்போது கேது திசையில் செல்வம், அரசராற் சன்மான முதலியவை யுண்டாகும், எ - று. (460)

வேறு.

பேசுஞ்சன்மசராசி பிரியாச்சரத்திலதிபனும்
பாசஞ்சரத்திலுறத்தோன்றிப் பார்க்கிற்றூலசரீரனுமாம்
வீசுலக்கினஞ்சரமாயவ் வீட்டுக்குடையோன்சரத்திருக்க
தேசம்விட்டுத்தேசஞ்சாரத் திழைத்திரிவனெனச்சொல்வாய்.

(இ - ள்.) சன்மலக்கினம் சரராசியாயிருந்து அதற்கு அதிபனும் சரத்திலேயே யிருந்து லக்கினத்தைப் பார்த்தால் ஸ்தூல சரீர முள்ளவனாவன். லக்கினம் சரமாய் அவ்வீட்டுக்குடையவனும் சரத்திலேயே யிருந்தால் தேச சஞ்சாரஞ் செய்வானென்றே சொல்லுக, எ - று. (461)

முதல்பாவம்
முற்றிற்று.

---

# இரண்டாம்பாவம்.

## நேத்திர பலன்.

எழிற்கண்ணுதிபன்றீக்கோளா யெட்டினிற்சனியோடிந்தும்
பழிகோளாறுமிடத்திற் பானுவேற்பூனைக்கண்ணும்
விழிதன்கோன்பாவனாய் லக்கினனிசைமேவியாறெட்
டொழிவியத்துக்கலோகப்பத் துறுங்குருடாகத்தானே.

(இ - ள்.) நேத்திரஸ்தானதிபதி பாபக்கிரகமாய் எட்டினில் சனியும் சந்திரனுமிருந்து ஆறுமிடத்தில் சூரியனிருந்தால் பூனைக்கண்ணாகும், நேத்திராதிபதி பாவியால் லக்கினாதிபதியைச் சேர்ந்து ஆறு எட்டு பன்னிரண்டா மிடங்களி லிருந்தால் கர்பத்திலேயே கண் குருடாயிருக்கும், கர்ப்பந்தரிக்குங்கால் மாதாவுதரத்தில் மலசல நிறைந்திருந்தால் சனிக்குங் குழந்தை குருடாகும், எ - று. (462)

சுக்கிரனேத்திராதிபதியெனத் தோன்றியெட்டில்
நிற்கவாறில்வெய்யோ னிற்கிற்கண்ணோய்பிற்காலம்
துக்கவேறரிமேஷத்திற் சனிகுசன்றானுற்றாலும்
மிக்கதாமதரத்தான மெழிற்கொடிசுற்றித்தோன்றும்.

(இ - ள்.) சுக்கிரன் நேத்திராதிபதியாயிருந்து எட்டாமிடத்தி லிருக்கவும், ஆறாமிடத்தில் சூரியனிருக்கவும் பின்காலத்தில் கண்ணோயுண்டாகும். ரிஷபம் சிங்கம் மேஷம் இவ்விடங்களில் சனி குசர்களிருந்தால் உதட்டிற் கூனமுண்டாம். பிள்ளையும் கொடிசுற்றிப் பிறக்கும், எ - று. (463)

லக்கினத்ததிபனோடு மிரண்டிடத்ததிபன்சுக்கன்
றிக்கெனக்கூடமூன்றிற் செங்கதிர்நிற்குமாயில்
ஒக்கவேகண்ணில்லாம லுதிப்பனாதிக்கனலல்லால்
மைக்குருமதியமுற்றான் மாலைக்கண்ணாகுமென்றே.

(இ - ள்.) லக்கினாதிபதியோடு இரண்டுக்குடையோனும் சுக்கிரனும் கூடி மூன்றாமிடத்திற் சூரியனுமிருந்தால் கண்ணில்லாமற்போகும். சூரியனல்லாமல் சந்திரன் குரு இருந்தால் மாலைக்கண்ணாகும், எ - று. (464)

குறைவில்நேத்திராதிசுக்கன் லக்கினத்தோனுங்கூடி
நிறையமூன்றாமிடத்தினிற்கி நேத்திரநோயாகும்
நறைகுழலக்கினாதி யிரண்டிடத்ததிபன்வெள்ளி
அறையவோரிடத்தினிற்கி லந்தகனவன்கண்டீர்.

(இ - ள்.) நேத்திராதிபதியும் சுக்கிரனும் லக்கினாதிபதியுங்கூடி மூன்றாமிடத்திலிருந்தால் கண்ணோயுண்டாகும். லக்கினாதிபதியும் இரண்டுக் குடையவனும் சுக்கிரனும்கூடி ஒரேவீட்டி லிருந்தால் குருடனாவான், எ - று. ().

வேறு.

நேத்திரத்தானத்ததி சுக்கனோடு
நிறைசன்மாதியைக்கூடி மூன்றினின்றால்
நேத்திரரோகம் மந்தநேத்திராதி
நிலவாகிப்புகருடனே யிரண்டினின்றால்
நேத்திரத்தானிசைகேடா மொளிகொடாது
நின்றகடகந்தனி லுற்பவித்தபோது
நேத்திரத்தான்மதிசுக்கன் கூடிநின்றால்
நிகழ்பிறவிக்குருடனுமாய் நிற்பன்றானே.

(இ - ள்.) நேத்திராதிபதி சுக்கிரனாய் அவன் லக்கினாதிபதியோடு கூடி மூன்றிலிருந்தால் கண்ணோயுண்டாம். நேத்திராதிபதி சந்திரனாய் சுக்கிரனுட னிரண்டிலின்றால் இராத்திரியில் கண் தெரியாது. கடகலக்கினத்

இல் பிறந்தவனாயினும் நேத்திரஸ்தானாதிபதியும் சந்திரனும் சுக்கிரனும் கூடியிருந்தாலே பிறவிக்குருடனாவான், எ - று. (466)

சிங்காமே நேத்திரத் தானந்தானாகிச்
செங்கதிர்சுங்கன்கூடிச் சிங்கத்தேற
அங்கவரோடெந்தத் தானாதிபதியேனு
மவரவர்தங்காரகராயினும் வந்துற்றாலும்
தங்கியபேர்க்குரியர்தமக் கெய்துநேத்திரநோய்
தனதுபதியாகி லுச்சந்தானாகிநன்மை
துங்கமதிவியந்துறிலோர் விழியொன்றேயூனம்
சூரியனுங்கூடில்விழியோ விரண்டும்போமே.

(இ - ள்.) சிங்காதி நேத்திரஸ்தானமாயிருந்து சூரியனும் சுக்கிரனுஞ் சேர்ந்து சிங்கத்திலிருக்க அவர்களோடு எந்த இராசிக்கதிபதியாயினும் அவ்வவர்களுடைய காரகர்களாயினும் வந்துசேர்ந்தால் கண்ணோயுண்டாம். அந்தக் காரகர்களுக்கு அவ்வவ்வீடு ஆட்சியாயினும் உச்சமாயினும் நன்மையாம். சந்திரன் பன்னிரண்டிலிருந்தால் ஒரு கண்ணும் கூடச் சூரியனுமிருந்தால் இரண்டு கண்களும் குருடாம், எ - று. (467)

வேறு.

சோதிலக்கினத்திற் குசன்சூழ்ந்திட
ஓதுமட்டமத்தோன் கேந்திரத்துறப்
போதவட்டமத்திற் பாவர்போந்திட
ஏகநேத்திர நோயாம்வந்தெய்துமே.

(இ - ள்.) நேத்திரலக்கினத்தில் அங்காரகனும் அட்டமாதிபதி கேந்திரத்திலும் அவ்வட்டமத்தில் பாபக்கிரகங்களு மிருந்தால் நேத்திர ரோகமுண்டாகும், எ - று. (468)

வேறு.

சேருஞ்சுங்கன்மாதிதிங்கள் கூடியாறெட்டில்
நேரும்வியத்திற்பலமற்றே நிற்கின்மாலைகண்ணாகும்
ஏருங்கதிரோன்சென்மாதிபிரண்டாமாதி வெள்ளியொன்றாய்த்
தீரும்வியமாறெட்டிலுறச் செப்பம்பிறவிக்குருடனுமாம்.

(இ - ள்.) சுக்கிரனும் சன்மாதிபதியும் சந்திரனுங்கூடி ஆறு எட்டு பன்னிரண்டாமிடங்களில் பலமற்றிருந்தால் மாலைக்கண்ணாகும், சூரியனும் சன்மாதிபதியும் இரண்டுக்குடையோனும் சுக்கிரனும் ஒன்றாய்க்கூடி பன்னிரண்டு ஆறு எட்டாமிடங்களி லிருந்தால் பிறவிக் குருடனாவான், எ- று. ()

ஆமேயிரவிசுக்கிரன் றெண்டாதிசென்மத்தாதிபிவர்
தாமேகூடியவரவர்க டானந்தனக்காறெட்டுவிய

தாமேயிருக்கிலவரவர்க டிட்டிக்கூனஞ்சார்ந்திடுமே
காமேசொல்லம்பலப்பார்வை நயனபலன்கண்டெனுஞ்சொல்லாய்.

(இ - ள்.) சூரியன் சுக்கிரன் இரண்டிக் குடையோன் சென்மாதிபதி இவர்கள் கூடி அவ்வவர்களுடைய ஸ்தானங்களுக்கு ஆறு எட்டு பன்னிரண்டாமிடங்களி லிருந்தால் அவர்கள் கண்களுக் கூனமுண்டாகும் என்று பெண்ணே! சொல்லுக, எ - று. (470)

சொல்லும்பலனைத்திரத்தானஞ் சூழ்ந்தாராதிபாரற்பலன்கள்
எல்லோன்செவ்வாய்மேனோக்க விந்துங்குருவுஞ்சமபார்வை
வெல்லும்புதற்கும்வெள்ளிக்கும் விழிபக்கத்தேநோக்கியிடும்
நல்லராகுசனிதனக்கே நயனங்கீழ்நோக்காயிடுமே.

(இ - ள்.) கேந்திரத்தானத்திலிருக்கிற வதிபர்களாற் பலன்சொல்லுமிடத்து சூரியன், அங்காரகர்களுக்கு மேற்பார்வையும், சந்திரனும் குருவும் சமபார்வையும், புதனுக்கும் சுக்கிரனுக்கும் பக்கத்துப் பார்வையும், ராகு சனியும் கீழ்ப்பார்வையு முடையவர்களாவார்கள், எ - று. (471)

இடுஞ்சென்மாதிபனைச்சனிகண்டிடக் கண்ணோயாமிரண்டாதி
உடன்சூரியனுங்கூடிநிற்க மற்றுங்குளிகனுடன்சனிதான்
அடைந்தேநோக்கக்கண்ணோயா மவ்வீடேசலராசியெனில்
தொடர்ந்தேகாணினீர்பரவித் துளிக்குமவன்றன்விழிதனிலே.

(இ - ள்.) லக்கினாதிபதியைச் சனிபார்த்தால் கண்ணோயாம், அன்றி, இரண்டிக்குடையோனும், சூரியனும், குளிகனுடன் சனியும்சேர்ந்து பார்க்கவும் கண்ணோயாம். அந்தவீடு சலராசியானால் அவனுடைய கண்ணில் நீர் வந்து கொண்டேயிருக்கும், எ - று. (472)

சோதிரவியும்பாவருடன் சூழ்ந்துபலமேற்றேவியத்தின்
மீதிலிருக்கவலக்கண்போம் விரவுஞ்செவ்வாய்பலனற்றே
ஏதவியத்திலுதைந்திடிலோ விடக்கண்ணூனமிவரிருவர்
தீதாம்வியத்திற்கூடிநிற்கத் தெரியாதிரண்டுதிட்டியுமே.

(இ - ள்.) சூரியன் பாபக்கிரகங்களோடு கூடிப் பலவற்றுப் பன்னிரண்டில் வந்திருந்தால் வலதுகண்போகும். அங்காரகன் பலனற்று பன்னிரண்டிலிருந்தால் இடதுகண்போகும், இவ்விருவருங்கூடி குற்றஞ்செய்து பன்னிரண்டாமிடத்தி லிருந்தால் இரண்டு கண்ணும் தெரியாதாம், எ - று.

திட்டமுடனேசனிசெவ்வாய் சேர்ந்திரண்டிற்பனிரண்டில்
கிட்டியிருக்கில்விழிக்கூனங் கிரணரவிசந்திரன்வியத்தில்
ஒட்டியிருக்கில்விழிநோயு முற்றந்தகனாய்ப்பிறக்கும்வரை
துட்டரவிசேய்மதியரசன் சுங்கனைவரெங்குறினும்

(இ - ள்.) சனியும் அங்காரகனுஞ்சேர்ந்து இரண்டு பன்னிரண்டா மிடங்களிலிருந்தால் கண்ணுக்கூனமுண்டாம். சூரியனும், சந்திரனும், பன்னிரண்டிலிருக்கில் கண்ணோயுண்டாம். சூரியன் அங்காரகன் சந்திரன் குரு சுக்கிரன் இவ்வைவர்களும் எங்கேயிருந்தாலும் குருடனாய்ப் பிறப்பன், எ - று. (474)

எங்கோனிரவிவெள்ளி பலனில்லாதிருக்கவவருடனே
பொங்குஞ்சன்மாதிபன் கூடிப் பொருந்திற்பிறவிக்குருடனும்
தங்குமைந்தாமாறுதிதானுஞ் சன்மங்களிலிருக்கச்
சுங்கனிரண்டாதிபைக்கூடிற் சொல்கண்பிடுங்கப்படுங்கண்டீர்.

(இ - ள்.) சூரியன், சுக்கிரனிவர்கள் பலமற்றிருக்க அவர்களோடு சன்மாதிபதியும் சேர்ந்தால் பிறவிக் குருடனாவான். ஐந்து ஆறுக்குடையவர்கள் சன்மத்திலிருக்கவும், சுக்கிரன் இரண்டுக்குடையோனுடன் கூடினால் கண்பிடுங்கப்படும், எ - று. (475)

கானுகேத்திரரோகமினிக் கதிர்சேர்மதியுங்காரியிவர்
வேனுமிரண்டிலாறெட்டில் வியந்தினிற்கரோகமிகத்
தோனுமிரண்டிற்பன்னிரண்டிற் சோமன்பரிதிகூடுகினும்
பூனுமெட்டிலிரண்டதனிற் பொல்லாரிருக்கக்கண்ணோயே.

(இ - ள்.) சூரியன் சந்திரன் சனி இவர்கள் இரண்டு ஆறு எட்டு பன்னிரண்டாமிடங்களிலிருக்க இருக்க கண்ணோயுண்டாம். இரண்டு பன்னிரண்டாமிடங்களில் சந்திரனும் சூரியனும் கூடியிருந்தாலும், அன்றி எட்டு இரண்டாமிடங்களில் பாபக்கிரகங்களிருந்தாலும் கண்ணோயுண்டாம், எ - று. ()

வேறு.

வேல்விழிமாதே கேளாய்புவலக்கண்
சாலவிரண்டாமிடங்கொண்டுப்
ஏலுமிடக் கண்ணீராறுனும்
சுபாசுபங்களைத் தேர்ந்தே.

(இ - ள்.) வேல்போலும் கண்ணாய்! இரண்டாமிடத்தைக்கொண்டு வலக்கண் பலத்தையும், பன்னிரண்டாமிடத்தைக்கொண்டு இடக்கண் பலத்தையும் சொல்லுக, எ - று. (477)

வாக்குப்பலன் (வேறு.)

குடும்பத்தானாதிபேயாடு குலவியபுதனுடகூடி
உடன்படவாறுந்தானத் தூற்றிடி லூமையாகும்
இடுப்புமுமூன்றுமாதி லக்கினத்தாதிபன்றானும்
திடம்பெறக்கூடி லூமையாகிய திரிவன்றானே.

(இ - ள்.) குடும்பஸ்தானாதிபதியோடு புதனுங்கூடி ஆறாமிடத்திலிருந்தால் ஊமையாகும். மூன்றுக்குடையோனும், லக்கினாதிபதியும் கூடினால் ஊமையாய்த் திரிவான், எ - று. (478)

வேறு.

வாக்குத்தானாதியொடு புதனுங்கூடி
வருஞ்சென்மமூன்றாறின் மருவிலூமை
ஆக்குமவருடனெந்தத் தானத்தாதி
யவரவர்தங்காரகரா கிலும்வந்துற்றால்
ஊக்கமுறவவரு மூமையாவ
ருற்றவர்தம்பதியாகி லுச்சமாகில்
வாக்கனமறமொழிவன் கண்டோர்கண்டும்
வனமுறுமுக்கனியுமென வழுத்துமாதே.

(இ - ள்.) வாக்குஸ்தானாதிபதியோடு புதனுங்கூடி சென்மம் மூன்று ஆறுமிடங்களிலிருக்க ஊமையாகும். அவர்களோடு எந்தத் தானாதிபதியாவது, அவரவர்களுடைய காரகர்களாவது கூடினால் ஊமையாவார். அப்படிச் சேர்ந்த இடம் அவரவர்களுக்கு ஆட்சியானாலும், உச்சமானாலும், நல்ல வாக்குடனிருப்பனென்றும் அறிவாய் பெண்ணே! எ - று. (479)

வேறு.

மாதுலமன்னனோடு வாக்குத்தானாதிகூடிக்
கேதுவாசியமாறெட்டிற் கூடினாலூமையாவான்
ஓதியதந்தைதாய்மற் றோர்தானத்தனக்கவ்வாறு
நீதியாயிருக்கிலூமை நிச்சயமென்றுகூறே.

(இ - ள்.) புதனுடன் வாக்குஸ்தானாதிபதியுங் கூடிப் பன்னிரண்டு, ஆறு, எட்டாமிடங்களிற் கூடினால் ஊமையாவான். தந்தை தாய் மற்றவர்கள் ஸ்தானங்களுக்கும் இப்படியே யிருந்தாலும் ஊமையென்றே நிச்சயமாய்ச் சொல்லுக, எ - று. (480)

கூறியலக்கினாதி சுக்கிரன்கூடியாறெட்
டேறியவியத்தினிற்க வூமையாமிரண்டாமாதி
பேறுடனவரைக்கூடி லூமையாய்ப்பின்மற்றோரும்
சீறிடாதவரைக்கூறி லூமையாய்த்திரிவன்றானே.

(இ - ள்.) லக்கினாதிபதி சுக்கிரனோடு கூடி ஆறு, எட்டு, பன்னிரண்டாமிடங்களி லிருந்தால் ஊமையாம். அன்றி, இரண்டுக்குடையோன் சுக்கிரனைச் சேர்ந்தால் ஊமையாம். மற்றைய கிரகங்களும் சுக்கிரனைக் கூடினாலும் ஊமையேயாவான், எ - று. (481)

வித்தியாபலன் (வேறு)

சனியலாதறுவர் தானுமேகூடிப்
புனிதராயிருக்கப் புலவனாக்கமிதை
இனிதெனவுரைத்தே யெண்டிசையெங்கும்
மனுவுடனீதி மன்னனாகுவனே-

(இ - ள்.) சநி தவிர மற்றைய ஆறு கிரகங்களும் ஒன்றாய்க் கூடி சுப மாயிருந்தால் புலவனாய்க் கவிதை புனைந்துக் கீர்த்திபெறுவோனாவான், எ - று. (482)

வேறு.

பொன்புதனிரண்டின்கோவும் பொருந்தியகேந்திரத்தில்
பின்றிரிகோணமேறிற் பெற்றிடும்வித்தைலாபம்
இன்பமாயிவரெட்டாறி லிருந்திடிலில்லைவித்தை
அன்புசேர்கணக்கனுச்ச மாகினல்வித்தைகூறே.

(இ - ள்.) குருவும், புதனும், இரண்டாமதிபனும் கேத்திரத்தில் அல்லது திரிகோண மேறினால் வித்தை லாபமுண்டாம். இவர் எட்டு ஆறாமிடங்களில் இருந்தால் வித்தை யில்லையாம். புதன் உச்சமானாலோ நல்ல வித்தை யுண்டாகும், எ - று. (483)

கூறியபுதனுமேழா மதிபனுங்குருவுங்கூடிப்
பேறுடன்றிரிகோணங்கள் கேந்திரம்பிடித்திட்டாலும்
வீறியதனதுவீட்டும் விரும்பியவிரண்டாம்வீட்டும்
சீறிடாதிருந்தபோது திடவித்துவானுமாமே.

(இ - ள்.) புதனும் எழுக்குடையோனும், குருவும் கூடி திரிகோணம் கேந்திரங்களி லிருந்தாலும், தன் வீட்டிலும் இரண்டாம் வீட்டிலும் இருந்தாலும், பலத்த வித்துவானாவான், எ - று. (484)

ஆனகேந்திரத்திற்புந்தி யிருக்கவிரண்டாம்வீட்டாதி
கானுமேயுச்சமாகத் தகும்புகருபயமேவ
ஊனமின்மூன்றினல்லோ ருறவெள்ளியுச்சமாக
மானிலத்துதித்தகாளை சோதிடம்வழுத்தவல்லான்.

(இ - ள்.) கேந்திரத்தில் புதனும், இரண்டுக்குடையோன் உச்சனும், சுக்கிரன் உபயராசியிலும், மூன்றில் சுபக்கிரகங்களும், சுக்கிரன் உச்சமாகவும் பிறந்தவன் சோதிடம் சொல்ல வல்லவனாவான், எ - று. (485)

வேறு.

வல்லவிரண்டிடத் தோன்குருசுக்கிரன்
செல்லுமூலத்திரி கோணமுச்சமாம்
அல்லபாவ ரணுகநோக்காவிடில்
நல்லதர்க்கம் படிப்பனலப்பெற.

(இ - ள்.) இரண்டுக்குடையோனும், குருவும், சுக்கிரனும், மூலத்திரிகோணம், உச்சம் இவ்விடங்களில் பாபக்கிரகங்களின் சேர்க்கையும் பார்வையு மில்லாதிருந்தால் நன்மையாய்த் தர்க்கம் படிப்பவனாவான், எ - று.

நலஞ்சிறந்தவிரண் டாம்வீட்டதிபனுங்
குலஞ்செறிந்த குருவும்பலமதாய்ப்
பலஞ்செறிந்த புகர்பார்க்கநின்றிடில்
பிலஞ்செறிந்த விலக்கணம்பேசுவான்.

(இ - ள்.) இரண்டுக்குடையோனும், குருவும் பலமாய்ச் சுக்கிரன் பார்வைபெற்றிருந்தால் சாமர்த்தியமாய் இலக்கணம்பேசுவோனவன், எ-று.

வேறு.

பிரக்கிணை சேர் திரிகோண கேந்திரத்தும்
பிரியமுடன்புதனிற்கிற் றமிழ்வித்தைபெருகும்
திருக்குமிலா துயர்செவ்வா யொன்றிருந்தகாலைத்
தெலுங்குவித்துவானவன் கருங்கோளேநிற்கில்
நிரக்கவேதுருக்காரியர் பாஷைதமக்கு
நிபுணவித்துவானவன் வெள்ளிகுருமேவில்
நிரக்கனமாஞ்சாஸ்திரங்க டமக்குமதிவல்ல
நிடவித்துவானென்றே செப்பிடவுமாகும்.

(இ - ள்.) புதன் திரிகோண கேந்திரங்களிலிருந்தால் தமிழ் வித்தையுண்டாம். அவ்விடம் செவ்வாயிருந்தால் தெலுங்கு வித்துவானவான். ராகுவிருந்தால் துருக்கு ஆரியபாஷைக்கு வல்லவனவன். சுக்கிரன் குருவுமிருந்தால் சாஸ்திரங்களில் வல்ல வித்துவானென்று செப்பலாம், எ - று.

ஆகுமிரண்டாதிபனும் புதனுமுச்ச
மாயிருக்கச்சன்மத்தி லரசனிற்க
எகனுய்ச்சநியெட்டிலுறக் கணிதவித்தை
இவனுக்குக்கோபுராங்கிசத்தின் மந்தனிருக்க
வாகுடனங்காரக னங்கிசத்தரசனிற்க
மறையோதுவானிரண்டா மாதிகதிராகத்
தாகமுடன்செங்கதிரைத் தமனியனுங்காணத்
தர்க்கசாஸ்திரப்படிக்குத் தாஷ்டீகனுங்கண்டீர்.

(இ - ள்.) இரண்டுக்குடையோனும், புதனும், உச்சமாகவும், ஜென்மத்தில் குருவும், சநியெட்டில் தனியனுயிருந்தால் கணிதவித்தையும், இவனுக்குக் கோபுராரங்கிசத்தில் சநியும், அங்காரகன் அங்கிசத்தில் குருவுமிருந்தால் வேதமோத வல்லவனவன். இரண்டுக்குடையோன் சூரியனும், அவனைக் குருகாண பிரபலதர்க்கம் படிப்பவனவன், எ - று. (489)

கண்டசன்மலக்கினத்திற் சுக்கிரன்பொன்னிருவர்
கலந்துநிற்கவேந்தனு நற்கதிரோன்றானுமே
மண்டபசிங்காங்கிசத்தி லேறிநிற்கவந்த
மற்றுஞ்சுக்கிரன்கடக வாங்கிசத்தின்மன்ன
அண்டியிருந்தப்படியிருக்கச் சனிக்கான்றனல்ல
அவனியிற்சாத்திரமாறு மறிந்திடுவானென்றே
எண்டிசையெங்கும் பரவுங்கீர்த்திமானாகி
இருப்பனெனக்கலைவல்லோ ரியம்பிடுவர்தாமே.

(இ - ள்.) ஜன்மலக்கினத்தில் சுக்கிரனும் குருவும் இருவருங் கலந்து நின்றாலும், குருவும், சூரியனும், சிங்காங்கிசத்திலேறி யிருந்தாலும், சுக்கிரன் கடகாங்கிசத்தி லிருந்தாலும், வந்து பிறந்தவன் உலகத்தில் ஆறுசாஸ்திரங்களையு மறிந்து கீர்த்திமானாயிருப்பனென்று சொல்லுவர் பெரியோர், எ - று.

வாரேறுமுலையாய்கேள் சன்மத்தனின்
மதிமகன்சூரியன் குருவுமகிழ்ந்தனிற்கில்
சீரேறுதனம்படைத்தப் புலவனாவன்
செங்கதிர்சுக்கிரன்புந்தி திங்கள்சனியும்
பாரார்பொன்னிவர்க ளொருவீட்டிற்கூடில்
பரிமளிக்கும்வித்தைப் பிரபலனுமாகித்
தாரேறுபுயவலியன் றனவானுமன்
சாந்தகுணவானுமாய்த் தரையில்வாழ்வன்.

(இ - ள்.) கச்சிறுக்கிய தனபாரமுடையாளே! சன்மலக்கினத்தில் புதனும், சூரியனும், குருவுமிருந்தால் சிறப்பமைந்த செல்வமுடைய புலவனவன். சூரியன், சுக்கிரன், புதன், சந்திரன், சனி, குரு இவர்கள் ஒரு வீட்டிற் கூடினால் பரிமளிக்கும் வித்தைப் பிரபலனாய் புயவலியனும், தனவானும், சாந்தகுணனுமாய்த் தரையில் வாழ்வன், எ - று. (491)

## தனபலன்.

ஜென்மாதிபதிரண்டா மிடத்தினல்லோர்
திறன்மூன்றுமிடத்தீயோர் நான்கினல்லோர்
நன்மார்க்கமுடனிருந்தாற் றனவான்சன்ம
லக்கினத்தோனுபயத்தி னண்ணினும்பொன்னுளனும்
சன்மார்க்கமுடனந்த தனபாவத்தில்
தரும்பாக்கியலாபாதி தரிக்கிற்பார்க்கில்
துன்மார்க்கமறவளகைக் குபேரன்போலத்
தொலைவிலாதனத்தும் படைப்பனெனச்சொல்வர்சால.

(இ - ள்.) ஜென்மாதிபனுக்கு இரண்டாமிடத்தில் சுபக்கிரகங்களும், மூன்றாமிடத்தில் பாபக்கிரகங்களும், நான்கில் சுபர்களும் நன்மையுடனிருந்தால் தனவானவன். சன்மலக்கினத்தோன் உபயராசியி லிருந்தாலும், திரவிய முள்ளவனே யாவன். அந்தத் தனஸ்தானத்தில் பாக்கியாதிபதியும், லாபாதிபதியும் இருந்தாலும், பார்த்தாலும் அளகைக் குபேரனைப்போல் செல்வமுடையவனுமென்று சொல்லுவர், எ - று. (492)

சாதகன்லக்கினமுதலாய் லக்கினாதி
நாதனிருந்தவீடளவு மெண்ணிக்கண்ட
ஓதுதொகைலக்கி னாதிபனைத்தொட்டே
உடனெண்ணிக்கண்டமனை பாவர்வீடேல்
ஏதமுறுந்தரித்திரயோ கங்களாகும்
இனிமையுள்ளோர்வீடாயிற் றனவானவன்
போதுசன்மந்தனக்கைந்தி ராறிரண்டும்
புனிதர்மனையாகிற்பொன் னுளனேயாவன்.

(இ - ள்.) ஜாதகன் லக்கினமுதல் லக்கினாதிபதியிருந்த வீடுவரைக்கும் எண்ணிக் கண்ட தொகையை லக்கினாதிபதியைத் தொட்டு அதையுஞ் சேர்த்து எண்ணிப்பார்த்தால் அது பாவர் வீடாயின் தரித்திரயோகமாகும். சுபர்வீடாயின் தனவானும். சன்மத்திற் ஐந்து பன்னிரண்டு இரண்டாமிடங்கள் சுபர் வீடுகளேயாயின் திரவியமுளனாவன், எ - று. (493)

ஆவன்சன்மத்திற்சனியு மடுத்தநான்கிலம்புலியும்
மேவுமேழிற்செவ்வாயும் விளங்குபத்திற்வெய்யோனும்
கோவும்புதன் சுக்கிரன்றானுங் கூடியொருவீட்டினிலிருக்கப்
பூவுக்கரசாய்த்தனவானாய்ப் பொருந்திவாழ்வன்கண்டதே.

(இ - ள்) சன்மத்தில் சநியும், சனிக்கடுத்த நான்கில் சந்திரனும், ஏழில் அங்காரகனும், பத்தில் சூரியனும், புதனும், சுக்கிரனுஞ் சேர்ந்து ஒரு வீட்டிலும் இருக்க உலகத்திற்கரசனாயும், செல்வமுடையவனாயும்வாழ்வன், எ - று.

கண்டுமொழியாயெட்டாறிற் கருதுமூன்றிற்பன்னொன்றில்
மிண்டரிருந்துலக்கினத்தைப் பாராதிருக்கின்மிகுசெல்வம்
கொண்டுவாழ்தற்கனுசாரி குலவியிந்நால்வருநீசம்
அண்டியிருக்கினீசர்மனை யனுகிற்றனவானவானே.

(இ - ள்.) கற்கண்டைப்போல் இனிய சொல்லாய்! எட்டு, ஆறு, மூன்று பதினோராமிடங்களில் பாவிகளிருந்து லக்கினத்தைப் பாராதிருந்தால் மிகுந்த செல்வமுண்டாம். இந்நாலிடத்தவரும் நீசம்பெற் றிருந்தாலும், நீசர்கள் மனைவியை யடைந்திருந்தாலும் தனவானேயாவான், எ - று. (495)

ஆவரிந்துலக்கினத்துக் கதிப னுச்சராகியினும்
மேவலதுநீசர்மனை விரும்பியிருக்கிற்றனவானும்

தேவர்மந்திரமூஞ்சந்திரனுடனே யுச்சநற்கோள்சேர்ந்திடினும்
தாவுங்குடும்பனுச்சமனே நற்கோர்நிற்கத்தருஞ்செல்வம்.

(இ - ள்.) சந்திர லக்கினத்ததிபன் உச்சராசியிலும். அல்லது நீசர் வீட்டிலுமிருந்தால் தனவானாவான். அன்றிச்சந்திரனோடு உச்சக்கிரகஞ் சேர்ந்தாலும் குடும்பாதிபதி உச்சவீட்டில் சுபக்கிரகங்களிருந்தால் செல்வ முண்டாகும், எ - று. (496)

செல்வந்தருபத்தாமதிபதி சென்மாதிபனும்
வல்வந்தகுடும்பாதிபனும் வளரங்கிசைமன்னும்
செல்வந்திகழுங்கேந்திரமதனிற் சுபர்காணில்
நல்வஞ்சிறுவயதிற் றனபதியாகநண்ணும்.

(இ - ள்.) செல்வத்தைக்கொடுக்கும் பத்துக்குடையோனும், சென்மாதிபதியும், குடும்பாதிபனும் பொருந்திய வீட்டோன் அங்கிசாதிபதியும் கேந்திரத்திலிருந்து அவர்களைச் சுபக்கிரகங்கள் கண்டால் சிறுவயதிலேயே குபேரனாக வாழ்வான், எ - று. (497)

நண்ணுஞ்சென்மத்தாதிபனவின்மூன்றாதிபனும
ஒண்ணப்பலமாகப் புருஷக்கோளுறநோக்க
வண்ணந்தருமூன்றாதிபன் மருவப்பதிகாண
அண்ணன்சிறுவன்றாய் மாமன்பொன்னும்வருமே.

(இ - ள்.) சென்மாதிபதியும் மூன்றாம் வீட்டுக்குடையோனும் புருஷக்கிரகத்தின் பார்வையையும், மூன்றுக்குடையோன் தன் வீட்டிலிருக்கப் பார்க்க அண்ணன், தாய்மாமன் இவர்களுடைய திரவியமும் வந்துசேரும், எ-று.

வருஞ்சென்மலக்கினத்து மாமதியிருந்தவீட்டும்
இருபுறந்தன்னினல்லோ ரிருந்திடிற்றனவானவன்
ஒருமனைதன்னிலுற்றா லோதியபலனிற்பாதி
தருமொருபுறத்தினிற்கிற் றனமுங்காற்பங்காமே.

(இ - ள்.) சன்மலக்கினத்திலும், சந்திரனிருந்த வீட்டிலும் இரண்டு பக்கத்திலும் சுபக்கிரகங்களிருந்தால் தனவானாவான். ஒரு வீட்டிலிருந்தால் சொன்ன பலனிற்பாதியும், ஒருபக்கத்திலிருந்தால் காற்பங்கு தனமுமுண்டாகும், எ - று. (499)

பாங்கதாகு மூன்றுமிடப்பார்த்திபன்
ஓங்குமொன்பதா மாதியுடனுற
ஈங்கிவர்க்கு மினியசினேகனாய்
ஆங்குறத்தமையன் பொன்னனுகுமே.

(இ - ள்.) மூன்றுக்குடையோன் ஒன்பதாமதிபனோடு கூடி நிட்பாயிருந்தால் தமையன் செல்வமும் வந்து சேரும், எ - று. (500)

அனுகிரிதிசேர்வகை யாவவனூற்றூதையர்பொன்
அன்னைக்கம்புவிசெவ்வா யாற்றனதுபொருளே
நனுகுபுதனாற்பகைஞர் பொருளரசன்றன்னால்
நல்லுறவோர்நிதிசுங்க னாற்குமனைவியரால்
பணமருவுங்காரியினு லடிமையுள்ளோர்பொருளும்
பண்பொடுசேவித்தவர்பொன் பாங்குடன்வந்தடையும்
குணமொடுலக்கினஞ் சோமன்றனக்குப்பத்தாகும்
குடிவீட்டுக்குடையோனைக் கொண்டுபலன்கூறே.

(இ - ள்.) செல்வஞ்சேரும் வகை எப்படியென்றால், சூரியனால் தகப்பன் செல்வமும், சந்திரனால் தாய்ச்செல்வமும், அங்காரகனால் தன் செல்வமும், புதனால் பகைவர் செல்வமும், குருவால் சுற்றத்தார் செல்வமும், சுக்கிரனால் மனைவி செல்வமும், சனியால் அடிமையுள்ளோர் செல்வமும் வந்தடையும். இது லக்கினத்திற்கும், சந்திரனுக்கும் பத்துக்குடையோனைக் கொண்டு பலஞ் சொல்லுக, எ - று. (501)

கூறியலாபாதி யொன்பதாமதிபனுடனே
கூடினாற்பழையதனங் குறுகவந்துசேரும
பேறுடன்பத்தாமாதி பாக்கியத்துற்றினும்
பெருமைசெறிபத்தாதி பிரபலநற்கோளாய்
வீறுடனுத்தமர்மனையி லுறத்தருமத்துடனே
விரவுபிரயாசமறவே நிதியம்படைத்திடுவன்
ஈறில்குருதனஞ்சேரும் பத்தாதிமெலிந்தே
இருக்கிலொருவரைச் சேவித்தெய்துபொருளற்பம்.

(இ - ள்.) லாபாதிபதி ஒன்பதுக்குடையானோடு சேர்ந்தால் பழைய செல்வஞ் சேரும். பத்துக்குடையோன் பாக்கியத்திலிருந்தாலும் பத்தாதி பிரபலகிரகமாய் சுபக்கிரகங்கள் வீட்டிலிருந்தாலும் தருமசிந்தையோடு கஷ்டமில்லாமல் செல்வந்தேடுவன். குருதனத்திலும் பத்துக்குடையோன் பலமில்லாமலு மிருந்தால் ஒருவரைச் சேவித்தே அற்ப திரவியந் தேடுவோனுவான், எ - று. (502)

பொருள்செறிபத்தாமதிபன் பிரபலவுத்தமனாய்ப்
பொருந்திப்பத்தினிலிருக்க யாகாதிகருமம்
அருளுடனேபுரிந்து தனந்தேடியினிதிருப்பன்
அமர்மூன்றுமாதி பலமாகச்சென்மத்தோன்

மருளுந்துர்ப்பலனாக லாபாதிமூன்றில்
மருவிலுடன்பிறந்தவர் தன்பொருள்வந்துசேரும்
தெருள்சன்மஞ்சந்திர லக்கினத்திருந்தார்வகையில்
சேர்ந்தவராரோவவர்பொன் சேருமிவன்றனக்கே.

(இ - ள்.) பத்துக்குடையோன் பிரபலனும் சுபனும், பத்தினிலிருந்தால் யாகாதிகிரியைகளால் தனந்தேடி சுகமாயிருப்பான். மூன்றுக்குடையோன் பலவானாய், சன்மாதிபதி துர்ப்பலனாய் லாபாதிபதி மூன்றிலிருக்க கூடப்பிறந்தவர் செல்வமே வந்து சேரும். சென்மலக்கினத்திலும், சந்திர லக்கினத்திலும் எந்தக்காரர்க ளிருக்கின்றனரோ அவர்களுடைய பொருளும் இவனுக்கு வந்துசேரும், எ - று. (503)

தனஞ்சேரும்வகை யொன்பதாமதிபன் றிசையில்
தரும்பத்தாதிபன்புசிப்பி லப்போகோசரத்தில்
இனஞ்சேர்நான்காதிபன் பத்தாமிடத்திலிருக்க
இயல்பத்தாமதிபனுக்கு நாலாம்ராசியினும்
கனஞ்சேருங்குசனுடைய கேந்திரத்திலேனுங்
கலந்துநிற்கப்புராதனமாங் காணிமனையதனில்
முனஞ்சேர்பத்தாமதிபன் றிக்கினினிட்சேபம்
முதற்கொண்டுவாழ்வரென மொழிந்திடுவர்தக்கோர்.

(இ - ள்.) ஒன்பதுக்குடையோன் திசையில், பத்துக்குடையோன் புசிப்பிலும், அப்போது கோசாரத்தில் நான்குக்குடையோன் பத்திலிருப்பினும், பத்தாம் வீட்டோனுக்கு நாலாம் ராசியிலும், அங்காரக கேந்திரத்திலும் கலந்து இருப்பினும் புராதன காணி, மனையதனில் பத்துக்குடையோன் திக்கில் புதையலெடுத்து வாழ்வாரென்று சொல்லுவர் பெரியோர், எ - று.

தக்கரிஷபத்தின் மதிவிருச்சிகத்திலரசன்
தானிருக்கிற்றனவானாஞ் சுக்கிரன்வீட்டரசன்
மிக்ககுருவிற்குசனுமிருக்க வளர்பிறையும்
மேவந்தனுடனேகூடப் புதனரசன்கூடி
நிற்கலக்கினந்தன்னிற் சுக்கிரனுமிருக்க
நிறைந்ததனவான்கல்வி நிபுணனுமாயிருப்பன்
சுக்கிரனுச்சம்பெற லக்கினத்தரசநிறைந்த
சோமனைப்பாவர்கள்காணிற் றுலங்குதனம்படைப்பன்.

(இ - ள்.) ரிஷபத்தில் சந்திரனும், விருச்சிகத்தில் குருவும் இருக்கில் தனவானாவான். சுக்கிரன் வீட்டில் குருவும், மகரத்தில் அங்காரகனு மிருந்தாலும், வளர்பிறைச் சந்திரனும் குருவுடன் கூடியும், புதனும் அரசனுங் கூடியுமிருக்க லக்கினத்தில் சுக்கிரனுமிருக்க நிறைசெல்வ முடையவனாவன்.

கல்வி சாமர்த்தியனுமா யிருப்பன். அன்றி சுக்கிரனுச்சம் பெற்ற லக்கினத்திலுள்ள குருவோடு கூடிய சந்திரனைப் பாவர்கள் காணின் நலங்கு செல்வம் படைப்பான், எ - று. (505)

படைத்தவொன்பதாமதிப னாறினினின்றிடவே
பண்புடையமாதுலன்றன் பொன்பரிந்துசேரும்
எடுத்தவொன்பதாமதிபன் பொன்னாகியாறில்
இருந்தக்காலம்மாமிக் கிசைந்தபொருள்சேரும்
தொடுத்தவைந்தாமதிபதியுஞ் சுபனாய்ப்பாக்கியத்தில்
சூழ்ந்திருக்கிற்புத்திரிக்குத் தாலங்குமணஞ்சூட்டி
அடுத்திருக்குமருமகன் றேடியதனங்களெல்லாம்
அடைந்துசகலானுகி யப்புவியில்வாழ்வன்.

(இ - ள்.) ஒன்பதுக்குடையோன் ஆறிலிருக்க மாமன் திரவியம் வந்து சேரும். ஒன்பதுக்குடையோன் குருவாகி ஆறிலிருந்தால் மாமி திரவியம் வந்து சேரும். ஐந்துக்குடையோனும், சுபனாய் பாக்கியத்திலிருக்கப் பெண்ணுக்குக் கலியாணஞ் செய்து மருமகன் தேடிய செல்வங்களை யெல்லாம் பெற்றுச் செல்வமுடையவனாய் பூமியில் வாழ்வன், எ - று. (506)

அம்புவியிற்குருவும் பத்தாமாதிபதியும்
அன்புறுசுபனுமாய் லக்கினத்தாதிக்கு
இம்புவியின்மித்துருவா யிருவருடன்வெய்யோனும்
இசைந்திருக்கிற்பிதாதிரிய மெய்துமிவன்றனக்கே
விம்பமதியங்கூடி லன்னைசெம்பொன்மேவும்
மேதினிமைந்தன்கூடில் மேவலர்பொன்சேரும்
நட்பியமாகூடின் மித்துருதனமாமரசன்
நண்ணியுறிற்பிராதாபொன்று னயந்துசேரும்.

(இ - ள்.) குருவும், பத்துக்குடையோனும் சுபர்களாய் லக்கினாதிபதிக்கு மித்துருக்களாய் இவர்களுடன் சூரியனும் சேர்ந்திருந்தால் தகப்பன் செல்வஞ் சேரும். சந்திரன் ஒத்திருந்தால் தாய்ச்செல்வஞ் சேரும். அங்காரகன் கூடினால் பகைவர் செல்வஞ்சேரும். புதன் கூடினால் மித்துரு செல்வஞ் சேரும். குரு கூடினால் பிராதா செல்வஞ் சேரும், எ - று.

வேறு.

சேருஞ்சுக்கிரன் கூடிற்றெரிவையர்
ஆறுமாஞ்சனியிற் கடுத்தோர்பொருள்
கூறுபாம்புகள் கூடிலீனத்தொழில்
சாரவேபுரிவார் தனஞ்சாருமால்.

(இ - ள்.) சுக்கிரன் கூடினால் பெண்சாதி செல்வஞ்சேரும். குரு கூடினால் அடுத்தவர்கள் செல்வஞ்சேரும். ராகு கேதுக்கள் கூடினால் ஈனத் தொழில் செய்வோர் செல்வஞ் சேரும், எ - று. (508)

சாருபத்தாமதிபன் சுபக்கோளாகத்
தக்கோர்வீட்டிற்பிறையு மாசன்றனன்றிச்
சேரும்பொன்னவனீசமத்த மனமாகித்
தீயோர்வீட்டினிலிருக்கத் திரவியங்களில்லான்
சேரும்பத்தாமதிபன் றன்கிடந்திலிருக்க
நிட்சேபங்கண்டெடுப்ப னிறைந்தகல்வியாலும்
பாரின்மேவிய தமரோரார்க்களாலும்
பரிவுடன்பொன் சேருமெனவே பரிந்துகூறே.

(இ - ள்.) பத்துக்குடையோன் சுபனாய், தகுந்தவர்கள் வீட்டில் சந்திரனும், குருவுமன்றி பொருள் சேரும். தரு நீசம், அஸ்தமனம் பெற்று தீயோர் வீட்டிலிருந்தால் செல்வமில்லை, பத்துக்குடையோன் நான்கிலிருந்தால் புதையல் கண்டெடுப்பன். அன்றிக்கல்வியாலும் சுற்றத்தாராலும் பொருள் சேரும் என்று சொல்லுக, எ - று. (509)

வேறு.

கூறும்பிரண்டாமிடக் கேந்திரத்தினில்
வீறுமன்னவன் மேவரெண்டாதிபன்
மாறுமாறெட்டாடு வியத்துறில்
ஏறுந்தந்தைதனஞ் சற்றுமில்லையே.

(இ - ள்.) இரண்டாமிடத்தான் கேந்திரத்தில் குருவிருக்க, இரண்டுக்குடையோன் ஆறு, எட்டு பன்னிரண்டில் இருந்தால் தகப்பன் செல்வஞ் சிறிது மில்லையாம், எ - று. (510)

வேறு.

சாலமதிதனக்கிரண்டிற் சனிமானிற்கில்
சந்திரனுர்தனக்கு நான்காம்வீட்டாதி
மேலவர்களுடன் கூடிக்கேந்திரங்கள்
மீதிருந்தாற்றந்தைபொருள் வேற்றோர்கொள்வர்
பாலருக்குச்சேராது பாலன்றானும்
பாக்கியவானுகி வெகுபணங்கடேடி
ஞாலமதில்கீர்த்தி யாதிபனும்பூமி
ராசரைச்சேவித்திருப்ப னலமாய்த்தாமே.

(இ - ள்.) சந்திரனுக்கிரண்டில் சநியும் சந்திரனுக்கு நான்கினுதி சுபர்களுடன் சேர்ந்து கேந்திரத்திலு மிருந்தால் தந்தை செல்வத்தை அந்நியர்கள் கொள்ளுவார்கள். பிள்ளைக்குச் சேராது. ஆனாலும் புத்திரனனவன் உலகத்தில் அதிகமாகச் செல்வங்களைத் தேடி அரசரைச் சேவித்து சுகமாயிருப்பான், எ - று. (511)

வே று.

மேத நான்காமதி னிரவி கேந்திரங்கடன்னில்
ஆதவனிருக்கவேதா னந்தநான்காமிடத்தில்
ஓதியநல்லோர்மேவி னுமபிதா தனத்திற்காசு
பாதியுமிவனுக்கில்லை பரதேசத்திடையிற்செல்வன்.

(இ - ள்.) நான்குக் குடையோனிருக்குங் கேந்திரத்தில் சூரியனிருக்கவும் அந்த நான்கில் சுபர்களிருந்தாலும் தந்தை செல்வத்திலொரு காசுமில்லாமல் பரதேசியாவான், எ - று. (512)

வே று.

ரண்டாமதிதான்மிகவேயிருந்து கேந்திரமேறிமிகக்
கொண்டேதனத்துக்காரகனுங் குலவியுச்சமாகியிவர்
மிரண்டாயிருக்கத்தனபதியாய் விளங்கியிருப்பனறிவுள்ளோன்
பண்டேசகத்திற்பொன்றேடிப் பதியிலிருப்பனெனச்சொல்லும்.

(இ - ள்.) இரண்டுக்குடையோன் கேந்திரமேறி தனகாரகன் சேர்ந்து உச்சமாகி யிருக்கத் தனபதியா யிருப்பன், அன்றியுள்ளவனுமவன் இன்னுஞ் செல்வந்தேடி வாழ்வன், எ - று. (513)

சொல்லுமிரண்டாமதிபதி சூழ்ந்துலாபத்தினிலிருக்க
வெல்லும்லாபன்பாக்கியாதி விரும்பியிரண்டிலுற்றிடவே
நல்லகுணமுந்தருமனுமாய் நான்குலட்சம்பொன்றேடி
அல்லலறவே வாழ்ந்துண்டே யவனிதன்னிலிருந்திடுவான்.

(இ - ள்.) இரண்டுக் குடையோன் லாபத்திலும், லாபாதிபதியும், பாக்கியாதிபதியும் இரண்டிலுமிருந்தால் நற்குணம், தருமமுடையவனும் நான்கு லட்சம் பொன்றேடி வாழ்பவனுமவன், எ - று. (514)

இந்தவில்லேலலக்கினமா யிதிலே குருவுந்தானுறவே
பொருந்துந்துலாத்திற்சனியுச்சம் புகலாபாதிபனுங்கிடத்தில்
திருந்தியிருக்கத்தனந்தேடித் திகழ்வனீதிதவறுமல்
தெரிந்தேபலரைரக்ஷித்துச் செம்பொன்கோடிதேடுவனே.

(இ - ள்.) தனுசுலக்கினமாய் குருவும் அந்த வீட்டிலிருந்து துலாத்தில் சனி யுச்சனும், லாபாதிபதி நான்கிலுமிருந்தால் கோடிப்பொன் தேடியிருப்பன். அன்றி நீதிதவறுமற் பலரை ரட்சிப்பான், எ - று. (515)

வருமேதனுசுகுடமீனம் வாழுங்கன்னிரிஷபமுடன்
புரமேய்நவகோளிந்தமனே புகுந்தாற்றேவர்க்கரிதாய
திரமேயோகநவகோடி செம்பொன்றேடிராச்சியங்கள்
உலகமேயாள்வன்லக்கினமு மோங்கித்தனுசிற்பிறந்திடவே.

(இ - ள்.) ஜன்மம் தநுசுலக்கினமாயிருந்து தநுசு கும்பம் மீனம் கன்னி ரிஷபம் இவ்விடங்களில் நவக்கிரகங்களிருந்தால் தேவர்களும் பிரமிக்கத்தக்க அநேக திரவியந்தேடி ராச்சியங்களை யாள்வான். அவனும் தநுசுலக்கினமாயிருந்தால், எ - று. (516)

வேறு.

வயதிரேக்காணத் திரைபுகர்கூட
தூயலாபாதி சுபர்வர்க்கமேறிட
ஆயவுலகிலரும்பொருள் கோடிதான்
நேயமாய்த்தேடுவ னென்றுமொழிந்திட.

(இ - ள்.) திரேக்காணத்தில் குருவும் சுக்கிரனும் கூடவும், லாபாதிபதி சுபவர்க்க மேறவும் உலகில் அதிக செல்வந்தேடி வாழ்வன், எ - று.

கிரகாசம் (வேறு.)

இலக்குமிரண்டின்மூன்றிடத்தி விரவியுறிற்கார்ப்புடன்சுடுகை
நிலவுக்குச்சீதளத்துவர்ப்பு நீடுகுசர்க்குக் குளிர்மைகைப்பே
அலகுபுதற்குச்சலமுமே யாம்பொன்னுக் குமதுரமழல்
கலைச்சனிக்கே கஷாயத்தண் கமற்சுக்கிரற்குப்புளிகுளிர்ச்சி.

(இ - ள்.) இரண்டிலும், மூன்றிலும் சூரியனிருந்தால் கார்ப்புடன் சுடுகையை விரும்பும். நிலவுக்குச் சீதளம் துவர்ப்பும், அங்காரகனுக்கு குளிர்மை கைப்பும், புதனுக்குச் சலமும், குருவுக்கு மதுரம் அழலும், சனிக்கு கஷாயமும் கமரும், சுக்கிரனுக்குப் புளிப்பும் குளிர்ச்சியும் வேண்டும், எ - று.

இரண்டாம்பாவம்

முற்றிற்று.

# மூன்றாம் பாவம்.

சகோதரபலன்.

துலங்குமூன்றுமிடந்தன்னிற றுணைவர்பலனைச்சொல்லுங்கால்
இலங்குமூன்றுமதிபதியு மிருந்தார்கண்டார் தனைக்கொண்டு
நலங்கொளுச்சம்பகைநீச நட்புமறிந்தேயுரைசெய்யப்
பலன்கொள்பெண்ணாண்கிரகங்கள்பார்த்துத்துணைவர்பலன்சொல்லே.

(இ - ள்.) விளங்காநின்ற மூன்றாமிடங்கொண்டு சகோதரர்கள் பலனைச் சொல்லுமிடத்து மூன்றுக்குடையவனையும், அவ்வீட்டிலிருந்தாரையும் பார்த்தாரையும் மூன்றாமிடத்தானிடம் சேர்ந்தாரையும் அவர்களைப் பார்த்தாரையுங் கொண்டு உச்சம், பகை நீசம், நட்பு இவைகளையுமறிந்து பெண், ஆண் கிரகங்களைப் பார்த்துச் சொல்லுக, எ - று. (519)

சொல்லுகுசன்மூன்றுமிடத்தி லிருக்கிற்பார்க்கிற்றுணைவரற்பம்
வெல்லும்பதினொன்றிற்குசனு மேவின்மூத்தோர்மிகவுண்டாம்
வல்லவிரண்டாமிடத்திற்சேய் மருவவுடனேவருந்துணைவர்
நல்லமும்மூன்றாய்ப்பார்த்து நாரியாணித்தனையுன்னே.

(இ - ள்.) அங்காரகன் மூன்றிலிருந்தாலும், பார்த்தாலும் சகோதரர் அற்பம். பதினொன்றில் இருந்தால் மூத்த சகோதரர் மிகவுண்டாம். இரண்டி லிருந்தால் உடனே சகோதரர் பிறப்பார்கள். மும்மூன்றாய்ப் பார்த்துக் கணக்கிட்டுச் சொல்லுக, எ - று. (520)

வேறு.

உன்னுமூன்றுமிடத்ததிபன்குசன்
நன்னர்நான்காமதிபனுங்கூடினும்
தன்னமூவருநான்குறத்தந்துணை
அன்னர்பங்குமனைவந்து சேருமே.

(இ - ள்.) மூன்றுக்குடையோனும், அங்காரகனும், நான்குக் குடையோனும் கூடினாலும் இம்மூவரும் நான்கிலிருந்தாலும் தம் துணைவர்களுடைய பங்குமனை வந்து சேரும், எ - று. (521)

வேறு.

சேருஞ்செவ்வாய் புடத்தைவைத்துக்கொண்டு
செய்யகருங்கோள் புடத்தையெடுக்கிலப்போ

நேருமந்தராசியிற் பொன்மருவும்போது
நிற்குமிளையோர்க்கரிஷ்டங் கருங்கோடனிலைப்
பாருமந்தப்புடத்தி லங்காரகனைவாங்கிப்
பண்பொடுநின்றிடுராசி தனிலரசன்வந்தால்
ஊருமுற்றுருமறியச் சேட்டன்பார்விட்டே
உயர்பரமபதியணுகுமென வுரைசெவ்வாயே.

(இ - ள்.) செவ்வாய்ப் புடைத்தை வைத்துக்கொண்டு ராகுபுடத்தை யெடுத்தால் அப்பொழுதுண்டாகின்ற ராசியில் குருவரும்போது இருக்கின்ற கனிஷ்டர்களுக்கரிஷ்ட முண்டாகும், ராகுவை அந்தஸ்புடத்தில் வாங்கி அங்காரகனையும் அந்தஸ்புடத்தில் வாங்கி நின்ற ராசியில் குருவந்தால் ஜேஷ்ட சகோதரன் மரிப்பனென்று சொல்லுவாய், எ - று.

உறைசெறிமூன்று மாதிலாபாதிபதிக்கே
உறவாகமூன்றுதி யுயர்ந்தபிரபலனாய்
வரவுடன்மித்திரருடனே கூடியேலாப
மதிலிருக்கவவருடனே வந்துதான்கூடித்
திரமுடனேயிருந்ததொகைப்படி
திரிபூமானெனக்கிரகச் செயலறிந்துபகர்மின்
கரியகுழன்மதிவதனக் காவியக்கண்ணினிய
கனியமுதம்போலு மொழியாங்கன்னியாரே.

(இ - ள்.) மூன்றுக்குடையோன் லாபாதிபனுக்கு மித்துருவாகவும், பிரபலனாகவுமிருந்து மித்திருடன் கூடி லாபஸ்தானத்திலிருந்தால் அவருடன் எத்தனைப்பேரிருக்கின்றனரோ அத்தனை சகோதரர்களுண்டாவார்கள், ஓ பெண்களிற் சிறந்த நங்காய், கிரகச் செயல்களையறிந்து பூமானெனவுஞ் சொல்லுவாய், எ - று. (523)

ஆர்கடந்தேண்மீன லக்கினத்தைக்கண்டே
அன்புடனேநலபாகம்பண்ணி யைந்தாம்பங்கில்
யாரிலுதித்தான்பின்னே பிறந்தகன்னிக்குப்
பக்குவமெப்படியென்னி லக்கடகமாயின்
காரிவெகுதூலகாயம் முடையளாவள்
கவிந்நாகிற்பேய்போற் கால்குறுகிப்பருத்துச்
சேரவுருக்குலைந்திருப்பாளா மீனமாகில்
செய்யகான்முடமாகித் திரிந்திடுமென்னே.

(இ - ள்.) கடகம் விருச்சிகம்மீனம் இந்த லக்கினங்களை ஒன்பது பங்கு பண்ணி ஐந்தாம் பங்கில் உலகத்திலுதித்தால் அவனுக்குப் பின்னே பிறந்த

பெண்ணுக்குப் பக்குவமெப்படி யென்றால், கடகமானால் தூலகாயமும் விருச்சிகமானால் பேய்போல் கால்குறுகிப் பருத்து உருக்குலைந்தும் மீனமானால் கால் மூடமாயும் திரிவாள், எ - று. (524)

வே று.

என்னுமூன்றுமதிபதிபுடத்திலேற்றிடுசெவ்வாய் புடத்தைகயுங்கூடித்
துன்னிரண்டுராசிகுருவருங்காலந் துணையுமிப்புடங்கூட்டி
மின்னியராசியங்கிசமட்டாய் மேஷமுதலாயெண்ண
மன்னியதுணைவர்தொகைவரும்பாவர் மருவிடலழிந்திடுமென்னே.

(இ - ள்.) மூன்றுக்குடையோன் ஸ்புடத்தில் அங்காரகன் ஸ்புடத்தையுங் கூட்டி வந்த ராசியில் குரு வருங்காலத்தில் சகோதரருண்டாம். இப் புடங் கூட்டிய ராசி அங்கிசம்வரைக்கும் மேஷமுதலா யெண்ணிப் பார்க்க சகோதரர்களது தொகை ஏற்படும். அதில் பாபர் சேர்ந்தால் அழிந்திடும் என்று சொல்லுக, எ - று. (525)

வே று.

ஆறுமிடத்திலா யகருங்கோள்
வீறுயிருக்கமேவு மவன்றிசை
பேறுய்வரினும் பெலமுள்ளசகோதரம்
நீறுய்யுயிர்விடு நேமியோரறிய.

(இ - ள்.) ஆறும் வீட்டில் ராகு பலத்துடனிருக்க அவன் திசைவரின் பலமுள்ள சகோதரம் பல்லோரறிய இறக்கும், எ - று. (526)

வே று.

அறிந்தாதைக்கியோன்பானுக் கொன்பானும்
அன்னைக்கோநான்கினுக்கு நான்கினும்
செறிகனிட்டற்கொருமூன்றின் மூன்றினும்
சேட்டனுக்கப்பதினொன்றின் பன்னொன்றினும்
உறுமாமன்றனக்கும் புத்திரற்குமைந்துக்
கோமைந்தினுமுயர் சகோதரங்கள்
நறுங்குழலங்கிசராசி யாண்பெண்ணோர்ந்தே
நவிலுவாயத்தொகையி னளவேயென்று.

(இ - ள்.) தகப்பனுக்கு ஒன்பதுக்கு ஒன்பதாலும், தாய்க்கு நான்குக்கு நான்கினாலும், கனிஷ்ட சகோதரற்கு மூன்றுக்கு மூன்றினாலும், ஜேஷ்ட சகோதரனுக்கு பதினொன்றுக்குப் பதினொன்றாலும், மாமனுக்கும், புத்திரற்கும் ஐந்துக்கு ஐந்தினாலும் சகோதரர்களுதித்தல் வேண்டும். அங்கிச ராசியினால் ஆணென்றும் பெண்ணென்றும் அறிந்து சொல்லுவாய் பெண்ணே, எ - று. (527)

## கர்ணபூஷண பலன்.

மூன்றமிடத்திற்சுபக்கிரக மும்முப்பலமாயுற்நோக்க
மூன்றுமாதிபலவானுயிருக்க மூன்றிலுச்சருறத்
தோன்றுகர்ணபூஷணங்கள் சூடியிருப்பன்சுகமாக
ஆன்றகர்ணாசரணத்தை யளிப்பாரிவரென்றறைவாரே.

(இ - ள்.) மூன்றமிடத்தில் சுபக்கிரகங்களிருந்து பலமாய்ப் பார்க்கவும் மூன்றுக்குடையோனும் பலமாயிருக்கவும், அதிலே உச்சர்களிருக்கவும் கர்ணாபரணங்கள் அணிந்திருப்பான். ஆகையால் இக்கிரகங்களே கர்ணாபரணத்தை அளிப்பரென்று சொல்லுவாய், எ - று. (528)

அறையும்மூன்றிற்சுக்கிரனே தமர்ந்தான்முத்துக்கடுக்கனுயும்
இறைவனிருக்கிலபரஞ்சி ரவிசெவ்வாய்க்கிரத்தினங்கள்
அறையும்புதற்குச்சாமவன்ன மணியுஞ்சேருமிதுவல்லால்
நிறையுமதியுற்றிடிற்சகலா பரணம்பெறுவர்நிச்சயமே.

(இ - ள்.) மூன்றில் சுக்கிரனிருந்தால் முத்துக்கடுக்கனும், குருவிருந்தால் அபரஞ்சியும், சூரியனும் செவ்வாயுமிருந்தால் இரத்தினமும், புதனிருந்தால் சாமவர்ணாபரணமும் சேரும், அன்றி வளர்பிறைச் சந்திரனிருந்தால் நிச்சயமாய் சகலாபரணமு முண்டாகும், எ - று. (529)

## வேறு.

நிச்சயமாங்காரியுறிற் றிருமேணிக்கடுக்கன்
நீள்கருங்கோணிலஞ் செம்பாம்புக்குச்சிவப்பாம்
அச்சமறமூன்றுதி பிருக்கின்றவீட்டுக்
காதிபலனுயிருந்தா லணிசெவிப்பூணுளதாம்
உச்சிதமாயிவையெல்லா மிடக்காதுனக்கென்ப
உயருமலாபாதிபதி யுறைந்தருளும்வீட்டோன்
இச்சையுடன்கேந்திரத்தி னல்லோர்கண்டிடவே
இருக்கில்வலச்செவிவளம் பூணியம்பவும்பூண்டிடவே.

(இ - ள்.) சநியிருந்தால் லட்சுமிவர்ணக்கடுக்கனும், ராகுவிருந்தால் நீலக்கடுக்கனும், கேதுவிருந்தால் சிவப்புக்கடுக்கனும், மூன்றுக்குடையோனிருக்கின்ற வீட்டுக்கதிபதி பலவானுயிருந்தால் கர்ணபூஷண முண்டாகும். இப்பொழுது சொன்னவைக ளெல்லாம் இடதுகாதுக்கென்றே சொல்லுவார்கள். லாபாதிபதி யிருக்கும் வீட்டுக்குடையோன் கேந்திரத்திலேறி நல்லோர் பார்வையைப் பெற்றால் வலச்செவி ஆபரணத்தைச் சொல்லலாம், எ - று.

### போஜன பாத்திரபலன்.

எண்ணியிரண்டாமாதி லாபமூன்றாதி
 இதமிலாப்பாவியர்கண்டிடத் தனியேநின்றால்
உண்ணவுநற்சலகமில்லா னுகந்தரெண்டாம்வீட்டில்
 உயருருசெங்கதிரோன் பெற்றுலகிலுள்ளோர்காண
நண்ணியதோர்சனிமேவ ரெண்டாம்வீட்டாதி
 நண்பொடுமூன்றாம்வீட்டி னயந்துநிற்கத்தானும்
பண்ணுடனேசுபர்பார்க்கில் வரும்வெள்ளிக்கலமே
 பாவக்கோள்விழிநோக்கப் படைப்பதுவெண்கலமே.

(இ - ள்.) இரண்டுக்குடையோன், லாபாதிபதி, மூன்றுக்குடையோன் இவர்களைப்பாவிகள் கண்டாலும் தனியே நின்றாலும் உண்ணப்பாத்திரமில்லாதவனவன் இரண்டாம் வீட்டில் சூரியனிருந்து சநியும் கலந்தாலும், இரண்டுக்குடையோன் நட்பாய் மூன்றிலிருந்தாலும் சுபக்கிரகங்களும் பார்த்தாலும் வெள்ளிப் பாத்திரமுண்டாகும் பாபக்கிரகங்கள் பார்த்தால் வெண்கல பாத்திரமுண்டாகும், எ - று. (531)

மூன்றாம்பாவம்
முற்றிற்று.

---

# நான்காம் பாவம்.

### வாகன பலன்.

சசிவாகனாதிசன்மத்தாதி யிம்மூவர்கூடில்
அசுவாகனமுண்டாகு மவருடன்வெள்ளிகூடில்
வசையிலாந்தோளியுண்டாம வாகனத்தானத்தாதி
ஒசிவின்றிவியத்திவின்றி யுற்றிடிற்சிவிகையுண்டே.

(இ - ள்.) சந்திரன், வாகனாதிபதி, சன்மாதிபதி இம்மூவரும் சேர்ந்தால் அஸ்வ வாகனமும், அவருடன் சுக்கிரனும் சேர்ந்தால் தண்டிகையும், வாகனாதிபதி பன்னிரண்டிவில்லாமலிருந்தால் பல்லக்கு முண்டாம், எ - று.

பரிவுடன்பாக்கியாதிபதி வாகனத்தானத்தில்
குருசுக்கிரனோடுகூடி யிருந்திடில்லதுநோக்கில்
கருதியகனகத்தண்டிகைவரு மிவரோடிந்து
பிரியமாய்நிற்கிற் பூச்சக்ரக்குடைபெறுவர்தாமே.

(இ - ள்.) பாக்கியாதிபதியை வாகனஸ்தானத்தில் குரு சுக்கிரர்களோடு கூடியிருந்தாலும், பார்த்தாலும், கனகதண்டிகையும், இவரோடு சந்திரனும் நட்பாய் கூடியிருந்தால் பூச்சக்கிர குடையுமுண்டாம், எ - று.

பூசக்ரக்குடைசந்திரனைப் பொருந்தியேழதிபனிற்கில்
வீசுசாமரையுண்டாகு மிகுபாக்கியத்தோனுன்கோன்
பாசமாம்பத்தினிற்கப் பத்தாதிபதிசன்மத்தில்
நேசமாய்நிற்கிற்சிங்கா தனமுளனிருப்பன்பாரில்.

(இ - ள்.) குடைக்குரியவனோடு எழுக்குடையோன் சேர்ந்திருந்தால் சாமரையும், பாக்கியாதிபதி நான்குக்குடையோன் இவர்கள் உறவாய் பத்திலிருந்தால், பத்துக்குடையோன் சன்மத்தில் நட்பாயிருக்க சிங்காதனமுமுள்ள அரசனுவன், எ - று. (534)

வேறு.

பரவுவாகனதிபதி பாக்கியத்தினிற்கப்
பாக்கியத்தானதிபதி கேந்திரத்தைப்பற்ற
இருவர்நிற்குமனை நல்லோரிருக்குமனையாயின்
இனியசுபக்கிரகத்தோ டிசைந்துமிகக்கூட
விரவுலக்கினதிபதி வாகனகேந்திரத்தில்
மேவுகினுங்கனக தண்டிகையுமிகுதனமும்
மழிவுமதயானை வாகனங்களுமுண்டாக
வரங்கொடுப்பன்வாகன காரகனுஞ்சுக்கிரனே.

(இ - ள்.) வாகனதிபதி பாக்கியத்திலும், பாக்கியாதிபதி கேந்திரத்திலுமிருந்து அவர்கள் நின்ற வீடுகள் சுபர் வீடுகளாயும் சுபக்கிரகங்களோடும் சேர்ந்திருக்கவும், அன்றி லக்கினதிபதி வாகன கேந்திரத்திலிருந்தாலும், கனக தண்டிகையும், மிக்கதனமும், யானை முதலிய வாகனங்களுமுண்டாகும் இவை கொடுப்பவன் சுக்கிரனேயாவன், எ - று. (535)

சுக்கிரனுன்காதியுடனே கூடினும்
துலங்குமிவரிருவர் கேந்திரத்தினிலுற்றாலும்
திக்கெனநான்காதி சசியுடன்லாபத்துறினும்
திறல்பலவாகனமுண்டு தீதகலநான்கில்
தக்ககுருவிருந்திடவே வாகனத்தானத்தான்
தன்னுடன்சுக்கிரன்கூடிற் றண்டிகையுண்டாகும்
மிக்கசுங்கன்றன் வாகனதியோகி
மேருசன்மாதியைக்கூடில் வெறுஞ்சஞ்சாரமேயாம்.

(இ - ள்.) சுக்கிரன் நான்குக்குடையோனுடன் சேர்ந்தாலும்இருவரும் கேந்திரத்திலிருந்தாலும், நான்குக்குடையோன் சந்திரனுடன்கூடி, லாபத்திலிருந்தாலும், மிக்க வாகனமுள்ளவனுவன் அன்றி நான்கில் குருவும், வாகன

திபனுடன் சுக்கிரனும் கூடியிருந்தால் தண்டிகையுண்டாம் சுக்கிரன் வாக னாதிபதியாயிருந்து சன்மாதிபதியைக் கூடினால் வெகுஞ் சஞ்சாரியே யாவான், எ - று. (536)

சாரமுறுஞ்சோமனுக்கு மூன்றிற்சுக்கிர னுந்
தானிருக்கச்சுக்கிரனுர் தமக்குமேமூன்றில்
வீரமுறுமதியிருக்க வன்றியேயின்னும்
வினைவியொருவரையொருவர் பார்த்துமேதிற்கப்
பாரமுறுங்குடும்பத்தா னத்தைநல்லோர்நோக்கிப்
பார்த்தாலுமிலக்கினத்தைப் பார்க்கினும்வாகனங்கள்
சேருமிகவென்றென்றே நல்லோர்கள்சொன்னுர்
சிலைப்புருவக்கயலொத்த விழித்தெரிவைகேளாய்.

(இ - ள்.) சந்திரனுக்கு மூன்றில் சுக்கிரனும், சுக்கிரனுக்கு மூன்றில் சந்திரனுமிருந்து ஒருவரை யொருவர் பார்த்தாலும், அன்றி குடும்பஸ் தானத்தை சுபர் பார்த்தாலும் அன்றி அவர்கள் லக்கினத்தைப் பார்த்தாலும் வில்போலும் புருவம் வேல்போலுங் கண்களுடைய பெண்ணே, வாகனங் கள் மிகவுண்டாமென்று சொல்லுவர், எ - று. (537)

வே று.

நாலிடத்ததிபன்றனு மிலக்கினத்துறபல்லக்கின்
மேலுறுஞ்செல்வமெய்தி மேதினிதன்னில்வாழ்வன்
கோவியலக்கினத்திற் குருவுறவவனைநல்லோர்
சாலவும்பார்க்கமேவாந் தண்டிகைமருவும்வாகாய்.

(இ - ள்.) நான்குக்குடையோன் லக்கினத்திலிருந்தால் பல்லக்கேறத் தக்க செல்வம் பெற்றுவாழ்வன் லக்கினத்தில் குருவிருந்து அவனை சுபர் பார்க்க தண்டிகையுண்டாகும், எ - று. (538)

வே று.

வாகனாதிமருவுமனைதனக்
காகவீரைந்தகத்துக்கதிபனும்
ஏகவீட்டுக்கிறைவனைக்கூடில்
போகவான்வெகுபூமிக்கரசனே.

(இ - ள்.) வாகனாதிபதியிருக்கும் வீட்டுக்குப் பத்துக் குடையோனும் லக்கினாதிபதியைக்கூடினால் போகியும் வெகுபூமிக் கரசனுமாவான், எ- று.

வே று

அரசேகேள்வாகனத்தானுதி நின்றராசி
அன்பொடுநல்லோர்வீடாய்ப் பணபரகேந்திரமாய்
உரைசெறியச்சனித்தசிறு குடிசையுமாடாங்காம்
உகந்தருளன்னைக்கின்ப முண்டாம்வாகனத்தோன்

வரிசையாய்ச்சனிகுருவேன் மதகயந்தண்டிகையாம்
வளர்கனமாமதியாகிற் பூச்சக்கரக்குடையாம்
விரைசெறிசுக்கிரனுகிற் பல்லக்குண்டிரவி
மேனிலொருதாம்புதற்கு விதித்தபல்லக்காமே.

(இ - ள்.) வாகனஸ்தானாதிபதியிருந்த வீடு நல்லோர் வீடாய் பணபர கேந்திரமாயிருக்கச் சரித்தது குடிசையாயினும் அதுபெரிய நடனசாலையாம் அன்றித் தாய்க்குச் சுகமுண்டாம். வாகனாதிபதி சனி குரு இவர்களில் ஒருவராயிருந்தால் மதயானை தண்டிகைகளுண்டாம் பூர்வபக்ஷத்து சந்திரனாயின் பூச்சக்கிரக் குடையுண்டாம் சுக்கிரனாயின் பல்லக்குண்டாம் சூரியனாயின் எருதாம். புதனாயின் பல்லக்குண்டாகும், எ - று. (540)

வேறு.

பலன் றருவாகனாதி பன்புறுபுடத்திலோடு
நலந்துசுக்கிரன்புடத்தைக் கூட்டியேகண்டராசி
தலந்தனிலச்சன்வந்து தான்செறிகேந்திரத்தும்
நலந்திரிகோணமீது நண்ணில்வாகனமுண்டென்பார்.

(இ - ள்) வாகனாதிபதி ஸ்புடத்தோடு சுக்கிரஸ்புடத்தையுங் கூட்டி கண்டராசியில் குருவந்து சேர்ந்து கேந்திரத்திலும், திரிகோணத்திலு மிருந்தால் வாகனமுண்டென்று சொல்லுவர், எ - று. (541)

வேறு.

பலர்புகழுஞ்சுக்கிரற்கு மூன்றிலேழில்
பண்புடன்சந்திரனிருக்கச் சசிக்கேழ்மூன்றில்
நலமருவுஞ்சுக்கிரன்று னிருக்கவேதான்
நண்பொடுவாகனமுண்டு நான்காமாதி
நிலவுநல்லோருடன்கூடிச் சந்திரகேந்திரத்தில்
நிற்கில்வாகனமுண்டு நிதியுமிகத்தேடி
உலகில்நெடுநாளரசன் போலவேவாழ்வன்
உணர்புத்திமானென்றே யுரைத்தனர்நல்லோரே.

(இ - ள்.) சுக்கிரனுக்கு மூன்றிலும் ஏழிலும் சந்திரனும், அவனுக்கு மூன்றில் ஏழில் சுக்கிரனுமிருந்தால் வாகனமுண்டு. நான்குக்குடையோன் சுபரோடு கூடிச் சந்திரகேந்திரத்திலிருந்தால் வாகனமுண்டாகும். அன்றி உலகத்தில் நெடுஞ்செல்வந்தேடி புத்திமானென்று சொல்லும்படி நெடுநாள் வாழ்வான், எ - று. (542)

உரைத்திடுநான்காமாதி லக்கினாதி
யுடன்கூடத்தீயோர்களுடனுங்கூடி
நிரைத்தொருவிட்டினி லிருக்கவந்தவீடு
நீடுசன்மத்தாதிக்கோ ருச்சமனையாயின்

நரைத்தபரிவாகனங்களுளான் புத்திமானும்
நண்புடனேமன்னரை யெந்நாளுஞ்சேவிப்பான்
இரைத்திடுசன்மாதிபதி நான்காதிநல்லோர்
இவர்மூவர்கேந்திரத்தி லிருக்கிலின்பமுண்டாம்.

(இ - ள்.) நான்குக்குடையோன் லக்கினாதிபதியுடனும் பாவர்களுடனுங் கூடி ஒரு வீட்டிலிருக்க அந்த வீடு சன்மாதிபனுக்கு உச்சவீடானால் பரிவாகனமு முள்ளவனவன். புத்திமானும் அரசரைச் சேவிப்பவனுமாவான். சன்மாதிபதி, நான்காதிபதி நல்லோர் இம்மூவரும் கேந்திரத்திலிருந்தால் சுகமுண்டாகும், எ - று. (543)

ஆயிரவிமதிநல்லோர் மூவரொன்றாய்க்கூடி
அன்பொடுகேந்திரத்திருந்தின் மதயானைசேரும்
நேமமொடுசன்மாதி பத்தாமாதிபனும்
நிறைந்தசுபருடன்கூடிக் கேந்திரத்தினிற்கில்
வாமமுறுமதகரி வாகனஞ்சேரும்பருவ
மானசவுந்தரமனையாண் மருவுமறிவினனும்
நேமையிலாச்சன்மாதி லாபாதிநல்லோர்
சேர்ந்துகேந்திரத்திருக்கில் சிந்துரமுண்டாமே.

(இ - ள்.) சூரியன் சந்திரன் சுபர் இம்மூவரும் ஒன்றாய்க்கூடிக் கேந்திரத்திலிருந்தால் மதயானையும் சன்மாதிபனும், பத்துக்குடையோனும் சுபருடன் கூடிக் கேந்திரத்திலிருந்தால் மதயானை வாகனமும் சேரும். அன்றி சுந்தர மனைவியும், அறிவுள்ளவனுமாவான். சன்மாதிபன், லாபாதிபன், சுபர் இவர்கள் சேர்ந்து கேந்திரத்திலிருக்கினும் யானையுண்டாம், எ - று.

உண்டாம்விப்பிரதுரையா லதிகதனமுடையன்
உறுசன்மத்திற் பத்திலுத்தமர்களிருக்க
மிண்டாஞ்சான்மாதிபன் பத்தாமதிபனோடும்
விரும்பியநல்லோர் தாமுமேவிநிற்க
வண்டாருங்குழலின் மடவாயரசராலும்
மாணிக்கவகைசேரு மன்னரைச்சேவித்தே
கொண்டாடுசத்திர சாமரைகண்மிகவுள்ள
கோமானுகுமென்றே கூறுவர்மேலோரே.

(இ - ள்.) அன்றிப் பிராமணர் அரசனாலும் மிக்க செல்வம் பெறுவான். சன்மத்திலும், பத்திலும் சுபர்களிருக்கவும், சன்மாதிபன் பத்துக்குடையானோடு சேர்ந்து நல்லோரையும் கூடியிருந்தால் ஓ பெண்ணே! அரசரால் மாணிக்கஞ்சேரும். அன்றி அரசசேவைசெய்து சத்திரசாமரைகள் மிகுதியுமுள்ள கோமானவனென்று சொல்லுவர் பெரியோர், எ - று. (545)

கூறுஞ்சன்மாதிபன் பத்தாமிடத்திலிருக்க
  குலவுபத்தாதிப னுன்காமிடத்திற்கூட
வீறுடன்காமாதிபதி யுச்சமாகில்
  வேந்தனுகுவன்சுகவான் லெகுலீலாவிநோதன்
பேறுடன்பத்தாமாதிபதி நான்கினிற்கப்
  பெருமையுடனுன்காதிபதி பத்தினினிற்கப்
தேறுசன்மாதிபதி யுச்சமாய்மேவத்
  திரசகலவாகனங்கள் சேருமன்னனுமே.

(இ - ள்.) சன்மாதிபதி பத்திலும், பத்தாதிபன் நான்கிலுமிருந்து அதில் நான்காதிபன் உச்சமானல் அரசனுவான். சுகவானும் லீலாவிநோதனுமா யிருப்பன். அன்றி பத்துக்குடையோன் நான்கிலும், நான்குக்குடையோன் பத்திலும் சன்மாதிபனுச்சமாயிருக்கச் சகல வாகனஞ்சேரும். அரசனுவான், எ - று. (546)

மன்னியரெண்டாமதிபன் லாபத்திலிருக்க
  மற்றுமந்தலாபாதி வந்துரெண்டின்மேவ
உன்னியநான்காமாதிபதி யுச்சமாக
  உயர்சகலவாகனங்க ளுளவேந்தனுவன்
சொன்னவிரண்டாமதிபன் லாபாதியிருவர்
  தொடர்ந்திரண்டாமிடத்திருக்கச் சூழ்பத்தாமதிபன்
பின்னுமுச்சனுயிருக்க வரந்தோளியுண்டாய்ப்
  பேருலகில்வாழ்வரெனப் பேசுவர்நூல்வல்லோர்.

(இ - ள்.) இரண்டுக்குடையோன் லாபத்திலும் அந்த லாபாதிபன் இரண்டிலும் நான்குக்குடையோன் உச்சமாயிருந்தால் சகல வாகனங்களுள்ள அரசனுவன். இரண்டாமதிபன் லாபாதிபதி இவர்கள் சேர்ந்து இரண்டாமிடத்திலும், பத்துக்குடையோன் உச்சனுமாயிருக்க தண்டிகையோடு வாழ்வானென்று சொல்லுவர், எ - று. (547)

மாதுருபலன்.

வேறு.

அன்னைதன்றனத்தாதி யதியட்டமத்திற்காரி
தன்னுடன்கூடிற்பின்கோசர மன்னைக்கைந்தொன்பானின்
மன்னியகாரிமேவின் மாதாவுக்கரிட்டஞ்சொல்லும்
மன்னியநற்கோளுச்ச மெய்திடினன்காநல்லாய்.

(இ - ள்.) தாய்வீட்டுக்குடையோன் அட்டமத்தில் சனியுடன் கூடியிருந்தால் பின் கோசரமாம். அதற்கு ஐந்து ஒன்பதாமிடங்களில் சனியிருந்தால் தாய்க்கு அரிட்டமும், சுபக்கிரகங்கள் உச்சமாகவிருந்தால் நன்மையுண்டாம்.

நாலிரண்டேழிடத்தி னதிபராய்நண்ணுமூவர்
நாலிரண்டேழிடத்திற் சனிகுசனுடனே நண்ணில்
நாலிரண்டேழிற்செவ்வாய் நண்ணிடிற்காரிபார்க்க
சாலவன்னைக்கரிட்டஞ் சாற்றுவர்சனியைக்கொண்டே.

(இ - ள்.) நான்கு இரண்டு ஏழு என்னும் இவ்விடங்களுக்குத் தலைவரான மூவரும் அந்த விடங்களில் முறையே சநி, அங்காரகர்களுடன் கலந்திருந்தாலும், அன்று அங்காரகன்மாத்திர மிருந்தாலும், சநி பார்த்தாலும் சநியைக்கொண்டு தாய்க்கு அரிட்டஞ் சொல்லுவர், எ - று. (549)

சனிகுசர்க்கைந்தேழொன்பான் றனிற்சசியுறிற்றாய்நில்லாள்
இனியபொன்பார்க்கினிற்ப னிலக்கினத்திந்துநிற்க
முனிபவரிக்கைநோக்க முந்நுமேழிடத்திற்செவ்வாய்
தனியுறயாந்தபிள்ளை தனைப்பிறர்வளர்ப்பர்காணும்.

(இ - ள்.) சநி, அங்காரகர்களுக்கு ஐந்து ஏழு ஒன்பதாம் வீடுகளில் சந்திரனிருந்தால் தாயிறப்பள். குரு பார்த்தால் உயிர்மீள்வன். லக்கினத்தில் சந்திரனிருக்க சத்துருக்கள் அவனைப் பார்க்கவும் ஏழாமிடத்தில் அங்காரகன் தனியாயிருக்கவும் பிறந்த பிள்ளையை அந்நியர் வளர்ப்பார்கள், எ - று.

கதிரவற்கிரண்டிற் பன்னிரண்டினிற்காரிநிற்க
மதிதனக்கிரண்டிற்பன்னி ரெண்டினின்மைந்தநிற்கக்
கதிர்குசன்கூடிமற்றுங் காரிசந்திரனுங்கூட
அதிபனுந்தந்தைதாய்க்கு மரிட்டமென்றுரைகள்பன்னே.

(இ - ள்.) சூரியனுக்கு இரண்டு பன்னிரண்டில் சநியும், சந்திரனுக்கு இரண்டு பன்னிரண்டில் சநியும் சூரியனும் அங்காரகனும் பின்னும் சநியும் சந்திரனும் கூடியுமிருந்தால் தந்தைதாயிருவர்க்கும் அரிட்டமுண்டாமென்று சொல்லுவாய், எ - று. (551)

வேறு.

பன்னிரண்டினிரண்டினிற் சன்மத்திலிந்து
பாவருடன்கூடிநிற்கப் பயந்தவன்னைக்கரிட்டம்
அன்னியதிபன்றிசையின் மாதுருதானத்துக்
கைந்தொன்பானிற் காரியனுகிலரிட்டமதாம்
மன்னியமாதுருத்தானந் தனக்கட்டமத்தில்
மந்தனன்காதிபனு மருவியுறிலரிட்டம்
என்னுநான்கதிபனுடனே செவ்வாயேனும்
இரவியதாகிலுங்கூடி விடர்நோய்புந்தியினில்.

(இ - ள்.) பன்னிரண்டு இரண்டு சன்மம் இவைகளில் சந்திரன் பாவர்களுடன் கூடியிருந்தால் தாய்க்கு அரிட்டமாம். தாய் ஸ்தானாதிபன் திசையில் தாய் ஸ்தானத்திற்கு ஐந்து ஒன்பதாமிடங்களில் சநிவரின் அரிட்ட

மாம். மாதுரு ஸ்தானத்திற்கு அட்டமத்தில் சநியும், நான்குக்குடையோ னும் சேர்ந்திருந்தால் அரிட்டமாம். நான்காதிபனுடன், அங்காரகனுை னும் சூரியனுைனும் சேர்ந்தால் புத்திசையில் ரோயுண்டாகும், எ - று.

புத்தியுநான்காதிபனுந் தீயோர்வீட்டிற்
 புகழ்க்கோணுைக்கற வருநாளரிட்டமாகும்
சித்தையுடனுன்காதி யுடன்றனுதி
 சேர்ந்தெங்கேகிற்கினும் பொன்சேதமன்னைக்
கந்தநான்காதியுடன் காரிசெவ்வா
 யனுகிலவர்திசையிலன்னைக் கரிட்டமாகும்
வந்துசெவ்வாய்நான்கிலுறிற் சனியுமிந்து
 மருவியெங்கே நின்றாலு மரணமற்றங்கதமே.

(இ - ள்.) புதனும், நான்குக்குடையோனும் பாவர்கள் வீட்டில் சுபர் பார்வையில்லாதிருக்க நேரிட்டகாலத்தில் அரிட்டமுண்டாகும். நான்குக் குடையானுேடு தனுதிபதி சேர்ந்து எங்கேயிருந்தாலும் அன்னைக்குப் பொன் சேதமாம். நான்காதிபனுடன், சநி, அங்காரகன் சேர்ந்தால் இவர்கள் திசை யில் அன்னைக் கரிட்டமுண்டாகும். அங்காரகன் நான்கிலும், சநியும் சந்திரனும் சேர்ந்து எங்கே யிருந்தாலும் மரணமுண்டாகும், எ - று.

வே று.

அத்தங்கமதாய்மாதுருக்காதிபதி வியத்திலுறநான்கில்
மெய்த்துங்கலெவெண்மதியிருக்க வதற்கேழ்காரிமேவுகினும்
புத்திசெறிசுக்கிரற்கேழற்பூமி சுதனும்பொருந்திநிற்கில்
சித்திமன்னைதனக்கரிட்டஞ் சேருநற்கோள்செறியினன்றாம்.

(இ - ள்.) மாதுருஸ்தானுதிபதி அஸ்தங்கமதாய் பன்னிரண்டிலிருக்க சந்திரன் நான்கிலும் அதற்கேழில் சநியும், சுக்கிரனுக்கு ஏழில் அங்காரக னும், சேர்ந்தால் தாய்க்கரிட்டமாம். சுபர்களிருந்தால் நன்மையாம், எ - று.

செறியுமிரவியுடன்காரி சேர்ந்துகுடும்பத்தினிலிருந்தே
அறியுமூன்றுமதிபனையு மன்னைபதிநான்காமிடமும்
பிரியமறவேசனிபார்க்கப் பெலமற்றிக்கேதாடாவிருக்க
மறுதீர்க்கோணுன்காதி யுச்சமானுலும்மாதாவே.

(இ - ள்.) சூரியன், சநியும்சேர்ந்து குடும்பத்திலிருந்து மூன்றுமதிபனை யும், அன்னைபதியையும், நான்கையும் சநிபார்த்தாலும் சந்திரனுேடு ராகு கேதுக்களும் பலமற்றிருந்தாலும், பாபக்கிரகங்களும் நான்காமதிபனும் உச்சமானுலும் மாதாமரிப்பாள், எ - று. (555)

மாதாபதியிற் சுசிவெள்ளி மாசுணமூன் றுறவதற் கேழ்
மீகானைத்திற் காரியுற வெய்யோனுடன் மூன்றுமதியைக் கிற்
றிதாயிருக்கச் சனியவனைக் கெதிர்த்துப் பார்க்கக் குடும்பத்தை
ஏதானங்காரகன்பார்க்க வின்றாட் கரிட்டமெனச் சொல்லே.

(இ - ள்.) மாதுருஸ்தானத்தில் சந்திரன் சுக்கிரன் ராகு இம்மூவரும்; அதற்கேழிலும், ஐந்திலும், சனி, சூரியனும், மூன்றுமதியனும் ஐந்திலும் பகை நீங்கலாக இருந்து அவர்களைச் சனி பார்த்தாலும் குடும்பத்தை அங்காரகன் பார்த்தாலும் தாய்க்கு அரிட்டமாகும், எ - று. (556)

சொல்லார்மேடலக்கினத்துக் கன்னைபதியிற் சுக்கிரன்புதன்
உல்லாசங்கள்பெறநிற்க வதற்கேழாகுருச்சனியேழ்
பொல்லாவேழிற்சனியிருக்க வன்னைக்கன்னைபோமுச்சம்
நல்லமதியுநல்லோரு மன்னைக்கரிட்டந்தராரே.

(இ - ள்.) மேஷலக்கினத்துக்கு மாதுருஸ்தானத்தில் சுக்கிரன் புதன் இவர்களும் அதற்கேழில் குருவும், சந்திரனுக்கு எழில் சனியுமிருந்தால் தாயிக்குத் தாயிறப்பாள். உச்சர்களும் வளர்பிறைச் சந்திரனும், சுபர்களும் தாய்க்கு அரிட்டந் தரமாட்டார், எ - று. (557)

நல்லார்சனிசெவ்வாயிரண்டு நான்காமிடந்தனைப்பார்க்கில்
ஒல்கா திருக்கிற்காரகனு மொசிவாய்விரையமுற்றிடவே
சொல்லாவன்னைதனக்குறுநோய் சினத்தேயரவுஞ்சேர்ந்துற்றால்
நில்லாளன்னைபொன்னோக்கி னிற்பள்சிலநாணிலத்தே.

(இ - ள்) சனி, அங்காரகனிவர்கள் இரண்டு நான்காமிடங்களைப் பார்த்தாலும், இருந்தாலும் காரகன்வியமடைந்தாலும், அன்னைக்குறும் நோயைச் சொல்வான், ராகு, கேதுக்கள் இவர்களுடன் சேர்ந்தால் அன்னைமரிப்பள், குருபார்த்தால் சிலநாளிருந்து மரிப்பள், எ - று. (558)

நிலத்திநான்காமிடந்தனக்கோ ரிரண்டாமிடத்திலிருந்தவர்கள்
பலத்தைக்குடும்பாதிபன்பலத்தைப் பெற்றதாயும்பலன்பெறுவள்
நலத்துநான்காமதிபனுச்ச நண்ணியாணங்கிசத்திலிருந்தால்
குலத்துக்கொழுநன்றண்டிப்புக் குள்ளாகாளக்கொடிதானே.

(இ - ள்.) நான்காமிடத்திற்கு இரண்டில் இருந்தவர்களும் குடும்பாதிபதியும் பலத்தைப் பெற்றதாயும் பலன் பெறுவள். நான்குக்குடையோன் உச்சம் பெற்று ஆணங்கிசத்திலிருந்தாய் புருஷன் தண்டனைக்குட்படான், எ - று. (559)

கொடியகதிராதவன்புடத்துக் குள்ளாம்புலியைத்தான்வாங்கிப்
படியுமிராசிதனிலாசன் பற்றுங்காலநிரியாணம்
கடியமதியின்புடத்துக்குள் காரிபுடத்தைத்தான்வாங்கி
நெடியராசிதனிற்காரி வருநாளன்னைநிரியாணம்.

(இ - ள்.) சூரியன் ஸ்புடத்துக்குள் சந்திரனை வாங்கிவரும் இராசியில் குருவருங்காலத்திலும், சந்திரபுடத்துக்குள் சநிபுடத்தை வாங்கிவரும் ராசியில் சநிவருநாளும் தாய்மரிப்பள், எ - று. (560)

ஆணிமதியர்தனக்கேழிற் செவ்வாயுறிலன்னைக்கரிட்டம்
காணியாமாதுருத்தானங் கடகமாகப்பிறைநிற்கில்
பூணும்வயதுபூரணமாம் பொல்லாரிரண்டுபுறமிருக்க
வேணுமதியநடுவிருக்க வன்னைக்கரிட்டமிசைந்திடுமே.

(இ - ள்.) சந்திரனுக்கு ஏழில் அங்காரகனிருந்தால் தாய்க்கரிட்டமாம். மாதுருஸ்தானம் கடகமாய் அதில் சந்திரனிருந்தால் பூர்ண வயதாம். இருபக்கத்திலும் பாபிகளிலிருந்து நடுவே சந்திரனிருக்கத் தாய்க்கு அரிட்டமுண்டாகும், எ - று. (561)

இசைந்தவன்னைபிதாத்தானத் திறைவரிரவியுடன்கூடி
அசைந்திடாதெட்டாறு வியத்துறினுநீசமாகவுமே
நிசந்தானுறவேயிருக்கிற்றாய் தின்றதந்தையிருவருக்கும்
கசந்தேபிரியமில்லாத கடினமைந்தனுங்கண்டீர்.

(இ - ள்.) மாதுரு பிதுர்ஸ்தானங்களில் குரு சூரியனுங்கூடி எட்டு ஆறு பன்னிரண்டாமிடங்களி லிருந்தாலும் நீச்சம் பெற்றிருந்தாலும், தாய் தந்தையர் இவர்களுக்குப் பிரியப்படாத கடும்புத்திரனுவான், எ - று. (562)

கண்டவன்னைபிதாத்தானக் கடவுளிசைத்தெங்கேயுறினும்
மண்டுமிரவிமதிகூடி மாதாதந்தைதானத்தில்
அண்டியிருக்கிற்பிதாவுடனே யன்னைக்கெய்துமனுமரணம்
பண்டுநான்கொன்பதற்கிறைவர் பலத்தாற்பாலன்பரிவுசொல்வாம்.

(இ - ள்.) மாதுர் பிதுர் ஸ்தானுதிபதிகள் எங்கேயிருந்தாலும் சூரியனும் சந்திரனுங்கூடி மாதுர் பிதுர்ஸ்தானத்திலு மிருந்தாலும் மாதாபிதா இருவரும் ஒன்றாய் மரிப்பர். இனி நான்கும் ஒன்பதாமிடங்களின் தலைவர்கள் பலத்தால் புத்திரன் விஷயம் சொல்லுவோம், எ - று. (563)

சொல்லுநான்கொன்பதுக்கிறைவர் தொடர்ந்துதனபாக்கியலாபத்
தல்லலறவேயிருந்தாலு மடைவேயுச்சகேந்திரத்து
வெல்லுந்திரிகோணங்களினு மேவிற்றந்தைதாய்மைந்தர்
எல்லையில்லாச்சந்தோஷ மெய்தியிருப்பாரென்பாரே.

(இ - ள்.) நான்குக்கும் ஒன்பதுக்கும் உடையவர்கள் தனம் பாக்கியம் லாபம் இவைகளிலும், உச்சம் கேந்திரம் திரிகோணம் இவைகளிலு மிருந்தாலும், தந்தை தாய் மைந்தர் இவர்கள் மிக்க சந்தோஷத்தை யடைந்திருப்பார்கள், எ - று. (564)

ஒன்பானோன்பானுதிபதி பிரியபலமாய்ச்சன்மாதி
முன்பாகநான்காமதிபதி மூவர்பலன்களற்றிருக்க
அன்பாயின்றதாயுதரத்தகறுதுங் கர்ப்பத்தந்நாளில்
வன்பாய்வரந்திமரிப்பளென வகுத்தார்சுருதிவல்லோரே.

(இ - ள்.) ஒன்பதுக்குடையோன் பலவானும் அவனும், சன்மாதிபனும் நான்குக்குடையோனும் ஆகிய இம்மூவர் பலமற்றிருக்கப் பிள்ளையைப் பெற்ற அன்றைக்கே தாய் இறப்பாள், எ - று. (565)

இந்துசேயாறுமாதி யிவர்களுங்கூடிநான்கில்
வந்துதானிருக்கிலீன்ற மாதாவுஞ்சோரம்போவள்
அந்தநான்கொன்பதொன்றிற் கதிபர்கள்கூடிக்கோணம்
கந்துகேந்திரத்தின்மேவத் தாயுடன்கட்டையேறும்.

(இ - ள்.) சந்திரன் அங்காரகன் ஆறுக்குடையோன் இவர்கள் கூடி நான்கில் வந்திருந்தால் தாய் சோரம் போவாள். நான்கு ஒன்பது சென்மம் இவற்றிற் கதிபர்கள் சேர்ந்து திரிகோணத்தும், கேந்திரத்துமிருந்தால் தாயுடன்கட்டை ஏறுவாள், எ - று. (566)

### க்ஷேத்திர பலன்.

பத்துநான்காதிபன் செவ்வாயா றெட்டிற்பன்னிரண்டில்
உற்றநீசத்தானத்தி லுறிற்பங்குமனையுமில்லை
மற்றிவர்பலமுற்றுக்கான் மனைபங்குலாபமுண்டாம்
பெற்றநான்கதிப னுச்சம் பெறின்மாடகூடமுண்டாம்.

(இ - ள்.) பத்துக்கும் நான்குக்குமுடையவனும், அங்காரகனும் ஆறு எட்டு பன்னிரண்டு உச்சம் நீசன் இவ்விடங்களிலிருந்தால் பங்குமனையில்லை. இவர்கள் பலப்பட்டிருந்தால் அவையுண்டாம், நான்குக் குடையோன் உச்சம் பெற்றால் மாடகூட முண்டாகும், எ - று. (567)

கூடமாளிகைசிங்காரங் கொடுப்பனான்கதிபனான்கில்
நீடிவாழ்ந்திடவன்றன்னை நெருங்கிநின்றவர்களாமே
நாடுநல்லோர்களாயி னன்மனைபாவராயின்
ஊடியவீடுபாழாய்க் கிடக்குமென்றுரைவழங்கும்.

(இ - ள்.) நான்குக் குடையோன் நான்கிலேயே யிருக்க அவனை நல்லோர்காணின் மாடமாளிகை யுண்டாகும். பாவர் பார்த்தால் வீடு பாழாய்க் கிடக்குமாம், எ - று. (568)

வழங்குநான்காமதிபதியும் வளர்சத்துருநீசத்திலுற
ஒழுங்கும்வியத்தாதிபன்றனத்தி லுறச்சன்மாதிபசெங்கதிரும்
முழங்குநான்காதிபன்கூட நல்லோர்நோக்கமுறாதிருக்கத்
தழங்கும்பங்குமனையெல்லாந் தானும்பறிபோந்தப்பாதே.

(இ - ள்.) நான்குக்குடையோன் சத்துரு நீசஸ்தானங்களிலும், பன்னிரண்டுக்குடையோன் தனத்திலும், சென்மாதிபனும், சூரியனும், நான்காதிபனும் கூடவும், நல்லோர் பார்வை பெறாதிருக்க பந்து மனைகளெல்லாம் பறிகொடுக்கப்படும், எ - று. (569)

தப்பாதாறுமதிபதியுந் தான்பத்தேழிலிருந்திடவே
ஒப்பாஞ்சென்மத்தனிற்செவ்வா யுறையச்சுபக்கோளுறப்பார்க்க
இப்பார்தன்னிற்சத்துருவாயிருப்பார்மனைபந்துள்ளதெல்லாம்
செப்பார்முலையாயிவன்றனக்குச் சேருந்திண்ணந்திறனாலே.

(இ - ள்.) ஆறுக்குடையோன் பத்து ஏழாமிடங்களிலும், அங்காரகன் சென்மத்திலுமிருந்து சுபர் இருக்கவும் பார்வை பெற்றாலும் சத்துருக்கள் செல்வமனையாகவும் இவனைச்சேரும், எ - று. (570)

நாலாமிடத்திறைவனும் லக்கினாதியுடன்கூடி
மேலாய்நாலிலுறிலொருவன் வீட்டிலிருந்துமிகவாழ்வன்
சேலாநாலாமதிபனுடன் சேரும்பாவரெத்தனையோ
மாலாய்மேளத்தனைவீடு கட்டிச்சேதம்வழங்குவனே.

(இ - ள்.) நான்குக்குடையோனும், லக்கினாதிபதியுங்கூடி நாலிலிருந்தால் ஒருவன் வீட்டிலிருந்து இனிமையாய் வாழ்வன். நான்குக் குடையானோடு எத்தனைப் பாவர்கள் சேர்ந்திருக்கின்றனரோ அத்தனை வீடுகள் கட்டி யிழந்திடுவன், எ - று. (571)

வேறு.

வழங்கும்லக்கின மன்பலனின்றியே
முழங்குமாறின் முக்காலிலுறைந்திடில்
தழங்குஞ்சன்மந் தனைப்பாவர்கண்டிடில்
பழங்கணுமனை பங்குமில்லானென்னே.

(இ - ள்.) லக்கினாதிபதி பலமின்றி ஆறு, பன்னிரண்டா மிடங்களிலிருக்க, சன்மலக்கினத்தைப் பாவர் பார்த்தால் பூர்வீகமனைப் பங்கில்லாதவனாவன், எ - று. (572)

வேறு.

பங்கமில்வியத்தின்மன்னன் பரிக்கிரண்டாமிடத்தில்
தங்கநல்வீடுகட்டிச் சகலபாக்கியமுஞ்சேர்ப்பன்
இங்கிதவியத்தோன்றன்னோ டெத்தனைக்கிரகங்கூடும்
சங்கையத்தனையாய்வீடு கட்டிடுசமர்த்தன்றானே.

(இ - ள்.) பன்னிரண்டுக் குடையோன் இரண்டில் தங்க நல்ல வீடுகட்டிச் சகல பாக்கியமுஞ் சேர்ப்பன். பன்னிரண்டுக் குடையவனோடு எத்தனைக் கிரகங்கள் இரண்டில் கூடுகின்றனவோ அத்தனை வீடுகட்டுஞ் சாமர்த்திய வானவன், எ - று. (573)

தானமாஞ்சன்மவீடு சரமெனிற்பரதேசத்தில்
ஆனதோர்திரங்களாயின் மருவுவன்சுதேசந்தன்னில்
ஈனமிலுபயமாயின் பரதேசத்திடையிற்பாதி
ஊனமில்சுதேசந்தன்னிற் பாதிநாளுறைவன் கண்டீர்.

(இ - ள்.) சென்மலக்கினம் சரமானால் பரதேசத்திலும் ஸ்திரமானால் சுதேசத்திலும் உபயமானால் பரதேசத்திற் பாதிநாளும் சுதேசத்தில் பாதி நாளுமாய் வாசஞ் செய்வன், எ - று. (574)

கண்டபன்னிரண்டாம்வீடு கருதுநல்லோர்வீடாயின்
திண்டிறனகரந்தன்னைச் சேர்ந்தருகிருப்பன
பண்டுசுக்கிரர்தம்வீடாய லாபாதிக்குறவுமாயின்
மண்டிசுக்கிரரிருக்கு மனைக்கருகிருந்துவாழ்வன்.

(இ - ள்.) பன்னிரண்டாம்வீடு சுபர்வீடாயின் நல்லநகரத்தின் சமீபமாக விருப்பன். சுக்கிரர்வீடாய் லாபாதிபதிக் குறவானால் சுக்கிரர்வீட்டுக் கருகிலிருந்து வாழ்வன், எ - று. (575)

இருந்தபன்னிரண்டாமாதி யீன்றதாய் துணைவர்தந்தை
பொருந்தியமனைவிமக்க டானத்திற்போயின்றாலும்
திருந்துமத்தானத்ததி தன்னுடன் சேர்ந்திருந்தாலும்
அருந்துணையானவீடு மவரவர்தமக்கேயாகும்.

(இ - ள்.) பன்னிரண்டுக் குடையோன், தாய், துணைவர், தந்தை, மனைவி, மக்கள் ஸ்தானங்களிற் போயிருந்தாலும், அன்றி அவ்விடங்களின் அதிபர்கள் தன்னுடன் சேர்ந்திருந்தாலும், அந்தந்தவீடு அவரவர்களுடைய தேயாகும், எ - று. (576)

பாவிஷயம்.

மாலாய்நாலாமிடந்தன்னை மருவிப்பாவரிருக்க
மேலாய்நோக்கச்சன்மாதி மீண்டும்பலன்களற்றிருக்க
வலாம்பாவருடன்கூடி யிருக்கநல்லோர்பார்வையறப்
பாலோன்விஷயம்வேறென்றே பண்பினுரைப்பர்பாரோரே.

(இ - ள்) நாலாமிடத்தில் பாவர்களிருந்தாலும் பார்த்தாலும் சன்மாதிபதி பலனற்றிருந்தாலும், அன்றிப் பாவகர்களுடன்கூடி சுபர் பார்வையைப் பெறாதிருந்தால் பலன் தரித்த விஷயம் வேறென்றே பெரியோர்கள் சொல்லுவர், எ - று. (577)

வேறு.

பாலுஞ்சன்மாதி நான்காமாதி
பாக்கியத்தானதிபர் மூன்றும்பெருந்

சேர்வையாரிடத்து மலதாருதி
செறிந்தருளுமங்கிசத்துந் திடமாய்நிற்க
சீரியநாலாதிபதி யுடன்பாம்பெனு
மிக்கசனிதன்னுடனே மேவினாலும்
தேரிலிதுபரவிஷய மென்றுசொல்வர்
சிலைட்புருவக்கயற்கணாறுந் தெரிவையாளே.

(இ - ள்.) சன்மாதிபன், நான்குக்குடையோன், பாக்கியாதிபதி இம்மூவரும் ஆறாமிடத்தில் அல்லது ஆறாமிடத்தோனிருக்கும் அங்கிசத்திலுமிருக்கவும், நான்குக்குடையோனோடு ராகு கேதுவானாலும் சனியானாலும் சேர்ந்திருந்தால் பெண்ணே! இது அன்னிய விஷயமென்று சொல்லுவர் பெரியோர், எ - று. (578)

ஆறானாமிடத்ததிப னவடன்குமரன்சன்மத்தில்
சேரவிருக்கவவனுடனே திகழும்பாம்புசெறிந்திருக்கப்
பாரிலறியச்சனித்தவனும் பரவுங்குலபுத்திரனல்லன்
வருங்கடைசிக்குலத்துள்ளான் என்பான்றந்தையென்றிலகும்.

(இ - ள்) செவ்வாயும் நாலுக்குடையோனும் சென்மத்திலும் ராகு கேதுக்களுடன் கூடியிருக்கப் பிறந்தவன் குலபுத்திரனல்லன். இவன்றந்தை கடைக்குலத்தவனாவான், எ - று. (579)

வேறு.

இலகியமூன்றாமிடத்திற் குசன்கருங்கோள்கோடில்
எழிற்பகினிசங்கம மாறாதிபனானாலுஞ்
சலமலியெட்டாதிபனாகிலுஞ் செவ்வாயுடனுஞ்
சசியுடனுங்கூடிலவள் சங்கமேயாகும்
நலமலியுமிவருடனே கரும்பாம்புநீசன்
நவில்சனிசூத்திரன்வெள்ளி நண்ணில்வைசியனுமாம்
குலவியசூரியன்கூடின் மறைவனுமென்றே
கூறினரிப்படித்தெரிந்து கொண்டறியவேண்டும்.

(இ - ள்.) மூன்றில் அங்காரகனும், ராகு கூடினாலும், பகினிசங்கமம். ஆறுக்குடையோனானாலும் எட்டுக்குடையோனானாலும் செவ்வாயுடனாவது, சந்திரனுடனாவது கூடில் அவள் சங்கமேயாகும். இவருடன் ராகுகூடில் நீசனும், சனிகூடில் சூத்திரனும், சுக்கிரன்கூடின் வைசியனும்; சூரியன் கூடின் பிராமணனும், சங்கமபுருடர்களாவாரென்றிங்ஙனம் அறியவேண்டும், எ-று.

வேண்டிடுநாலாமாதி யாறுமாதிபனும்
மெய்யிற்றுர்ப்பலராக விலக்கினத்துடன் கூடிடினும்
நீண்டபிறையும்பிருகுத் துர்ப்பலரேயாக
நின்றிடுநான்காமிடத்தைப் பாவர்கணோக்கிடினும்

பூண்டகாலாதிசனியோடு கருங்கோள்கூடப்
பொருந்தியசன்மாதி நான்காமுன்பானதிபன்
சண்டியமேழாமிடத்தி லிவர்நால்வர்கூடி
இருந்தக்காற்பாவிஷய மெனப்புகலுவாரே.

(இ - ள்.) நாலுக்குடையோன் ஆறுக்குடையோன் இவர்கள் துர்ப்பலராகக் கூடினாலும், சந்திரனும், சுக்கிரனும், துர்ப்பலராகவும் நான்காமிடத்தைப் பாவர்கள் பார்த்தாலும், நாலுக்குடையோன் சனி, ராகு இவர்களுடனும், சன்மாதிபதி, நான்கு ஒன்பது, ஆறுமிடத்ததிபர்களுங்கூடி மாதுர்ஸ்தானத்திற்கு ஏழிலிருந்தாலும் பாவிஷயமென்றே சொல்லுவார், எ - று.

வே று.

சிறந்தமதியையுஞ் சன்மமனையையும்
அறிந்தபார்வைக ளாசனொருக்காவிடில்
உறைந்தகதிர்கதி யொன்பதினூற்றிடில்
பிறந்தசேய்பர சாதகம்போற்றுமே.

(இ - ள்.) சந்திரனையும், சென்மத்தையும் குரு பாராவிட்டாலும், சூரியசந்திரர்கள் ஒன்பதாமிடத்தி லிருந்தாலும் பிறந்தபிள்ளை பரசாதகமுடையதாகும், எ - று. (582)

போற்றும்லக்கினம் பொருந்துங்கதிர்மதி
தோற்றியிருக்கத் துரைசூழரசனும்
சாற்றியசீசன் சனிநவாங்கிசையில்
ஏற்றியிருக்க விதுபாசாதகம்.

(இ - ள்.) லக்கினத்தில் சூரிய சந்திரர்களும், குருநீசமடைந்து சனிநவாங்கிசையிலு மிருந்தாலும் பரசாதகமாகும், எ - று. (583).

பரிதியின்கிழமை பண்புறுசோதி
அருகியதுதிகை அமர்ந்திடினேனும்
பெருகியவிதனும் பெறுநாளிரேவதி
உருகியசத்தமி யுறும்பரசாதகம்.

(இ - ள்.) ஞாயிற்றுக்கிழமையில்வருஞ் சோதி நட்சத்திரம், துதிக்கைத் திதி இவைகளிலேனும், புதன்கிழமையில் இரேவதி நட்சத்திரம் சத்தமி திதி இவைகளிலேனும் பிறந்தால் பரசாதகமாம், எ - று. (584)

உறுஞ்சனிக்கிழமை யுற்றுபின்னவிட்டம்
நறுத்துவாதசி நாளினிற்பிறந்தோன்
அறிந்திடுமிதுபர சாதகமென்றே
சிறந்துணூமறிந்தோர் செப்புவர்தாமே.

(இ - ள்.) சனிக்கிழமையில் அவிட்ட நட்சத்திரத்தில் பிற்பாதியும், துவாதசி திதியும் வரப்பிறந்தோனும் பரசாதகமுள்ளவனென்றே சாஸ்திர மாராய்ந்த பெரியோர் சொல்லுவர், எ - று. (585)

மதுராரிட்டம்.

செங்கதிரிருக்குஞ் செவ்வாயங்கிசையில்
தங்கியங்கிசையோன் தன்மனைலக்கின
மங்குறிற்சன்மமதைச் சேய்பார்த்திடில்
பொங்கியசிரசு பொடிபடுவாரே.

(இ - ள்.) சூரியனிருக்கும் அங்காரகனங்கிசையில் தங்கி அங்கிசையோன் லக்கின வீட்டிலிருந்தாலும், அதை அங்காரகன் பார்த்தாலும் சிரம் பொடிபடுவர், எ - று. (586)

வெண்பா.

மூன்றுமதிபதியு மூரிச்சனியுடனே
தோன்றியைந்தாமிடத்திற் சூழ்ந்திடினும்—ஆன்றகதிர்
ஆறஞ்சுநாலிடத்துற்று அன்றாய்போமென்றே
கூறஞ்சாமாண்டிற் குறித்து.

(இ - ள்) மூன்றுக்குடையோன் சனியுடன்கூடி ஐந்தாமிடத்திலும் சூரியன் ஆறு, ஐந்து நாலாமிடங்களில் இருந்தால் அவன் தாய் ஐந்தாமாண்டில் இறப்பாள், எ - று. (587)

குறித்ததாய்தந்தை குலவுமனைக்கதிபர்
மறித்தவர்கண்மாறி மனையுறினும்—சிறக்கேதகல்
அத்தமனமாயிடினு மன்னையனுமரணம்
சித்தமெனச்சொற்றிடு நீதேர்ந்து.

(இ - ள்.) மாதுர், பிதுர்ஸ்தானங்களுக்குத் தலைவர்கள் தங்கள் தங்கள் மனைகளில் மாறி பரிவர்த்தனமேறியிருந்தாலும், அத்தமனமானாலும் தாய் உடனே மரணமாவாள், எ - று. (588)

நான்காம்பாவம்

முற்றிற்று.

குருவிருந்தால் பிதுர் வர்க்கத்தார்க்கும், ராகு விருந்தால் பிள்ளைகளுக்கும் அங்காரகனிருந்தால் மாமனுக்கும் தோஷமுண்டாகும். இதன்றியும் பெண்ணே! குருவைந்தி லிருந்தால் பிள்ளைகளுற்பத்தியே அற்பமாகும், எ - று.

உதிக்கவொன்றைந்தாமாதி யுற்றவொன்றைந்துறாமல்
மதித்ததோர்நோக்கமின்றேல் மகவில்லைச்சுபாங்கிசத்தில்
பதித்துறிலாயினுண்டாம் பயிலைந்தாமதிபன்மூன்றில்
விதித்திடும்படியேநிற்கின் மேவுபுத்திரர்தாமற்பம்.

(இ - ள்.) லக்கினம் ஐந்துக்குடையோன் அவ்விடங்களிலிராமலும் அம்மனைகளைப் பாராமலுமிருந்தால் பிள்ளையில்லை. சுபாங்கிசத்தில் இருந்தால் பிள்ளையுண்டாம், ஐந்துக்குடையோன் மூன்றிலிருந்தால் புத்திராற்பமாம். எ - று. (592)

புத்திரத்தாதி யேகனைப்புதன்வீட்டேறில்
புத்திரரில்லைநல்லோர் கூடிடிற்பிறந்துசாவர்
ஒத்திடுபாவர்சேரின் மகவில்லையெருதுகும்பம்
விக்கைகையோரையார்க்கு மகவில்லைவிளம்புங்காலே.

(இ - ள்.) புத்திரஸ்தானாதிபதி எகனைப் புதன்வீட்டிலிருந்தாலும் புத்திரரில்லை, நல்லோர் சேர்ந்தால் பிறந்து சாவார்கள். பாவர் சேர்ந்தால் மகவில்லை, ரிஷபகும்பவோரையோர்க்கும் புத்திரருண்டாவதில்லையாகும், எ-று.

விளம்புமேழாமிடத்தோன் மேவுச்சநீசமின்றிக்
களங்கமில்லாதிருக்கிற் கருதுமூத்தானுக்கில்லை
இளங்கொடியாளுக்குண்டா மேழோனுச்சநீசம்
வளம்பெருமங்கிசத்தின் மருவிடின்மகவுண்டாமே.

(இ - ள்.) எழுக்குடையோன் உச்சநீசங்களின்றி யிருந்தால் மூத்தானுக்குப் புத்திரரில்லை, இளையவளுக்குண்டு: எழோன் உச்சநீச அங்கிசத்திலிருந்தால் மகவுண்டாம், எ - று. (594)

வேறு.

அஞ்சாமிடத்திற்செங்கதிரோ டரவுங்கூடித்தானிருக்கின்
மஞ்சார்குழலாய்தந்தைக்கும் மைந்தன்றனக்குவரும்பகையே
செஞ்சாலிகளுந்திரவியமுஞ் சேதமுண்டாந்திறமையுடன்
துஞ்சாதிருந்ததலங்கள்விட்டுத் தூரப்போவதிலக்கணமே.

ஐந்தில் சூரியனும், ராகு அல்லது கேதுவுங் கூடியிருந்தால் தகப்பனுக்கும் புத்திரருக்கும் பகையுண்டாகும். அதினால் தானியமும் திரவியமும் சேதமுண்டாகும். அப்படி பகையில்லையேல் இருந்த இடம் விட்டுப் பிரிந்து தூரப்போவதும் இதற்கு இலட்சணமாம், எ - று.

வேறு.

லக்கினாதிபதிக்கு நாலாதிபன்
ஒக்கநல்லுறவாகவுந் தானுநில்
தக்கதந்தை தனக்குப்பின்மைந்தர்கள்
மிக்கபூமியில் மேவுவர்காணுமே.

(இ - ள்.) லக்கினாதிபதிக்கு நாலுக்குடையோன் உறவாகவிருந்தால் தகப்பனுக்குப் பின் பிள்ளைகள் பூமியிலிருப்பார்கள், எ - று. (596)

வேறு.

காணும்லக்கினத்திற்செவ்வாய் தனக்கேழிற்காரிபின்னும்
கோணுமூந்தான்கில்வெய்யோ னிப்படிக்குலவிநின்றால்
ஆணுடன்பெண்ணுமில்லை யஞ்சாதிபாவனேழில்
பூணேழோன்பாவனையைந் துற்றிடிற்புதல்வரில்லை.

(இ - ள்.) லக்கினத்தில் செவ்வாயும் அவனுக்கு ஏழில் சநியும் பன்னிரண்டில் சூரியனும் இருந்தால் ஆண் பெண் இரண்டுமில்லை. அஞ்சுக்குடையோன் பாவியாய் ஏழிலும், ஏழோன் பாவியாய் ஐந்திலுமிருந்தாலும் புதல்வரில்லை, எ - று. (597)

புத்திரத்தானத்தாதி பொருத்துமங்கிசையைத்தொட்டு
மெய்த்துலக்கினமட்டெண்ணி மேவியேகண்டலக்கம்
எத்தனையோதானந்தத் தொகைப்படியினியமைந்தர்
சித்தமாய்ப்பெறுவரென்று தெரிந்தவருரைசெய்வாரே.

(இ - ள்.) புத்திரஸ்தானத்தான் அங்கிசை முதல் லக்கினம் வரைக்கு மெண்ணிவந்த லக்கினம் எத்தனையோ அத்தனை மைந்தர்களைப் பெறுவர் என்று அறிந்து கூறுவர், எ - று. (598)

உரைசெறியவியோகங்க ளொண்மதிக்கேழில்வெய்யோன்
பரவியேதானின்றாலும் பவில்சனிக்கேழிற்புக்தி
திரமுடனின்றபோதுந் தீதாமிரட்டைராசி
இரவிமேவிடச்செவ்வாய் பார்த்திடிலவியோகமூன்றும்.

(இ - ள்.) சந்திரனுக்கு ஏழில் சூரியனும் சநிக்கு ஏழில் புதனிருந்தாலும், இரட்டை ராசியில் சூரியனிருந்து அங்காரகன் இவர்களைப் பார்த்தாலும், இம்மூன்றும் அவியோகமாகும், எ - று. (599)

மூன்றும்பின்னுதயராசி முதலொற்றையாயதற்குள்
தான்றயிந்துற்றபோது மிரட்டையொற்றையினுமிந்து
தோன்றிடசெவ்வாய்புந்தி பார்க்கினுஞ்சோமன்காரி
ஆன்றவங்கிசமும்லக்கின மாயிடினவியுமாமே.

(இ - ள்.) பின்னுதயராசிமுதல் ஒற்றையாய் அதில் சந்திரனிருந்தாலும் இரட்டை ஒற்றையில் சந்திரனிருந்து அங்காரகன் புதனும் பார்க்க சந்திரன் சனி இவர்களின் அங்கிசம் லக்கினமானாலும் அலியாம், எ - று. (600)

அலியட்டமாதியைந்தாமிடத்தினி லிருக்கவைந்தாம்
வலியவீட்டதிபனெட்டின் மருவவேசுபர்நோக்கின்றி
நலியபுத்திரருமில்லை நவிலைந்தாமதிபன்றானும்
மெலிவதாய்வியமாறெட்டின் மேவினுமில்லைமைந்தர்.

(இ - ள்.) அட்டமாதிபதி ஐந்துக்குடையோனும் எட்டிலும் சுபர் நோக்கமில்லாதிருந்தால் புத்திரரில்லை. ஐந்துக்குடையோன் பன்னிரண்டு ஆறு எட்டாமிடங்களி லிருந்தாலும் புத்திருண்டாவதில்லை, எ - று. (601)

மைந்தர்தானங்கள்காரி புந்திதன்மனையதாக
அந்தவீடதனைக்காரி குளிகனோடமரிற்பார்க்கில்
சுந்தரத்தத்தனுண்டாஞ் சுபர்பலமுடனேயைந்தில்
வந்திடவைந்தோனுக்கு மற்றிடிற்றத்தால்வாழ்வன்.

(இ - ள்.) புத்திரஸ்தானங்கள் சனி புதன் இவர்கள் வீடாகவும், அதில் சனிகுளிகனோடு சேர்ந்திருந்தாலும் பார்த்தாலும் தத்துப்பிள்ளை யுண்டாம். சுபர் பலப்பட்டு ஐந்தில் வந்து அவ்வைந்தாம் வீட்டோன் பார்வையற்றிருந்தாலும் தத்தாகவே வாழ்வன், எ - று. (602)

வாழ்மீனலக்கினத்துக் கைந்தினின்மன்னனுச்சந்
தாழ்விலாதிருக்கிற்பெண்க டன்னையேபெறுவனைந்தோன்
நீள்குசனாறுமாதி மூவரைநேயமில்லார்
சூழவேபார்க்கிற்சத்துருக்களாற் சுதர்க்குப்பீடை.

(இ - ள்.) மீனத்திற்கைந்தில் குரு உச்சமாயிருக்க, பெண்களையே பெறுவன். ஐந்துக்குடையோன் அங்காரகன் ஆறுக்குடையோன் இவர்கள் மூவரையும் சத்துருக்கள் பார்த்தால் பகைவர்களால் பிள்ளைகட்குப் பீடை யுண்டாம், எ - று. (603)

வேறு.

பீடிலைந்தாமதிபனு மைந்தினில்
நீடுபாவருடன் கூடிநின்றிடில்
நாடிநோக்குற நல்லகுழவியும்
வாடுந்தேவதை வஞ்சனையாலுமே.

(இ - ள்.) ஐந்துக்குடையோனும் ஐந்தில் பாவரோடு கூடியிருந்தாலும் பார்க்கப்பட்டாலும், நல்லகுழவியும் தேவதைவஞ்சனையால் வாடும், எ - று.

வேறு.

வஞ்சனைநாவினிலன்பிலர்வந்திட வைந்தனின்மன்னனும்
விஞ்சியகாரியோடங்குற வியன்மதிலன்பிலர்மிண்டியும்

தஞ்சமெனுஞ்சிறுமைமந்தனுந் தாய்கரந்தன்னிலிறந்திடும்
அஞ்சிவனந்தனில்வந்துறு மையர்கெவகுண்டிடவுங்கெடும்.

(இ - ள்.) நாலில் பாவர்களும், ஐந்தில் குருவும் சநியும் பன்னிரண்டில் பாவர்களும் இருந்தால் தாய் கையிலேயே பிள்ளையிறந்திடும். அன்றி ஐந்து ஒன்பதாமிடங்களில் வருவோர் கோபிக்கவும் இறக்கும், எ - று. (605)

கேடறுபுத்திரநாதனுங்கிளர்மதி சுக்கிரன்மூவருங்
கூடிடமடந்தையிராசியிற் கோதையரங்கிசைமீதினில்
நீடியிருந்திடுவோர்களே நேயமிலார்விழிநோக்குறியில்
நாடியபெண்பிள்ளையேபெறு நாவலர்கண்டறிவார்களே.

(இ - ள்.) புத்திரநாதனும், சந்திரனும், சுக்கிரனும் கூடி பெண்ராசியில் பெண்ணங்கிசையி லிருப்பவர்களைப் பார்த்தால் பெண்பிள்ளைகளே பெறுமென்று சொல்லுவர், எ - று. (606)

வார்சடையார்முடிமேலுறு மாமதிமேவுமனைக்குமே
ஏர்பெறுசன்மமனைக்குமே யெண்ணியொரைந்துதலத்தையும்
பாரினிலுத்தமரானவர் பார்வையுறிற்சிறுபாலராம்
காரிமுதற்கொடும்பாவரே காணிலிலைச்சிறுபாலனே.

(இ - ள்.) சந்திரன் இருந்த வீட்டுக்கும் லக்கினத்திற்கும் மத்தியிலிருக்கும் ஐந்திடங்களையும் பாபர் பார்த்தால் சிறுபாலருண்டாம். சநி முதலிய பாபிகள் பார்த்தாலில்லை, எ - று. (607)

பாலர்பிறந்திறுமைந்திலே பாம்பொருகேதுபரிந்துறில்
பாலர்பிறந்திறுமைந்திலே பாழ்கருநாகமமர்ந்துறில்
சீலசன்மாதியைந்தாமிடஞ் சேரவைந்தாதிதிடம்பெற
வாலிபந்தன்னின்மைந்தரும் வந்துபிறந்துவளருவார்.

(இ - ள்.) ஐந்தில் கேதுவிருந்தாலும் ராகு விருந்தாலும், பாலர்கள் பிறந்திறப்பார்கள். லக்கினாதிபதி ஐந்திலும், ஐந்துக்குடையோன் பலப்பட்டு மிருந்தால் வாலிபத்தில் பிள்ளை பிறந்து வளரும், எ - று. (608)

வளருஞ்சன்மாதியுமேழுற மற்றுநாலாதியேழாதியும்
கிளரமகிழ்ந்தொருவீட்டுறக் கேடறவோரிரண்டாதியும்
தளர்வறவேசன்மமீதுறத்தான் வருமைந்தர்சமர்த்தராய்
உளருமிரண்டிறையைந்தினி லுறமகவுண்டிறைபார்வையே.

(இ - ள்.) சன்மாதிபதி ஏழிலும் நாலுக்குடையோனும், ஏழாமதிபனும் ஒரே வீட்டிலும் இரண்டுக்குடையோன் சன்மத்திலிருக்கப் பிறக்கும் பிள்ளைகள் சமர்த்தராயிருப்பர். இரண்டாமதிபன் ஐந்தினில் குருபார்வையைப் பெற்றிருந்தால் பிள்ளைகளுண்டாகும்; எ - று. (609)

பாரினிலைந்தாமதிபதி பண்புடனின்றபுடத்தையுஞ்
சூரியதேவர்புடத்தையுந் தொகையொடுகூட்டியராசியில்
தார்புனையும்புயராசனுந் தகைமையுடன்செறிகாலமே
வீரியவாநொருமைந்தனும் மேவுவனம்புவிமீதிலே.

(இ - ள்.) ஐந்துக்குடையோனிருக்கும் ஸ்புடத்தையும் சூரியன் ஸ்புடத்தையும் கூட்டியராசியில் குருவருங்காலத்தில் வீரியவானாய் ஒரு புதல்வன் பிறப்பன், எ - று. (610)

மீதிலைந்தாதிபுடத்தினி லிரவிமகன்றனைவாங்கியே
போதுறுராசியின்மன்னுறும் போதிறமேசிறுபுத்திரன்
சோதறுமன்னன்புடத்தினிற் குளிகனைவாங்கியராசியில்
ஏதமில்சனிவருபோதிரா தேகமரித்திடும்பாலரே.

(இ - ள்.) ஐந்துக்குடையோன் ஸ்புடத்தில் சநிஸ்புடத்தை வாங்கினால் வரும் ராசியில் குருவரும்போது சிறுபுத்திர னிறப்பன். அன்றி, குரு ஸ்புடத்தில் குளிகன் ஸ்புடத்தை வாங்கிய ராசியிலும் சநி வந்தால் புத்திர னிறப்பான், எ - று. (611)

வேறு.

அறிந்திடும் பரிதிகேந்திரந்தன்னி லம்புலியிருந்திடப்பிதாவில்,
அற்பமாம்புதல்வர் சரித்திரஞ்சசிதா னணுகியேபணபரத்திருக்கில்,
செறிந்திடுந்தந்தை தனக்கிணைசுதனாந் திங்களாபோக்கிலியத்தில்,
சேர்ந்திடிற்பிதாவி லதிகபுத்திரனாஞ் செங்கதிரோ னுறும்பதிக்கே,
நிறைந்தருளைந்தெழொன்பது வியத்தினில்வுற நிலவுறுமனைதான்,
நீடுநட்பாக்ஷியுச்சமாயிருக்க நிருபனுமதிதனைக்காண, உறைந்திடுந்
தந்தைக் கதிகமாஞ்செல்வமுள்ள புத்திரனெனச்சொல்லும், உலவு
மம்மதியைச் சுக்கிரன்காணி லூணர்வெகு போகவானாமே.

(இ - ள்.) சூரியகேந்திரத்தில் சந்திரனிருந்தால் பிதாவுக்குப் புத்திரரற்பமாம். சந்திரன் பணபரத்திருந்தால் தந்தைக்கொப்பான பிள்ளையுண்டாம். சந்திரன் ஆபோக்லியத்திலிருந்தால் பிதாவைக்காட்டிலு முயர்ந்த புத்திரனுண்டு. சூரியனுக்கு ஐந்து எழு ஒன்பது பன்னிரண்டாமிடங்களில் சந்திரனிருந்து அந்த வீடு நட்பு ஆட்சி உச்சங்களாயிருந்து குருவும் சந்திரனைப் பார்த்தாற் தந்தையைவிட செல்வம் அதிகமுள்ள புத்திரனுண்டாம். சந்திரனைச் சுக்கிரன் பார்த்தாலோ வெகு போகவானாவன், எ - று.

வேறு.

போகமாமைந்தாமதிபன்லாபாதி பொருந்தியேமித்துருவாக
வாகுசேரைந்தாமதிபதியுச்சனுமாய் வளம்பெறுகபனுமேயாவன்
மோசமாய்லாபத்தலத்தினிலிருக்க முறைதவிராதபுத்திரர்கள்
ஆகவேபலருண்டவருடன் கூடுமத்தனைபுதல்வருண்டாமே.

(இ - ள்.) ஐந்துக்குடையோனும் லாபாதிபனும் மித்துருக்களாக இவர்களில் ஐந்துக்குடையோன் உச்சனும் சுபனுமாய் லாபஸ்தானத்தி லிருந்தால் முறைதவறாத புத்திரர்க ளநேகருண்டாவர், எ - று. (613)

ஆமெனுமைந்தாதிபனுதித்த னனுகிலோவெகுபிள்ளையுளதாம்
ஓமெனுமைந்தாமாதிபனும்பாம்பு மொக்கவேயெட்டினிற்கூடில்
தேமெனும்தத்துபுத்திரனவன் றிருந்துமைந்தாதிபனுடனே
தோமெனும்பாம்புமிரவியுங்கூடிற் றொடர்மிருகங்கள்போலிருப்பன்.

(இ - ள்.) ஐந்துக்குடையோனும் சூரியனும் சேர்ந்தாலும் ; வெகு பிள்ளைக ளுண்டாம். ஐந்துக்குடையோனும் ராகுவும்கூடி எட்டிலிருந்தால் தத்துபுத்திரனுவான். ஐந்துக்குடையவனோடு ராகுவும், சூரியனும் கூடினல் மிருகங்கள் போலிருப்பன், எ - று. (614)

இறந்திடுமிதுனலக்கினமாகவினிய கோவிடத்தினிற்குசனும் [ருக்கும்
பொருந்தியேயிருக்கினிவனிவன்முன்னோன் புகழ்பெறுதந்தை மூவ
வருந்தியவிரோதம்விளைந்திடும் பொல்லாவஞ்சகராவர்மாநிலத்தில்
திருந்தியிப்படியல்லாமலேயிருக்கிற் றினமுறவாகிவாழ்ந்திருப்பர்.

(இ - ள்.) லக்கினம் மிதுனமாக துலாவில் அங்காரகனும் இருக்கில் இவன் முன்னோன் தந்தையர் மூவர்க்கும் விரோத முண்டாம். வஞ்சகர்களாவார்கள். இப்படி யில்லாதிருந்தால் சாதாவுறவாக வாழ்வர், எ - று.

வேறு.

இருந்தபத்தா மிறைவனைந்தாதிபன்
பொருந்துமித்துருவாய்ப் புண்ணியனுமாய்ப்
பரிந்தவுத்தமர் வீட்டுறப்பாலனும்
வருந்திடான்றனந் தேடிவழங்குவான்.

(இ - ள்.) பத்துக்குடையோனும், ஐந்துக்குடையோனும் மித்துருவாயும் சுபர்களாயும், சுபர்கள் வீட்டிலிருந்தால் பாலகனும் தனந்தேடி வருந்தாமல் வாழ்வன், எ - று. (616)

வாங்கியவைந்தாமாதி குசனுங்கூடி
மந்தனோக்குறவைந்தின் மருவிநிற்கில்
முழங்கிடவேதத்து புத்திரனுமாவான்
முயலைந்தாமாதி குசன்சனியம்சத்தில்
தழங்குகுசன்பார்க்கநிற்கி லன்னியர்கள்
தமரிடத்திற்போய்வளர்வன் சனியம்சத்தில்
அழுங்கிடவே யிரவிதானே றியைந்தி
லருங்குழவியிலையென்றே யறையலாமே.

(இ - ள்.) ஐந்துக் குடையோனும் அங்காரகனும்கூடி சனியின் பார்வையைப்பெற்று ஐந்திலிருந்தால் தத்துபுத்திரனுவான். ஐந்துக் குடையோன் குசன் சனி அம்சங்களில் சனி நிற்க பார்க்க அன்னிய சுற்றத்தாரிடத்தில் வளருவன். சனியம்சத்தில் சூரியனேறி ஐந்தில் நின்றால் குழந்தையில்லையென்று சொல்லலாம், எ - று. (617)

வேறு.

நல்லதோரைந்தாமதிபிரவி நற்சனியங்கிசமேறி
அல்லலார்சனிகண்டிடவுமைந்திடத்தி லமர்ந்திடிற்பரவிஷயத்தால்
வல்லமைப்புதல்வனுளனென மொழிவர்மற்றுமைந்தாமிடந்தன்னில்
சொல்லியகுசனுங்காரியங்கிசத்திற் சூழ்ந்திடக்கருச்சுரோணிதமாம்.

(இ - ள்.) ஐந்துக்குடையோன் சூரியன் சனி இவர்கள் அங்கிசத்திலேறி சனிகண்டிடவும், ஐந்திலிருக்கவும் பரவிஷயத்தில் வலியபுதல்வன் ஒருவன் பிறப்பன். ஐந்தில் அங்காரகனும், சனியங்கிசத்தில் சேர்ந்தால் கருச்சுரோணிதமாகும், எ - று. (618)

ஆனலக்கினத்திற்சந்திரனிருக்க வாறினிற்சுக்கனுற்றிடவும்
தானுமம்புதல்வனேகனும்ரவி சந்திரனிருவருங்கூடி
ஊனமிலினியகேந்திரத்திலிருக்கி னுரிமைசெய்யான்பிதாவினுக்கே
ஈனமின்மரணதகனகாலங்க ளிரண்டினுமுபயராசிக்கே.

(இ - ள்.) லக்கினத்தில் சந்திரனும், ஆறில் சுக்கிரனும் இருந்தால் ஒரே புதல்வனும். சூரியசந்திர ரிருவருங்கூடி சுபகேந்திரத்திலிருந்து உபயராசியானால் தந்தைக்கு ஈமக்கடனைச்செய்யான் மரணதகன காலங்களில், எ - று. (619)

வேறு.

வல்லவர்பாராதிருக்க வைந்தாம்வீட்டில்
    நாடுமைந்தாமதிபனுட னண்ணியேனும்
வல்லகரும்பாம்பிருக்க நாகசாப
    வகையினன்மைந்தரில்லை மரித்துநாகம்
ஒல்லையுடன்பிரதிட்டை செய்யின்மைந்தர்
    உண்டாகுமுபயங் கேந்திரகோணத்துள்
மல்லல்சுபக்கிரகத்தின் பார்வையற்றால்
    மைந்தரில்லைசெபஹோம வகையிலுண்டாம்.

(இ - ள்.) ஐந்தாமிடத்தைச் சுபர் பாராதிருக்க அதற்குடையோனுடனாவது தனியாயாவது அதில் ராகுவிருக்க நாகதோஷத்தால் புத்திரரில்லை. அதற்கு உடனே நாகப்பிரதிஷ்டைசெய்தால் புத்திரருண்டாவர். கேந்திர

கோணத்தில் சுபக்கிரகங்களின் பார்வையில்லாதிருந்தால் மைந்தரில்லை. ஆனால் செபம், ஓமம் இவைகளால் புத்திரருண்டாவர், எ - று. (620)

உண்டாமைந்தாம் வீட்டோனாறுமாதி
 உடன்கூடிநல்லோர் காணாறுமனிற்க
அண்டார்தசத்துரு சாபத்தினாலே
 ஆனதொருமகவில்லை யைந்தாம்வீட்டில்
மீண்டாகவைந்ததி யிருக்கநல்லோர்
 விழிப்பார்வையறத் தீயோர்மிகநோக்கிக்
கண்டார்களெனிற்றெய்வ சாபத்தினாலே
 காளையர்களில்லையோம கன்மஞ்செய்ய.

(இ - ள்.) ஐந்தாம் வீட்டுக்குடையோன் ஆறுக்குடையவனோடு சேர்ந்து நல்லோர் பார்வைபெறாதிருந்தால் சத்துருசாபத்தால் மகவில்லையாம். ஐந்தில் ஆக்ஷியயாக ஐந்தாம் வீட்டிலிருந்து சுபர் பாராமல் பாவிகள் பார்க்கத் தெய்வ சாபத்தால் கர்மமேலிட்டு ஓமகர்மஞ்செய்ய பிள்ளையில்லையாம், எ-று.

செய்யவொருநாலிடத்திற் றீயோர்நிற்கச்
 சேருமைந்தாமதிபனுடன் சனியுங்கூடப்
பையவே பன்னிரண்டாமிடத்திற்பாவர்
 பற்றிநிற்கத் தாய்சாபம்பாலரில்லை
ஐயமறவோமங்கள் சபங்கடான
 மன்புடனேசெய்விக்கு மவர்தமக்குத்
துய்யதிருமைந்தர் பலருண்டாமென்று
 சுருதிகலையாகமங்கள் சொல்லுந்தானே.

(இ - ள்.) நான்கில் பாவர்களும், ஐந்துக்குடையோனுடன், சநியும் கூடப் பன்னிரண்டாமிடத்திலும், பாவர்தொடர்ந்திருக்க தாய் சாபத்தால் பிள்ளையில்லை. ஆனால் ஓமம், ஜபம், தானம் இவைகள் செய்வித்தானபின் பல பிள்ளைகள் பிறக்குமென்று ஆகமங்கள் சொல்லும், எ - று. (622)

வே று.

சொல்லுமிரண்டிற்பன்னிரண்டிற் சுபக்கோள்பாவர்மனையாயின்
வெல்லும்பாக்கியாதிபதி வியத்திலிருக்கவோரைந்தில்
நில்லும்பாவர்சன்மாதிபனின்றேயத்தமனமாகி
ஒல்விற்கூடிற்குலநாசமுண்டாம் புத்திரர்தானுமில்லை.

(இ - ள்.) இரண்டு பன்னிரண்டாமிடங்களில் சுபக்கோளிருந்து பாபர் வீடாயினும், பாக்கியாதிபதி பன்னிரண்டிலேறி, ஐந்திலிருக்கும் பாவர்கள் சன்மாதிபதியோடு அஸ்தமனமாகிக் கூடின் குலநாசமாம். புத்திரருமுண் டாவதில்லை, எ - று. (623)

தானுஞ்சன்மவியமெட்டிற் சனிசெய்பாவருறநிற்க
தானைபுதல்வர்தாமில்லை வளஞ்சேர்புந்திசுக்கிரனும்
ஆனபத்திலோரெட்டி லமருமைந்திலெட்டாதி
னனபாவர்சன்மாதியுற்றே பற்றிற்புதல்வரிலை.

(இ - ள்.) சன்மம், பன்னிரண்டு, எட்டாமிடங்களில் சனி அங்காரகன் பாவிகளிவர்களிருந்தால் புத்திரரில்லை. புதனும் சுக்கிரனும் பத்திலும், எட்டிலும், ஐந்திலும், எட்டிக்குடையோன், பாபிகள் சன்மாதிபதி இவர்கள் பத்திலுமிருந்தாலும் பிள்ளைகளில்லையாம், எ - று. (624)

புதல்வர்காரகன்புடத்திற் பொருந்துமைந்தாதிபன்புடமாம்
இதனைகூட்டுமிராசிதனிலேற மற்றகுருவருங்கால்
மதலைதோன்றும்புடங்கூட்டவரு ராசியங்கிசைமட்டும்
இதனின்மேடமுதலெண்ணச் சேய்தான்பாவர்காணச்சேதம்.

(இ - ள்.) புத்திரகாரகன் புடத்தில் ஐந்துக்குடையோன் ஸ்புடத்தையுங் கூட்டும் ராசியில் குருவருங்காலத்தில் புத்திரருண்டாவர். புடங்கூட்டவருகின்ற ராசியின் அங்கிசைவரைக்கும் மேடமுதலாயெண்ணச் சேய்வரினும், பாவர்வரினும் புத்திரசேதமுண்டாம், எ - று. (625)

வேறு.

சேதவைந்திற் சிறந்தமதியுறில்
நீதிசேர்பிள்ளை யொன்றுறுநேமியில்
போதுமற்றும் பிறைப்பதுதானிலை
வேதமுற்றவ ரோதினரென்பவே.

(இ - ள்.) ஐந்தில் சந்திரனிருந்தால் ஒரு பிள்ளைதானிருக்கும். மற்றப் பிள்ளைகளிறக்கும் என்று பெரியோர் சொல்லினர், எ - று. (626)

ஒன்பதாம்வீட்டுக் குடையவன்குருவாய்
இன்பமாய்ச்சனி யெய்தியேநோக்கிட
அன்புபுந்தியோடாதவனெங்குறில்
பின்புபிள்ளையை யன்னியர்பேணுவார்.

(இ - ள்.) ஒன்பதுக்குடையோன் குருவாய் அவனைச் சனிவந்துபார்க்கவும் புதனும் சூரியனும் எங்கேயிருந்தாலும் அப்பிள்ளையை அந்நியர்கள் வளர்ப்பார்கள், எ - று. (627)

ஐந்தின்வீட்டிற் கதிபதிபாவனாய்
வந்தாறெட்டுப் பன்னிரண்டின்மன்னரோ

டுக்கினுலுஞ்சுபர் திட்டியுற்றிடில்
நக்துமப்பன்னிரண் டாண்டினிறுசமே.

(இ - ள்.) ஐந்துக்குடையோன் பாவியாய் ஆறு, எட்டு, பன்னிரண் டாதிபர்களோடு சேர்ந்தாலும், சுபர்பார்வையைப்பெற்றாலும், பன்னிரண்டு வருஷத்தில் அப்பிள்ளை சாகும், எ - று. (628)

வேறு.

புத்திரனைமாமாதி பொருந்துகேந்திரகோணத்தில்
உற்றிடப்பலவானுகி யோங்குமாறதிபன்றனுஞ்
சித்தமாய்க்கூடினுலுந் தரிசனைப்பார்வையாலுஞ்
சுத்தமாய்ப்புதல்வரில்லையென மறைசொல்லுந்தானே.

(இ - ள்.) புத்திரகாரகன் ஏழுக்குடையோ னிருக்கும் கேந்திர கோணத்திலிருக்கவும், ஆறுக்குடையோன்பலப்பட்டு அவனுடன்கூடினாலும் பார்த்தாலும் சுத்தமாகப் பிள்ளையில்லையென்றுவேதங்கள் சொல்லும், எ-று.

ஐந்தாம் பாவம் முற்றிற்று.

---

# ஆறும் பாவம்.

## சத்துரு பலன்.

கூறுமாறுமிடத்திற் குறித்திடும்பலன்களாறில்
வீறுநல்லோர்கூடாமு மேவிடற்றாயத்தார்கள்
பேறுடன்வழக்கிட்டுள்ள பெருந்தனம்பிரித்துத்தாவென்
றேறியம்பலத்தினிற்ப ரெதிரிக்கேவலிமையென்னும்.

(இ - ள்.) ஆறுமிடத்துப்பலன்களைச் சொல்லுமிடத்து ஆறில் சுபர்க ளிருந்தால் பங்காளிகள் வழக்குத்தொடுத்துப் பங்குபாகம் ஜெயிப்பார்கள், எ - று. (630)

என்னுமப்புவியிலுள்ள யாவர்க்கும்வலியனுவன்
துன்னியவிகாதமேதான் சொல்லுவரெவர்கண்டாலும்
மின்னியஞாதியோரை மெலியவேபண்ணுவிப்பன்
கன்னியேயாறினல்லோர் காதலித்திருந்தக்காலே.

(இ - ள்.) ஆறில் சுபக்கிரகங்கள் விரும்பியிருந்தால் எவர்பார்த்தாலும் விகாதஞ்சொல்லுதலடைந்த வலியனுவன். பங்காளிகளையெல்லாமும் மெலி விப்பன், எ - று. (631)

காதலாறுமிடத்திற் கடினராந்தீக்கோணிற்கில்
ஓதுபொல்லார்க்குப்பொல்லாங்குரைத்து வேலவனைப்போல
எதிலார்தங்கட்கெல்லா மிடியெனவலியனாகிப்
பூதலத்தெவரும்வந்துபுகழ்ந்திடப் பொருந்திவாழ்வன்.

(இ - ள்.) ஆறில் பாவக்கிரகங்கள் பொல்லார்க்குப் பொல்லாங்கு செய்து எதிலார் யாவர்க்கும் சுப்பிரமணியனைப்போல் வலியனாய் யாவராலும் புகழப்பட்டு வாழ்வான், எ- று. (632)

பொருந்துசிங்கத்தைக்கண்டு புடைபடுமிபமேபோல
இருந்தசத்துருக்களெல்லா மிரந்துகைகூப்பிநிற்பர்
திருந்தியகுபேரன்போலச் செல்வமுண்டாகப்பாரில்
வருந்திடாதிருப்பனாறின் மருவுதீக்கோளினாலே.

(இ - ள்.) ஆறில் பாவக்கிரகங்கள் நிற்பதால் சிங்கத்தைக்கண்ட யானை போல் சத்துருக்கள் பயந்து கைகூப்பிநிற்பர். அன்றிக் குபேரன்போல் செல்வமுண்டாயிருப்பன், எ - று. (633)

கோளினிற்கரியநாகன் கூறுமாறிடத்தினிற்கில்
தாளினிற்றளைகள்பூண்டே தடைபடுங்காவலில்லான்
நாளுமேபலரும்போற்ற நண்ணிடுங்கீர்த்திமானாய்
தேள்முதல்விடங்கள்சற்றுந் தீண்டிடாத்திடவானாமே.

(இ - ள்.) ராகு ஆறிலிருந்தால் யாதொன்றில் தளைப்படாமலும் கீர்த்தி மானும் யாதொரு விஷ ஜந்துக்களும் தீண்டப்பெறாதவனுவான், எ - று.

திடமுறுமாறுமாதி பாவனாய்கேந்திரத்தில்
வடிவுறுநல்லோர்காண மருவின்மந்திரியுமாகிப்
படிமிசையெவரும்போற்றப் பயில்பிரதாபனாகிக்
கொடியவர்தமக்குமிண்டே கூறுவன்குணவானாகும்.

(இ - ள்.) ஆறுக்குடையோன் பாவியாய்க்கேந்திரத்தில் சுபர்காண விருந்தால் மந்திரியாய் வாழ்ந்து பூமியில் யாவரும் துதிசெய்ய பிரதாபவானாகியும் கொடியவர்களைத் தண்டிக்கும் குணவானுமாவான், எ - று.

ரோகபலன் (வேறு.)

ஆறுக்கும்வீட்டதிபன் லக்கினத்தாதிபனும்
அணிகதிரோனுடன்கூடிற் சுரகண்டமாகும்
பேறுமதியுடன்கூடிற் சகலண்டங்குசன்பால்
பேருமையுடன்கூடி லாயுதவிரணகண்டம்
தாறுருஞ்சனிகூடி னீசர்தன்னாற்கண்டம்
சோரரால்வருங்கண்டஞ் சுக்கன்கூடிடினே.

*விருகுமடவாராற் கண்டங்கண்டங்கேள்*
*விடவரவைகூடிலந்த விஷப்பாம்பாலேதான்.*

(இ - ள்.) ஆறுக்குடையோனும் லக்கிஞதிபனும், சூரியனுடன் கூடினுல் சுரகண்டமும், சந்திரனுடன் கூடினுல் சலகண்டமும், அங்காரகனுடன் கூடினுல் ஆயுதவிரணகண்டமும், சநி கூடினுல் நீசரால் கண்டமும், சுக்கிரன் கூடினுல் கள்ளராலும் பெண்களால் கண்டமும், இராகு கேதுக்கள் கூடிடில் விஷப்பாம்புகளினுல் கண்டமுமுண்டாகும், எ - று. (636)

*அறந்திகழுஞ்சன்ம நாலாதிதாமும்*
*அட்டமத்தாதியைக் கூடினுலுமாறில்*
*உறைந்திடினுமுண்டிய சிரணத்தாற்கண்டம்*
*உற்றிடும்லக்கின வாகஞதியோடு*
*செறிக்துசனியுறில் விஷபட்சணத்தாற்கண்டம்*
*செப்பியநாலாதியுடன் சனியுஞ்சேர்ந்து*
*பிறந்திடுலக்கினத்தாதி வீட்டினிற்கப்*
*பெறில்விஷபட்சணகண்டம் பேசுஞ்சாதகமே.*

(இ - ள்.) சன்மாதிபனும், நான்குக்குடையோனும் அட்டமாதிபதியைச் சேர்ந்தாலும், ஆறிலிருந்தாலும் அஜீரணத்தால் கண்டமும், லக்கிஞதிபதி வாகஞதிபதிகளோடு சநி யிருந்தால் விஷபட்சணத்தால் கண்டமும், நாலுக்குடையவனேடு சநி சேர்ந்து லக்கினத்தி லிருந்தாலும் விஷபட்சணத்தால் கண்டமும், நாலுக்குடையவனேடு சநி சேர்ந்து லக்கினத்தி லிருந்தாலும் விஷபட்சணத்தில் கண்டமுண்டாம், எ - று. (637)

*சாதகலக்கினத்தாதி வாகஞதி*
*தம்மிருவருடன் தாம்புந்தானுங்கூடில்*
*ஓதியபந்தனமரண நல்லோர்வீடாய்*
*உதித்தலக்கினத்தாதி யோரேழுய்த*
*நீதியுடனேழதிபன் லக்கினத்துள்*
*நிற்கிலவன்றுதையுட னின்றோன்றுயாம்*
*பேதபனுமரணம் பண்ணுவடாமென்று*
*பேசினர்சாதகநிபுணப் பெருமையோரே.*

(இ - ள்.) லக்கிஞதிபதி வாகஞதிபதி இவர்களோடு ராகு சேர்ந்தால் பந்தனத்தால் மரணமும், அது சுபர்வீடாய் லக்கிஞதிபதி ஏழிலும் ஏழுக்குடையோன் லக்கினத்திலும் இருந்தால் தாய் தகப்பன்மார்க ளிறப்பார்களென்று சாதகம் வல்லவர்கள் பேசினர்கள், எ - று. (638)

*பெருமைசெறி யாறுகுமதிபனேடு*
*பெரும்பாவர்கூடி லக்கினத்திலெட்டில்*

அருமையுடனாறிற் சித்தப்பிரமைகொண்டே
அங்கத்தினும் விரணமாகும்பின்னும்
உரிமையுள்ளவரவர் தானங்கணெட்டில்
உற்றிடினிந்நோயென்றே யுரைக்கவேண்டும்
இருமைசெறிதந்தைதாய் பிராதாமைந்தர்
இவர்க்குமனைவியர் தமக்குமெனச்சொல்வாரே.

(இ - ள்.) ஆறுக்குடையவனோடு பாவிகள்கூடி லக்கினம் எட்டு இவ்விடங்களிலிருந்தால் சித்தப்பிரமைகொண்டு தேகத்திலும் விரணமுண்டாம். அவ்வவர்களுடைய ஆட்சிவீடுகளுக்கு எட்டில் இருந்தாலும் இந்த நோயானது தந்தை, தாய், பிராதா, மைந்தர், மனைவியர் யாவருக்குமே இந்த நோயுண்டாமென்று சொல்லுவர், எ - று. (639)

சொல்லியவாறுமிடத்திற் சுபக்கிரகமேவத்
துலங்கியவாறதிபனுங் கேந்திரத்திலிருக்க
நல்லவர்கண்டிடின் ஞாதிக்குபகாரஞ்செய்வன்
நாடுங்காவலனுக்கோர் நலிவுகளுமில்லை
அல்லலறுந்தீக்கோளே யாயினன்மையதாம்
அடைத்திடுவனெதிரிகளுக்கே வலியனவன்
முல்லைமுகைதரளமணிவீ முருந்துபோலும்
முறுவல்செறிகமலமலர் முகமுறுமின்னாளே.

(இ - ள்.) ஆறில் சுபரும், ஆறுக்குடையோன் கேந்திரத்திலும் சுபர் பார்வையைப் பெற்றிருந்தால் பங்காளிகளுக்குதவுவான். அவனுக்கொரு நோயுமில்லை. தீக்கோள் பார்வையாயின் நன்மையாம். எதிரிகளுக்கெல்லாம் வலியனாயிருப்பன் பெண்ணே,! எ - று. (640)

அயலின் வேறு.

இரவியுஞ்சசியுமொருவருக்கொருவ ரிசைந்துபார்த்திடிலலியாகும்
பரவியசனியும்புதனுமேயந்தப்படி விழிநோக்குறிலலியாம்
வரவிடுசெவ்வாயிரட்டை யொற்றையினில்வந்துசூரிய னுடன்மருவ
விரவியமதியாணங்கிசத்தேற வெள்ளிவீடாகவுமலியாம்.

(இ - ள்.) சூரியசந்திரர்க ளிருவரும், ஒருவருக்கொருவர் பார்த்தாலும் சநியும் புதனும் அப்படியே பார்த்தாலும், அங்காரகன் இரட்டை யொற்றையில் வந்து சூரியனுடன் சேர்ந்தாலும், சந்திரன் ஆணங்கிசத்திலேறி அது சுக்கிரன் வீடானாலும் அலியாம், எ - று. (641)

ஆகியசன்மத்தினின்மதியிருக்க வாதவன்புதன்சசிமூவர்
வாரிசேரிரட்டைராசியிலிருக்க மற்றுமிம்மூவர்கடமையும்

மோகமாயங்காரகாரகனுமேமேநோக்க முகிண்முலேமாதரையிகழ்ந்தே
ஏகமாங்குறியற் றண்ணார்களாவரென்பது திண்ணமென்றுரைக்கும்.

(இ - ள்.) சன்மத்தில் சந்திரன், சூரியன், புதன், இம்மூவரும் இரட்டைராசியிலும், இம்மூவரையும் அங்காரகன் பார்க்கினும் அலியாய்ப் பிறப்பது உண்மையென்றே யுணர்வாய் பெண்ணே!, எ - று. (462)

ஆறும்பாவம்

முற்றிற்று.

# ஏழாம்பாவம்.

களத்திரபலன்.

சாதமுறுங்காலேயினிற் சுக்கிரன்றன்னோடு
தக்கபிரகஸ்பதிகூடில் விப்பிரர்கன்னியராம்
சோதிரவிகுசன்கூடிற் க்ஷத்திரியர்மயிலாம்
சோமனூர்சுதன்கூடில் வைசியர்குலத்தோகை
பூதலமேற்சனிகூடிற் சூத்திரர்கன்னிகையாம்
பொருமிருபாம்புடன்கூடிற் புலேயர்குலத்துதித்த
பேதையர்களுடன்கூடி யனுராகம்புரிந்து
பிரியாமலிருப்பரெனப் பெரும்வரிசைபெறவே.

(இ - ள்.) பிறக்கும்போது சுக்கிரனுடன் குரு கூடினால் பிராமணப் பெண்ணும், பிரகாசம் பொருந்திய சூரியனும் அங்காரகனுங்கூடில் க்ஷத்திரியப்பெண்ணும், சந்திரன் குமாரனாகிய புதன் கூடினால் வைசியகுலப் பெண்ணும், சனி கூடினால் சூத்திரப்பெண்ணும், ராகு கேதுக்கள் கூடினால் புலேப் பெண்ணுமே முறையே களத்திரமாக வர அவர்களுடன் கூடிப் பிரியாமலிருப்பர், எ - று. (643)

வரிசைபெறுகளத்திரத்தா னதிபனேக்கூடி
வாழ்கிரகமெத்தனேயுண் டத்தனேமின்மணப்பன்
உரியகளத்திரகாரகன திபன்சுபமாய்
உற்றிடினற்கோள் காண்கிலுத்தமமற்றிவர்தாம்
அரியிடத்தும்வியமுறினும் பாவர்களேகாண
அமர்ந்திடினுமத்திமமா மரவுசெவ்வாயிருவர்
பிரியமுடன்களத்திரத்துற்றிடின் மடவார்க்கானி
பெருகுசுபக்கோளேக்கம் பெற்றிடிலுத்தமங்கள்.

(இ - ள்.) களத்திரஸ்தானாதிபனைக் கூடியகிரகம் எத்தனையோ அத்தனை விவாகஞ் செய்துகொள்வன். களத்திரகாரகன் சுபமாயிருந்தாலும் சுபர்பார்த்தாலும் உத்தமம். இவர்கள் சிங்கத்திலும், பன்னிரண்டிலுமிருந்து பாவிகள் பார்த்தால் அதமமாம். ராகு அங்காரகன் இருவரும் களத்திரஸ்தானத்திலிருந்தால் மனைவிக்கானியுண்டாம். அவர்களைச் சுபர்பார்த்தால் உத்தமமாம், எ - று. (644)

வேறு.

களத்திரனாதி கலந்துதம்மனையினிற்சில
கிளர்த்தியாய்ப்பலரைக்கூடிக் கிடைப்படுதான்றேவிவாகம்
களத்திரகுடும்பத்தாதி கனபாவர்வெள்ளிகூடில்
வளத்தியாய்மூன்றொன்றாறின் மருவிடில்மனைவிக்கீனம்.

(இ - ள்.) களத்திராதிபதி லக்கினாதிபதியுடன் கலந்து தன்வீட்டிலிருந்தால் பலபேரைக்கூடி ஒரே விவாகம் நடக்கும். களத்திராதிபனும், குடும்பாதிபனும் பாவிகளுடனும், சுக்கிரனுடனும் கூடினாலும், மூன்று, ஒன்று, ஆறாமிடங்களி லிருந்தாலும் மனைவிக்கீனமுண்டாகும், எ - று. (645)

ஈனமிலக்கினாதியேழா மாதிபனுங்கூடித
தானமாம்வியமாறெட்டிற் றானுறில்விவாகமில்லை
ஆனவேழிடங்கள்சுத்தியா யேழாமாதிபனோடு
ஊனமில்பலர்கள்கூடி லொருத்தியொன்றுரைவெள்ளிக்கே.

(இ - ள்.) லக்கினாதிபனும், ஏழுக்குடையோனுங் கூடி பன்னிரண்டு, ஆறு எட்டாமிடங்களிலிருந்தால் விவாகமில்லை. ஏழாமிடம் சுத்தியாய் அவ்வீட்டுக்குடையவனோடு பலருஞ் சுக்கிரனும் கூடி யிருந்தால் ஒருத்தியே மனைவியாவாள். (646)

வெள்ளிசேயேழினிற்கில் விதவைமாதரைமணப்பன்
ஒள்ளியமதிசேயாறுமதிபனோ டுற்றுநான்கில்
தெள்ளியதாய்நிற்கிலேனுஞ் சென்மமொன்பானுலாறும்
வள்ளலிந்நால்வர்கூடின் மற்றுமோர்விஷயமுண்டாம்.

(இ - ள்.) சுக்கிரனும், அங்காரகனும் ஏழிலிருந்தால் விதவைஸ்திரீயை விவாகஞ் செய்துகொள்வன். சந்திரனும் அங்காரகனும் ஆறுக்குடையவனோடு சேர்ந்து நான்கினிலிருந்தாலும், இந்நால்வரும் சென்மம், ஒன்பது, நான்கு, ஆறு இவ்விடங்களில் கூடினாலும் மற்றுமொரு விஷயமுண்டாகும், எ - று. (647)

ஓரேழிற்பாவர்நிற்கக் களத்திரரோகமுண்டு
சூரியனுடனேபாம்பு சூழ்ந்திரண்டிடத்தினிற்கில்
நாரிக்கும்வெகுநோய்காட்டு நவிலிரண்டாமிடத்தைக்
கூறிலர்பார்க்கினிற்கி னேய்கொளுங்குடும்பமேழை.

(இ - ள்.) ஏழில் பாவிகளிருந்தால் களத்திரத்திற்கு ரோகமுண்டு. சூரியனும் ராகுவுஞ் சேர்ந்து இரண்டிலிருந்தாலும் களத்திரத்துக்கு வெகு ரோக முண்டாம். இரண்டாமிடத்தைப் பாவிகள் பார்த்தாலும் அதிலிருந் தாலும் களத்திரத்திற்கு ரோகமுண்டாம். அன்றிக் குடும்பமும் ஏழைக் குடும்பமாகும், எ - று. (648)

வேறு.

ஏழ்வீட்டி னிற்கதிபன் சரத்தினிற்கில்
இருமனைவிதிரமதனி லிருக்கநன்றே
தாழ்விலவுபயத்தி லிருக்கின்மாதர்
சாவின்றிப்பலருளராந் தானத்தாதி
வாழிடநோக்கியேகோளாற் பலன்கள்கூடும்
மற்றுமிலக்கினத்தால் சுக்கன்வீட்டில்
சூழ்கினுஞ்சுக்கனைக்கூடச் சுக்கன்பார்க்கத்
தூயஸ்திரீலோலனெனவே சொல்லலாமே.

(இ - ள்.) ஏழுக்குடையோன் சரத்திலிருந்தால் இரண்டுகளத்திரமும், ஸ்திரத்திலிருந்தால் நன்மையும், உபயத்திலிருந்தால் சாவாமல் பலகளத்தி ரமும் உண்டாகும். களத்திராதிபன் பார்த்தால் பலன்கள் கூடும். லக்கி னாதிபன் சுக்கிரன் வீட்டிலிருந்து அவனைக் கூடினாலும் அவனைச் சுக்கிரன் பார்த்தாலும் ஸ்திரீலோலனென்றே சொல்லலாம், எ - று. (649)

வேறு.

சொல்லுமேழாமிடத் திந்துசுக்கிரன்
மெல்லமேவினு மிக்கசனிகுசன்
அல்லதீரவுநின் மனையாளுமே
இல்லைவந்ததே யில்லைப்புதல்வரே.

(இ - ள்.) ஏழில் சந்திரனும், சுக்கிரனுமிருந்தாலும், சநி அங்காரக னிவர்க ளிருந்தாலும் மனைவியில்லை. ஒருக்கால் உண்டானால் புத்திரர்க ளுண்டாவதில்லை, எ - று. (650)

வேறு.

இல்லேழுமிரண்டாமாதி சுக்கிரனிவர்கண்மூவர்
பொல்லாரோடெய்தியாறி லெட்டிற்பன்னிரண்டிற்போந்து
சல்லாபமுடனின்றோர்க டம்முடன்பாவர்கூடில்
சொல்லருந்தோகைக்குமாலை சூட்டுவன்றோகைநில்லாள்.

(இ - ள்.) ஏழு இரண்டாமிடங்களுக் குடையோர்களும், சுக்கிரனும் பாபிகளோடு சேர்ந்து ஆறு, எட்டு பன்னிரண்டில் உல்லாசத்தோ டிருக்கும் போது பாவிகள் வந்து சேர்ந்தால் ஒரு பெண்ணை விவாகஞ் செய்வன். ஆனால் அவள் இறப்பள், எ - று. (651)

நின்றிரண்டேழாமாதி நிறைந்தகேந்திரகோணத்தில்
ஒன்றியேயிருக்கிலேக தாரமாமுற்றவன்னோர்
வென்றிகொள்பிருகுபாவருடன்கூடி மெய்யாறெட்டில்
குன்றிடாதிருக்கில்வேசைக் காந்தனுங்கூறுங்காலே.

(இ - ள்.) இரண்டு, ஏழுக்குடையவர்கள் கேந்திரம் திரிகோணங்களில் சேர்ந்திருந்தால் ஒரேதாரமுண்டாம். அவர்கள் சுக்கிரனோடும் பாவிகளோடுங் கூடி, மெய் ஆறு எட்டாமிடங்களிலிருந்தால் வேசிலோலனுவான், எ-று.

கூறியவேழாமாதிகுடும்பாதி பதியின்னோர்கள்
ஏறியேதிரிகோணத்துங் கேந்திரத்தினிலுநிற்கப்
பேறுடனவர்தம்வீட்டிற் பிரியமாயிருக்கத்தானும்
வேறுமோர்தாரம்வேண்டான் விரும்புவனனேகதாரம்.

(இ - ள்.) ஏழுக்குடையோன், குடும்பாதிபதியிவர்கள் திரிகோணத்திலும், கேந்திரத்திலுமேறியிருந்து அவர்களுடைய வீட்டில் ஆக்ஷியாயிருந்தால் வேறுதாரம் விரும்பாமல் ஒரேதாரம் விரும்புவோனுவான், எ - று.

தாரகாரகனுமேழாம்பதிபனுந் தனித்துங்கூடி
ஆரவேபாவர்மத்தியத்துற வேழிற்பாவர்
சேறவேயிவரைப்பாவர் வெறியநோக்குறவிருந்தால்
பாரியார்தனக்கரிட்டம் பண்ணுமென்றறிந்துகொள்ளே.

(இ - ள்.) களத்திரகாரகனும் ஏழுக்குடையோனும் தனித்தும், கூடியும் பாவிகள் மத்தியிலிருந்தாலும் அவர்களைச் சேர்ந்தாலும், அவர்கள் பார்வையைப் பெற்றாலும் மனைவிக்கரிட்டமுண்டாகும், எ - று. (654)

கொள்ளுநற்காரிவெய்யோன் கூடிக்கன்னியிலேநிற்கத்
தெள்ளியதாயந்தவீடு சன்மலக்கினமேயாக
மெள்ளவேயரசன்றானு மீனத்தின்மேவிநிற்கத்
துள்ளியமனைவிதானுந் துன்பமுற்றரிட்டமாவாள்.

(இ - ள்.) சனியும் சூரியனும்கூடி கன்னியிலிருக்கவும் அந்தவீடு சென்மலக்கினமாகவும், குருமீனத்திலிருந்தால் களத்திரம் துன்பத்தோடு அரிட்டமடையும், எ - று. (655)

ஆமிலக்கினத்துக்கேழி லம்புலிதனக்குமேழில்
பூமலிநல்லோர்பார்வை பொருந்திடிலுண்டாம்பெண்டீர்
தீமையாங்கடினபாவர் திண்டியுண்டானபோது
மானனையார்கடம்மை மணந்திடாவஞ்சனுமே.

(இ - ள்.) லக்கினத்திற்கேழிலும், சந்திரனுக்கேழிலும், சுபர் பார்வையுண்டானால் மனைவிவாய்ப்பள். பார்வையுண்டானால் விவாகமுண்டாகாது. வஞ்சனையுள்ளவனு மாவான், எ - று. (656)

ஆமேழாமதிபன் தாரகாரனீசமாகித்
தாமிவர்வியமாறெட்டிற் ருனுமனைவிக்கினம்
வாமசுக்கிரன்வாழ்வீட்டின் மன்னவன்வியமாறெட்டில்
ஏமமுற்றிருக்கிற்கொண்ட மனைவியர்யார்க்குமுமே.

(இ - ள்.) ஏழுக்குடையோனும் களத்திரகாரகனும் நீசத்தையடைந்து பன்னிரண்டு, ஆறு, எட்டாமிடங்களிலிருந்தால் மனைவிக்கினமுண்டாம் சுக்கிரனிருக்கும் வீட்டுக்குடையோன் பன்னிரண்டு, ஆறு, எட்டாமிடங்களிலிருந்தால் எத்தனை மணம்புரிந்தாலும் மரித்துக்கொண்டே யிருப்பார்கள், எ - று. (657)

ஈறிலாவேழாமதி யேதமாம்பாவர்வீட்டில்
தூறதாய்நிற்கபார்க்கிற் கலியாணந்தூரதேசம்
வீரதாங்களத்திராதி சுபாங்கிசமேவிற்கிட்டல்
பேறுடன்றிசைகளேழா மதிபனைபிடித்துச்சொல்வாம்.

(இ - ள்.) ஏழுக்குடையோன் பாவிகள் வீட்டிலிருந்தாலும் பார்த்தாலும் தூரதேசத்தில் கலியாணமாம். களத்திராதிபதி சுபாங்கிசமேறினல் சமீபத்திலாகும். இதனை ஏழுக்குடையோனைப் பார்த்துச்சொல்லுவோம், எ-று.

வாமசூரியன்கிழக்குமன்னு சுக்கிரற்குவன்னி
பூமிசெய்தனக்குத்தெற்குப் பெரும்பாம்புநிருதியாகும்
தாமதசனிக்குமேற்குச் சசிக்குவாயுவின்றிக்காகும்
நேமமாம்வடக்குப்புதநி நிருபர்கீசானதிக்கே.

(இ - ள்.) சூரியனுயிருந்தால் கிழக்கிலும், சுக்கிரற்கு அக்கினி மூலையிலும், அங்காரகனுக்குத் தெற்கிலும், ராகு கேதுக்களுக்கு நிருதியிலும், சனிக்கு மேற்கிலும், சந்திரனுக்கு வாயுமூலையிலும், புதனுக்கு வடக்கிலும், குருவுக்கு ஈசானத்திக்கிலுமாகும், எ - று. (659)

வே று.

திக்கெனவேழோன்வியத்திலாறெட்டிற் செறிந்ததிபாவனுயிருக்கத்
தக்கவன்றனைப்பார்த்தவர்களத்தனையுந் தாரமாங்களத்திராதிபனும்
ஒக்கவேபாவருடனுறவேழிலோ கரும்பாம்புறவதற்கு
மிக்ககேந்திரத்திற்பாவர்பார்த்திருக்கவிரும்புவன்னுலுகாற்பெண்ணே

(இ - ள்.) ஏழுக்குடையோன் பன்னிரண்டு ஆறு, எட்டாமிடங்களிலிருந்து பாவியாயிருக்க அவனை எத்தனைபேர் பார்க்கின்றார்களோ அத்தனை தாரமுண்டாகும். களத்திராதிபனும் பாவருடன் கூடியிருக்கவும் ஏழில் ராகுவும் கேந்திரத்தில் பாவிகளும் பார்க்க நான்குகாற்பெண்ணை விரும்புவன், எ - று. (660)

பெண்ணிசைந்திடு மேழாமிடத்ததிபன் பேரொளிக்கதிருடன்கூடில், எண்ணிசைந்திடு மெட்டாறினில் வியத்திலிருக்கில் வாலிபத்திலேமனையாள், விண்ணிசைந்திடுவள் களத்திராதிபனுமிக்க நற்

கோளுடன்கூடில், பண்ணிசைந்தருளுமனை விதிகோளைப்பார்த்திடிற்
பாவியாய் யிருப்பள்.

(இ - ள்.) ஏழுக்குடையோன் சூரியனுடன் சேர்ந்தாலும் எட்டு ஆறு பன்னிரண்டாமிடங்களி லிருந்தாலும் வாலிபத்திலேயே மனைவி யிறப்பள். களத்திராதிபன் சுபர்களோடு கூடினால் நல்ல மனைவியும். பாவிகள் பார்த்தால் பாவியுமாவாள், எ - று. (661)

பாவியாஞ்சனியேழாதிபனாகிப் பன்னிரண்டாறிருநான்கில்
மேவிடில்விதவைநாரியைச்சேர்வன் மிக்கவேழாமிடத்ததிபன்
நாவிரண்டானபாம்பொடுங்கூடி நாடியெட்டாறினில்வியத்திற்
றாவியேயிருக்கிலீனமாங்குலத்துத்தையலைச்சேர்வனென்றுரைக்கும்.

(இ - ள்.) பாவியாகிய சனி ஏழுக்குடையவனாய் அவனுக்குப் பன்னிரண்டு ஆறு எட்டாமிடங்களிலிருந்தால் விதவைப் பெண்ணைச் சேருவான். ஏழுக்குடையோன் ராகுவுடன் சேர்ந்து எட்டு ஆறு பன்னிரண்டாமிடங்களி லிருந்தால் ஈனகுலத்துப்பெண்ணைச் சேர்வானென்றுரைப்பர், எ - று.

உரைக்குமேழாதிகாரி வாழ்மனையி லுற்றிடக்காரிதான் பார்க்க
இருக்கவேழிடத் தக்கொன்பதாமதிப னெட்டிலாயினுஞ் சனிவீட்டில், பெருக்கவேயிருக்கிலவன் குலமனையைப் பிறர்தமைச்சேர்ந்தவரவர்கள் பொருள்களை வாங்கிவரச் சொலிபுசிக்கும் புண்ணியவானெனப்புகலும்.

(இ - ள்.) ஏழுக்குடையோன் சநி வாழ்வீட்டில் இருந்தாலும் சநி பார்க்க விருந்தாலும், ஏழுக்கு ஒன்பதாமதிபன் எட்டிலிருந்தாலும், சநி வீட்டிலிருந்தாலும் தன் மனைவியை அந்நியரைச் சேரச்செய்து பொருள் வாங்கி யுண்ணும் புண்ணியவான், எ - று. (663)

புகலுமேழாதிபிரபலனாகிப் பொருந்துமித்துருக்களைக்கூடி
இகலிலாலாபத்தலத்தினிலிருக்க விருந்தபேர்தொகைப்படிமனைவி
திகழுடனுளதேயந்தலாபந்தான் றிரமுபயங்களேயாயின் [ம்.
சுகமுடனிருப்பான்சரமெனிற்சிறிது தோகையர்க்கரிட்டமேசொல்லு

(இ - ள்.) ஏழுக்குடையோன் பிரபலனாய் மித்துருக்களைக்கூடி லாபஸ்தானத்திலிருந்தால் எத்தனைபே ரிருந்தனரோ அத்தனை களத்திரம் வாய்க்கும். அந்த லாபஸ்தானமும், ஸ்திர உபாயங்களானால் சுகமாயிருப்பன். சரமானால் களத்திரத்திற்கு அரிட்டமுண்டாம், எ - று. (664)

சொல்லியகன்னிலக்கினமாகச் சோமனுஞ்சனியுங்கேந்திரத்தில்
மெல்லவேயிருக்கச்சதமனைவியரை மிகுமணம்புரிந்துபூபதியாய்
வல்லவனாவனேழிற்சுக்கிரனு மருவுசன்மத்தினிற்குருவும்
அல்லலற்றிருக்கின் மனைவியரனேக ரவரைரட்சிக்கவுமாட்டான்.

(இ - ள்.) கன்னிலக்கினமாய் சந்திரனுஞ் சநியும் கேந்திரத்தி லிருந்தால் நூறுபெண்களை விவாகஞ்செய்து பூபதியாயிருப்பன். எழில் சுக்கிரனும் சன்மத்தில் குருவும் துன்பமற்றிருந்தால் மனைவிய ரநேகருளர். ஆனால் அவர்களை ரட்சிக்கமாட்டான், எ - று. (665)

மாட்டினிற்கிறைசுக்கிரன்குசன் சோமன்மன்னமணிரவியோடைவர்
கூட்டியோரிடத்திற்கூடிடின் மனைவியிலாமலைபிணியனாய்த்திரிவன்
காட்டுமிந்திரவிபுதன்சனிவெள்ளி நயந்துறின்மனைவிமக்களையும்
ஓட்டிவிட்டேதேசாந்தரந்தன்னி லுறுபிணியுடனலைந்தலைவன்.

(இ - ள்.) ரிஷபராசிக்குடையவனாய் சுக்கிரன் அங்காரகன் சந்திரன் குரு சூரியனிவர்கள் ஓரிடத்தில் கூடியிருந்தால் மனைவியில்லாமல் நோயால் வருந்தித் திரிவான். சந்திரன் சூரியன் புதன் சநி சுக்கிரன் இவர்கள் கூடியிருந்தால் பெண்சாதி பிள்ளைகளைத் துரத்திவிட்டு தேசாந்திரங்களில் நோயுடன் அலைவான், எ - று. (666)

அலைவறுஞ்சன்மத்ததிபன் செறிந்தவங்கிசாதிபன்றனதகத்தில்
நிலைமைபாமனைவிகுருவருங்கால் நிச்சயமணம்புரிந்திடுவன்
குலமுறுஞ்சன்மத்தனக்குமேழாம் ராசியங்கிசத்தினிற்குருவும்
பலமுடனேவந்தனுகியபோதும் பாரியாய்க்கொள்வனற்பெண்ணை.

(இ - ள்.) சென்மாதிபதியிருக்க வங்கிசத்திற்குடையோன் வீட்டில் குரு வருங்காலத்தில் விவாகஞ் செய்துகொள்வான். சன்மத்திற்கு ஏழாம் ராசியினங்கிசத்தில் குருவருங்கால் நல்ல பெண்ணையே மனைவியாகக் கொள்வான், எ - று. (667)

பெண்கொளுங்காலஞ் சந்திரனிருந்த பெரும்பதிக் கிறைவனற்புடமும், பிறையுறைமனைக் கேழாமிடத்ததிபன் பெற்றநற் புடத்தையுங்கூட்டப், பண்கொளுமெந்த ராசியோவந்தப் பதியிலப் பதித்திரிகோணம், பற்றியேயரச னுற்றிடுகாலம் பயின்மணம் புரிவனக்குருவும் எண்கொளு முச்சாங் கிசம்பெறின்மனைவி யினியளீர்ங் கோதையுஞ் சிறப்பாம், இரணியன்றனுவாங் கிசத்துறின்மனை விரண்டுமீனங்கிச மேறில், தண்கொண்மூன்று மித்திராங்கிசத் தொருத்தி சத்துரு வங்கிசமேறில், தையனாய் நீசாங் கிசத்தினிலாசன் றரிக்கிலீ னங்குலக் கொடிக்கே.

(இ - ள்.) விவாகஞ்செய்யுங் காலம் சந்திரனிருந்த வீட்டுக்குடையோன் ஸ்புடத்தையும் அவனிருந்த வீட்டுக்கு ஏழாமிடத்தோன் ஸ்புடத்தையும் கூட்ட வருவது எந்த ராசியோ அதற்கு திரிகோணமாய்க் குரு வருங்காலத்தில் மணம் புரிவான். அக்குருவும் உச்சாங்கிசம் பெற்றிருந்தால் மனைவி இனியளும் சிறப்பினளுமாவாள். குரு தநுசாங்கிசத்திலிருந்தால் இரண்டு மனைவியரும், மீன அங்கிசத் தேறினல் மூன்று மனைவியரும், மித்திராங்கிசமேறின் ஒரு மனைவியும் சத்துரு அங்கிசமேறின் மனைவி

நோயாளியும், நீசாங்கிசத்தேறின் மனைவிக்கு ஈனத்துவமு முண்டாகும், எ - று. (668)

கொடியிடையாய் கேளிரண்டிடத்ததிபன் குணகுணகார நற் புடத்தில், குலவியமகண்டன் புடத்தினைவாங்கிக் குறித்தராசியிற்குரு வருநாள், துடியிடைமனைவிக் கரிட்டமாமின்னுஞ் சொல்லிரண்டாதி பன்புடத்தில், சூழ்ந்திடுங்குளிகன் புடந்தனை யெடுத்துத் தோன்றிய ராசியுறசனியும், வடிவுடன் வருநாள்களத்திரந்தனக்கு வருகிரியாண மென்றுரைப்பர், மந்தனையேழாமதிபதிபுடத்தில் வருகால மிருத் துவை யெடுககின், பிடிபடும் ராசியந்தராசிக்கே பெற்றிடுமாதமந்த நாளில், பிறை நுதற்றிலத முகமதிகருங்கட் பெண்ணணங்கே யெனப்பேசே.

(இ - ள்.) பிறைச்சந்திரனை யொத்த முகமுடையாய்! இரண்டாமதி பன் குணகுணகார ஸ்புடத்தில் இமகண்டன ஸ்புடத்தை வாங்கிக் குறித்த ராசியில் குரு வருகின்ற நாளில் மனைவிக்கரிட்ட முண்டாகும். இரண்டுக் குடையோன் ஸ்புடத்தில் குளிகன் ஸ்புடத்தை எடுத்து வருகின்ற ராசியில் சனிவரும் நாளில் களத்திரத்திற்கு கிரியாணமுண்டாம். எழுக்குடையோன் ஸ்புடத்தில் வருங் காலமிருத்துவை யெடுக்க வரும் ராசியில் வரும் மாதத் தில் அந்த நாளில் கிரியாண முண்டாமென்று பேசுக, எ - று. (669)

பேசியவிரண்டா மிடந்தனிலிரவி பெரிதுறில்விடம் புசித்திடு பிறைகுறைந்திருக்கிற் சலத்தினற்கண்டம்பின்குசனுறிலனல் குளிப் பள், பாசமாம்புந்தி பாவரைக்கூடிற் பசிதனை பொறுத்தொறுத்திருப் பள், நேசமாம்பிருகு பாவரைக்கூடி னின்றிடில்விடம் புசித்திடுவள், நிறைசனியிருந்தால் வியாதியாயிருப்ப ளீண்டதோர் பாம்பிருவரை யும், தேசுடன்கூடிற் பாசபந்தத்தாற் சீவனை யொழிக்கவே துணி வள், தெரிந்த நல்லோர்கள் பார்வையுண்டாயின் றீர்க்கசீவன் பெறுந் திருவே.

(இ - ள்.) இரண்டில் சூரியனிருந்தால் விஷம் புசிப்பள். தேய்பிறைச் சந்திரனால் சலகண்டமும், அங்காரகனால் அக்கினி கண்டமுண்டு. புதன் பாவிகளைக் கூடினாற் பசிபொறுத்திருப்பவளும் குரு கூடின் பரிக லத்தை வெறுப்பவளும், சுக்கிரன் பாவரைக்கூடின் விடம்புசிப்பவளும் சனி கூடினால் வியாதியாயிருப்பவளும், ராகு கேதுக்களைக் கூடினால் பாசபந்தத் தால் ஜீவனை யொழிப்பவளும், சுபர்பார்வை பெற்றால் தீர்க்காயுசுடையவளு மாவாள், எ - று. (670)

* திருவளர்மதி சுக்கிரனுமேழிடத்திற் செறிந்தத்தமனமதா யிருக்கில், சலத்துயிரிறப்ப ளேழிடந்தன்னிற் செங்கதிரிருக்க வந்தியளாம், மருவுசூரியனுந் தாமனுங்கூடின் மனைவியை மருவிடா வஞ்சன், மன்னுசங்கா சாபன்னுறின்மரிப்பள் வளர்பரிவேடரி

முற்றிடிலோ, சருவியே சண்டைக்காரியாயிருப்ப டக்கதோர் குசனுறில்வந்தி, தகைமை சேர்விதிபா தன்னுறிற்கர்ப்பந் தரித்திடா மற் கலேந்திருப்பாள், ஒருமையாய் நிறைந்த மதியுமோரேழி லுற்றிடின் மைந்தரும் குணமும் உள்ளமெல்லியலை மணந்திருப்பனுண்மையீதென வுணர்ந்திடுமே.

(இ - ள்.) சந்திரனுஞ் சுக்கிரனுஞ் சேர்ந்து ஏழாமிடத்தில் அஸ்தமனமாயிருந்தால் சலத்தில் உயிரிழப்பள். ஏழில் குரியனிருந்தால் மலடியாவாள். சூரியனும் அமனுங்கூடினல் மனைவியைச் சேராத வஞ்சகனுவான். சங்கரசாபன் கூடினல் மனைவி இறப்பாள். பரிவேடங்கூடினல் சண்டைபிடிப்பவளாவாள். அங்காரகனிருந்தால் வந்தியாவள் விதிபாதனிருந்தால் கர்ப்பந் தரிக்காமல் கவலைப்பெறுவள். வளர்பிறைச்சந்திரன் ஏழிலிருந்தால் பிள்ளைகளையும், நற்குணத்தையு முடைய பெண்ணை மணப்பான், எ - று.

உணர்ந்திடும் புந்தியேழினி லிருக்கவுறப்பெறும் புதல்வனைப்பெறுவள், உற்றதேவழாதி யிரவிதூமனை யுடன்சேறிந் தேழினிலிருக்க, மணந்திடுமிகுதி மனைவியத்தனையு மரிக்குமென் றுரைப்பரேழிடத்தில், மன்னதூமாதி யைவரிலொருவர் வந்திடிற் களத்திரர்க்கானி, அணைந்திடுஞ் சசிலக்கினத்தினுக்கேழ மப்படிப் பலனென வறிக, ஆனதோர்மதிதன் னங்கிசத்தேறி யன்புடனேழிடத்திருக்க, குணந்திகழுந்தார்ச் சுந்தரிநீசர் குளிர்மனை யேழிடமாகக், கோதறுசந்திரங்கிசமதியாகிற் கொழுநரும் பலனெனக்கூறும்.

(இ - ள்.) புதன் ஏழிலிருந்தால் சுபுத்திரனைப் பெறுவள். ஏழுக்குடையோன் சூரியன் தூமனிவர்கள் சேர்ந்து ஏழிலிருந்தால் விவாகஞ்செய்யு மனைவியானைவரும் இறப்பார் ஏழில் தூமாதி ஐந்துபேரில் ஒருவரிருந்தால் களத்திரத்திற்கு ஆனியுண்டாம். சந்திரலக்கினத்திற்கு ஏழாமிடமும் அப்பலனேயாகும். சந்திரன் தன் அங்கிசத்திலேறி ஏழிலிருந்து நீசர்மனை ஏழதாக சூரியனங்கிசையில் சந்திரனிருந்தால் அவளுக்கும் புருஷர் பலபோராவார்கள், எ - று. (672)

வேறு.

குடும்பங்களத்திரமாறுதி கூடிப்புகரும்பாவருடன்
திடமேசன்மந்தனிலிருக்கச் சனித்தோன்கமனகரதாரம்
வடிவாஞ்செல்விக்கிச்சிப்பன் வாழும்பாக்கியதானத்தில்
அடவேயிவர்கடாமுற்று லையருமிப்படியாமென்பார்.

(இ - ள்.) குடும்பாதிபன், களத்திராதிபன், ஆறுக்குடையோன் இவர்கள்கூடியும், சுக்கிரன்பாவிகளோடுகூடிச் சன்மத்திலுமிருக்கப் பிறந்தோன் வடிவுடைய பாதாரத்தை இச்சிப்பன் பாக்கியஸ்தானத்தில் முறையே இவர்களிருந்தாலும் இப்படியே யாகும், எ - று. (173)

ஆறுமெசுக்கிரனேழாதி யாறுமதிகூடித்
தாமேழுவரொருவீட்டிற்றங்கிற் போகந்தானில்லைத்
தீமெயிரண்டுமூன்றாதி செறிந்தாறெட்டிற்பன்னிரண்டில்
காமேகூடியிருந்திடினே களரோகங்கள்காட்டிடுமே.

(இ - ள்.) சுக்கிரன் ஏழுக்குடையோன் ஆறுமதிபன் இவர்கள்கூடி ஒரு வீட்டிலிருந்தால் போகமில்லை. இரண்டு மூன்றாமிடங்களுக் குடையவர்கள் ஆறு எட்டு பன்னிரண்டாமிடங்களில் சேர்ந்திருந்தால் களரோக முண்டாகும், எ - று. (674)

காட்டுஞ்சன்மமேழாதிகண்ட கேந்திரகோணத்தில்
கூட்டியிருக்கவவர்வீட்டோனை கொண்டலக்கினந்தானேமேவி
நீட்டும்பலவானிவனென்றே நேசமறிந்தேயிவர்திசையில்
ஊட்டும்புசிப்பிலிவன் பாரியுகந்தேயிவனோடுமரணம்.

(இ - ள்.) சன்மம், ஏழுக்குடையவர்கள் கேந்திரிகோணங்களில்இருக்க அவர் வீட்டோன் லக்கினத்திலிருந்தால் இவனே பலவானென்று அவன் திசை சுயபுத்தியில் அவனும், அவளும் மரிப்பார்கள், எ - று. (675)

சத்தமவட்டமாதி தன்னுடன்பாவரேனும்
ஒத்துடனந்தத்தானத் தாறுபலபாவரேனும்
சித்தமாம்வியத்தில்மன்னன் சேயுடன்கூடினாலும்
ஒத்தநல்விவாகம்ரெண்டா யுறுமணம்புரிவனென்றே.

(இ - ள்.) ஏழு எட்டுக்குடையவர்களோடு பாவிகளானாலும் அந்தவிடத்துப் பல பாவிகளானாலும் சேர்ந்தும், பன்னிரண்டில் குரு அங்காரகனுடன் கூடினாலும் இரண்டு விவாகம் செய்துகொள்வன், எ - று. (676)

ஏழிடமிரண்டாமாதி யிருவரிலொருவரேனும்
தாழ்பலவீனராகத் தானுறிலந்தவீட்டில்
ஊழ்பெரும்பாவர்நிற்க வுறுமணமிரண்டுசெய்து
வாழ்பவர்புவியிலென்று வழுத்துவர்மறைநல்லோரே.

(இ - ள்.) ஏழு இரண்டுக்குடையவர்களில் ஒருவராவது பலவீனராயிருந்தால் அந்த வீட்டில் பாவிகளுமிருந்தாலும் இரண்டு விவாகஞ் செய்துகொண்டு வாழ்வரென்று சொல்லுவர், எ - று. (677)

வல்லதிரண்டில்வெகுபாவர் வந்துற்றாலுமோரேழில்
சொல்லும்பாவர்தானுறினுஞ் சுகமாமந்தமனையினும்
வெல்லுமிந்தமனையோனை விரும்பிப்பாவர்நோக்குமுற
நல்லமணங்களிரண்டென்று நவில்வர்கணிதநாவலரே.

(இ - ள்.) இரண்டில் பாவிகளிருந்தாலும், எழிலும் அப்படியே யிருந்தாலும் அந்த வீட்டிலும், அந்த வீட்டுக்குடையோனைப் பாவர்கள் பார்த்தால் இரண்டு விவாகஞ்செய்துகொள்வானென்று சொல்வர்பெரியோர், எ-று.

ஏற்றியசன்மமிரண்டு மேழினிற்பாவ னேனும்
நேர்த்தியாங்களத்திராதி நீசாத்தமனா னேனும்
வேற்றுசத்துருவீ டேனும் விரும்பியே யின்றதாகில்
போற்றுவர்களத்திரங்க ளிரண்டெனப்புகல்வர் தாமே.

(இ - ள்.) சன்மம் இரண்டு ஏழாமிடங்களில் பாவரானாலும், களத்திராதிபன் நீசனானாலும் அத்தமனமானாலும், சத்துரு வீடானாலும் விரும்பியிருந்தால் இரண்டு களத்திரங்கள் உண்டாமென்று சொல்லுவர், எ - று.

மேவியகளத்திராதி விரும்புகேந்திர கோணத்தில்
பாவியர்க்ஷேத்திரநட்பும் பத்துறப்பதிதான்கூடத்
தாவியவேழானஞ்சை தரிப்பசொக்ஷேத்திரங்கண்டால்
தேவியுமனேகமாகத் திடமணம்புரிவன்றானே.

(இ - ள்.) களத்திராதிபன் கேந்திரகோணங்களிலும், பாவிகள் வீட்டிலும், நட்பிலும், பத்துக்குடையோன்கூடி ஏழானங்கிசையிலேறி ஆட்சிஸ்தானத்தைப் பார்த்தால் அநேக களத்திரங்களை மணஞ்செய்வான், எ-று.

ஆனதோரேழிடத்தி லரசனும்பலமதாகி
ஈனமில்பளிங்குதானு மிருந்திடவலுவதாகத்
தேனிகர்குடும்பவாதி சினேகாங்கிசையிருக்கவேதான்
தானதிரூபமுள்ள தனபதிநாரியன்றே.

(இ - ள்.) எழில் குருபலப்பட்டு, சுக்கிரனும் கெடாமல் பலப்பட்டு இருக்கவும் குடும்பாதிபன் மித்துருவாங்கிசையி லிருக்கவும் அதிரூபமுள்ள தனவான் பெண்ணை மணப்பன், எ - று. (681)

வயலாபாதியேழா னிருவரும்பலமாய்க்கூடித்
தூயகோணத்திருக்கச் சுபருடைப்பார்வையாகில்
நேயமாமனேகம்பெண்க ளிறைசிவனுள்ளராக
ஆயவேமணங்கள்சூட்டி யவனியிலிருப்பன்றானே.

(இ - ள்.) லாபாதிபதி, எழுக்குடையோன் இவ்விருவரும் பலமாய்க்கூடி திரிகோணத்தி லிருந்து சுபர் பார்வையைப் பெற்றால் உயிருடனே இருக்கவும் அநேக பெண்களை விவாகஞ் செய்வான், எ - று. (682)

இருந்திடுமிரண்டேழாதி லக்கினகோபுராங்கிசைக்குள்
பரிந்துறும்பத்தாமாதி பண்புடனேழிலுற்றால்

தெரிந்தநற்களத்திரங்க டெச்சமெனக்கொள்வரென்றே
புரிந்திடுங்கணிதநூலின் புண்ணியரோதினரே.

(இ - ள்.) இரண்டு, ஏழுக்குடையோர்கள் லக்கினகோபுராங்கிசைக் குள்ளும் பத்துக்குடையோன் ஏழிலுமிருந்தால் பத்துப் பெண்களை விவாகஞ் செய்து கொள்வனென்று சொல்லுவர், எ - று. (683)

ஓதியேகளத்திராதி யுயர்சுபராசியேறி
மீதுமங்கிசைநல்வீடாய் மேவிடபனிங்குதானும்
நீதியிப்படிபோலாக நிறையும்பத்ததிபனோடு
மோதியபலவான்கூட மோகனப்பெண்கள்கொள்வான்.

(இ - ள்.) களத்திராதிபதி சுபர் ராசியிலேறி அந்த அங்கிசம் சுபர் வீடாய் மருவவும், சுக்கிரனும் அப்படியே யாகவும், பத்துக்குடையவனோடு பலவான் கூடவும் மோகனப்பெண்களைக் கொள்ளுவான், எ - று. (684)

கொள்ளுங்கற்களத்திராதி குருவுடன்கூடினாலும்
தெள்ளியபார்வையுற்றுத் திடமுளதலனுற்றானும்
மெள்ளவேபிருகுதானும் மல்குபலமாகவுற்றால்
ஒள்ளியதானதர்ம முள்ளவள்வருவடானே.

(இ - ள்.) களத்திராதிபதி குருவுடன் கூடினாலும், பார்வையைப்பெற்று வலிவுள்ள ஸ்தலத்திலிருந்தாலும், சுக்கிரன் பலப்பட்டிருந்தாலும் தான தர்மமுள்ள மனைவி வாய்ப்பாள், எ - று. (685)

வந்தலக்கினந்தனுமீனம் வரவேபுதனும்பாவருடன்
இந்துநீசமத்தமனமிருந்தங் கிசைகள்சத்துருவின்
சொந்தமங்கிசைகளேறினுந் தூர்த்தர்பாவர்களத்திரத்தில்
உந்திபிருக்க வேசியரா யுயர்ந்தகுலமுந்தாழ்வாமே.

(இ - ள்.) லக்கினம் தநுசு, மீனமாக புதன் பாவருடனும், சந்திரன் நீச அஸ்தமனமாய் சத்துரு அங்கிசையிலிருந்து சொந்த அங்கிசையிலேறினாலும் தூர்த்தர் பாவிகள் களத்திர ஸ்தானத்திலிருந்தாலும் வேசி மனைவியாய் வாய்க்க உயர்ந்தகுலமும் தாழ்ச்சியை யடையும், எ - று. (686)

ஆமேகளத்திராதிபதி யரசனுகிப்பாவருடன்
தீமேபாவராசியிலுஞ் சிறந்தேயிருக்கப்பாவர்களும்
தாமேநோக்கமானாலுஞ் சனிசேயங்கிசையுற்றாலும்
போமேசோரம்ரகசியமாய் புறம்புமசையாதவள்போல.

(இ - ள்.) களத்திராதிபதி குருவாய் பாவருடன் கூடிப்பாவராசிலும் அவரைப் பாவிகள் பார்க்கிலும், சநியங்கிசத்திலிருந்தாலும் வெளிப் போகாதவள்போலிருந்து உள்ளுக்குள்ளே சோரம் போவாள், எ - று.

போருக்களத்திராதிபதி புகராய்ப்பாவருடன்கூடி
ஏகும்பாவர்பார்க்கிருக்க வெழிலார்சத்துருவங்கிசையில்
ஆகும்பாவரங்கிசையி லமர்ந்தேயிருக்கவன்னியர்பால்
தாகமுடனே சஞ்சரித்துச் சமர்த்தாய்ச்சோரஞ்செய்திடுவள்.

(இ - ள்.) களத்திராதிபதி சுக்கிரனாய்ப் பாவருடன் கூடியும் பாவிகள் பார்க்கவும் சத்துருவங்கிசை, பாவிகளங்கிசையில் இருக்கவும் அந்நியரிடம் வாசஞ்செய்து சமர்த்துடன் சோரம் போவாள், எ - று. (688)

ஏழாமிடத்தோன்பாவருட னிரண்டிலிருக்கச்சேய்பார்க்கச்
சூழும்விபசாரத்தொழிலாற் சுதனுமுண்டாமெனச்சொல்வர்
வாழுமிலக்கினத்துடையோனும் வரவாறெட்டிற்பன்னிரண்டில்
தாழ்வாயிருக்கப்பன்னிரண்டு தானுங்கொள்வன்தப்பாதே.

(இ - ள்.) ஏழுக்குடையோன் பாவர்களுடன்கூடி இரண்டிலிருக்க அவனை அங்காரகனும் பார்த்தால் விபசாரத்தால் பிள்ளையுண்டாம். லக்கினாதிபதியும், லாபம் ஆறு எட்டு பன்னிரண்டா மிடத்தில் தாழ்ந்திருந்தால் தவறாமல் பன்னிரண்டு விவாகஞ் செய்வான், எ - று. (689)

கொள்ளும்லாபாதிகளத்திராதி கூடினாலும்பார்த்தாலும்
தெள்ளும்பலவானாகியிவர் திரிகோணத்திலிருந்திடினும்
உள்ளவிவாகமூன்றென்றே யுரைப்பர்கணிதவல்லோர்கள்
கள்ளவிடம்போல்விழியிருட்டுங் குழனற்காரிகையே.

(இ - ள்.) லாபாதிபன், களத்திராதிபதி இவர்கள் கூடினாலும், பார்த்தாலும் பலவானாகி இவர்கள் திரிகோணத்திலிருந்தாலும் விவாக மூன்றென்று சொல்லுவார்கள் பெரியோர் பெண்ணே!, எ - று. (690)

லக்கினந்தனக்கேழ்தன்னில் வியத்தினிற்சோமன்றானும்
புக்கவேபாவரங்கிசையிற் பொருந்தியேயிருந்தக்கால்
சுக்கிரன்பாவரோடுங் துலங்கவேயிருக்கநாரி
கைக்கொள்ளும்புருடனாய கணவனைக்கொல்வள்கண்டீர்.

(இ - ள்.) லக்கினத்திற்கேழிலும், பன்னிரண்டிலும், சந்திரன் பாவரங்கிசத்திற் பொருந்தி யிருந்தாலும், சுக்கிரன் பாவிகளோடு கூடினாலும் அவள் தனது நாயகனைக் கொல்லுவாள், எ - று. (691)

ஏழாம்பாவம் முற்றிற்று.

# எட்டாம்பாவம்.

## ஆயுட்பலன்.

அட்டமத்ததிபன்பாக்கி யாதிபனாகிநிற்கில்
அட்டமத்ததிபன்பாவி யாகினுமையமில்லை
அட்டமத்தனுச் சமாகினுமானநற்கோள்
அட்டமத்ததிபன்றன்னைப் பார்க்கினூறாண்டிருப்பன்.

(இ - ள்.) எட்டுக்குடையோன் பாக்கியாதிபதியானாலும் பாவியானாலும், உச்சனானாலும் சுபக்கிரகங்களினது பார்வையைப் பெற்றாலும் சந்தேகமில்லாமல் நூறுவயதிருப்பான், எ - று. (692)

மங்குபாதகன்செவ்வாயைப் பற்றியபுசிப்பிற்காரி
தங்கியதிசையிற்செவ்வாய் தானுகந்திடுபுசிப்பில்
அங்கவனட்டமாதி திசையினிலவன்புசிப்பில்
மங்குகோசாரநன்றாயின் வருத்துநோய்மாறுந்தானே.

(இ - ள்.) சனி அங்காரகனைப்பற்றிய புசிப்பில் சனிதிசையிலும், அங்காரகன் புசிப்பில் அட்டமாதிபன் திசையிலும் அவன் புசிப்பில் கோசாரம் நல்லதானால் வருத்துநோய் மாறும், எ - று. (693)

## வேறு.

ஆறெட்டுப்பன்னிரண்டா மதிபரோடு
மலதிவர்மூவர்க்கைந்தொன் பானிலேனும்
வீறிட்டசனிமேவிற் சரீரபீடை
மேவியவெட்டாதிபன்கேந் திரத்திலேனும்
பேறிட்டன்மாதிபதியுந் துர்ப்பலனாய்ப்
பெறினெட்டாண்டென்று பேசலாகும்
கூறிட்டசன்மாதி பலவானாய்க்
குலவும்வெகுவயதென்றே கூறலாகும்.

(இ - ள்.) ஆறு எட்டு பன்னிரண்டா மிடங்களின் அதிபர்களோடும் அல்லது இம்மூவருக்கும் ஐந்து ஒன்பதா மிடங்களில் சனியிருந்தால் சரீர

பீடையும் எட்டுக்குடையோன் கேந்திரத்தினும் சன்மாதிபதி துர்ப்பலனானால் முப்பத்திரண்டு வயதென்று பலவானாய் வெகுவயதென்றுஞ் சொல்லலாம், எ - று.

(694)

வேறு.

கூறுங்கடகமுதலாறு ராசிக்குள்ளே குருவிருக்க
வீறுமகரமுதலாறுக்குள்ளே காரிமேவுகிலும்
பேறுங்கடகக்கேந்திரத்திற் பிருகும்புதனும்பெறநிற்கில்
மாறுதுறவுந்தீர்க்காயுளுடன் வையந்தன்னில்வாழ்வாரே.

(இ - ள்.) கடகமுதலிய ஆறு ராசிக்குள் குருவும், மகரமுதல் ஆறு ராசிக்குள் சனியும் கடகேந்திரத்தில் சுக்கிரனும் புதனுமிருந்தால் தீர்க்காயுசாய் வாழ்வான், எ - று.

(695)

வாழுமகரமுதலாறின் மந்தனிருக்கக்கடகமுதல்
சூழும்ராசியாறுக்குட் சோமனிருக்கக் கேந்திரத்தில்
வீழுமரசனுநிற்றீர்க்க வயதாமெட்டிற் குசனிருக்க
எழுங்கதிரோரைகளாக வேழிற்கேந்திர நூறுண்டே.

(இ - ள்.) மகரமுதலாறு ராசிக்குள் சனியும், கடகமுதலாறு ராசிக்குள் சந்திரனும் கேந்திரத்தில் குருவுமிருந்தால் தீர்க்காயுசாம். அன்றி எட்டில் அங்காரகனும் கதிர் ஓரைகளில் குரு எழிலும் கேந்திரத்திலு மிருந்தாலும் நூறு வயதாம், எ - று.

(696)

ஆண்டமிதுனமுதலாறி லரசனிருக்கத்தனுமுதலாய்த்
தீண்டுமிராசியோராறில் றிரிகோணங்கேந்திரந்தன்னில்
நீண்டபுதனுஞ்சுக்கிரனு நிற்கிற்றீர்க்கசீவனுமாம்
பாண்டிமகராசன்கொடியைப் பழித்தகருங்கட்பைங்கொடியே.

(இ - ள்.) மிதுனமுதல் ஆறுக்குள் குருவும், தநுசு முதலாறுக்குள்ளும் திரிகோண கேந்திரங்களிலும் புதன் சுக்கிரனுமிருந்தால் தீர்க்காயுசாமென்று பாண்டிக்கொடியை ஜெயித்த கட்பைங்கொடியனாய்! நீ அறிக, எ-று.

கொடியேகுருசுக்கிரனன்கா மிடத்திற்குடிகொண்டேயிருக்க
நெடியசன்மலக்கினத்தி னிலவுமிருக்கவிவர்க்குநடு
கூடியசனியீச்சுரனிருக்க கண்டவயதாமொருநூறே
பிடியுமிளம்பேட்டன்னமுமுன்பின்னே தொடருநடையாளே.

(இ - ள்.) பெண்ணே! குருசுக்கிரர் நான்கிலும் சென்மலக்கினத்தில் சந்திரனும், இவர்களுக்கு நடுவில் சனியுமிருந்தால் வயது நூறென்றுஞ் சொல்லுவர், எ - று.

(698)

நடிக்குஞ்சன்மமுதனன்கா மிடத்துண்டுகவநாற்கலையும்
படிக்கும்புதன்சுக்கிரனரசன் பரிந்தேயிருக்கிற்சதவருஷம்

துடிக்கும்புதனொன்றேநின்றாற் றொடர்முப்பத்துமூன்றாகும்
அடுக்கும்வெள்ளிக்கறுபத்தா றரசனிருந்தானூறாமே.

(இ - ள்.) சன்மமுதல் நான்குராசிக்குள் புதன் சுக்கிரன் குரு இவர்க ளிருந்தால் நூறு வயதாம். அன்றி புதனொருவனே யிருந்தால் முப்பத்து மூன்று வயதும், சுக்கிரனிருந்தால் அறுபத்தாறு வயதும், குருவிருந்தால் நூறு வயதாகும், எ - று. (699)

ஆமட்டமத்தினாதிபனு மட்டபத்திலமர்ந்திருக்கச்
சோமன்பாவருடன்கூடி யிரண்டாறெட்டிற்சூழ்ந்திருக்கில்
தாமும்வயதைம்பத்தெட்டாந் தருமஞானிதானவன்
காமன்கணையைப்பழித்தயிலைக் கடிந்துமருட்டுங்கண்ணாளே.

(இ - ள்.) அட்டமாதிபதி யதிலேயிருக்கச் சந்திரன் பாவிகளுடன் கூடி இரண்டு ஆறு எட்டாமிடங்களி லிருந்தால் ஐம்பத்தெட்டு வயதாகும். ஞானியுமாவான் நங்காய்!, எ - று. (700)

கண்ணார்கும்பலக்கினமே கண்டசன்மலக்கினமாய்ப்
பண்ணாதற்கெட்டாங்கிசையிற் பயிலுமரசன்பரிந்துநிற்க
எண்ணார்பாவர்கேந்திரத்தி லில்லாதிருக்கவிவ்வுலகில்
தண்ணார்வருஷமறுபதுக்குந் தானுற்றிடுவர்தப்பாதே.

(இ - ள்.) கும்பமே சன்ம லக்கினமாய் அதற்கெட்டா மங்கிசையில் குருவிருக்கவும், பாவிகள் கேந்திரத்தி லில்லாதிருக்கவும் அறுபது வருஷம் வரைக்கும் தப்பாமல் வாழ்வர், எ - று. (701)

தப்பாவில்லைலக்கினமாய்த் தன்னிற்குருவுந்தானிருக்க
இப்பார்குசனுந்தொடுகரும் பாம்பிவர்மூவோருந்தாங்கூட
மெய்ப்பாவெழுபத்தைந்தாகு மேவும்பாவர்கேந்திரத்தில்
ஒப்பார்சன்மத்தாதியெட்டி லுறிலாண்டிருபத்தெட்டாமே.

(இ - ள்.) தநுசலக்கினமாய் அதில் குருவும், அங்காரகன், சந்திரன், ராகு இவர்களும் கூடியிருந்தால் எழுபத்தைந்து வயதாகும். பாவிகள் கேந்திரத்திலும் சென்மாதிபதி எட்டிலுமிருந்தால் இருபத்தெட்டு வயதாம், எ-று.

எட்டாம்பாவராங்கிசையி லினியோரிருக்கக்கேந்திரத்தில்
மட்டார்பாவர்தாமிருக்க வயதுமறுபத்தாறாகும்
கெட்டார்சுபராங்கிசைதன்னிற் சென்மாதிபனுந்தானிருக்க
எட்டாறிலெட்டாதிபதியிருக்கி லைம்பதென்பாரே.

(இ - ள்.) பாவராங்கிசையில் சுபக்கிரகங்களும், கேந்திரத்தில் பாவி களு மிருந்தால் அறுபத்தாறு வயதாம். சுபராங்கிசையில் சென்மாதிபனும், எட்டு ஆறுமிடங்களில் எட்டுக்குடையோனு மிருந்தால் ஐம்பது வயதென்பர், எ - று. (703)

என்பாரெட்டாமதிபதியும் லக்கினத்திறைதிபனும்
ஒன்பானுதிறற்கோளை லுயிர்போந்தந்தைதக்கருகின்மைந்தர்
அன்பாயிருப்பர்சன்மத்தி லராவுகதிர்சந்திரனிருக்க
வன்பாம்புவியத்திற்குருவிருக்கில் வயதுமிருபத்தெட்டாமே.

(இ - ள்.) எட்டுக்குடையோனும் லக்கினைதிபதியும் ஒன்பதுக்குடையோனும் சுபர்களானால், மைந்தர்களருகிருக்க தந்தை யிறப்பன். சன்மத்தில் ராகு சூரியன் சந்திரனிவர்களும், பன்னிரண்டில் குருவுமிருந்தால் இருபத்தெட்டு வயதாம், எ - று. (704)

வேறு.

ஆகுலக்கின மெட்டாதிகூடியே
வாகுகேந்திரத் தெய்தமற்றெட்டினில்
தாகமோடெவராயினுந் தானுறில்
ஏகுவன்பன்னிரண்டிற் கண்டமே.

(இ - ள்.) லக்கினைதிபதி, எட்டுக்குடையோன் இவர்கள் கூடி கேந்திரத்தி லிருக்கவும், எட்டில் யாரிருந்தாலும் பன்னிரண்டே வயதாம், எ - று.

வேறு.

கண்டவேழெட்டாறிடத்திற் கதித்தநல்லோர்தாமிருக்க
அண்டின்மூன்றிறபன்னொன்றி லசுபருறத்தீர்க்காயுளுண்டாம்
கொண்டவெட்டாதிபனுச்சங் கொளச்சென்மாதிபன்றானும்
மிண்டிபினியோர்காணக் கேந்திரத்திலிருக்கவெகுவயதே.

(இ - ள்.) ஏழு எட்டு ஆறுமிடங்களில் சுபக்கிரகங்களும், மூன்று பதினோராமிடங்களில் பாவிகளுமிருந்தால் தீர்க்காயுசுண்டாம். எட்டுக்குடையோன் உச்சமாகவும், சென்மாதிபனைச் சுபர்காணக் கேந்திரத்திலிருந்தாலும் வெகுவயசுண்டாகும், எ - று. (706)

தேரும்வயதினளவுரைப்பக்கேண்மின் சன்மாதிபன்றனக்கும்
ஊரும்பரித்தேரோன்றனக்கு முறவாகிற்றீர்க்காயுளுண்டாம்
ஏருஞ்சமமேன்மத்திமமா மெட்டெட்டாண்டேபினிதிருப்பன்
நேரும்பகையதாகிலற்ப நிலத்திறைலெட்டாண்டிருப்பன்.

(இ - ள்.) வயதினளவைச் சொல்லக்கேளுங்கள்: சன்மாதிபனுக்கும் சூரியனுக்கும் உறவானால் தீர்க்காயுசுண்டாம், சமமானால் மத்திமமாம். அறுபத்துநான்கு வருஷங்களே யிருப்பன். பகையானால் அற்பவயதாம். முப்பத்திரண்டு வருஷமேயாகும், எ - று. (707)

இருக்குமறவயதுள்ளோனிறப்பன் விடாட்சத்திரத்தில்
வருக்கமுடன்பூரணவயதோன் மரணவதைநக்ஷத்திரத்தில்

பெருக்கமுடன்மத்திமவயது பிறத்தியதரையதுதன்னில்
தருக்குமற்பவயதிலற்பஞ்சாற்றக் கேண்மின்றரைமீதே.

(இ - ள்.) அற்பவயதுள்ளவன் விஷநட்சத்திரத்திலும், பூரணவய துடையவன் மரணவதை நட்சத்திரத்திலும், மத்திம வயதுடையோன் தரையிலும், அற்பவயதிலற்பஞ் சொல்லுகின்றேன் கேள், எ - று. (708)

தருஞ்சன்மாதிபாவரங்கிசந் தரிக்கில்வயதற்பத்திலற்பம்
வருசன்மாதிசுபரங்கிசத்தில் வரவற்பத்தின்மத்திமமாம்
அருள்சன்மாதிதனைநல்லோர்காண வற்பத்தினிற்றீர்க்கம்
உருமத்திமந்தீர்க்கந்தனக்கு முளவிப்படிக்கண்டுரைமானே.

(இ - ள்.) சன்மாதிபன் பாவரங்கிசத்திலிருந்தால் வயது அற்பத்திலற்பமாம். சுபரங்கிசத்திலிருந்தால் அற்பத்தில் மத்திமமாம். சன்மாதிபனை சுபர் பார்த்தால் அற்பத்தில் தீர்க்கமாம், மத்திமம் தீர்க்கமாம். இவைகளுக்கெல்லாம் உளவினைக்கண்டு உரைப்பாயாக, எ - று. (709)

கதிரோனுதயமுதற்சனன காலையளவுக்கடிகைதனை
எதிராவெண்ணியிரண்டரையி லீந்தாலோரைலக்கினமாம்
சதிராய்ச்சன்மவீடொற்றை தானுகிற்சூரியன்முதலாம்
அதிராய்ச்சன்மவீடிரட்டையாகிற சன்மமுதற்சரியே.

(இ - ள்.) சூரியனுதயமுதல் சனனம் வரைக்குமுள்ள கடிகைகளை எதிராக வெண்ணி இரண்டரைக்குக் கொடுத்தால் ஓரை லக்கினமாம். அதில் சன்ம முதலாகவும் கொள்ளவேண்டும், எ - று. (710)

வேறு

சரமதனிற்சரந்தீர்க்கந் திரஞ்தான்மத்திமமாம்
 தயங்கியதோருபயங்கடா னற்பமாகும்
திரமதனிற்றிரமற்பஞ் சரந்தான்மத்திமமாம்
 திரத்திலுபயம்பெறிலுந் தீர்க்கவயதாகும்
வருமுபயந்தனிலுபய மத்திமமேயாகும்
 மற்றுமதிற்சரமாகில் வயதற்பமாமே
பெருமையுடனுபயத்திற் றிரந்தீர்க்கவயதே
 பெற்றிடிபூரணவயது பெற்றிடுவர்தாமே.

(இ - ள்.) இலக்கினாதிபதி சரத்திலும், அஷ்டமாதிபதி சரத்திலுமிருந்தால் ஆயுள் தீர்க்கமும், ஸ்திரம் மத்திமமும், உபயம் அற்பமும், லக்கினாதிபதி ஸ்திரத்திலும், அஷ்டமாதிபதி ஸ்திரத்திலுமிருந்தால் அற்பமும், சரம் மத்திமமும் உபயம் தீர்க்கமும், இலக்கினாதிபதி உபயத்திலும், அஷ்டமாதிபதி உபயத்திலு மிருந்தால் மத்திமமும், அதில் சரம் அற்பமும், அதில் ஸ்திரம் தீர்க்கவயதும் பெற்றிடுவர், எ - று. (711)

பெறுந்திரிகோணங்களிற் கேந்திரத்தினல்லோர்நிற்கப்
பின்னுஞ்சன்மாதிபன் பொன்னுடனுன்கினிற்க
உறுவதுநூறுண்டளவு முளகில்மிகவாழ்வர்
உற்றசன்மமோரெட் டாதிபனுமுடன்கூடி
மருவுறவாறுமிடத்திற் சனிபார்க்கநிற்கில்
வாலையிலேயரிட்டமெனவே வழித்தலாகும்
சிறுகுழவியிலக்கினத்திற் சேயெட்டிற்றிங்கள்
செறியுமிருவரைக்காரி தெரிசிக்கிலரிட்டம்.

(இ - ள்.) திரிகோணம் கேந்திரங்களில் சுபரும் சன்மாதிபதி குருவுடன் சேர்ந்து நான்கிலுமிருந்தால் நூறுவயதாம். சன்மாதிபனும் எட்டுக்குடையோனுங்கூடி ஆறுமிடத்திலும் சநிபார்க்கவிருந்தால் இளந்தையிலேயே அரிட்டமுண்டாம். லக்கினத்தில் அங்காரகனும், எட்டில் சந்திரனும் இருக்க இவர்களைச் சநிபார்த்தால் அரிட்டமுண்டாம், எ - று. (712)

மானிடருக்கயன்விதித்த வாண்டைமூன்றாக்கின்
வருமுப்பான்மூன்றுரு மஃதற்பமென்ப
தானறுபத்தாறு மத்திமந்தீர்க்கமிதன்மேல்
காழ்வறமுன்வருத்திடு பங்கொன்றினைமூன்றாக்கில்
பான்மொழியாய்பன்னொன்றும் பங்கென்றுதனக்கே
பகர்ந்திடுவாயற்பத்தி லற்பமத்திமந்தீர்க்கம்
ஆனமத்திமந்தீர்க்கத்தை யிவ்வாறேபிரித்து
அறிந்திடுநீயவரவர்க ளாயுளினைக்கண்டே.

(இ - ள்.) மனிதர்களுக்குப் பிரமன் விதித்த நூறுண்டை மூன்றாகப் பாகித்தால் ஒருபங்குக்கு வருவது முப்பத்து மூன்றும், அது அற்பவயதாம். அறுபத்தாறு மாத்திரமாம். மற்றைய முழுமையும் தீர்க்கமாம். தவிர ஒரு பங்குக்கு வந்த முப்பத்துமூன்றை அப்படி மூன்றாகப் பங்கிட்டால் ஒரு பங்குக்குவரும் பதினொன்றை அற்பத்தில் அற்பமென்றும், இருபத்திரண்டை அற்பத்தில் மத்திமமென்றும் முப்பத்துமூன்றை அற்பத்தில் தீர்க்கமென்றும் சொல்லுக. இம்மூன்றையும் இவ்வாறே பிரித்தறிந்துகொள்க, எ - று.

வேறு.

அட்டமாதிபனுங் குசனுமேகூடி
யாறுபன்னிரண் டிடத்திருக்கில்
துட்டராயுதத்தான் மரணமுற்றினியோர்
சூழ்ந்துகண்டிடப் படுங்காயம்
உட்டிணதிபன் பாம்புடனவிய
மெட்டாறெய்திடிற் கள்ளராலரிட்டம்

தொட்டலக்கின மெட்டாதிசேர்ந்து
தஞ்சூழ்மனையுறிற் சலகண்டம்.

(இ - ள்.) எட்டுக்குடையோன் அங்காரகனுங்கூடி ஆறு பன்னிரண்டா மிடங்களிலிருந்தால் துட்டராயுதத்தால் மரணமாம். சுபர்சேர்ந்து பார்க்கக் காயமுண்டாம். எட்டுக்குடையோன் ராகுவுடன்கூடி பன்னிரண்டு எட்டு ஆறுமிடங்களிலிருந்தால் கள்ளரால் அரிட்டமுண்டாம். லக்கினத்தில்எட்டுக் குடையோன்சேர்ந்து தன்வீட்டிலுமிருந்தால் சலகண்டமுண்டாகும், எ - று.

கண்டவெட்டாதி வாகனாதிபனைக்
கலந்துபன்னிரண் டோடாறெட்டில்
மிண்டியநீசர் சத்துருமனையில்
மேவில்வாகனங்க ளான்மரணம்
மண்டியெட்டதிபன் சாரியங்கிசத்தில்
வரின்மரத் தேறி வீழ்ந்திறப்பன
அன்றியோன்றெட் டோ னீசராங்கிசம்
புக்காற்சன்னி வாதமாஞ்சூரும்.

(இ - ள்.) எட்டுக்குடையோன் வாகனாதிபனைக் கலந்து பன்னிரண்டு ஆறு எட்டாமிடங்களிலும், நீசர் சத்துருக்கள் வீடுகளிலுமிருந்தால் வாகனங் களால் மரணமாம். எட்டுக்குடையோன் சரியங்கிசத்தில் வந்தால் மரமேறி விழுந்திறப்பான். அன்றிலக்கினாதிபதி எட்டுக்குடையோன் இவர்கள் நீசராங் கிசத்தி லிருந்தால் சந்நிவாதத்தா லிறப்பான், எ - று. (715)

சூரனுங்கால மிர்த்தியோடெட்டாந்
துறைலக்கி னாதியுங்கூடிப்
பாரமாங்கல்லாகினு மிடியேனும்
பட்டிறந்திடுவன் மற்றின்னம்
சேரவேயட்டமாதி நீசத்திற்
செறிந்துபன்னிரண்டி லாறெட்டில்
வீரமாங்கருங்கோ ணேக்கவேகுன்ம
வியாதியால் வியமடைந்திடுவன்.

(இ - ள்.) காலமிர்த்தியுவுடன் எட்டுக்குடையோனும்; லக்கினாதிபனும் கூடினால் கல்லடிப்பட்டானும் இடியேனும் விழுந்திறப்பன். அன்றி அட்ட மாதிபதி நீசமடைந்தும், பன்னிரண்டு ஆறு எட்டாமிடங்களில் ராகு பார்த் தால் குன்மரோகத்தாலிறப்பன், எ - று. (716)

அடைந்திடுஞ்சன் மத்தாதிபனேனு
மட்டமத்தாதிபனேனும்

மிடைந்திடுங்குளிகன் றன்னுடன்கூடி
வியமெட்டா றிடத்தினின்மேவ
நடந்தகால்கரங்கள் பின்னமேபட்டு
நலிவனந் நோயினுன்வடிவன்
தொடர்ந்தகல்லோர்கள் வடிவுடன்காணிற்
சொல்கைகா லூனமுற்றிருப்பன்.

(இ - ள்.) லக்கினாதிபதியானாலும், அட்டமாதிபதியானாலும் குளிகனுடன் கூடி பன்னிரண்டு எட்டு ஆறுமிடங்களிலிருந்தால் கால் கை பின்னப்பட்டு அதனாலிறப்பன். சுபர் பார்த்தால் கைகால்கள் ஊனப்பட்டிருப்பன், எ - று. (717)

இருந்திடுஞ்சன்மந் தனிற்சனிகுளிக
னிருவருங்கூடியேநிற்க
மருவியவியமா றெட்டிலிந்திருக்க
மன்னுதன் மரணமேயாகும்
பொருந்துமாதித்தன் புடத்திகமண்டன்
புடத்தையுங் கூட்டுமிராசியினில்
அருந்தவமன்னன் பொருந்தநோய்கொண்டே
யவனியிற் றுன்பமுற்றிடுவன்.

(இ - ள்.) சன்மத்தில் சனியும் குளிகனும் கூடியும், பன்னிரண்டு ஆறு எட்டாமிடங்களில் சந்திரனுமிருந்தால் மரணமேயாகும். ஆதித்தன் ஸ்புடத்தில் இமகண்டன் புடத்தைக்கூடும் ராசியில் குருவந்தால் வியாதியால் வருந்துவான், எ - று. (718)

இடும்பையாதித்தன் புடத்துடன்குளிக
னிசைந்திடு புடத்தையுங்கூட்டி
நடந்தராசியிற் சூரியன்வருங்காலம்
நலியதாஞ்சந்திரன் புடமும்
கடுந்திறற்குளிகன் புடத்தையுங்கூட்டிக்
கண்டராசியிற் பிறைவருநாள்
அடுஞ்சரங்கடுமாவடு வரிகுவளை
பயில்கயலான கண்ணுளே.

(இ - ள்.) சூரியன் ஸ்புடத்தோடு குளிகன் ஸ்புடத்தையுங் கூட்டி வரும் ராசியில் சூரியன் வரும்போது நோயுண்டாம். சந்திரன் ஸ்புடத்தையும் குளிகன் ஸ்புடத்தையும் கூட்டிவரும் ராசியில் சந்திரன் வருங்காலத்திலும் நோயுண்டாம் பெண்ணே! எ - று. (719)

நாளினிற்சன்ம லக்கினங்குளிக
னவிலிமகண்டகன் முதலாம்

கோளுடன் காலமிருந்துவிந்நாலுங்
கூட்டியராசி லக்கினத்தில்
மாளுநாளா மிந்நால்வரைக்கூட்டும்
வகையதிற் குளிகலக்கினத்தில்
நீளமட்டளவு மசுபதிமுதலாய்
நிறைந்த நக்ஷத்திரங்கண்டே.

(இ - ள்.) லக்கினம், குளிகன், இமகண்டன் முதலான காலமிருந்து இந்நாலுங்கூட்டிய ராசிலக்கினத்தில் மரணமாம். இந்நால்வரையும் கூட்டும் விதத்தில் குளிகலக்கினத்தில் நீளம் மட்டங்களின் அளவையும் அசுவினி முதலிய நட்சத்திரங்களால் கண்டம், எ - று. (720)

கண்டபின்குளிகனின்ற லக்கினத்தின்
கடிகையிற் சென்றமட்டறிந்து
கொண்டது நக்ஷத்திரங்களைக்கண்டு
குதிரைமட்டெண்ணி முன்னிருந்து
திண்டிறற்றொகையுங் கூட்டுதல்புடமாந்
தெரிந்துமுன்சொன்ன நால்வருக்கும்
மண்டியிப்படி யெண்ணியபுடங்கூட்ட
வந்திடு மரணலக்கினமே.

(இ - ள்.) அப்படி பார்த்துக்கொண்ட பின்பு குளிகின்ற லக்கினத்தில் கடிகையை சொல்லானதையறிந்து அந்த நக்ஷத்திரத்தைக்கண்டு அது முதல் அஸ்வினி வரைக்கு மெண்ணி முன் தொகையையும் கூட்டுதல் ஸ்புடமாம். அதுபோலவே முன் நால்வர்க்கும் ஸ்புடங்கூட்ட மரண லக்கினம் வரும், எ - று. (721)

வேறு.

லக்கினந்தனக்கெட்டாதிபன் குளிகனவிருபத்திரண்டான
நனிதிரையக்காணதிபன்காரி நால்வருமிருந்தவங்கிசையோன்
தக்கதோர்பலன்களன்றியுற்றிடுவோன் றன்மகாதிசைவருநாளில்
தரித்தலக்கினமிரண்டாமிடமெட்டாந் தானமும்வியமனைதனிலும்
திக்கெனசனியீச்சுரன்வருங்காலஞ்சீவனுக்கரிட்டமாமென்றே
செப்பியனர்வராகமேயரேயந்நாள் செகத்திலுள்ளோர்களுமறிய
மிக்கதோர்குளிகன்சனிகருநாகம் விரவுசன்மத்தினிலிருக்க
வியத்தினிலட்டமாதிசன்மாதி மேவிலேயான்மெலிந்திடுவன்.

(இ - ள்.) லக்கினத்திற் கெட்டுக்குடையோன், குளிகன், இருபத்திரண்டாவது திரயக்காணதிபன், சநி இந்நால்வரு மிருந்த அங்கிசத்தோன் தக்க பலன்களின்றியிருக்க அவர்களுடைய மகாதிசைவருங்காலத்தில் உண்டான லக்கினத்திற்கு இரண்டு, எட்டு, பன்னிரண்டாம்வீடுகளிலும் சநிவருங்காலத்

தில் மரணமாமென்று வராகமேயருரைத்தனர். அன்றி, குளிகன், சனி, ராகு இவர்கள் சன்மத்திலும், அஷ்டமாதிபதியும், சன்மாதியும், பன்னிரண்டிலு மிருந்தால் நோயால் வருந்துவான், எ - று. (722)

வேறு.

இடமுறுஞ்சன்மத்தாதியெட்டாதிப னிருவருங்கூடிலாபத்தில்
திடமுடன்லாபத்தாதிமூவருமாய்ச் சேர்ந்திடிலவர்கடன் னுடனே
வடிவுடனெவரபவாதிகளேனும் வந்துதான்கூடினல்வருந்தத்
துடனுயிர்விடும்போதருகினிலிருப்பர் சொல்லும்லாபத்திசைமரணம்.

(இ - ள்.) சன்மாதிபதி எட்டுக்குடையோனுடன்கூடி லாபத்திலும் இவர்களுடன் லாபாதிபதியுஞ் சேர்ந்து இருந்து இவர்களோடு பாவிகள் யாராவது வந்து சேர்ந்தால் லாபாதிபன் திசையில் மரணமாவர், எ - று.

மரணமார்கண்டமறிவது பத்தாமதிபதிதுர்ப்பலனுகக், கிரண மாரகப்பேர் வருதிசையதனிற் கிட்டியபொசிப்பவர் பலனும், மூரா ணுறுமிருவர்தமக்குமேவிரோத மூண்டிடுபகையதாயிருக்கில், தரணி விட்டன்பர்பதியினிற் செல்லுந்தகையென் றுரைக்கவேண்டிடுமால்.

(இ - ள்.) பத்துக்குடையோன் துர்ப்பலனும் மாரகதிசையிற் கிட்டிய பொசிப்பு அவர் பலனும் இவர் தமக்குமே மூண்டிடும் பகையாயிருந்தால் அவர்கள் திசையில் உயிர்விடுவன், எ - று. (724)

வேண்டிநான்காமதிபதியுடனு மேவுமெட்டாதிபன்றானும்
ஈண்டியேதனதுவீட்டினிலிருக்க விறப்பதுதானூழைவாழ்பதியில்
தூண்டியேவியத்திலாறினிலிருக்கிற் றூரதேயத்தினிலிறப்பன்
நீண்டுங்காதளவுஞ்சென்றுகூபயிலே கிசர்ந்திடுங்கருங்கணூரணங்கே.

(இ - ள்.) நான்குக்குடையானேடு எட்டுக்குடையோனுஞ் சேர்ந்து தன் வீட்டிலிருந்தால் தகப்பனூரிலேயே யிறப்பான். பன்னிரண்டு ஆறு மிடங்களி லிருந்தால் தூரதேசத்தி லிறப்பான், எ - று. (725)

ஆரணங்கேகேள்பகலுதித்தானுக் கடற்குளிகன் னுறைவீட்டுக்
கோரணியைந்தொன்பதினிற் சனிவருநாளிடுக்கணுமிரவினிலுதித்தால்
சீரணிகுளிகற்கேழிடந்தனக்குத் திரிகோணமதிற்சனியுதித்தால்
தாரணியறியக்கண்டமென்றுரைப்பர் சாதகநிபுணமாதவரே.

(இ - ள்.) பெண்ணே! பகல் பிறந்தவனுக்கு குளிகனிருக்கும் வீட்டுக் கும் ஐந்தொன்பதில் சனிவருநாளில் துன்பமாம். இராத்திரியில் பிறந்தவ னுக்கு குளிகனுக்கு ஏழாமிடத்திற்குத் திரிகோணத்தில் சனி வரும்நாளில் கண்டமுண்டாமென்று சொல்வர், எ - று. (726)

மாதவமேஷமுதற்கருநாகம் வாழ்மனையளவுமட்டெண்ணி
மீதிமீனமட்டுமிருதொகை தன்னில் விளங்கவேபெருக்கிமுந்நான்கில்
போதவேகழித்துமீந்தலக்கினத்தில் புணர்திரிகோணராசியினில்
ஏதமாங்காரிமருவுநாட்கண்ட மிவையெலாங்கோசரந்தனக்கே.

(இ - ள்.) மேஷமுதல் ராகு இருக்கும் வீடுவரைக்கு மெண்ணி மீன மட்டும் வரும் தொகையில் இரண்டால் பெருக்கி பன்னிரண்டில் கழித்து மிகுந்த லக்கினத்தில் புணர் திரிகோணராசியில் சநி வரும்நாளில் கண்ட முண்டாம். இது கோசரத்திற்காகும், எ - று. (727)

தனக்குமோரெட்டாமதிபதி னுடனுந் தபன னுங்குசனுமேகூடி
எனக்கதிகுசனுமெட்டினிலிருக்க விருவருமெட்டிடம்பார்க்கக்
கனத்துயர்வெற்பிலேறிவீழ்ந்திறப்பன் காணிவரொடுபுகர்கூடில்
சினத்துறுவிலங்குபூண்டுகொண்டிருந்து சீவனைவிடுத்திடுவார்கள்.

(இ - ள்.) எட்டுக்குடையவனோடு சூரியனும், அங்காரகனுங்கூடி எட்டி லிருக்கவும், இருவரும் எட்டாமிடம் பார்க்கவும் மலையேறி விழுந்திறப்பான். இவர்களோடு சுக்கிரனுஞ் சேர்ந்தால் விலங்குகளால் மடிவார், எ-று. (728)

வாருறைமுலையாய்சனிமதியிருவர் மருவியட்டமதநினிலிருக்கக்
காரிசந்திரனெட்டதிபனைக்கூடக் கண்டிடக்கிணற்றில்வீழ்ந்திறப்பன்
கூரியசெவ்வாய்சனிசசிமூவர்கூடி முன்போலவேயிருக்கில்
பாரினிற்றன்கையா லுயிர்மாய்ப்பன் பலர்களும்பழித்துடும்படியே.

(இ - ள்.) கச்சிறுக்கிய தனத்தாளே! சநியும், சந்திரனுங்கூடி அட்ட மத்திலும், சநியும், சந்திரனும் எட்டுக்குடையோனைச் சேர்ந்தாலும் பார்த் தாலும் கிணற்றில் வீழ்ந்திறப்பன். அங்காரகன், சநி, சந்திரன் இவர்கள் கூடி முன்போலிருந்தால் தன் கையால் உயிர் விடுவன், எ - று. (729)

படிதருஞ்செவ்வாய் சனியிவரெட்டிற் பரிந்துறிலக்கினந் தன் னில், கொடியவெய்யோனிற் கெட்டினிலிருக்கக் கொடுமையாய்ச் சலத் தில் வீழ்ந்திறப்பன், முடவனுங்கதிரு மெட்டினிலிருக்க மூண்டிடு மகோதரவியாதி, அடல்சனிகதிர் தேய்பிறைபு மெட்டுறைபி லக்கினி யாயுத மரணம்.

(இ - ள்.) அங்காரகன் சநி இவர்கள் எட்டிலும், லக்கினத்தில் சூரிய னும், எட்டில் சந்திரனு மிருந்தால் சலத்தில் விழுந்திறப்பன். சநியுஞ் சூரி யனும் எட்டிலிருந்தால் மகோதரவியாதியுண்டாம். சநியும், சூரியனும் தேய் பிறைச் சந்திரனும் எட்டிலிருந்தால் அக்கினியாலும், ஆயுதத்தாலும் மரண மாம், எ - று. (730)

மரணமார்வகையே யொன்பதிலிரவி மைந்தனுங்கூடியே யிருக்கக், காரணமாமெட்டிற் குசனுறவெய்திற் கமழ்சோணித மெலாமுலர்ந்து, திரணமாமெலும்புக் கூடதாயிருப்பன் றேய்பிறை சனிகுசனெட்டில், தாரணியோரறியப் பாசபந்தத்தாற் றன்னுயிர்மாய்ப்பனென் றுரைப்பர்.

(இ - ள்.) ஏழு, ஒன்பதாமிடங்களில் சூரியனும், சநியும், கூடியும், எட்டில் அங்காரகனுமிருந்தால் ரத்தமெல்லாம் வற்றி யெலும்பாயிறப்பன். தேய்பிறை சந்திரன், சநி, அங்காரகன் இவர்கள் எட்டிலிருந்தால் பாசபந்தத்தா லிறப்பன், எ - று. (731)

உரைத்திடும்பாவ ரொன்பதிலேழி லுரைந்திட வட்டமந்தன்னில், நிரைதிரையக் காருதிபனிருக்க நீடுமிம்மூன்று வீட்டினையும், இரைத்திடுநல்லோர் பார்வையற்றிருக்க விலங்குட னிருந்தவன்றனது, கரத்தினாற் சீவன்றனை விடுத்திடுவன் காலெனச்சொல்லுவர் கண்டாய்.

(இ - ள்.) பாவிகள் ஒன்பது, ஏழாமிடங்களிலும், அட்டமத்தில் திரேக்காருதிபனு மிருக்கவும், இம்மூன்று வீடுகளையும் நல்லார் பார்வை யிருக்க விலங்குபோடவிருந்து தன் கையினாலே தானிறப்பன், எ - று.

கண்டலக்கினங்கள் கன்னியாயதனிற் கருதிடாப் பாவரு மிருக்க, எண்டிசை புகழ்மீனத்தினிற் பாவரிருந்திட வட்டமந்தன்னில், மண்டியபிறையுஞ் சுங்கனுமிருக்கின் மாதர்செய் வாதையான் மடிவன், கெண்டையம்பயின் மாவடுவிடம் போற்கட் கிஞ்சுகம் போலுமென் மொழியாய்.

(இ - ள்.) லக்கினம் கன்னியாய் அதில் பாவிகளும் மீனத்திலும் அப்படியேயும் அட்டமத்தில் சந்திரனும், சுக்கிரனுமிருந்தால் தாயின் வாதையால் மடிவான். கெண்டை முதலியவை பொருவும் விழிமடவாய், எ - று.

மொழிகதிர் சனிதேய்பிறை குசனுமிவர் முயற்சியாய்க் கூடி லக்கினத்தில், பொழிதிரிகோணந் தன்னிலே மேவப்புண்ணியர் கண்டிடாதிருக்கக், கழிபடும் புகையாற்றீயினாற் கொள்ளிக்கட்டையான் மருவலர்சுடவே, அழிபடுமெய்யில்வருந்த முற்றிறப்பனவன்றலைநாள் விதிவசமே.

(இ - ள்.) சூரியன், சநி, தேய்பிறைச்சந்திரன், அங்காரகன் இவர்கள் கூடி லக்கினம், திரிகோண மிவைகளி லிருந்தாலும், அவர்களைச் சுபர் பாராதிருக்க புகையாலும், தீயாலும், கொள்ளிக்கட்டையால் சுடவும் வருந்தி அவன் விதிப்படி யிறப்பான், எ - று. (734)

வசமுடனெட்டிற்கதிர்சனி செவ்வாய்மருவவேலக்கினந்தன்னில்
இசைபுதன்றேய்ந்தபிறைகருநாக மிருக்கின்மெய்புழுத்துடன்மடிவன்
புசபலகாரிதேய்பிறையெட்டிற் பொருந்திடவவர்தமைச்செவ்வாய்
நிசமுடன்பார்க்கிலரசனற்கிருமி நிறைந்திடுந்துயரினாலிறப்பன்.

(இ - ள்.) எட்டில், சூரியன், சநி, அங்காரகன் இவர்களும் லக்கினத்தில் புதன் தேய்பிறைச் சந்திரன், ராகு இவர்களுமிருந்தால் மெய்புழுத்திறப்பான். சநி, தேய்பிறைச் சந்திரனிவர்கள் எட்டிலிருக்க அவர்களை அங்காரகன் குரு இவர்கள் பார்க்க நற்கிருமித்துயரா லிறப்பான், எ - று.

மருவியபத்திற்சூரியனாறின் மங்கலன்வியத்தினிற்காரி
விரவியவிரண்டிற்கரியகோளிருக்க மேவலர்சூனியகுணத்தால்
சருவியகுளிசக்கட்டினால்வருந்திச் சஞ்சலமுற்றிருந்தவன்றன்
கருவிகள்பிரிந்தேதசோபமுற்றிறப்பன் காசினியகன்றிடுங்காலை.

(இ - ள்.) பத்தில் சூரியனும், ஆறில் அங்காரகனும், பன்னிரண்டில் சநியும் இரண்டில் ராகுவுமிருந்தாற் சூனியகுணத்தால் குளிசக்கட்டினால் வருந்தி யிறப்பான், எ - று. (736)

காலையோரேழிற்சூரியன்செவ்வாய் கருதுமெட்டினிற்சனியாறில்
சாலவேகுறைந்தபிறையுறச் சன்மந்தன்னிலேயெட்டினிற்புதனும்
சீறமாயிருக்கிலிடியினான்மடிவன் றிரயக்காணதிபர்தன்னில்
மேலிருபத்திரண்டுளாந்தனாவீடு லக்கினமெனவிளம்பும்.

(இ - ள்.) ஏழில் சூரியன், அங்காரகனும், எட்டில் சநியும், ஆறில் தேய்பிறைச் சந்திரனும் சன்மத்திலும், எட்டிலும் புதனும் இருந்தால் இடியினா லிறப்பான். திரயக்காணதிபர் இருபத்திரண்டுக் குள்ளாகும் வீடு லக்கினமென்று சொல்லும், எ - று. (737)

விரும்புமாறெட்டும் பன்னிரண்டதிபன் மேவியபாவிதானாகில்
உளஞ்செறியற்பாயுள்சுபர் பார்க்கிலோதிய தீர்க்கமாமென்றே
களஞ்செறிநல்லோர்பாவருமாகில் கண்டதுமத்திமவயதே [ணங்கே.
இளம்பிறைநுதல்வேற்பொரு கயற்கண்ணுக்கிசைந்திடுவிழியிணா

(இ - ள்.) ஆறு, எட்டு, பன்னிரண்டா மிடங்களுக்குத் தலைவர்கள் பாவிகளாயிருந்தால் அற்பாயிசுண்டாம். சுபர் பார்க்கில் தீர்க்காயுசாம். நல்லோர் பாவரோடு கூடினால் மத்திமவயதாகும், எ - று. (738)

நாளொனும்வியமாறெட்டினிலதிபனன்று கேந்திரத்தினிலிருக்கில்
வாள்விழியணங்கேயற்பவாயு சுத்தான்மத்திமம்பணபரத்திருக்கில்
தாள்செறியணங்கேயாபோக்கி யந்தானுறிலாகுநூறுண்டே
கோளினிற்குளிகன்மனைவருங்காரி குலவியநாள்களுந்தீதே.

(இ - ள்.) பன்னிரண்டு ஆறு எட்டாமிடங்களில் தலைவர்கள் கேந்திரத்தி விருந்தால் அற்பாயுசும், பணபரத்திலிருந்தால் மத்திம ஆயுசும், அபோக்கிலியத்திலிருந்தால் தீர்க்காயுசும் உண்டாம். அன்று குளிகன் வீட்டில் சநிவரும் நாள்களிலும் தீமையுண்டாம். எ - று. (739)

தீதெனும்வியமாறெட்டினிலதிபன் னிவர்களிற்பலன்களுமில்லாப்
போதுந்தனக்கேயவர்கள் திசையிற் பொருந்தியகண்டகாலமதாம்
ஈதினில்வியாமாறெட்டினிலதிபன் மேவியே திசைகளுங்கூடி
ஏதுறுநடக்குமவர் திசையந்தத்தியல்புடன் கண்டகாலமுமாம்.

(இ - ள்.) பன்னிரண்டு, ஆறு, எட்டாமிடங்களின் தலைவர்களால் பலன் ஒன்றுமில்லாதபோது அவர்கள் திசையிலே கண்டகாலமாகும். மூவர் திசைகளும்கூட தொகையாய் நடக்கும் திசையிலும் கண்டமுண்டாகும், எ - று. (740)

காலமாம்பரிதிலக்கினுதிகளுங் கருதுமித்துருவாதேயாயின்
தூலமாந்தீர்க்கவயதெனவுரைப்பர் சொல்லியசமமதேயாயின்
மூலமாமத்திமம்பகையாயினுறுவது முப்பத்துமூன்றே
கோலமாம்லக்கினநவாங்கிசைபதிக்குக் கூறியசனிவரிற்றுன்பம்.

(இ - ள்.) சூரியனும், லக்கினாதிபதியும், மித்துருவானால் தீர்க்காயுசும், சமமானால் மத்திம ஆயுசும், பகையானால் முப்பத்து மூன்று வயதாகும். அன்றி லக்கின நவாங்கிசையிடத்தில் சநிவந்தாலும் துன்பமாம், எ - று.

துன்பமேயில்லாவுச்சலக்கினத்தைத் தொடர்ந்துமுப்பதுபங்காக்கி
வன்பொடுசூரியன்பத்தாம்பங்கு மதிமூன்றுகுசனிருபத்தெட்
டின்பமாம்புதன்மூவைந்துபன் னேழாமெழிற்குருபுகரிருபத்தேழ்
முன்புசனிவிஞ்சதிபூரணவயதே முழுநீசமற்பமென்றுரையே.

(இ - ள்.) உச்சலக்கினத்தை முப்பது பங்காக்கி அதில் சூரியன் பத்தாம் பங்கிலும், சந்திரன் மூன்றாம்பங்கிலும், அங்காரகன் இருபத்தெட்டாம் பங்கிலும், புதன் பதினைந்தாம் பங்கிலும், குரு பதினேழாம் பங்கிலும், சுக்கிரன் இருபத்தேழாம் பங்கிலும், சநி இருபதாம் பங்கிலும் வர பூரணவயதாம். முழு நீசமானால் அற்பாயுசாம், எ - று. (742)

ஜென்மதாரகைக்காறெட்டு நக்ஷத்திரத்திசையதாமாரகமதனுள்
வன்மமோரெட்டிற்கெட்டாறு மின்னவருமாறினுக்கு மாறெட்டாம்,
பன்மைதாரகையின் றிசையின்மாரகமாம் பார்க்கவேயிரட்டியாய்வந்தால், தின்மைகாலமுமாமவருடை புகிப்பிற்சேதமேயாகுங்கண்டாயே.

(இ - ள்.) ஜென்மநட்சத்திரத்திற்கு ஆறு எட்டாவது நட்சத்திரங்களின் திசைகளிலும், எட்டிற்கு, எட்டு, ஆறும், ஆறுக்கு ஆறு, எட்டும் ஆகிய

நக்ஷத்திரங்களின் திசைகளிலும் மாரகமாகும். இரட்டையாய் வந்தால் அந்தந்தத் திசா நாதர்களுடைய திசையில் மாரகமாகும், எ - று. (743)

வேறு.

கண்டசன்மஞ்சராசி கருதியாறுதிபன்பார்க்கக்
கொண்டசெவ்வாய்லாபத்திற் கூறுந்திரராசிக்குடையோன்
பண்டேயொன்பதினிலிருக்கப் பாக்கியாதிரத்திலுற
உண்டாஞ்சத்துருநாகத்தாலோமம் பண்ணவருமரணம்.

(இ - ள்.) ஜென்மம் சரராசியாய் அதை ஆறுக்குடையோன் பார்க்க அங்காரகன் லாபத்திலும், ஸ்திரராசிக்குடையோன் ஒன்பதிலும், பாக்கியாதிபதி ஸ்திரத்திலும் இருந்தால் சத்துருவின்நாக ஓமக்கிரிகையால் மரணமுண்டாம், எ - று. (744)

வருநாலிடத்திலக்கினத்தில் வருளங்கேதுகுளிகனுடன்
அருள்சேர்ந்திருக்கச்சூனியமு மபிசாரத்தாலுறுமரணம்
திரளாம்வியத்திற்கேதுவுறத் தேடிப்பாவர்நோக்கப்
புரவேயம்மையான்மரணம்பொன் பார்த்திடிலேவடுவுண்டாம்.

(இ - ள்.) நான்கிலும், லக்கினத்திலும், கேதுவும், குளிகனும், சேர்ந்திருந்தால் சூன்யத்தாலும், அபிசாரத்தாலும், மரணமுண்டாம். பன்னிரண்டில் கேது இருந்து அவனைப் பாவிகள் பார்க்க அம்மையால் மரணம். குரு பார்த்தால் வடுவுண்டாகும் மாணமில்லை, எ - று. (745)

12-ராசிக்கும் சுபாசுபக்கிரகமாரக பலன்

வேறு.

சாற்றியதுவாதசமாம் லக்கினந்தன்னையோர்ந்து
நேர்த்தியாய்ச்சுபரும்பாவர் நிறையோகமாரகங்கள்
போற்றியேயவர்தம்வீட்டிற் பின்பலமுறைக்குநூலின்
தேற்றமேயறிந்துகொண்டு செப்பலனுரைப்பாய்தானே.

(இ - ள்.) பன்னிரண்டு லக்கினங்களையு மறிந்து சுபபாவர்கள் இருக்கும் யோகத்தையும், மார்க்கத்தையும் அவ்வவர்கள் வீட்டில் பலம்சொல்லும் நூலிலறிந்து பலன் சொல்லுக, எ - று. (746)

தானுறுமேடத்தோற்குச் சனிபுகர்புந்திபாவர்
வானுறும்பரிதிதேவவான் குருசுபனும்மென்றே
கானுறுமிவர்கள்கூடக் கடினமாம்பலன்களற்பம்
தேனுஞ்சுக்கிரன்றன் றிசையிற்றான்மாரகங்கள்.

(இ - ள்.) மேஷத்துக்கு சனி, சுக்கிரன், புதன், பாவிகள், சூரியன், குரு, சுபர்கள் இவர்கள் கூடிடில் பலன் அற்பம். ஆனால், சுக்கிரன் திசையில் மாரகமுண்டாகும், எ - று. (747

வே று.

*களமேரிடபஞ்சமத்தோற் காசன்புகர்சூரியன்மூவர்*
*உளவாம்பாவிகதிர்சனியு முயர்ந்தசுபனும்யோகங்கள்*
*வளமார்புகருங்கான்குடும்ப மாரகத்தோனும்பாவி*
*புளகார்திகலேயுறுங்கொங்கை பூவைக்குரலாரும்மானே.*

(இ - ள்.) இருஷபஜென்மத்துக்கு, குரு, சுக்கிரன், சூரியன், பாவிகள், சூரியனும், சநியும் சுபர்கள் இவர்கள் கூடின் நல்லயோகமாம். சுக்கிரன் யோககாரகன் குடும்பமாரகனும். ஆகையால் அவனும் பாவியென்றறிவாய் பெண்ணே!, எ - று. (748)

*மானேமிதுனலக்கினத்திற் காசன்செவ்வாய்கதிர்பாவர்*
*தானேசுக்கிரன்சுபனாகு மதியுஞ்சனியுமற்பபலன்*
*வானோர்பாவர்திசையதனின் மன்னுமாரகம்மென்னே*
*தேனேயனையமதுரமொழிச் செவ்வாய்முறுவல்சிறுநுதலாய்.*

(இ - ள்.) மிதுனலக்கினத்திற்கு குரு, அங்காரகன், சூரியன், பாவிகள் சுக்கிரன் சுபன் சந்திரனும், சநியும் அற்பபலனைக் கொடுப்போர், ஆகையால் தேன்போல் சொல் முதலியவையுடைய நங்காய்! பாவிகள் திசையில் மாரகமென்று சொல்லுக, எ - று. (749)

*நுதலுங்கடகம்புகர்புந்திபுகர்கோய் செய்பாவர்குருசெவ்வாய்*
*இதமார்சுபனுஞ்சேயோக மிருக்கும்பரிதிமாரகனும்*
*முதலேசிங்கம்புகர் புந்திமோதும்பாவர்சேய்சுபனும்*
*மதலேயோகம்பொன்வெள்ளி மழைக்கோளுடன்மாரகன்மாலே.*

(இ - ள்.) கடகலக்கினத்திற்கு புதன், சுக்கிரன் பாவிகள் குரு, அங்காரகன் சுபர்கள் சூரியன் மாரகன் அங்காரகனால் யோகமுண்டாகும். சிங்கலக்கினத்துக்கு, சுக்கிரனும், புதனும் பாவிகள். அங்காரகன் சுபன், குரு, வெள்ளியோயர் சூரியன் மாரகர்களும், எ - று. (750)

*மாலேகன்னிசேய்மதிபொன் மன்னும்பாவர்புதன்சுபனும்*
*காலேயோகம்புந்திபுகர் கன்மாரகன்சுக்கிரன்பாவி*
*போலாந்துலாதத்திற்சேய்பரிதி குருவும்பாவர்சனிபுதனும்*
*மேலாஞ்சுபர்கண்மதிபுந்தியோக மாரகன்செவ்வாயே.*

(இ - ள்.) கன்னிலக்கினத்திற்கு அங்காரகன், சந்திரன், குரு இவர்கள் பாவிகள், புதன் சுபனும், புதனும் சுக்கிரனும் யோககாரர்கள். ஆனால் சுக்கிரன் மாரகனும். துலா லக்கினத்திற்கு அங்காரகன், சூரியன், குரு, பாவிகள். சநியும், புதனும், சுபர், சந்திரன், புதன், யோகர் அங்காரகன் இவர்கள் மாரகர்களாம், எ - று. (751)

*வயமேதள்புதன்சேயும்பளிங்கே யியன்றபாவரிந்துசுபன்*
*தூயயோகமதிகாரந் தொடர்ந்தகுருவேமாரகனும்*

ஆயுதனுசில்புகர்பாவி யாரல்பரிதிசுபராகும்
சேயயோகம்புந்திபுகர் நீண்டசனியுமாரகனே.

(இ - ள்.) விருச்சிக லக்கினத்திற்கு புதன் அங்காரகன் சுக்கிரன் பாவிகள், சந்திரன் சுபன், சந்திரனும் சூரியனும் யோககாரர்களாம், குரு மாரகனும் தநுசு லக்கினத்திற்கு சுக்கிரன் பாவி அங்காரகனும் சூரியனும் சுபர், புதனும் சுக்கிரனும் யோகமாம், எ - று. (752)

மாகஞ்சுறுனிற்குருசெவ்வாய் மதியும்பாவர்புகர்புந்தி
ஆகுஞ்சுபராமாயோகமருளுஞ் சுக்கிரன்மாரகன்சுன்
பாகார்கும்பக்குருமதிசெய் பாவர்சுக்கிரன்சுபனும்
தாகார்யோகம்பளிங்குபுதன் றள்ளுமரசன்முன்பாவி

(இ - ள்.) மகரலக்கினத்திற்கு, குரு அங்காரகன் சந்திரன் புதனும் சுக்கிரனும் சுபர்களாம். சநி மாரகனும், கும்பலக்கினத்திற்கு குரு சநி அங்காரகன் பாவிகள் சுக்கிரனும் குசனும் யோககாரனுமாவான். புதன் மாரசனும். குரு முன்போலப் பாவிகளாம், எ - று. (753)

பாவிமீனங்காரிபுதன்பளிங்கு சூரியன்பாவியரே
மேவுஞ்செவ்வாயமதிசுபராம் விளங்கும்யோகக்குருவாரல்
தாவுமாரகன்சேயென்றே சாற்றுந்துவாதசலக்கினத்தை
ஆவலறிந்தேசுபாசுபங்களறிந்து கூறப்பண்பாமே.

(இ - ள்.) மீனலக்கினத்திற்கு, சநி புதன் சுக்கிரன் சூரியன் பாவிகள், அங்காரகன் சந்திரன் சுபர்கள், குரு குசன் யோகர், சநி அங்காரகன் இவர்களால், மாரகமுண்டாகும் என்று சொல்லும் பன்னிரண்டு லக்கினங்களின் சுபாசுபங்களை அறிந்துசொல்ல நன்மையாம், எ - று. (754)

பண்பாறதிபன்லக்கினதி பாவனுகிப்பலமறவே
நண்பாமேழிலுற்றிருக்க நல்லோர்காணுர்மாதமிரண்
டென்பார்லக்கினதிபதிக் கெட்டில்மிகவேபாவர்களும்
திண்பாய்நோக்கமுற்றிடவே திங்கணன்கில்வருமரணம்.

(இ - ள்.) ஆறக்குடையோனும், லக்கினதிபனும், பாவிகளாய் பலமற்று எழிலிருந்து நல்லோர் பார்வையைப் பெறுமற்போனல் இரண்டு மாதத்திலும் குலக்கினதிபதிக்கு எட்டில் பாவிகளும் அவர்கள் பார்வையையும் பெற்றால் நான்கு மாதத்திலும் மரணமுண்டாம், எ - று. (755)

இவன்றன்லக்கினதி பதியிதுவேபாவன்பலமறவே
சுவனேபார்வைவர்ச்சிதமாய்ச் சொல்லுமாறுதிங்கடனில்

தவமாறெட்டிற்பன்னிரண்டிற் றக்கபாவர்நோக்கமுறக்
கவனமுடனேயிருநான்கிற் காணுமரணங்கண்டிடே.

(இ - ள்.) லக்கினதிபதியே பாவியாய் பலமற்று சுபர் பார்வையில்லா திருந்தால் ஆறுமாதத்திலும், ஆறு எட்டு பன்னிரண்டா மிடங்களில் பாவிகள் பார்வையிருந்தால் எட்டுமாதத்திலும் மரணமாம். எ - று. (756)

கண்டவமரபக்கத்திற்காணுஞ் சோமனெட்டாறில்
கொண்டசன்மமிதிபாவர் கூடிநோக்கவிரைந்தே
மண்டுமெட்டிற்சென்மத்தில் வந்தேபாவர்தானிருக்க
மிண்டாய்நல்லோர்நோக்கமிலா மேவின்வருஷமொன்றினுமே.

(இ - ள்.) தேய்பிறைச் சந்திரன், எட்டு ஆறு ஜென்மங்களிலும் பாவிகள் கூடியும், பார்த்தும் இருந்தால் பத்துமாதங்களிலும் பாவிகள் எட்டிலும் ஜென்மத்திலும் நல்லோர் பார்வையைப் பெறுதிருந்தால் ஒருவருடத்திலும் மரணமாம், எ - று. (757)

ஒன்றேகாரிவக்கிரமாமேயாதும் புந்திசெவ்வாயும்
அன்றேயொருவீட்டிலுறவே யாறைந்தெட்டுப்பன்னிரண்டில்
நின்றேசன்மமோரிரண்டுனிற்கக் குசன்று னுற்றுலும்
நன்றேசுபற்கணோக்கமிலா மேவின்வருஷமொன்றினுமே.

(இ - ள்.) சநி வக்கிரம் பெற்று புதனும் அங்காரகனும் ஒரு வீட்டினிலும் ஆறு ஐந்து எட்டு பன்னிரண்டா மிடங்களிலும், லக்கினத்திலும், இரண்டிலும், அங்காரகனும், சுபர்கள் பார்வையில்லாதிருந்தால் இரண்டு வருஷத்தில் மரணமாம், எ - று. (758)

நாளுஞ்செவ்வாய்தனக்கெட்டி னண்ணிக்குருவுந்தானிருக்கக்
கோளும்பரிதிசெவ்வாயுங் கொண்டமதியைப்பார்த்திடவே
மீளுஞ்சுங்கன்கண்ணுட்டி மேவிநோக்கமில்லாத
ஆளும்வருஷமூன்றெனவே யரைவர்கணிதவல்லோரே.

(இ - ள்.) அங்காரகனுக்கு எட்டில் குருவும், சூரியனும் அங்காரகனும் சந்திரனைப் பார்த்தும், சுக்கிரன் கன்னியிலுற்று பாராமலும் இருந்தால் மூன்று வருஷத்தில் மரணமென்று சொல்லுவர், எ - று. (759)

வல்லசன்மந்தனக்கெட்டு வாழுமதற்கோரெட்டதனை
நல்லோர்பார்க்கதிரிகோணத்தை நாடுபாவரொருநான்கே
சொல்லுஞ்சன்மராசிக்குச் சுபக்கோடிருஷ்டிவர்ச்சிதமாய்
ஒல்லும்பாவர்பார்வையுற வோங்குவருஷமைந்திற்சாம்.

(இ - ள்.) ஜென்மத்துக்கு எட்டையும், அதற்கு எட்டையும், சுபர் பார்க்க திரிகோணத்தில் பாவிகளிருந்தால் நான்கு வருஷத்திலும் ஜென்மராசிக்கு சுபர் பார்வையின்றி பாவர்கள் பார்வையிருந்தால் ஐந்து வருஷத்திலு மரணமாம், எ - று. (760)

சாமேவியமாரெட்டதனிற் சனிசூழ்பரிதிராகுமதி
ஆமேயிருக்கச்சுபர்திருஷ்டியல்லால் வயதோராறுதரும்
தாமேசன்மமுன்பின்னுந் தக்கபாவரிருந்திடவே
போமேநல்லோர்பார்வையிலாப் போதுமரணமேழ்தனிலே.

(இ - ள்.) பன்னிரண்டு ஆறு எட்டாமிடங்களில், சநி சூரியன் ராகு சந்திரன் இவர்கள் சுபர் பார்வையைப் பெறாதிருந்தால் ஆறு வருஷத்திலும், ஜென்மத்திற்கு முன்னும் பின்னும் பாவிகளிருந்து சுபர்பார்வை யில்லாதிருந்தால் எழு வருஷத்திலு மரணமாம், எ - று. (761)

தனிலேசன்மஞ்சேயுமதி தன்னிலொருவர்நின்றாலும்
இனியேநான்கிற்பாவர்களு மெட்டிற்பரிதிசேய்மதியும்
மனுசூழ்ந்திருக்கவின்னமொரு மதிவீட்டரசன்மாதி
சனிசூழ்பரிதியுறநல்லோர் தானும்பாராரேன்மரணம்.

(இ - ள்.) ஜென்மத்தில் அங்காரகன் சந்திரன் இவர்களில் எவராவதும் நான்கில் பாவிகளும், எட்டில் சூரியன் அங்காரகன் சந்திரனும், சந்திரன் வீட்டுக்குடையோன் ஜென்மாதிபதி சநி சூரியன் இவர்கள் சேர்ந்து நல்லோர் பார்வையைப் பெறாதிருந்தாலும் மரணமாம், எ - று. (762)

மரணஞ்சன்மமிதுன துலாம் வாழுமெட்டிற்குருபுகரும்
திரமாய்ப்பாவர்நோக்கமுறத் தெரிந்துவயதுமெட்டுளதாம்
பரிதிமதியுமட்டஞ்சேர் பண்பாங்காரிபதினொன்றில்
வரவேயொன்பதிதுமரணம் வகையாயுலகீரறிந்திடுமே.

(இ - ள்.) ஜென்மலக்கினம் மிதுனமும் துலாவுமாகஇருந்து அவற்றிற்கு எட்டில் குருவும், சுக்கிரனும், பாவிகள் பார்வையைப் பெற்றிருந்தால் எட்டு வருஷத்திலும், சூரியனும், சந்திரனும் எட்டிலும், சநி பதினொன்றிலும் இருந்தால் ஒன்பது வருஷத்திலும் மரணமாம், எ - று. (763)

அறிந்தேயெட்டிற்கதிர்புகமு மாசபார்வைதானுமிலாச்
செறிந்தேயிருக்கவின்னமொரு செப்புகாலிற்சந்திரனைப்
பிறிந்துபார்க்குஞ்சேய்பரிதி பின்புநல்லோர்பார்த்தால்
இறந்தேயிருக்குமொன்பதினி லினையகோளின்பலனிதுவே.

(இ - ள்.) எட்டில் சூரியனும், சுக்கிரனும், குருவின் பார்வையில்லா திருந்தாலும், நாலிலிருக்குஞ் சந்திரனை அங்காரகனும் சூரியனும் பார்க் கவும், சுபர் பாராமலுமிருந்தால் ஒன்பது வயதில் மரணமாம், எ - று.

இதுவேகேந்திரமேறியிவ ரிராகுகேதுவிருந்திடவே
அதுசூள்பாவர்நோக்கமுற வானபத்திலுறமரணம்
மதிசேர்பரிதிகூடியொரு மனையிலிருக்கச்சன்மத்தைத
துதிசேர்நல்லோர்மாராக்காற் சொல்லும்பதினொன்றுவயதே.

(இ - ள்.) இராகுகேதுக்கள் கேந்திரத்திலும் பாவிகள் பார்வையை பெற்றுமிருந்தால் பத்து வயதிலும், சந்திரனும் சூரியனும் சேர்ந்து ஒரு வீட்டிலிருக்கவும், சன்மத்தைச் சுபர் பாராதிருந்தால் பதினொன்று வயதி லும் மரணமாம், எ - று. (765)

வயதேசன்மங்கேதுகதிர் மதிதானிருக்கச்சுபர்திருஷ்டி
சயமேயில்லாப்பன்னிரண்டிற் சாறுங்குழவிறிறுமரணம்
நயமாமொன்றிலெட்டாதி நண்ணியிருக்கவோராறில்
நியமேநான்கிற்சேயுறவே நிற்பன்பதின்மூன்றெனச்சொல்லும்.

(இ - ள்.) சன்மத்தில் கேது சூரியன் சந்திரனிவர்களிருந்து அவர்களை சுபர் பாராவிட்டால் பன்னிரண்டு வயதிலும், சன்மத்தில் எட்டுக்குடையோ னிருக்க ஆறிலும், நான்கிலும் அங்காரகனுமிருந்தால் பதின்மூன்று வய திலும் மரணமாம், எ - று. (766)

சொல்லுமாறெட்டிற்பாவர் சூழ்ந்தேயிருக்கச்சன்மாதி
வெல்லுமாபோக்கிலியத்தின் மேவியிருந்தாற்பதினாறும்
வல்லோராதிபன்சென்மாதி வரவேபரிதியுடன்கூட
நல்லோர்பாரக்கேந்திரத்தி னண்ணும்பாவர்நாலைந்தே.

(இ - ள்.) ஆறு எட்டாமிடங்களில் பாவிகளும், சென்மாதிபன் ஆபோக்கிலியத்திலும், இருந்தால் பதினாறு வயதிலும், சுபர் வீட்டோனும் சென்மாதிபனும் சூரியனுடன்கூட சுபர் பாராமல் கேந்திரத்தில் பாவிகளு மிருந்தால் இருபது வயதிலும் மரணமாம், எ - று. (767)

நாலேசோமற்கிருபுறமிராகு செவ்வாய்சனிகேது
ஆலேயிருக்கச்சன்மாதியாய் பலன்களற்றிடவே
மேலாம்பாவருடன்கூடி வேண்டியிருக்குமிப்படியே
சீலாயையைந்தினின்மரணஞ் செப்புங்கணிதமாதவரே.

(இ - ள்.) சந்திரனுக்கு இரண்டு பக்கங்களிலும் இராகு அங்காரகன் சனி கேது இவர்களும், சன்மாதிபதி பரிமில்லாமல் பாவிகளுடன் கூடியிருந் தால் இருபத்தைந்து வயதில் மரணமாமென்று கணிதநூல் வல்லவர் சொல் லுவர், எ - று. (768)

மாதேகன்னிலக்கினமாய் வந்துசநியுந்தானிருக்கப்
போதேயரசன்வியமெட்டிற் போகவிருபத்தாறுகும்
சாதிசன்மமெட்டதிபன் சரியாய்ப்புடமேதானிருந்தும்
ஓதுங்கேந்திரமுற வெட்டிலுற்றேகேதுமூய்வான்பான்.

(இ - ள்.) கன்னிலக்கினமாய் அதில் சநியும், குரு பன்னிரண்டு எட்டாமிடங்களிலுமிருந்தால் இருபத்தாறு வயதிலும் சன்மாதிபனும் எட்டுக்குடையோனும் சநிஸ்புடமாயும், கேந்திரத்திலும் கேது எட்டிலுமிருந்தால் இருபத்தேழு வயதிலும் மரணம், எ - று. (769)

பானுபுதல்வன்கேதுகரும்பாம்பு செவ்வாயொன்றெட்டில்
தேனேயிருக்கப்புகர்புந்திதேவா குருவுங்கேந்திரமில்
வானேயுற்றுவிருபத்தெட்டாகு மெட்டிற்கதிர்மூன்றில்
ஊனேமதியுஞ்சனிபாவருட னோக்கிருபத்தொன்பானே.

(இ - ள்.) சநி கேது ராகு அங்காரகன் இவர்கள் சென்மத்திலும், எட்டிலும், சுக்கிரன் புதன் குரு இவர்கள் கேந்திரத்திலுமிருந்தால் இருபத்தெட்டு வயதிலும், எட்டில் சூரியனும், சந்திரன் சநி இவர்கள் மூன்றிலுமிருந்து பாவிகள் பார்வையைப் பெற்றால் இருபத்தொன்பது வயதிலும் மரணமாம், எ - று. (770)

ஒன்பான்றேய்பிறைசுபத்தான் முற்றேயட்டமாதிபதி
அன்பாய்க்கேந்திரமுறவெட்டி லான்பாவர்தானிருக்கப்
பின்பாம்லக்கினாதிபதி பலன்களில்லாதிருந்திடவே
துன்பமுப்பதெனவறிந்து சுகமாயுரைத்தேன்மிகவாழும்.

(இ - ள்.) தேய்பிறைச்சந்திரன் சுபர் வீட்டிலும், அட்டமாதிபதி கேந்திரத்திலும், பாவிகள் எட்டிலும், லக்கினாதிபதி பலமில்லாமலுமிருந்தால் முப்பது வயதுவரைக்கும் சுகமாய் வாழ்வன், எ - று. (771)

வாழுநான்கிற்சுக்கிரனுமவந்தே யெட்டிற்பாவருறச்
சூழுநல்லோர்பார்வையறத் தொடர்ந்தேநிற்கவக்கினியால்
ஊழிமனையாடன்னாலுமோங்கும் பாம்பின்கடியாலும்
ஆழியுலகோர்தாமறிய வாருமரணங்கண்டீரே.

(இ - ள்.) நான்கில் சுக்கிரனும், எட்டில் பாவிகளும் சுபர்பார்வையற்றிருந்தால் அக்கினியாலும், மனைவியாலும் பாம்பின் கடியாலும் மரணமுண்டாம், எ - று. (772)

கண்டவிரண்டிற்பன்னிரண்டிற் காணுஞ்செவ்வாய்சோமனுற
பண்டேயேழிலெட்டில்கரும்பாம்பு மாசனுறின்முப்பான்
கொண்டவட்டமாதிபதி கேந்திரமேவிலக்கினாதிபதி
வண்டுபலன்கள்வர்ச்சிதமேல் வயதுமுப்பத்திரண்டாமே.

(இ - ள்.) இரண்டில், அங்காரகனும் சந்திரனும், ஏழிலும், எட்டிலும், ராகுவும், குருவுமிருந்தால் முப்பது வயதும். அட்டமாதிபதி கேந்திரத்திலும் லக்கினாதிபதி பலன்களற்று மிருந்தால் முப்பத்திரண்டில் மரணமாம், எ - று. (773)

ஆமேயரசன்சுக்கிர னு மணுகிக்கேந்திரந்தான்மேவத்
தாமேலக்கினாதிபதி தானும்பாவருடன்கூட
தீமைகூழாபோக்லியந் தேய்ந்தமதியுந்தானிருக்கத்
தோமேமரணமாறிற் சொல்லுவர்கணிதவல்லோரே.

(இ - ள்.) குருவும், சுக்கிரனுஞ் சேர்ந்து கேந்திரத்திலும், லக்கினாதிபதி பாவருடன் கூடியும் தேய்பிறைச் சந்திரன் ஆபோக்லியத்திலு மிருந்தால் முப்பத்தாறு வயதில் மரணமென்று சொல்லுவர் பெரியோர், எ - று.

வல்லமிதுனலக்கினமாய் வாழும்பருதிதானிருக்கப்
பொல்லாரிரண்டுபாரிசமும் புகவாறரசன்முப்பதேழ்
ஒல்லும்பாவர்கேந்திரத்தி லுறச்சன்மாதிபன்னிரண்டில்
வெல்லுமெட்டோன்லக்கினத்தின் மேவின்முப்பத்தெட்டாமே.

(இ - ள்.) மிதுன லக்கினமாய் அதில் சூரியனும், பாவிகள் இரண்டு பக்கங்களிலும், ஆறில் குருவுமிருந்தால் முப்பத்தேழு வயதிலும், பாவிகள் கேந்திரத்திலும் சன்மாதிபதி பன்னிரண்டிலும், எட்டுக்குடையோன் லக்கினத்திலு மிருந்தால் முப்பத்தெட்டு வயதிலும் மரணமாம், எ - று. (775)

மேலாஞ்சன்மந்திரராசி மேவுமொன்றிலெட்டாதி
சாயுவிருக்கச்சுபரிரட்டிற் றந்தால்வயதுமெண்ணைந்தாம்
சேரெட்டாதிகேந்திரமே செவ்வாய்லக்கினந்தானிருக்கக்
காலவாறின்மூன்றுசனிகதிர்கூ டுமெண்ணைந்தாம்வயதே.

(இ - ள்.) சன்மலக்கினம் ஸ்திரராசியும், அதில், எட்டுக்குடையோனும், சுபர் பார்வையு மிருந்தால் நாற்பது வயதிலும், எட்டுக்குடையோன் கேந்திரத்திலும், அங்காரகன் லக்கினத்திலும், ஆறிலும் மூன்றிலும் சநியும், சூரியனும் சேர்ந்து மிருந்தாலும் நாற்பது வயதில் மரணமாம், எ - று. ()

வயதேசோமன்லக்கினத்தில் வர்க்கோத்தமனுயுறிற்பாவர்
நியமேபார்க்கச்சுபர்திருஷ்டி நேசமில்லாவாறெட்டில்
பயமேசன்மமெத்தாதிபதி யிங்கிசையிற்பாவருடன்
சயமேநிற்கவெட்டாதி சன்மத்திருக்கிலைம்பதுவே.

(இ - ள்.) சந்திரன் லக்கினத்தில் வர்க்கோத்தமனுயும், பாவர் பார்க்கவும், சுபர் பாராமலும், ஆறு எட்டு சன்மம் எட்டுக்குடையோன் அங்கிசை இவைகளில் பாவருடன் கூடியும், எட்டுக்குடையோன் சன்மத்திலு மிருந்தால் ஐம்பது வயதிலும் மரணமாம், எ - று. (777)

வேறு.

ஆன்பாமுபயராசிக்கதிபதி
இன்பாய்லக்கின துமைங்கேயுற்றிட
துன்பமதிசனிபனிரெண்டெட்டுறில்
துன்பமைம்பத்திரண்டினிற்சொல்லுமே.

(இ - ள்.) உபயலக்கினத்துக் குடையோன் லக்கினத்திலும் சந்திரனும் சநியும் பன்னிரண்டில், எட்டாமிடங்களிலு மிருந்தால் ஐம்பத்திரண்டு வயதில் மரணமாம், எ - று. (778)

சொல்லுஞ்சன்மாதிசூழ்ந்தேயெட்டுற
வல்லசந்திரன்மனையிற்கதிபதி
வெல்லுசந்திரற்கெட்டின்மேவிடிற்
புல்லர்கூடிற்போமைம்பதிஞலதே.

(இ - ள்.) சன்மாதிபன் எட்டிலும் சந்திரனிருக்கும் வீட்டுக்குடையோன் அவனுக்கு எட்டிலுமிருந்தாலும், பாவிகள் சேர்ந்தாலும் ஐம்பதுநான்கு வயதில் மரணமாம், எ - று. (779)

நாலாஞ்சன்மநாடுந்தனுசிலரில்
மேலாயரசன்விரும்பியிருந்திடச்
சேலாறிராகுவுஞ்செவ்வாயெட்டுறிற்
காலமேறெட்டிற்கனகண்டமே.

(இ - ள்.) சன்மம் தநுசாகி தநுசில் குருவும், ஆறில் ராகுவும், எட்டில் அங்காரகனு மிருந்தால் ஐம்பத்தாறு வயதில் மரணமாகும், எ - று. (780)

கண்டவாறுகருதிடுமெட்டினில்
கொண்டகோள்களைகூடியதுதனில்
மண்டியிருக்கில்வயதைம்பத்தெட்டினில்
அண்டமாதவரறிந்துரைத்தனரே.

(இ - ள்.) எட்டாமிடங்களில் மேற்சொன்ன கிரகங்களெல்லாம் கூடியிருந்தால் ஐம்பத்தெட்டு வயதில் மரணமாமென்று பெரியோருரைத்தனர், எ - று. (781)

உரைத்திடும்பத்திலுறுகதிரோனும்
திரைத்தகாரிசென்மமேவிடிற்
புரைத்தவெட்டினிற்புரவலனுற்றிட
நிறைத்தேயாண்டுநிற்பனறுபதே.

(இ - ள்.) பத்தில் சூரியனும் சென்மத்தில் சநியும், எட்டில் குருவுமிருந்தால் அறுபது வயதில் மரணமாம், எ - று. (782)

அறுபதிலின்னமாண்டினிற்காரி
நறுமலர்ச்சன்மநாலினிற்சந்திரன்
பறுவெழிற்செவ்வாய்பத்தினிற்கதிர்குரு
இறுபுகர்புந்தியிவருடன்கூடிடில்.

(இ - ள்.) சநி சன்மத்தில், சந்திரன் நான்கிலும், அங்காரகன் பத்திலும், சூரியனும் குருவும், சுக்கிரனுடனும், புதனுடனும் கூடினுல் அறுபத்தோர் வயதில் மரணமாம். எ - று. (783)

கூடியவெட்டாமறுபதிபாவனுய்
நாடியசந்திரனண்ணிடுங்கோணத்
தாடியகேந்திரத்தன்னிற்கூடில்
ஆடியவறுபத்தைந்தினிற்போகும்.

(இ - ள்.) எட்டுக்குடையோன் பாவியாய் சந்திரனுக்கு கோணத்திலும், கேந்திரத்திலுமிருந்தால் அறுபத்தைந்து வயதில் மரணமாம், எ - று.

போகிடுங்காரிபுகுமனைநீச
மாகியகேந்திரகோணமாகிடில்
மேகமிலக்கினமெழின்மனைநல்லோர்
ஆகியசுபருடனுளவெழுபவே.

(இ - ள்.) சநியிருக்கும் வீடு நீசம் கேந்திரம் கோணம் இவையானுல் லக்கினத்தான் சுபர்மனையில் நல்லோருடன் கூடியிருந்தால் எழுவயதில் மரணமாம், எ - று. (785)

எழுந்திடுலக்கினத்தெய்தகற்கோளுறத்
தழுந்தியகேந்திரஞ்சந்திரன்மேவிடில்
அழிந்திடுகோணக்காரியமர்ந்துறி
லழுங்குபின்செல்வமோரெழுபதினுலே.

(இ - ள்.) லக்கினத்தில் சுபரும், கேந்திரத்தில் சந்திரகோணத்தில் சநியுமிருந்தால் எழுபத்துநான்கு வயது செல்வத்தோடு வாழ்ந்து பின்னிறப்பான், எ - று. (786)

நாலாஞ்செவ்வாய்நாடியைந்தினில்
ஏலாம்பரிதியேழிலமர்ந்திட
நீலாங்காரிநீசமுற்றிடில்
மாலாயெழுபத்தைந்தின்மரணம்.

(இ - ள்.) ஐந்தில் அங்காரகனும், எழில் சூரியனும், சநி நீசமுமடைந்திருந்தால் எழுபத்தைந்தாவது வயதில் மரணம், எ - று. (787)

மரணமரியும்வகைகேந்திரத்தில்
குருவுடன்மதியுங்கூடியிருந்திட

திரள்சுபர்நோக்கத் தேசத்தரசாய்ப்
புவியினிலெழுபத்தொன்பது பொருந்துமே.

(இ - ள்.) கேந்திரத்தில்குருவும், சந்திரனுங்கூடியும்சுபர்பார்க்கவுமிருந்தால் அரசனும் எழுபத்தொன்பது வயதுவரைக்கு மிருந்துவாழ்வன், எ - று.

மேவியலக்கினவீடாறளவும்
தாவியநல்லோர் தானுறவேழ்முதல்
பாவர்களுறிலே பரதேசத்தரசராய்
சாவதுயெண்பதிற் சாற்றிடுவாயே.

(இ - ள்.) லக்கினமுதல் ஆறுவீடுவரைக்கும் சுபரும் எழுமுதல் மற்றையவற்றில் பாவிகளுமிருந்தால் பரதேசத்தரசனாய் எண்பதில் மரணமுண்டாம், எ - று. (789)

சாற்றிடுமின்னந்தா னெண்பதனில்
ஏற்றிடுலாபத்திருந் தங்கிபாபதி
போற்றுமெவ்வீட்டினிற் புகிலதற்குடையோன்
நேர்த்தியகேந்திரத் துறினிச்சயமே.

(இ - ள்.) லாபத்திலிருந்த அங்கிசாதிபதி எந்த வீட்டிலாயினும் வர அவ்வீட்டுக்குடையோன் கேந்திரத்தி லிருக்கவும் எண்பது வயதிலேயே மரணமுண்டாம், எ - று. (790)

நிச்சவொட்டாறுநில வுடன்சன்மம்
இச்சைநற்குருவும் லாபமூன்றினில்
துச்சபாவாதொடர்ந்தே யிருந்திடில்
அச்சமிதொண்ணூ றுண்டினிலிறுமே.

(இ - ள்.) எட்டு, ஆறுமிடங்களில் சந்திரனும், சன்மத்தில் குருவும், லாபத்திலும், மூன்றிலும் பாவிகளும் சேர்ந்திருந்தால் தொண்ணூறு வயதில் மரணமாம், எ - று. (791)

இறுஞ்சன்மாதிபிதுமவபலனாய்
நறுஞ்சுபர்நோக்கநண்ணிக்கேந்திரத்
துறினேலட்சுமிதொடர்ந்து பூவரசாய்
தெரிந்திடுநூறெனச்செப்புமாதவனே.

(இ - ள்.) சன்மாதிபதிக்குப் பலமிருந்து சுபர்நோக்கும்படி கேந்திரத்திலிருந்தால் லட்சுமி தொடர்ந்து அரசனாய் நூறு வயது வரைக்கும் வாழ்வன், எ - று. (792)

எட்டாம்பாவம் முற்றிற்று.

---

# ஒன்பதாம் பாவம்.

## பிதுர்ப்பலன்.

ஓதுமைந்தொன்பானுதி கதிருடனேகூட
ஓதிடுங்காரிபார்க்க வுறும்பிதாவிற்கரிட்டம்
ஓதுமைந்தொன்பா னுதிபதிகதிருடனேகாரி
ஓதிசேயிவர்தாமூன்றி லுறிற்றந்தையுடனேபோமே.

(இ - ள்.) சொல்லும்படியான ஐந்து, ஒன்பதுக்குடையோர்கள் சூரியனுடன் கூடவும், சநிபார்க்கவும் பிதாவுக்கரிட்ட முண்டாகும். 5-6, அதிபர்கள் சூரியன் சநி, அங்காரகனிவர்களுடன் கூடி மூன்றிலிருந்தால் தந்தையுடனே மரிப்பன், எ - று. (793)

உடன்சன்மலக்கினத்துக் கொன்பதிலைந்திற்பத்தில்
மூடவன்சேயிரவியிந்த மூவரிலொருவர்நிற்கத்
திடமுறுபிதாவுக்கினஞ் சன்மத்திற்செவ்வாயேழில்
அடல்கதிர்க்கையம்பொன்னுர்க் காண்டுமூன்றிருபன்றந்தை.

(இ - ள்.) லக்கினத்திற்கு ஒன்பது ஐந்து பத்தாமிடங்களில் சநி, அங்காரகன் சூரியன் இம்மூவரில் ஒருவரிருந்தாலும் தகப்பனுக்கரிட்ட முண்டாகும். சன்மத்தில் அங்காரகனும் ஏழில்சூரியனும் இருந்தால் சந்தேகம். குருவுமிருந்தால் தந்தை மூன்று வருஷ மிருப்பான், எ - று.

## வேறு.

தந்தைபதியிற் சவுரிநிற்கச்செவ்வாய்
 தானுங்கேந்திரத்துறி லரிட்டந்தந்தைக்
கந்தவனுக்கட்டமத்துஞ் சன்மாதிபுடனும்
 ஆதவன்செவ்வாய்கூடி யனுகிலையர்க்கரிட்டம்
பந்துசன்மத்துக்கைந் தொன்பானிற்பாவர்
 பாம்புகேந்திரத்திலுறத் தந்தைக்கீனம்
விந்தமலர்நண்பனுக்கேழ் சனிசேய்நிற்கில்
 மேலோர்நோக்கறநிற்கில் வியமொன்பானே.

(இ - ள்.) பிதுர்ஸ்தானத்தில் சநியும், கேந்திரத்தில் அங்காரகனுமிருந்தால் தகப்பனுக்கரிட்ட முண்டாகும். அட்டமத்தில் சன்மாதிபனுடன் சூரியன் அங்காரகனும் கூடியிருந்தாலும் தந்தைக்கரிட்ட முண்டாம். சன்மத்திற்கு ஐந்து ஒன்பதாமிடங்களில் பாவிகளும், ராகுகேந்திரத்திலுமிருந்தால் தந்தைக் கீனமுண்டாகும். சூரியனுக்கு ஏழியில் சநியும், அங்காரகனு மிருந்தாலும் சுபர் பார்வையற்றிருந்தாலும் தந்தை மரிப்பன்,எ-று.

வேறு.

ஒன்பானிடத்திற்சனியைந்தி விரவியுடனேயுறுபாம்பும்
அன்பாயிருக்கத்தந்தை தனக்கரிட்டமைந்தாமாதிபதி
இன்பமுச்சமாயிருக்க வில்லையரிட்டம்பிணிகாட்டும்
பொன்பார்த்தருளச் சனியிரவிநின்றாற்பிணிபோங்கண்டீரே.

(இ - ள்.) ஒன்பதில் சநியும் ஐந்தில் சூரியனும் ராகுவு மிருந்தால் தந்தைக் கரிட்ட முண்டாகும், ஐந்துக்குடையோன் ஆகுநி உச்சம் பெற்றால் அரிட்ட முண்டாவதில்லை, பிணிகாட்டும். இவர்களைக் குரு பார்க்கும்படி சநியுஞ் சூரியனு மிருந்தால் நோய் நீங்கும், எ - று. (796)

கணடசநியுங்கதிரோனுங் கதித்தவொன்பானுதிபனும்
அண்டியொருவீட்டினிலிருக்க வையர்க்கரிட்டமவரைப்பொன்
மண்டிநோக்கவைந்தாற் மனையோனுச்சமாயிருக்க
மிண்டாய்சிலநாளிருந்தரிட்ட மேவுவிடம்போல்விழிமானே.

(இ - ள்.) சநியும், சூரியனும், ஒன்பதுக்குடையோனும் ஒரு வீட்டிலிருந்தால் தந்தைக் கரிட்டமாம். அவரைக் குரு பார்க்கவும் ஐந்துக்குடையோன் உச்சமாயிருக்கவும் சிலநாள் சென்றபின் அரிட்டமுண்டாகும் பெண்ணே! எ - று. (797)

மானேபிதுர்காரகனொன்பான் மனைவியாதிபனுஞ்சனியாகித்
தானேபாவருடன்கூடித் தருமுந்நான்கெட்டாறினுறத்
தேனேபிதுர்ஸ்தானந்தன்னிற் செம்பாம்பிருக்கவம்மனையில்
ஊனேசெறியுஞ்சனிவருநா ளுடனேதந்தைக்குறுமரிட்டம்.

(இ - ள்.) பிதுர்க்காரகனும் ஒன்பதுக்குடையோனுஞ் சநியாய் பாவருடன் கூடி பன்னிரண்டு, எட்டு, ஆறுமிடங்களிலும், பிதுர்ஸ்தானத்தில் கேதுவுமிருந்தால் அவ்வீட்டுக்குச் சநி வரும்போது உடனே தந்தைக்கரிட்ட முண்டாம், எ - று. (798)

உறுஞ்சன்மத்திற்செவ்வாயுமொன்பா னிடத்திற்சனியிருக்கப்
பெறுந்தந்தைக்குவருமரிட்டம் பிதாத்தானுதிபதியுடனே
குறுஞ்செவ்வாயுஞ்சனிமூவர் கூடியிருக்கநல்லோர்கள்
அறுதெங்கேறிதானிருந்தாலு மையற்கரிட்டமென்பர்.

(இ - ள்.) சன்மத்தில் அங்காரகனும், ஒன்பதில் சநியுமிருந்தால் தந்தைக் கரிட்டமுண்டாம். பிதுர்ஸ்தானுதிபதியுடன் அங்காரகன், சநி இவர் கூடியும் சுபர்கள் எங்கிருந்தாலும் தந்தைக்கரிட்ட முண்டாம், எ - று.

என்மார்சன்மந்தனிற்காரி யிரவிசசிமூவருமிருக்கத்
தன்பாரைந்திற்குசனிருக்கத் தந்தைக்கரிட்டந்தான்பின்னும்
அனபார்குசன்செம்பாம்பிரவி யாகமூவருடன்கூடப்
பின்பாயாமன்மூன்றுண்டிற் பிதாவுக்கரிட்டம்பேசுவரே.

(இ - ள்.) சந்மத்தில் சநி, சூரியன், சந்திரன் இம்மூவர்களும், ஐந்தில் அங்காரகனுமிருந்தால் தந்தைக்கரிட்டமுண்டாம். அங்காரகன், கேது, சூரியன் இவர் மூவரும் ஒன்றாய்க்கூடி சுபர்நோக்காராகில் தந்தைக்கு மூன்று வருஷத்தில் அரிட்டமுண்டாகும், எ - று. (800)

பேசுமெட்டொன்பதுபத்திற் பெரியபாவருறவொன்பான்
நேசமெட்டாறுடுவியத்தினிற்கப் பலன்கணிக்கியுற
ஓசையொன்பதிற்குசனே யுலவுங்கதிரோனுற்றிடினும்
வீசுமொன்பதினிற்பாவர் மேவப்பிதாமெய்யுயிர்பிரியும்.

(இ - ள்.) எட்டு, ஒன்பது, பத்தாமிடத்தில் பாவிகளும், ஒன்பதாமிடத்தான் எட்டு, ஆறில் பன்னிரண்டில் பாவர்களும் பலமகன்றிருக்கவும், ஒன்பதில் அங்காரகனாவது சூரியனாவது இருந்தாலும், அதில் பாவிகளிருப்பரேல் தந்தை இறப்பன், எ - று. (801)

வேறு.

பிரியமுடனொன்பதாமிடத் ததிபன்புடத்தில்
பெருங்குளிகன்றன்னைவாங்கிப் பெற்றிடுராசியிலே
நெறிபயிலுந்தமனியனார் தாமருவுங்காலம்
நிரியாணமந்தவருடத்தில் வருமவர்தம்
குறிகாணும்படுவெய்யோன் புடந்தனைவைத்துக்கொண்டு
குலவுமொன்பதாமிடத்தோன் புடந்தனைவாங்கிச்
செறியுமந்தராசியே மாதங்களாகத்
தெளிந்துபிதாநிரியாணந் தனையருளுவீரே.

(இ - ள்.) ஒன்பதுக்குடையோன் ஸ்புடத்தில் குளிகன் ஸ்புடத்தை வாங்க வரும் ராசியில் குருவருங்காலத்தில் அந்த வருடத்திற்குள் நிரியாணம் வரும். சூரியன் ஸ்புடத்தை வைத்துக்கொண்டு அதில் ஒன்பதாமிடத்தோன் ஸ்புடத்தை வாங்க வரும் ராசி எதுவோ அதுவே மாதத்தில் தந்தை நிரியாணமாவானென் றுரைப்பீராக, எ - று. (802)

வேறு.

அருணுந்தைகாரகனை யறிந்துபலன்கூறுமாசெய்ய
பரிதிக்கிருபுறமாரேனும் பாவரிருக்கப்பார்வையருளும்
துரிதாய்நோக்கமிருந்ததனாற் சொல்லுங்குழவிகருப்பத்தில்
தெரியவிருக்கப்பிதாவரிட்டஞ் செப்புங்கணிதவல்லோரே.

(இ - ள்.) பிதுர்க்காரகனை யுணர்ந்து பலன்கள் சொல்லுதற்குச் சூரியனுக் கிருபுறங்களிலும் பாவிகள் இருந்தாலும் பார்த்தாலும் குழந்தை கர்ப்பத்தில் தெரியவிருக்கும்போதே தந்தைக்கரிட்ட முண்டாமென்று கணித வல்லவர் சொல்லுவர், எ - று. (803)

பாக்கியபலன் (வேறு.)

உறுமொன்பதாமிடத்தோன் வெகுபலவானாகி
உற்றவிடத்ததிபதி கேந்திரத்திற்பாக்கியவான்

பெறுந்தந்தைதனிலதிகன் கீர்த்திமானரசர்
பிரியமுறச்சஞ்சரிப்பன் பிரதாபசாலி
அறிவுறுபாக்கியாதிபிதிர் காரகனைக்கூடி
ஆறிலுறப்பிதாவுரை கேட்டருள்வானென்பானதிபன்
பிரியாமலிருந்த நவாங்கிசத்தாதிபதியைப்
பிதுர்க்காரகன் பார்க்கக்குருபத்திப்பிரியன்.

(இ - ள்.) ஒன்பதுக் குடையோன் பலவானாய் இருந்த வீட்டுக்குடையோன் கேந்திரத்துற்றால் பாக்கியவானும், தந்தையைவிடக் கீர்த்திமானும் அரசன் விரும்ப வாழ்பவனும் பிரதாபசாலியும் பாக்கியாதிபன் பிதிர்க்காரகனைக் கூடி அதிலிருந்தால் பிதா சொல்புத்தி கேட்பவனும், ஒன்பதுக் குடையோன் பிரியாமலிருக்க நவாங்கிசத்துக் குடையோன் வீட்டைப் பிதுர்க்காரகன் பார்க்க குருபத்திப் பிரியனுமாவான், எ - று. (804)

பிரியமுடன்பிறைக்கைந்தாம் வீடுசரமாய்
பெருகியலக்கினத்துக் கைந்தாம்வீடுசரமாய்
நிறையும்பூரணமான வயிச்சியவரியனென்பர்
நீள்சரமுந்திரமாகி னிசழ்த்துபலன்பாதி
அருமைபெறுஞ்சரத்துபய மாகிற்காற்பங்காம்
அயிச்சுவரியமெனப்பகர்வ ரம்புலிக்குஞ்சானக்
குரிமனைமுதற்கொண்டு லக்கினத்துக்கைந்தைக்
குணமுடனேகண்டுபலன் கூறிடவேண்டும்.

(இ - ள்.) சந்திரனுக்கும் லக்கினத்திற்கும் ஐந்தாம்வீடு சரமானால் பூரணவயிசுவரியவானும், சரம்திரமானால் அரையயிசுவரியவானும், சரம் உபயமானால் கால் ஐசுவரியவானுமாம். ஆகையால் சந்திரனுக்கு லக்கினத்திற்கும் ஐந்தாமிடத்தைக்கொண்டே இப்பலன் கூறவேண்டும், எ - று. ()

வேண்டியதோரொன்பதா மதிபதியுங்குருவும்
விரும்பியகேந்திரத்திரி கோணங்களிலேமேவில்
ஆண்டகைபாக்கியவா னிவரிருவருடனும்
அன்புடனொன்பானிடத்தி லனுகினுமிம்மூவர்
பூண்டுவருமகாதிசைலாபாதி புசிப்பிலேதான்
பூரணபாக்கியஞ் சேருமேழாதிபனைத்
தீண்டியலாபாதியுறவாய்க் கூடினல்லோர
செறியுமனையுறிலவர்க டிசையிற்பாக்கியமே.

(இ - ள்) ஒன்பதுக் குடையோனும் குருவும் கேந்திர திரிகோணங்களிலிருந்தாலும் இவர்களோடு பாக்கியாதிபனுஞ் சேர்ந்து ஒன்பதிலிருந்தாலும் இவர்கள் மகாதிசையில் லாபாதிபன் புசிப்பில் பூரணபாக்கிய முண்டாகும். ஏழுக்குடையோனை லாபாதி சேர்ந்தாலும் அவன் சுபர்வீட்டி லிருந்தாலும் அவர்கள் திசையில் நல்ல பாக்கியமுண்டாம், எ - று. (806)

மேயலாபாதியுமேழாதிபு மித்துருவாய்
மேலோர்கள்வீட்டினுறச் சன்மாதிபதியு
மாயுமிவர்மூவருமொன்றாக் கூடியிருக்கில்
அயிச்சுவரியஞ் சிவபரியந்தமட்டுண்டென்னும்
நேயமுடனொன்பதா மிடத்ததிபன்சாதி
நிசமறிந்தே யவர்மரபின்னிருபர்களினாலே
தூயசவுபாக்கியங்கள் சேருமென்றேநல்ல
சோதிடநூலிணையுணர்ந்தோர் சொல்வர்கண்மடவே.

(இ - ள்.) லாபாதிபதியும் எழுக்குடையோனும் மித்துருக்களாய் சுபர் வீட்டிலும் சன்மாதிபனுங் கூடிய மூவரும் ஒன்றாய்க் கூடியிருந்தாலும் ஆயுள்வரைக்கும் ஐசுவரியமுண்டாம். ஒன்பதுக்குடையோன் சாதியறிந்து அவர் மரபின் அரசரால் சவுக்கியங்களுண்டா மென்று நல்ல சோதிட நூலுணர்ந்தோர் சொல்லுவர், எ - று. (807)

கண்டிடுலாபாதிபதி பாக்கியாதிபனும்
களத்திரத்தானத்திருக்கப் பாக்கியலாபந்தான்
மிண்டியதோர் கேந்திரமாயுச்சவீடாக
மேவியவேழாமதிபன் சுபக்கிரகமாகி
மண்டியபாக்கிய லாபத்தானத்திலிருக்க
வரும்பலபாக்கியமவன்றன் மனைவிக்குஞ்சுகமாம்
திண்டிறலாந்தோளியதா மிவர்களொடுஞ்சான்றோர்
சேர்ந்திடும்பாவாதியற்குஞ் செல்வமசேரும்.

(இ - ள்.) லாபாதிபனும், பாக்கியாதிபனும் களத்திராஸ்தானத்திருக்கவும் பாக்கிய லாபஸ்தானங்கள் கேந்திரமாயும் உச்சமாயுமிருந்து எழுக்குடையோன் சுபனாய் பாக்கிய லாபஸ்தானங்களிலிருக்கவும் பாக்கியம் பெருகும். அவன் மனைவிக்குஞ் சுகமுண்டாகும். இவர்களுடன் சேரும் பாவிகட்குஞ் செல்வஞ் சேரும், எ - று. (808)

சேருமோன்பானிடத்திருந்த பாக்கியவாதிபனும்
திறல்குருமூவரு நீசமத்தமனஞ்செறியக்
கூறியபாவியுமாய்ச் சத்துருவீட்டிலிருக்கக்
குலவுவியமாமெட்டிற் கூடியுநின்றாலும்
நேரும்பாக்கியநட்டம் பாக்கியவாதிபனும்
நிருபனுநின்றிடுவீட்டோ னீசமத்தமனமாய்
பாரினிலிரப்பான் பாக்கியாதிகுருவுடனே
பாவிகள்கூடினும்புசிப்பன் பலிகாரத்திலெடுத்தே.

(இ - ள்.) ஒன்பதுக்குடையோனும், பாக்கியாதிபனும், குருவும், நீச அத்தமனங்களிலும், பாவிகளுமாய்ச் சத்துரு வீடுகளிலும், பன்னிரண்டு, ஆறு, எட்டாமிடங்களிலும் கூடி நின்றால் பாக்கியம் நஷ்டமாகும். பாக்கியாதிபதியும் குருவுமிருந்த வீட்டுக்குடையோன் நீசம். அத்தமனமானால் இரந்துண்பன். பாக்கியாதிபன், குரு இவர்களுடன் பாவிகள் கூடில் கையில் பலியெடுத்துப் புசிப்பான், எ - று. (809)

வேறு.

எடுத்துபத்தாமதிபதியேழிறை
கடுத்தமித்திர ராகிப்பலனுடன்
கொடுத்தவுத்தமர் வீட்டினிற்சூழ்ந்திட
படைத்தபாரியினால்வரும் பாக்கியம்.

(இ - ள்.) பத்துக்குடையோனும், ஏழுக்குடையோனும் மித்துருக்களாய்ப் பலத்துடன் சுபர்வீட்டிலிருந்தால் மனைவியால் பாக்கியமுண்டாம், எ - று. (810)

வேறு.

பாக்கியஞ்சேர்வகை பிருகுபதியரசன்கூடிப்
பத்தாமிடத்திற்கும் பலன்றனவானவன்
தேக்கியசத்தியவசனன் கல்விசெறிநிபுணன்
திராஜர்வெகுமானஞ் செய்யமகிழ்ந்திருப்பன்
தாக்கியபொன்சனி புந்திமதிசெவ்வாயைவர்
தாமொருவீட்டினிலிருக்கத் தனவானுமாகி
ஊக்கமுறுமுடியரசர் சன்மானஞ்செய்ய
உலகில்வெகுபாக்கியமு முண்டாங்கண்டீர்.

(இ - ள்.) சுக்கிரன் சந்திரன் குரு இவர்கள் கூடிப் பத்தாமிடத்திலிருந்தால் தனவானும், சத்திய வசனனும், கல்விமானும், ராஜவெகுமானம் பெறுவோனும் குரு சனி புதன் சந்திரன் அங்காரகன் இந்த ஐவரும் ஒரு வீட்டிலிருந்தால் தனவானும், அரசசன்மானனும், வெகு பாக்கியவானுமாவான், எ - று. (811)

வேறு.

கண்டபத்தாமாதிபதி கருதுமுச்சர்வீட்டிலிருந்
தண்டிப்பத்தாமிடம்பார்க்கிலவன் பூமியிலுண்டாஞ்செல்வம்
மிண்டிநீசர்சத்துருக்கள் வீட்டிலிருந்தமிசநோக்க
அண்டுந்தூரதேசத்து மந்நியராலுமயிச்சுவரியம்.

(இ - ள்.) பத்துக்குடையோன் உச்சர்வீட்டிலிருந்து பத்தைப்பார்த்தால் பூமியினால் செல்வமுண்டாம். நீசர் சத்துருக்கள் வீட்டிலிருந்து பார்த்தால் தூரதேசத்தாலும் அன்னியராலும் ஐஸ்வரியமுண்டாம், எ - று. (812)

ஒன்பதாம்பாவம் முற்றிற்று.

# பத்தாம்பாவம்.

## கன்மபலன்.

பத்தாமிடத்திலட்டமத்தோன் பாவருடனேகூடிநிற்கப்
பத்தாமதிபலம்பெறவே பாவர்பார்க்கத்துர்க்கன்மம்
பத்தாமதிபன்பலவானுய்ச் சுபக்கோளுடனும்பரிந்தேழில்
ஒத்தநான்கிற்சன்மத்தி லுறினற்கருமமுளனுவன்.

(இ - ள்.) பத்தில் அட்டமாதிபதி பாவிகளுடன் கூடியிருந்து பத்துக்குடையோன் பலம்பெற்று பாவிகள் பார்த்தால் துர்க்கர்மமுண்டாம். பத்துக்குடையோன் பலவானுய் சுபர்களுடன்கூடி எழிலும், நான்கிலும், சென்மத்திலுமிருந்தால் நற்கருமமுண்டாம், எ - று. (813)

ஆவன்ஞானிசனிநாலிலமர்ந்தா லந்தச்சனியபத்தில்
மேவிற்றீர்த்தயாத்திரையை விரும்பித்தவமேவிரும்பிடுவன்
தாவுஞ்சன்மாதிபன்பத்திற் றரிக்கிற்கன்மமுளன்பத்தில்
கோவுங்கன்மகாரகனும் பலமேறகன்மங்குறைவில்லான்.

(இ - ள்.) சனி நாலி லிருந்தால் ஞானியும் பத்திலிருந்தால் தீர்த்தயாத்திரையை விரும்பித் தவம் புரிபவனும், சன்மாதிபன் பத்திலிருந்தால் கர்மியும், பத்தில் குருவும், கர்மகாரகனும் பலப்பட்டிருந்தால் குறையாத கர்மமுடையவனு மாவான், எ - று. (814)

குறைவில்லொன்பதாமிடத்திற் கோவும்பலமாய்ச்சுபர்வீட்டில்
உறையச்சுபக்கோள்பார்க்க மதிபுகத்துசலராசியிலிருக்க
நிறைந்தகங்காதீர்த்தோடுமவன் பின்னுநிலவுச்சமெய்பெறவே
அறையும்பத்திற்சுக்கிரனுறத் தீர்த்தம்பலவுமாடுவானே.

(இ - ள்.) ஒன்பதில் குரு பலப்பட்டுச் சுபர் வீட்டிலிருந்தாலும் சுபர் பார்த்தாலும், சந்திரன் சலராசியிலிருந்தாலும், கங்காதீர்த்தமும், சந்திரன் உச்சம்பெற்றுச் சுக்கிரன் பத்திலிருந்தால் பல தீர்த்தங்களுமாடுவான், எ-று.

### வேறு.

ஆடிடும்பத்தாமதிபன் சுபருடன்
கூடிமற்றிருபாலுற்ற கோற்றவர்
நீடிநிற்கநிரந்தர மண்பொடும்
தேடியேசிவ பூசைகள்செய்வனே.

(இ - ள்.) பத்துக்குடையோன் சுபருடன் கூடி மற்ற இரண்டு பக்கங்களிலு முள்ளவர்கள் நீடியிருக்கச் சதா சிவபூஜை செய்வான், எ - று.

செய்யசந்திரன் சன்மந்தனக்குமே
துய்யபத்தா மதிபர்சூழ்ந்திடும்
மெய்யிலக்கிசைசேயோன் பலமேபெறில்
பொய்யறச்சுப கன்மம்புரிவனே.

(இ - ள்.) சந்திரன் சன்மத்திலும் பத்துக்குடையோன் அங்கிசத்திலு மிருந்து பலப்பட்டால் சுபகர்மம் செய்வான், எ - று. (817)

புரிகுசன்சனி பொன்மால்பளிங்குமே
பரிவுடனொரு வீட்டினைப்பற்றிட
அரியசற்குண சன்மார்க்கனாகியே
தெரியஞானச்சிந்தைச் சிவயோகியாம்.

(இ - ள்.) அங்காரகன் சனி குரு புதன் சுக்கிரன் இவர்கள் ஒரு வீட்டி லிருந்தால் சிவயோகியாவான், எ - று. (818)

வேறு.

ஆமெனும்பத்தாதிபனற்கோளையாய்த் தனலாபபாக்கியத்தில்
நீமமாயுச்சகேந்திரங்களினுநிற்க நற்கன்மமேபுரிவதில்
தோமுறும்பாவனாய்நீசமத்தனாய்ச்சொல்லுமாறெட்டினிற்வியத்தில்
தாமுறினல்லோர்தம்மையும்பழித்துத் தக்கதுர்க்கன்மமேபுரிவன்.

(இ - ள்.) பத்துக்குடையோன் சுபனாய் தனம் லாபம் பாக்கியம் உச்சம் கேந்திரத்தி லிருந்தால் நற்கருமமும், அவன் பாவியாய் நீசம் அத்தமனம் ஆறு எட்டு பன்னிரண்டா மிடங்களிலு மிருந்தால் நல்லவர்களையும் நிந்தித்து துர்க்கர்மமுஞ் செய்வான், எ - று. (319)

புரியமீரைந்தாமதிபனற்கோளாய்ப் புகல்பலவானுமாய்ப்பத்தில்
தெரியவுற்றிடில்யாகாதிகன்மங்கள் செய்வனீரைந்திடத்ததிபன்
பரிவுடன்வியத்தானதியைக்கூடிப் பண்ணுறுஞ்சுபபலமுடனே
அரியதோர்வியத்திலுறத்தனபதியா யானநற்கன்மமேசெய்வன்.

(இ - ள்.) பத்துக்குடையோன் சுபனாய், பலவானுமாய் அதிலேயே யிருந்தால் யாகாதி கர்மங்களும், அவன் பன்னிரண்டுக்குடையோனைக் கூடி சுபபலத்துடன் பன்னிரண்டிலிருந்தால் மிக்க செல்வமுடையவனாய்ச் சுப கர்மமுஞ் செய்வான், எ - று. (820)

செய்யகன்மாதிகுருமாயுச்சஞ் செறிந்தசுக்கிரனுடன்கூடில்
துய்யயாகாதிகன்மமேபுரிவன் சூழ்ந்தகன்மாதியைத்தானும்
பய்யவேகுருசுக்கிரனுமேபார்க்கில் பண்ணுவன்யாகமேபலவும்
மெய்யகன்மாதிகுருவுமாய்நல்லோர் வீட்டுறவிரும்புவன்மகமே.

(இ - ள்.) கர்மாதிபதி குருவாய் அவன் உச்சம்பெற்ற சுக்கிரனுடன் கூடினல் யாகாதிகர்மங்களும், கர்மாதிபதியை குருவும் சுக்கிரனும் பார்த்தால் யாகம் பலவும், கர்மாதிபதி குருவாய் சுபர்வீட்டிலிருக்கவும் யாகமே விரும்பிச் செய்வான், எ - று. (821)

விரும்புசுக்கிரனுங்குருவுமேபலமாய்மேவும் வீட்டதிபனற்கோளாய்
இரும்பலவானுயிருக்கமற்றவரோ டெத்தனைசுபக்கிரகங்கள்
பெரும்பலமுடனேகூடினவிலக்கம் பெருமகம்புரிவனென்றுரைக்கும்
அரும்புகன்மாதிகுருவுமாய்ப்பலமேயாகில் வேதங்கண்மூன்றறிவன்.

(இ - ள்.) சுக்கிரனும் குருவும் பலமாய் யிவர்களிருக்கும் வீட்டுக்குடையோன் சுபக்கிரகமாயும் பலவானுயுமிருந்தால் அவரோடு எத்தனை சுபக்கிரகங்க ளிருக்கின்றனவோ அத்தனை யோகஞ் செய்வான். அன்றி கர்மாதிபதி குருவாய் பலப்பட்டிருந்தால் மூன்று வேதங்களறிவானுவன், எ - று.

அறியுங்கன்மாதிபாவனும்பாவ ரகத்தினிலிருந்துகன்மத்தைக்
குறியுடன்பார்க்கிற்சூத்திரகன்மங் கூசிடாப்பாவதுர்க்கன்மம்
நெறியுடன்புரிந்தீங்கிசைபெறவிருப்ப னிறைந்திடுங்குரூரசாகசமும்
செறியுமவ்வினையாற்சுபபலஞ்சிறிதாந் தீங்குறுபலன்றிரளாமே.

(இ - ள்.) கர்மாதிபதி பாவியாய் பாவர் வீட்டிலிருந்து கர்மஸ்தானத்தைப் பார்த்தால் சூத்திர துர்க்கருமமுண்டாம். அதனுல் அநேக தீங்குகள் புரிந்திருப்பன்; தீயலபம் அதிகமும், சுபபலம் கொஞ்சமுமாயிருக்கும், எ-று.

திரமுறுமொன்பானதிபதிகுருவாய்ச் செய்யவொன்பதிற்குருவுறினு
வரமுறும்பலர்களிடத்துபதேசவசனமும் வித்தையும்பெறுவன் [ம்
உரமுடனென்பானதிபதிமாபி லுறையுபதேசமும்பெறுவன்
பரமுறுமிவர்களுச்சகேந்திரத்திற் பற்றிடில்ஞானமேபலிக்கும்.

(இ - ள்.) ஒன்பதுக்குடையோன் குருவாய் அதிலிருந்தால் பலபேரிடத்தில் உபதேசமும் பெறுவன் இவர்கள் உச்சகேந்திரத்தி லிருந்தால் ஞானமுண்டாகும், எ - று. (824)

வே று.

பலிக்குமேடமிடபமுடன் பகர்ந்தசிங்கம்பத்தாக
வலிக்குஞ்சுபக்கோணின்றுடினு மன்னுமவர்நோக்குற்றிடினும்
ஒலிக்கும்வேதமதிற்சொன்ன வுத்தமத்தன்மங்கடனைச்
சலிக்கச்செய்வனெனசொல்வர் தக்ககணிதவல்லோராம்.

(இ - ள்.) மேஷம் ரிஷபம் சிங்கம் பத்தாமிடங்களில் சுபக்கிரகங்க ளிருந்தாலும் அவர் பார்த்தாலும் வேதத்தில் சொல்லிய தர்மங்களை யெல்லாம் செய்து முடிப்பானென்று சொல்லுவர் பெரியோர், எ - று. (825)

ஆருஞ்சன்மலக்கினத்தி லுறுகும்ராகுமோரேழில்
வேகமுடனேதானிருக்க வேண்டுங்கேந்திரங்காரிபுகர்
தாகமுடனே புதன்மூவர் தானுங்கூடச்சண்டாள
யோகமெனவேதானுரைப்ப ருண்மைகன்மமகாசாரம்.

(இ - ள்.) சென்மலக்கினத்தி லிருக்கும் ராகு வெழிலிருந்தாலும், கேந்திரத்தில் சனியும், சுக்கிரன், புதனிவர்கள் கூடினாலும் சண்டாள யோகமாம். அதாசார கர்மமுண்டாம், எ - று. (826)

உண்மைபாக்கியாதிபனு முற்றேசென்மத்தாருகதிரும்
வண்மைபெறவேயைந்தில் வந்துசுபக்கோணோக்கமில்லாத்
திண்மையாறிலொருமூன்றிற் றீயோர்வந்துதானுறைய
எண்மையுடனேயநாசார மெமதுநீசக்கன்மியவனே.

(இ - ள்.) பாக்கியாதிபனும் சென்மசூரியனும் ஐந்தில் வந்து சுபக்கோள் பார்வையில்லாமலும், ஆறிலும் மூன்றிலும் பாவிகளுமிருக்க யநாசார நீசகர்மியாவான், எ - று. (827)

சந்நியாசி யோகம் (வேறு.)

தேசுறுபத்தாமாதி நான்கிடத்தினிலிருக்கச்
செப்பியநாலாதிபதி திரிகோணத்தெய்தப்
பூசலுறும்பாம்பல்லா தொருநான்குகிரகம்
பொருந்திப்பத்தினிலிருக்கும் போதுசந்யாசியுமாம்
ஓசைகொணான்காம்வீடு முதற்பத்தாமனைமட்
டோரேழு வீட்டினுங்கோ ளொழியாம லிருக்கில்
காசினியில் வாழ்பவர்க்குத் தேசிகனே யாகிக்
கதித்திடுசந் யாசியென வேகருதல் வேண்டும்.

(இ - ள்.) பத்துக்குடையோன் நாலிலும், நாலுக்குடையோன் திரிகோணத்திலும், ராகு கேதுக்களல்லாது நான்கு கிரகங்கள் சேர்ந்து பத்திலுமிருந்தால் சந்யாசியோகமாம், நான்குமுதல் பத்தாம் வீடுவரைக்குங் கிரகங்கள் நீங்காதிருந்தால் சந்யாசியில் குருவாகவும் வாழ்வான், எ - று.

வேண்டிடுசெவ்வா யிரவிமதிமூவர்கூடி
விரும்பபத்தாமிடத்திருக்க மின்னோர்பொன்றனக்கும்
ஈண்டியகோர் விரிவில்லாச் சந்யாசி யாவன்
இனியபுதன்கதிரோனு முச்சமாயிருக்கத்
தாண்டுவியத்தானத்திற் சுக்கிரனொப்பிடவும்
சனியொருவனுகிற்சுக் கிரன்றனைப்பார்க்கப்
பூண்டுவருஞ்சன்மமுத லாதியக்கமாகப்
புகழ்ந்திடுசந்நியாசியெனப் போற்றிடவீற்றிருப்பன்.

(இ - ள்.) அங்காரகன் சூரியன் சந்திரன் இம்மூவர் கூடி பத்திலிருந்தால் சந்நியாசியாவான். புதனும் சூரியனும் உச்சமாயும் சுக்கிரன் பன்னிரண்டிலும் சநி தனியனாய்ச் சுக்கிரனைப் பார்த்தாலும் பிறந்ததுமுதல் மரணம் வரைக்கும் சந்யாசியாயே யிருப்பானென்று சொல்லும்படியிருப்பன், எ - று. (829)

பத்தாம்பாவம்

முற்றிற்று.

# பதினோராம் பாவம்.

ஆதாயபலன்.

வியமாறெட்டாதிபன் கூடி மேவினலுந்தனியேனும்
சயமாய்ப்பாவத்துநிற்பாவர் நண்ணிற்பார்க்கிலாபமில்லை
சுபலாபாதியுச்சனுமாய்ச் சுபர்மத்தியிலேதானிருக்கில்
சுபலாபத்திற்சுபரிருக்கச் சாகும்லாபந்திரளாக.

(இ - ள்.) பன்னிரண்டு ஆறு எட்டாதிபர்கள் சேர்ந்திருந்தாலும் தனியாயாயினும் 11-ம் பாவத்திலிருந்தாலும், பாவர்களிருந்தாலும் பார்த்தாலும் லாபமில்லை. லாபாதிபதி உச்சனாய்ச் சுபக்கிரகங்களின் மத்தியிலிருந்தாலும் லாபத்தில் சுபரிருந்தாலும் அளவற்ற லாபமுண்டாகும், எ-று.

திரலாபாதியுச்சத்திற் செறிந்துலாபத்தினிலிருக்க
மரவாய்ச்சன்மாதிபன்பலமாய் மருவலாபம்வருஞ்சுகிப்பன்
விரவாய்லாபாதிபனிருந்த வீட்டுக்கிறைகேந்திரமேவ
உரவோரவனைக்கூடக்கண் ணுறலாபங்களுண்டாமே.

(இ - ள்.) லாபாதிபதி யுச்சத்திலிருந்து லாபத்திலுமிருந்தாலும் சென்மாதிபதி பலப்பட்டிருந்தாலும் மிகுந்த லாபமுண்டாம். லாபாதிபதியிருந்த வீட்டுக் குடையோன் கேந்திரத்திலிருக்க அவனை மித்துருக் கிரகங்கள் பார்க்க மிகுந்த லாபமுண்டாகும், எ - று. (831)

உண்டாம்லாபாதிபனிருந்ததிக்கிற பலன்களுரைசெய்வாம்
தண்டாமறைநண்பன்கிழக்குத் தருஞ்சுக்கிரறகக்கினிமூலை
கண்டாய்குசன்றெற்காரமூலை காரிமேற்குச்சசிவாயு
கொண்டேயிருக்கும்புதன்வடக்கு குருவீசானங்கொண்டுவரும்.

(இ - ள்) லாபாதிபதி யிருந்த திசையின் பலனைச்சொல்லுங்கால் சூரியனிருந்தால் கிழக்கிலும், சுக்கிரனுக்கு அக்கினி மூலையிலும், அங்காரகனுக்கு

தெற்கிலும், ராகுவிற்கு நிருதி மூலையிலும், சனிக்கு மேற்கிலும், சந்திரனுக்கு வாயுமூலையிலும், புதனுக்கு வடக்கு மூலையிலும், குருவுக்கு ஈசானமூலையிலு மிருந்தே லாபம் வருமாம், எ - று. (832)

வரும்லாபாதிபன்லாபத்தா னத்திலிருந்தோதான்
மதியிரவியிவர்நால்வர் மகிழ்பலமேபெற்றுப்
பெருமையுள்ளோர்வீட்டினின்ற கிரகத்தோடிருக்கப்
பெரும்வீட்டுக்கதிபதியுமே பலவானாயின்
கிருஷிகனன்றாய்ப்பலிக்கு மயிஸ்வரியனாவான்
கிட்டியிவர்மகாதிசையிற் கிளர்தனங்கள்சேரும்
தரும்லாபாதிபனிரவியாகி மதியுடனும்
தான்கூடப்பார்க்கவெகு தனலாபமுண்டாம்.

(இ - ள்.) லாபாதிபதியும் அவ்விடமிருந்தவனும், சந்திரனும் சூரியனும் ஆகிய நால்வரும் பலப்பட்டுப் பெருமையுள்ளோர் வீட்டிலிருப்பவரோடு கூடியிருக்கப் பெறும் வீட்டுக்குடையோனும் பலவானானால் பயிர் நன்றாய்ப் பலிக்கும், ஐஸ்வரிய முள்ளவனுவன். அன்றி இவர்களுடைய மகாதிசைகளில் மிக்க செல்வம் சேரும். அன்றி லாபாதிபதி சூரியனாயிருந்து சந்திரனுடன் கூடினும் பார்க்கினும், தானுமே லாபத்தைப் பார்க்க மிக்க செல்வ முண்டாம், எ - று. (833)

உண்டானலாபாதிபதி யாகுஞ்சசியை
உம்பர்கோனுங்குருவும் முகந்தானோக்க
மிண்டானசகலபாக் கியலாபஞ்சேரும்
மிக்கலாபாதிபவர் வீட்டிலிருந்தாலும்
கொண்டாடுமவரவர்க்கு வெகுலாபமுளதாம்
குறித்தசென்மாதிபன்லா பத்தானத்திற்குலவ
கண்டாயமொழியாய்லா பாதிநின்றதிசையில்
கருதியலாபங்கள்வருங் காணுமெனப்புகல்வார்.

(இ - ள்.) லாபாதிபதியான சந்திரனைக் குரு பார்த்தாலும் சகல பாக்கியமுஞ் சேரும். அன்றி, லாபாதிபதியார் வீட்டிலிருந்தாலும் அவரவர்களுக்கு மிக்க லாபமுண்டாகும். அல்லாமல் சென்மாதிபதி லாபத்தானத்திலிருக்கவும் லாபாதியிருக்கின்ற திசையில் நினைத்த லாபங்களெல்லாம் கைகூடுமென்று சொல்லாய் பெண்ணே! எ - று. (834)

பதினோராம்பாவம்

முற்றிற்று.

---

# பன்னிரண்டாம் பாவம்.

---

கூறிய வியத்திற்காரி சதிகதிர் குருசேய் வெள்ளி
ஏறிடிற் குழவியன்னை பிதாமகன் றுணைவரில்லாள்
ஆறுபே ருக்கரிட்ட மப்பதி சரமேற் றீதாம்
மாறிலா வவர்வீடுச்ச நன்றென வழுத்துவாரே.

(இ - ள்.) பன்னிரண்டாமிடத்தில் சநி சந்திரன் குரு அங்காரகன் சுக்கிரன் இவர்களிருந்தால் பிள்ளை தாய் தகப்பன் சகோதரர் மனைவி இவ்வறு வருக்கும் அரிட்டமாம், அந்த வீடு சரமானால் தீதாம். அவ்வீடு உச்சமானால் நல்லதென்று சொல்லுவார்கள், எ - று. (835)

வார்மைசேர் வியத்தானத்தின் மன்னவன் சுபக்கோளாகிச்
சீர்மைசேர் கேந்திரத்து முச்சத்துஞ் செறிந்துநிற்கில்
பார்மைசேர் வியத்தினல்லோர் பரிந்துறிற் பார்க்கில்மேலாம்
கூர்மைசேர் பரியங்கத்திற் குலவுபூச் சரங்கள்சூழ.

(இ - ள்.) பன்னிரண்டாமிடத்தில் குருசுபனாகி கேந்திரத்திலும், உச்சத்திலு மிருந்தால் அவ்விடத்தில் சுபக்கிரகங்கள் இருந்தாலும் பார்த்தாலும் மிக்க மேன்மை யுண்டாகும், எ - று. (836)

சூழும்செம் பட்டுமெத்தைத் தூக்கமேற் கட்டிதூபம்
தாழுஞ்சங் கிலியிற்றொங்குஞ் சப்பிர மஞ்சமீது
ஏழுநல் லிசையார்கொண்டே யேந்திழை மாரிசைப்ப
வாழுமன் னவனுமென்று வழுத்துவர் மறைவல்லோரே.

(இ - ள்.) சங்கிலியாற்கட்டி ஊஞ்சலாடும் மஞ்சத்து செம்பட்டு மெத்தை மீது வீற்றிருக்க பெண்கள் இனிய இசை வாசிக்க வாழும் மன்னவனாவானென்று பெரியோர் சொல்லுவர், எ - று. (837)

வல்லதோர் வியத்தானாதி மற்றுமெட் டாறினிற்கச்
சொல்லிய சநியும்பாம்புஞ் சூழ்ந்துபன் னிரண்டினிற்க
நல்லவர் பார்வைசற்று நயந்திடா திருக்கிற்பாரில்
புல்லணை மெத்தையாக விருவிழி துயில்வன்போந்தே.

(இ - ள்.) பன்னிரண்டுக் குடையோன் எட்டு ஆறுமிடங்களிலும் சநியும் ராகுவும் பன்னிரண்டிலு மிருந்து சுபர் பார்வையைப் பெறாதிருந்தால் புல் மெத்தையில் சயனித்திருப்பான், எ - று. (838)

### விரையபலன் வேறு.

போந்தசெறி பாக்கியத்தாதி பொருந்துபன் னொன்றின்மேவ
ஏந்தும்பிதிர் லாபாதிபதி யிருவர்தமக்கு முறவாக

ஆர்ந்தபிதிரின் றனம்போல வதிந்துவிருணம் பொன்தேடி
வேந்தனுவன் மைந்தற்கு மிகைக்கே விருக்கும் வெகுதனங்கள்.

(இ - ள்.) பாக்கியாதிபதி பதினொன்றிலும், பிதிர்க்காரகன் லாபாதிபதி இவ்விருவருக்கும் உறவாயிருந்தாலும் பிதிரின் செல்வம்போல் பொன் தேடி வேந்தனுவன், அச்செல்வம் தன்புத்திரற்கும் மிகுதியாயிருக்கும், எ-று

வேறு.

கோலலாபக் குரிசில்வியத்துற
மேலவியத்தனும் மேவுதனத்துற
ஆலுமேதனத் தாதிபலமறச்
சாலமன்னர் தனங்கொள்வர் தண்டமாய்.

(இ - ள்.) லாபாதிபதி பன்னிரண்டிலும், பன்னிரண்டுக்குடையோன் தனத்திலும், தனுதிபதி பலமற்று மிருந்தால் தன் தனத்தை மன்னர்கள் தண்டமாய்க் கொள்வர், எ - று. (840)

மாய்வியத்தனும் வந்துதனத்துற
ஏய்தனுதி வியந்தனிலேயுற
நேய்சென்மாதி நிரீக்கணமன்றினாய்
நூய்தனங்களெல் லாந்துரைகொள்வரே.

(இ - ள்.) பன்னிரண்டுக்குடையோன் தனத்திலும், தனுதிபதி பன்னிரண்டிலும், சென்மாதிபதி நிரீக்கணமுமானுல் துரைகள் இவன் தனத்தைக் கொள்வர், எ - று. (841)

கொள்ளுமிரண்டா மதிபதியுங் குலவுநாவாங்கி சாதிபனும்
மெள்ளக்கூடிப் பலமறவு மெய்யாதிபனுந் துர்ப்பலமாய்
உள்ளியிருக்க வவன்றேடு முடைமைப்பொருள்க ளுள்ளவெல்லாம்
கள்ளராச ரக்கினியுங் கவர்ந்துகொள்வர் கண்டாயே.

(இ - ள்.) இரண்டுக்குடையோனும், நாவாங்கிசாதிபனுங் கூடிப் பலமற்றும் சரீரகாரகனும் துர்பபலமாயிருந்தால் அவன் தேடிய பொருள்களெல்லாவற்றையும் கள்ளர் அரசர் அக்கினி இவர்கள் கொள்வார்கள், எ-று.

வேறு.

கண்டபன்னிரண் டாமிடக்காவலன்
கொண்டலக்கின மேழிற்குடிகொள
மண்டுபொன்னணி தானியமாறிடும்
கெண்டைபோல்விழிக் கிஞ்சுகவஞ்சியே.

(இ - ள்.) பன்னிரண்டுக் குடையவன் லக்கினம் ஏழாமிடங்களிலுமிருந்தால் கெண்டைபோலுங் கண்ணுய்! பொன்னுபரணம் தானியம் இவைகள் மாறிப்போம், எ - று. (843)

வஞ்சியேபத் ததிபதிபாவனும்
விஞ்சியேபல னன்றிவியத்துறில்

அஞ்சியையம்ப தாம்வயதாவன்
தஞ்சமான தனங்கள்வழுவுமே.

(இ - ள்.) பத்துக்குடையோன் பாவியாய்பலனற்றுப்பன்னிரண்டிலிருந்தால் ஐம்பதாவது வயதில் அவனுடைய தனங்களெல்லாம் அழியும், எ - று.

வேறு.

வழுத்தியபன்னிரண்டா மனைக்குமன்பாவனாகி
அழுத்தியவவனைப்பாவ ரனைகியும்பார்த்துநிற்க
முழுப்பொலாப்பாவசிந்தை முயற்சியாலவன்பொன்னெல்லாம்
இழுக்குறுந்தொழிலுள்ளார்க்கே யீந்தவன்கீர்த்தியேறுபன்.

(இ - ள்.) பன்னிரண்டுக்குடையோன் பாவியாய் அவனோடு பாவிகள் சேர்ந்தும் பார்த்து மிருந்தால் அவன் தன்னுடைய செல்வத்தை யெல்லாம் பாவிகளுக்குக் கொடுத்து கீர்த்தி பெறுவன், எ - று. (845)

ஏற்கவேபன்னிரண்டி லிரணியன்வெள்ளிதூய
தீர்க்கச்சந்திரன்பொல்லாரைச் சேராதபுதனிந்நால்வர்
மார்க்கமாய்கூடிற்றன்ம வகையினாற்செலவாமென்று
ஏக்கமாற்சுருதிவல்ல வேதியரோதினாரே.

(இ - ள்.) பன்னிரண்டில் குரு சுக்கிரன் வளர்பிறைச் சந்திரன் பாவிகளைச் சேராத புதன் இவர்கள் கூடினால் தர்ம விஷயத்தில் செலவாகுமென்று சுருதிவல்ல பெரியோர் சொல்லுவார், எ - று. (846)

ஓதியபன்னிரண்டா மதிபனோடுற்றபாவர்
நீதியாநல்லோர்வீட்டி னிற்கினல்லோரைக்கூடில்
தீதறப்பலவானாகத் திகழ்வியத்ததிபன்றிரண்டில்
போதவேசெம்பொன்றேடிப் புதைப்பன்மற்றொருவர்க்கீயான்.

(இ - ள்.) பன்னிரண்டுக்குடையவனோடு சேர்ந்த பாவிகள் சுபர்வீட்டிலிருந்தாலும் அவர்களுடன் கூடினாலும், பலப்பட்டிருக்கும் பன்னிரண்டுக்குடையோன் அதிலேயிருக்கப் பொன்னதிகந்தேடி ஒருவருக்கு மீயாமல் புதைத்து வைப்பன், எ - று. (847

ஆனதோர்பாக்கியாதி தனாதியைந்தாமிடத்தும்
ஊனமில்லைந்தாமாதி யொன்பதிலிரண்டினிற்கத்
தானமிம்மூன்றுபேரு மிலக்கினந்தன்னினிற்க
ஈனமிலவன்பொன்னெல்லாங் கடன்கொடுத்திகழ்ந்துபோவான்.

(இ - ள்.) பாக்கியாதிபனும் தனாதிபதியும் ஐந்திலும் ஐந்துக்குடையோன் ஒன்பதிலும் இரண்டிலும் நிற்க அன்றி மூவருங்கூடி லக்கினத்திலுமிருந்தால் அவன் திரவியங்களையெல்லாம் கடனாகக்கொடுத்திருப்பன், எ- று.

வன்புறுமிரண்டாமாதி மார்த்தாண்டனுடனேகூட்ட
இன்புறுவியத்தானாதி யினியிரண்டிடத்தினிற்கத்

துன்புறுமட்டமத்திலாபாதி சூழ்ந்துநிற்கப்
பொன்பலவெல்லாஞ்சேதம் போய்விடும்புகழுமில்லான்.

(இ - ள்.) இரண்டுக்குடையோன் சூரியனுடனும், பன்னிரண்டுக்குடையோன் சுபருடன் இரண்டிலும், அட்டமத்தில் லாபாதிபனுமிருந்தால் பொன்னெல்லாமழியப் புகழில்லானுவான், எ - று. (849)

வேறு.

புகழும்வெள்ளியும் பொன்னும்பிறைதனை
மகிழ நோக்குற மந்தன்றுலாத்துற
இகழும்லோகத் தனமுடனேமியோர்
இசழுவொரு காசொன்றுமீவிலான்.

(இ - ள்.) சுக்கிரனும் குருவும் சந்திரனைப் பார்க்கவும், துலாவில் சனியிருக்க உலகத்தார் இகழும்படி ஒரு காசு மீயாதலோபியாவான், எ - று.

ஈதலீபுதெவர்க் கொன்றுரைப்பது
ஓதுமொன்பதாம் வீட்டுக்குடையவன்
சாதிவர்க்கத் தவர்தமக்கேநிதி
வாதியாமல் மகிழ்ந்துவழங்குவன்.

(இ - ள்.) தகப்பன் வம்சத்து வர்க்கத்தாருக்கே தனது செல்வத்தை ஈவானுவான், எ - று. (851)

வேறு.

ஓதிகதிருந்தேய்பிறையும் கூடிவியத்தினுறத்தனத்தை
நீதியரசர்கைகொள்வர் நிலவுங்குருவும்வியத்திலுறும்
போதுதனங்கள்மிகத்தேடிப் பொருந்தாந்தன்மம்புரிந்தருளி
மீதுசிறிதுதனமிக்க வாழ்வன்புவியில்வெகுகாலம்.

(இ - ள்.) சூரியனும், தேய்பிறைச் சந்திரனும் கூடி பன்னிரண்டிலிருந்தால் இவன் செல்வத்தை அரசர் கைக்கொள்வர். சந்திரனும் குருவும் பன்னிரண்டிலிருந்தால் உலகத்தில் மிக்க செல்வந்தேடித் தருமஞ்செய்து சிறிது செல்வத்தோடு வாழ்பவனுவான், எ - று. (852)

வேறு.

காலமாம்வியந்தன்னி லங்காரகன்
சாலநிற்கத் தனித்துங்கண்ணுக்குறில்
ஞாலமிதிற் புதைத்திடுநற்பொருள்
வாலைக்கெடேரியா மன்மறக்குமே.

(இ - ள்.) பன்னிரண்டில் அங்காரகன் தனித்திருக்க அல்லது அதனைப் பார்க்க உலகத்தில் புதைத்து வைத்த பொருளை வைத்தவிடந் தெரியாமல் மறப்பவனுவான், எ - று. (853)

பன்னிரண்டாம்பாவம்
முற்றிற்று.

---

# கர்ப்பத்தான மறிய.

கர்ப்பத்தானலக்கினத்தில் கிளரும்பலன்கள்புரவலனும்
கர்ப்பத்திரிகோணத்திருக்கக் கருவிலுதித்ததாணாகும்
இர்ப்பச்சசிக்குஞ்சூரியற்கு மேழிற்சனிசெவ்வாயிருந்தால்
பொர்ப்பநிறையும்புருடனும் பூவைதனக்குநோய்வருமே.

(இ - ள்.) கர்ப்பத்தான லக்கினத்தில் சொல்லும் பலன்களாவன: குரு திரிகோணத்திலிருக்க கருவிலுதித்து ஆண் குழவியாகும். சந்திரனுக்கும், சூரியனுக்கும், சூரியனுக்கும் ஏழில் சநி செவ்வாயிருந்தால் பெண்சாதி புருடரிருவருக்கும் நோயுண்டாகும், எ - று. (854)

வருஞ்சூரியர்க்குமுந்நான்கி லிரண்டின்மந்தன்செவ்வாயும்
தெரிந்தகூடும்வேளையினிற் சேர்ந்தாற்கரிட்டஞ்செழுமதிக்கும்
பரிந்திரண்டின்முந்நான்கிற் பங்குபாதன்குசன்கூடி
இருந்தபோதுபுணர்ந்திடவே யேழைக்கரிட்டமெய்திடுமே.

(இ - ள்.) சூரியனுக்குப் பன்னிரண்டிலும், இரண்டிலும் சநியும், செவ்வாயும் சேரும் வேளையிற் சேர்ந்தார்க்கரிட்ட முண்டாகும். சந்திரனுக்கு இரண்டிலும், பன்னிரண்டிலும், சநியும் அங்காரகனுஞ் சேர்ந்திருந்தபோது புணர்ந்தால் பெண்ணுக்கரிட்ட முண்டாகும், எ - று. (855)

எய்தியினைத்தமதிதனக்கு நான்கில்வியத்திலிரவிகுசன்
வைதிக்கூடிலிருக்கிலந்த மாதுக்கரிட்டம்புணர்நாளை
செய்திமதிக்கோரிருபுறமுந் தீயரிருக்கத்திருக்கரிட்டம்
உய்துமுதயத்தாண்கிரக மாணங்கிசையிலுறவாணும்.

(இ - ள்.) பலமற்ற அமரபக்ஷ சந்திரனுக்கு நான்கிலும், பன்னிரண்டிலும் சூரியனும், அங்காரகனுமிருக்கும் வேளையிற் சேர்ந்தாலும் அந்தப் பெண்ணுக் கரிட்டமாம், புணர்வேளையில் சந்திரனுக்கு இருபக்கத்திலும் பாவக் கிரகங்களிருந்தாலும் அப்பெண்ணுக் கரிட்டமாம்; உதயத்தில் ஆண் கிரகம் ஆணங்கிசையி லிருந்தால் அக்கிழவி ஆணாம், எ - று. (856)

ஆனமதியின்கலைக்குப்பெண்ணாகுங் கடிகையைந்துக்குள்
தானுங்குறையாதிடிற்சீவன் றன்னிக்குறையாதிருந்திடுமே
தேனின்மொழியாயிரவிகலை செல்லிற்செல்வனப்போது
ஊனங்கடிகைசென்றபடி யுயிருண்டென்பாருரவோரே.

(இ - ள்.) சந்திரகலைக்குரிய பெண்டிரை ஐந்தரைக்குள் கொஞ்சமுங் குறையாதிருந்தால் தீர்க்காயுசுண்டாகும். தேன்போலும் சொல்லாய்! சூரிய கலை சென்றால் எத்தனை கடிகைசென்றதோ அவ்வளவே ஆயுசுண்டென்று சொல்லுவர் பெரியோர், எ - று. (857)

உயரும்பவனனெதிராகி லுபயமாகுமிருபுறமும்
பெயரப்பாவர்சுழிபுகுதப் பெற்றதலியாம்பின்னுமவர்
உயரமளவேயுறுக்காணு முபயருதரமுறமலத்தின்
பெயரும்தகைமதனைப்போலிப் பிள்ளைக்குணமும்பெற்றிடுமே.

(இ - ள்.) காற்றினெதிராயின் குழவி யிரண்டாகும். இருபக்கத்திலும் கலை பெறவும் பாபக்கிரகங்கள் சுழியிலேறவும், பிறந்தபிள்ளை அலியாம், பின்னும் அவ்வவர்கள் உயரத்தளவே உருவுங்காணும். அன்றி இருவர் வயிற்றிலும் மலமுண்டாயின் மந்தகுணமுள்ள பிள்ளையே யுண்டாகும், எ - று.

# பெண்கள் ஜாதகம்.

வேறு.

திருவனையமடவார்க ளப்புவியின்மீது
செனித்தபலசாதகத்தின் திறமைகூறும்
கருவுதயகாலக்கினமுஞ் சசிலக்கினமுங்
கண்டுவடிவிடனிறமுங் கருதியிடவேண்டும்
மருவியசத்தமராசியா லாடவன்குணமும்
மகிழநற்குணமுந்தெரிந்து வழுத்தலுமேவேண்டும்
உருவுதயலக்கினத் திந்திருக்கிலழகுள்ளாள்
ஒரேழிற்சசியுறப் பார்த்தாவழகுள்ளானே.

(இ - ள்.) லட்சுமிபோலும் பெண்கள் உலகத்தில் பிறந்த பல சாதகத்தின் வகையாவதெப்படி யென்றால்:—சென்மலக்கினத்தையும், சந்திர லக்கினத்தையுங் கண்டு அவளுடைய அழகு, நிறமுதலியவற்றையும், சத்தம ராசியைக் கொண்டு அவள் குணத்தையும் அவள் நாயகன் குணத்தையும் சொல்ல வேண்டும். அப்படி சொல்லுங்கால் சென்மலக்கினத்தில் சந்திரனிருந்தால் அவள் அழகுள்ளவளும், ஏழிலிருந்தால் கணவன் அழகுள்ளவனுமாவான், எ- று. (859)

உள்ளபிறைலக்கினமுஞ் சன்மலக்கினமும்
உறுமிரட்டையாகில் வடிவுடையமயிலாகும்
தெள்ளிவம்மனையிரண்டு நல்லோர்கள்காணில்
திரளாகப்பணியணிவள் செகத்ததிருபியுமாம்
கொள்ளுமிருமனையொற்ற யாகிலாண்சொரூபி
கூறுநல்லோர்கண்டிடி னற்குணஞ்செல்வங்குலவும்
கள்ளமுறும்பாவரந்த ராசியிரண்டினிலே
கலந்துதிக்கிற்கண்டிடிற் பொல்லாப்பாவக்கன்னி.

(இ - ள்.) சந்திர லக்கினமும் சன்ம லக்கினமும் இரட்டைராசியானால் மயிலன்னாளும், அவ்வீடிரண்டையும் சுபர் பார்த்தால் மிகுந்த ஆபரணமணி

பவளும், அதிரூபவதியும், அவ்விரண்டும் ஒற்றையானால் ஆண் ரூபியும், நல்லோர் பார்த்தால் நற்குலம், செல்வமுடையவளும், அந்த ராசியிரண்டிலும் பாவிகள் கலந்திருந்தாலும் பார்த்தாலும் பாவியுமாவாள், எ - று. (860)

கன்னிகேள்சன்மத்திற் பிறைசுங்கனிருக்கில்
கழற்பெருமையுடன் சுகியாய்க் காசினியில்வாழ்வள்
உன்னுமுதயத்திலிருந்தும் புதனுமேகூடில்
உணர்வள்பலகலைபோகி யோதியநற்குணத்தாள்
இன்னஞ்சன்மந்தன்னில் புதனுஞ்சுக்கிரனும்
இருந்தக்கான்ஞானியதி ரூபியினிதுரைப்பள்
மின்னுமொருமூன்றகத்திற் சுபக்கோள்சணிற்கில்
வெகுதனநற்குணந்தயவு விரவிசுகமுள்ளாள்.

(இ - ள்.) பெண்ணே! சன்மத்தில் சந்திரனும் சுக்கிரனுமிருந்தால் பெருமையுடன் சுகவாழ்க்கையவளும், சந்திரனும், புதனும் சேர்ந்தால் பல கலை யுணர்ந்தவளும், புதனும் சுக்கிரனுமிருந்தால் ஞானியும், அதிக ரூபியும் இனிய வசனியும், மூன்றில் சுபரிருந்தால் தனமும் நற்குணமும், தயவு சுகமிவை யுள்ளவளுமாவாள், எ - று. (861)

உள்ளபலபாவரெட்டி லிருந்தக்கால்விதவை
வளதாவதென்றெனி லெட்டாமதிடன்
தெள்ளியவங்கிசக்கிறைவ னஷ்டகவர்க்கத்தில்
சேர்வருடமெத்தனையோ வத்தனையாண்டதனில்
மெள்ளவிதவையுமாவாள் ரண்டினினல்லோர்கள்
மேவிலவள்கணவனைத்தான் விட்டுமுன்போய்விடுவள்
கள்ளமுறாங்கேதனிடபங் கன்னியெனுமூன்றில்
கலைமதிமேவிற் புத்திராற்பங்காணும்.

(இ - ள்.) பல பாவிகள் எட்டிலிருந்தால் எட்டுக்குடையோன் அங்கிசக் கிறைவன் அட்டவர்க்கத்தில் எத்தனை வருடம் சேர்வனோ அத்தனை வருடத்தில் விதவையும், இரண்டில் சுபரிருந்தால் கணவனுக்குமுன் இருப்பவளும், விருச்சிகம், ரிஷபம், கன்னி இவ்விடங்களில் சந்திரனிருந்தால் புத்திராற்பமா யுடையவளுமாவாள், எ - று. (862)

காணியாஞ்சனியுமே பலத்திருக்கவே தான்
கணக்கன்மதிபிருகினைக் காரகத்திருக்க
ஆணியந்தராசியொற்றை யாகவுமேசென்மம்
அடுக்கமற்றோரொற்றைசனி லன்புடனேயிருக்க
நீணிலத்திற்பிறந்தாடன புருடனுக்கோராசாய்
நிருபதியாய்ச்சுவாமியாய் நேசமுடனிருப்பள்
பேணியசேதாரேழிற் றீக்கோளுமும்மூன்றிற்
பெருமையுள்ளோருறச் சந்நியாசிப்பெண்ணவள்.

(இ - ள்.) சநி பலத்திலிருந்து புதன், சுக்கிரன், இவர்கள் ஈனர்வீட்டி லிருக்க அது ஒற்றை ராசி சென்மமாகவும் மற்றவர்கள் அவள் புருடனுக்கு அரசியாயும் நிருபதியாயும் சுவாமியாயு மிருப்பவளும், ஏழில் பாவிகளும், ஒன்பதில் சுபரு மிருந்தால் சந்யாசிப் பெண்ணுமாவாள், எ - று. (863)

ஆகரெட்டைராசிதனிற் குருசெவ்வாய்புந்தி
அதிபலமாயிருந்தக்கா லவனியின்மேற்குலவு
வாருடனேபலகலைக ளறிந்திந்ந்றற்குணமும்
மாதருக்குண்முக்கியமா மயிலுமாகுவளே
சேகரமாய்பரிதிமதி கூடியேயிற்றிற்
றெரிந்துபலவிதத்தொழிலை செய்துசீவிப்பள்
மோகமுடன்கதிர்செவ்வாய் கூடியுமேயிற்றிற்
முழுப்பாவியாவளென்றே மொழிந்திடுவர்பலரும்.

(இ - ள்.) ரெட்டை ராசியில் குரு, அங்காரகன், புதன் இவர்கள் பலமாயிருந்தால் நற்குலம், பலகலை யறிவள், நற்குணமுடையவளும், பெண் களுக்குள் மயிலன்னளும், சூரிய சந்திரர்கள் கூடியிருந்தால் பலவித தொழில் செய்து ஜீவிப்பவளும், சூரியனும் அங்காரகனுஞ் சேர்ந்தால் முழுப்பாவியு மாவாளென்று சொல்லுவர் பெரியோர், எ - று. (864)

வேறு.

பலரும்பணிகதிர்புந்திகண் மருவும்பொழுதெழில்சேர்
பலர்சிந்தனையறிவாள்புகழ் பரவுஞ்சுகசரீரி
இலருங்கதிர்குருவொன்றிட லதிவஞ்சனையாள்முன்
அனுகுந்தொழிலறியாள்பிற கறிவாள்வருகருமம்
மலரம்புயவதிபன்பிரு குடன்வந்துறின்மற்போர்
வனையுங்கொடியவளாயுத வகையாநிதிதேடும்
சலமுண்டிடுகதிர்மந்தனை யணுகும்பொழுதுலகிற்
றதுபித்தனைசெம்போடு தராவிற்றமிருப்பாள்.

(இ - ள்.) சூரியன், புதன் இவர்களிருந்தால் பலர் சிந்தனை யறிபவ ளும், சாரீரியும், சூரியனும் குருவும் சேர்ந்தால் வஞ்சகியும், முன்பின் அறிப வளும், சூரியனும், சுக்கிரனுங் கூடினுல் சண்டைக்காரியும், ஆயுதத்தால் செல்வந் தேடுபவளும், சூரியனும், சநியும் சேர்ந்தால் பிள்ளை தராவிற்று ஜீவிப்பவளுமாவாள், எ - று. (865)

உய்யும்மெருதொடுகோவிலை யுதயம்மதில்மதியம்
உறையக்குசதிரையெத்திசை யுறுமங்கிசையாகில்
மையுந்தியகுவளைச்செழு மலர்போலிருகண்ணாள்
வகையுந்தொகையறிவாள்சில வழிசாலவுரைப்பாள்

எய்யுஞ்சனிதிரையைத் தசமெனுமங்கிசைபெனில்
இருவோர்கணவோர்தாமுள ரென்னும்மடவார்க்கே
மெய்யஞ்சொடிரண்டாமிரு வீட்டுக்கிறைவிருவர்
மிளர்கேந்திரலாபத்துற வேவாகனமுண்டாம்.

(இ - ள்.) ரிடபம், துலாம் இவற்றில் சந்திரனிருந்து அங்காரகனங்கிசையானால் அவன்வகை, தொகைகளையறிந்து சிலவழி செல்பவளும், சனி திரையப் பத்தாவதங்கிசையானால் இருபுருஷரை யுடையவளும், ஐந்து இரண்டாமிடங்களுக் குடையவர்கள் கேந்திரத்தி லிருந்தால் வாகன முடையவளு மாவாள், எ - று. (866)

மூண்டாகியவைந்தாமிறை யுச்சக்குருவாகி
உணர்வாலியவ்வன வுருவமுளனவன்
நண்டாகியமனையுற்றடி னிக்கிசைகணவன்
நரவாகனமுளனுருவ னவில்சுக்கிரனெனில்
மிண்டாகியவெள்ளிக்கிசை பல்லக்குளவேந்தன்
விடவுஞ்சனியாகிற்பரி வெண்சந்திரமுள்ளான்
கொண்டாடியகன்மாதிபன் குருசுக்கிரனெனில்
கூறைந்தினிலேநின்ற கொழுநன்சதசீவி.

(இ - ள்.) ஐந்துக்குடையோன் உச்சகுருவானால் யவ்வன புருடனும் அவன் கடகத்திலிருந்தால் அவளுக்கிசைந்த கணவனும், நரவாகனனும், சுக்கிரனானால் பல்லக்குள்ள அரசனும், சனியானால் சத்திரமுள்ளவனும், கர்மாதிபன் குரு, சுக்கிரர்களாய் ஐந்திலிருக்கச் சதசீவியானவனும் புருடனாவான், எ - று. (867)

சீவித்திடுகுருசுக்கிர னுமுடனேசேறில்
தெரிவைக்கிசைகணவன்பிணி செறிமெய்யினனவன்
பூவைக்குமூந்நாலிற்குறு புரிசுக்கிரன்மேவின்
போர்க்குவிடுமற்பாயசு புல்லாடன்பெய்யாவன்
பாவைக்குறுமைந்தாமிறை பரிவாயினியவராய்ப்
பண்பாகியவெண்பான்மனை பற்றப்பயிலொன்பான்
ஏவுற்றமனைக்காகிபி லாபத்துறினீன்றோன்
எய்தும்பொருளுண்டானவை யெல்லாமிவளுக்காம்.

(இ - ள்.) குரு, சுக்கிரர்கள் ஆறிலிருந்தால் அவளுக்கிசைந்த கணவனும் பிணியாளனும், பன்னிரண்டி லிருந்தால் அற்பாயுசுடையவனும், ஐந்துக்குடையோன் சுபனும் மித்துருவாயும், ஒன்பதிலிருக்கவும், ஒன்பதுக்குடையோன் லாபத்திலிருக்கவும் தந்தை செல்வமும் இவளுக்கேயுண்டாம், எ - று. (868)

ஆமெட்டதிபன்காரிபொ டணுகிப்பதினொன்றெட்
டமரிற்சதவயதாமவ ரத்தங்கதமாயின்

போமற்பமதாயாயுச பொன்றும்வியன்மன்னன்
புரிகேந்திரலாபத்திரி கோணப்பதிபுக்கி
தாமெத்தனைபோரோடுறி லாமத்தனைமனையாள்
தரிலற்றிடுவியமற்பதி சரமேலசலூரில்
நீமத்திரமாகிற்றம தாரத்தகமணமே
நிறைவாழுபயம் மென்னிலோ நீடும்மதிதாரம்.

(இ - ள்.) எட்டுக் குடையவனோடு சனி சேர்ந்து பதினொன்று, எட்டாமிடங்களிலிருந்தால் நூறுவயதும், அவர்கள் அஸ்தங்கதமானால் அற்பாயுசும், பன்னிரண்டுக் குடையோன் கேந்திரம், லாபம், திரிகோணம் இவைகளில் சேர்ந்து எத்தனை பேரோடிருக்கின்றாரோ அத்தனை மனைவியரும் பன்னிரண்டாம் வீடு சரமாய் அயலூரினாலும், ஸ்திரமானால் தமதூரிலும், உபயமானால் அதிதூரத்திலும் கலியாணம் நடக்கும், எ - று. (869)

வேறு.

தாரமுறும்பன்னிரண்டா மதுபன்றானும்
சுபக்கோளாய்ப்பகவானாய்ச் சுகவானாயின்
பாரமனைமேன்மெத்தை மாடங்கூடும்
பரிவுடனேயுண்டான வப்பதியினிலேவாழ்வள்
சேருமுதயந்திரமா யேழைந்தாம்வீட்டில்
சேர்ந்தவரெத்தனையுண் டத்தனைசேயுண்டாகும்
பாரறியச்சென்மம் வாமியமாகின்மூன்றாம்
பதியுற்றோரெத்தனை யப்பாலருளராகும்.

(இ - ள்.) பன்னிரண்டுக்குடையோன் சுபனாய் பல முள்ளவனாய் சுகனானால் மெத்தை மேடையாகிய வீட்டில் வாழ்வாள். ஜன்மம் ஸ்திர லக்கினமாய் ஏழு ஐந்தாம் வீடுகளிலிருக்கும் கிரகங்களத்தனைப் பிள்ளைகளுண்டாம் சென்மம் வாமியானால் மூன்றாம் வீட்டிலிருக்கும் கிரகங்களத்தனைப் பிள்ளைகளுண்டாம், எ - று. (870)

தாகமுடனேழைந்தா மூன்றதிபருடனே
சனிகூடிலோகுழவிதனக் கற்பவயதாம்
ஆகமகிழொன்பதா மதிபதியாறெட்டில்
அமரிற்சூத்திரர்தமக் குற்பவித்திடுசேயாகும்
ஏகும்வியத்தினிலிருக்கில் விப்பிரசேயாகும்
எழிலொன்பான்மனைக்கதிப னிரவியுடன்கூடில்
பாகவியமெட்டறைப் பற்றிலொன்பான்மனையோன்
பரிந்திருந்தவீட்டோனைப் படியிருக்கில்விதவை.

(இ - ள்.) ஏழு, ஐந்து, மூன்றுக்குடையவர்களோடு சனி சேர்ந்தால் குழந்தைக்கு அற்பவயதாம். ஒன்பதுக்குடையோன் ஆறு, எட்டாமிடங்களி

விருந்தால் சூத்திரர்க்குப் பிறந்த பிள்ளையாம். பன்னிரண்டிலிருந்தால் பிராமணப் பிள்ளையாம். எழில் ஒன்பதுக்குடையோன் சூரியனுடன்கூடி யிருந்தாலும், ஒன்பதுக்குடையோன் பன்னிரண்டு எட்டு ஆறுமிடங்களி லிருந்தாலும், அவனிருந்த வீட்டுக்குடையோன் அப்படியிருந்தாலும் விதவை யாவாள், எ - று. (871)

வையகமெண்ணொன்பதா மாதிபனேகல்லோர்
மனையிலுறமத்தியிலே விதவையாவள்
செய்யவொன்பனுதியுச்ச ஞகிப்பாவனுமாய்த்
தெரிவைசுமங்கலியாகித் தீர்க்கவயதுள்ளாள்
துய்யசன்மமொன்பதா மாதிபவிருவர்
தொடர்ந்துமாறுகிற்கிற் றோன்றலுடனிறப்பள்
வெய்யதோரெட்டினிற் சந்திரபாகவானிருக்கில்
விதவையெனப்பேர்படைத்து மேதினியிற்றிரிவள்.

(இ - ள்.) ஒன்பதுக்குடையோன் சுபர் வீட்டிலிருந்தால் மத்தியில் விதவையாவாள். அவன் உச்சனும், பாவியுமானல் சுமங்கிலியாய்த் தீர்க்க வயதாவாள். சன்மம், ஒன்பதுக்குடையோர்கள் மாறி மாறியிருந்தால் மகவுடனே மரிப்பாள். எட்டில் சந்திரனிருந்தால் விதவையாவாள், எ - று.

திருசெய்வாயிருமனையுஞ் சனனமதாயதனில்
திங்களுறவேசெவ்வாய் திரிங்கிசாங்கிசமாய்
பரிவில்லாப்பாவிசனி திரிங்கிசாங்கிசமாய்ச்
பாலரிலாளடிமைப் படுவளெனச்சொல்லும்
குருதிரிங்கிசமாகிற் பதிவிரதையாகும்
குளிமேதையங்கிசமா சாரமுளகோதை
விரிவெள்ளியங்கிசைக்கு மெய்யதிரூபியுமாய்
வெகுவயதாய்ப்பரபோகம் விரும்புமினியவளாம்.

(இ - ள்.) அங்காரகனுக்குரிய இருவீடுமே ஜென்மமாய் அதில் சந்திர னும், அங்காரகன் திரிங்கிசாங்கிசமும், சநியும் அப்படியேயானல் பிள்ளைக ளில்லாமல் அடிமையாவாள். குரு திரிங்கிசாங்கிசமானல் பதிவிரதையா வாள். புதனங்கிசமானல் ஆசாரமுடையளாவாள். சுக்கிரனங்கிசைக்கு அதி ரூபியும், வெகு வயதுள்ளவளும், பரபோகம் விரும்புபவளுமாவாள், எ - று.

இனியவெள்ளியிருமனையுஞ் ஜென்மமதாயதனில்
இருந்திருக்கச்செவ்வாயங் கிசமாயிற்கொடியாள்
சனியினங்கிசமாகிற் கணவனையும்விட்டே
சஞ்சலமாய்வேறொருவன் தனக்குப்பாரியுமாம்
நனிகுருவங்கிசமாகி னற்குணமேயுள்ளாள்
நாடுபுதனங்கிசத்தி னல்வகைஞானியுமாம்

கனிமொழியாள்சுக்கிய னங்கிசமாயிற்றன்சொல்
கதிக்கினியாளாயிருப்பள் காசினியோர்போற்ற.

(இ - ள்.) சுக்கிரனிருவீடும் சென்மமாய் அதில் சந்திரனிருக்க அங்காரக னங்கிசமானால் கொடியவளும், சனியங்கிசமானால் வேறு கணவனை யுடையவளும் குருவங்கிசமானால் நற்குணமுள்ளவளும், புதனங்கிசமானால் ஞானியும் சுக்கிரனங்கிசமானால் தன் சொல்லில் பிரதாபமுடையவளுமா யிருப்பாள், எ - று. (874)

போற்றுபுதனிருமனையுஞ் சன்மமதாயதனில்
புனிதமதியேயிருக்கப் பூசுதனங்கிசமாய்
ஏற்றமதால்வேலைசெய்வள் சனிதன்னங்கிசையாய்
இருப்பளலிவடிவாகக் குருவாகிலினியள்
நாற்றிசையென்னும் புதனங்கிசைதனக்கேஞானி
நாடுசுக்கிரனங்கிசைக்கு நற்குணமுமுள்ளாள்
தேற்றுகடகஞ்சென்மமாய்த் திங்களிருக்கத்
செவ்வாயங்கிசமாகிற் சேர்வள்பலருடனும்.

(இ - ள்.) புதனிருவீடும் சன்மமாய் அதில் சந்திரனிருக்க செவ்வாயங்கிசமானால் பெருமையான வேலை செய்பவளும், சனியங்கிசமானால் அலிவடிவினளும், குருவங்கிசமானால் இனியவளும் புதனங்கிசமானால் ஞானியும், சுக்கிரனங்கிசமானால் நற்குணமுள்ளவளும், கடகலக்கினமாய் அதில் சந்திரனிருந்து செவ்வாயங்கிசமானால் பலருடன் சேர்பவளுமாவாள், எ - று.

உடன்கடகஞ்சென்மமதா யதிலிருந்துமிருக்க
உயர்சனியங்கிசமாயி னுறுகணவன்றனையே
திடமுடனேகொல்வதற்குச் சினமாகியிருப்பள்
சேர்புதனங்கிசைக்கே சிற்பத்தொழில்கள்செய்வள்
அடல்குருவங்கிசையாயில் துணமினியள்வெள்ளி
அங்கிசையாற்சாதுவாகியுமேயிருப்பள்
மடமயிலேகேளங்கிசையென் றுரைக்கிலெல்லாம்
வருந்திரங்கிசாங்கிசையாய் மனக்கிற்கண்டுணர்வாய்.

(இ - ள்.) கடகஞ் சென்மமாய் அதில் சந்திரனிருக்க சனியங்கிசமானால் கணவனைக்கொல்ல எண்ணுபவளும், புதனங்கிசமானால் சிற்பத்தொழில் செய்பவளும், குருவங்கிசமானால் இனியவளும், சுக்கிரனங்கிசமானால் சாதுவுமாவாள். ஆயின் பெண்ணே! இவ்விடத்தில் அங்கிசமென்று சொன்னது திரசாங்கிசமென் றுணர்வாயாக, எ - று. (876)

உணர்சிங்கஞ்சன்மமதா யதிலிருந்துமிருக்க
உயர்செவ்வாயங்கிசையா யுரைக்கிலநாசாரி

பிணிசனிசுங்கன் னிருவரங்கிசமேயாயின்
பிறர்முகம்பார்ப்பாளரசன் பின்னுறமங்கிசைக்குத்
தனியரசர்க்கேத்தவி தானுகியிருப்பள்
தக்கபுதனங்கிசைக்கே சரீரவருத்தமதாய்ப்
பணிபலவுஞ்செய்தொருவர்க்கே யடிமையாகிப்
பாதவித்தேயிருப்பளெனப் பகர்வர்தக்கோரே.

(இ - ள்.) சிங்கம் சென்மமாய் அதில் சந்திரனிருக்க அங்காரகனங் கிசையானுல் அநாசாரமுடையவளும், சநி சுக்கிரர்களங்கிசமானுல் பிறர் முகம் பார்ப்பவளும், குருவங்கிசமானுல் அரசமகிஷியும், புதனங்கிசமானுல் ஒருவர்க் கடிமைப்பட்டு வருந்தி யிருப்பவளுமாவாளென்று பெரியோர் சொல்வர், எ - று. (877)

தக்கதனுமீனமவையே சன்மமாகிச்
சந்திரனப்பதியிலுறத் தான்குருசெவ்வாயின்
மிக்கதிரிங்கிசாங்கிசமேல் யாயிடினற்குணத்தாள்
வீறுசனியங்கிசமேல் வெகுகாமியாவள்
சுக்கிரனங்கிசையாகி லரோசிகமாம்புருடன்
றோளணைவள்சோமனுர் சுதனங்கிசைக்குப்
பக்குவமெய்ஞ்ஞானியாய்ச் சுபகர்மங்கள்
பண்ணுவளென்றேயுரைப்பர் பாரினிலுள்ளோரே.

(இ - ள்.) தனுசு மீனம் இவைகள் சன்மமாய் அதில் சந்திரனிருக்க குரு அங்காரகர்களின் திரிங்கிசாங்கிசமானுல் நற்குணமுள்ளவளும், சநியங் கிசமானுல் வெகுகாமியும், சுக்கிரனங்கிசமானுல் அரோசகியும், புருடனைச் சேர்பவளும், புதனங்கிசமானுல் மெய்ஞ்ஞானியும் சுபகாரியஞ் செய்பவளு மாவாளென்று பெரியோர் சொல்லுவர், எ - று. (878)

நல்லசனிவீடிரண்டும் லக்கினமாயதனில்
நாடுபுதன்றந்தையுறக் குசனுரங்கிசையேல்
அல்லலறுந்தாதியாங் காரியினங்கிசமாய்
அவனியிற்கீழ்ச்சாதியரோ டணுகிமணந்திடுவள்
வல்லகுருவங்கிசைக்கே பதிவிரதையாவள்
மகிழ்வெள்ளியங்கிசைக்கே மலடியுமேயாவள்
சொல்வரிசைப்புதனு ரங்கிசமானுலெப்போதும்
சுகமுடனேகணவனுடன் றேயுமனைப்பரிவாள்.

(இ - ள்.) சநி வீடிரண்டும் லக்கினமாய் அதில் சந்திரனிருக்க அங்கா ரக னங்கிசமானுல் தாதியும், சநியங்கிசமானுல் கீழ்ச்சாதி புருடனை மணம்

பயனும், குருவங்கிசமானல் பதிவிரதையும், சுக்கிரனங்கிசமானல் மலடியும், புதனங்கிசமானல் கணவனுடன் சுகமாய் வாழ்பவளுமாவாள், எ - று.

பரிவாகச்சனிபுதனேழாமிடத்தினிற்கப்
பயில்குருவுக்கேழ்வீடு பரவுசரமாயின்
திரிவனவள்பார்த்தாவெந் நாளும்வழிநடந்தே
திரராசிக்கூரைவிட்டுச் செல்லாமலிருப்பன்
வருராசியுபயமாய்ச் சிலநாளூரினிலும்
வழிநடையிற்சிலநாளும் வருந்தியுமேதிரிவன்
அரியேழாமிடத்திருக்கப் பாவருமேபார்க்கில்
அவண்மீதிற்கொழுநனுக்கன் பின்றியிகழ்ந்திடுவன்.

(இ - ள்.) சனியும் புதனும் எழிலும், குருவும் ஏழாம்வீடு சரமுமானல், அவள் கணவன் எந்நாளும் நடந்து திரிபவனுவான். ஸ்திரராசியானல் ஊரை விட்டகலான். உபயமானல் சிலநாள் ஊரிலும், சிலநாள் வழிநடையிலு மிருப்பான். சந்திரன் எழிலிருந்து பாவர் பார்வைபெற்றல் அவள் மேல் கணவனுசைப் படாமல் இகழ்வன், எ - று. (880)

இடுசெவ்வாய்கதிர்கூடி யெங்கேநின்றலும்
இவளும்வாலிபந்தன்னி லமங்கலேயேயாவள்
வடுவாகுஞ்சனிகதிரைக் கூடியேநிற்கில்
மன்னியதீக்கோள்பார்க்க வாலிபத்தினரைக்கும்
கொடுமையுள்ளோர்பலரேழா மிடத்திருக்கிற்பார்க்கில்
கொழுநன்வாலிபத்திறப்பன் கொடியநல்லோர்கூடில்
சடுதியின்மீண்டொருவனுக்கே பாரியுமேயாகித்
தானிருக்கவேண்டுமெனவே சாற்றல்வேண்டும்.

(இ - ள்.) அங்காரகனும் சூரியனுங்கூடி எங்கேயிருந்தாலும் இவளும் வாலிபத்திலேயே விதவையாவாள். சனியும் சூரியனுங்கூடி நின்றலும் பாவிகள் பார்த்தாலும் வாலிபத்தில் நரைக்கும். பல பாவிகள் சேர்ந்து எழிலிருந்தாலும் பார்த்தாலும் அவள் கணவன் வாலிபத்திலிறப்பான். சுபர் சேர்ந்தால் சீக்கிரம் பிரிந்து வேறொருவனுக்கு மனைவியாயிருப்பாளென்று சொல்லவேண்டும், எ - று. (881)

வேண்டிடும்பாவக்கிரகம் பலன்களுமேயின்றி
விரும்புமேழிடத்திருக்க வவளையுமேநல்லோர்
ஈண்டியேதான்பார்க்கில் லக்கனமேவேண்டா
திகழ்ந்தேதாட்டிவிட்டிடுவனென் றேசொல்வாம்
நீண்டகுசன்வெள்ளியுந் தன்னங்கிசத்தினிற்க
நிகழ்த்துமிவர்மாறகி நிற்கினுமவ்வீடு

பூண்டிடுமேழாமிடமேயாகி லவள் வேறோர்
புருடனையேயிச்சித்துப் போய்விடுவளென்றார்.

(இ - ள்.) பாவக்கிரகங்கள் பலனற்று ஏழிடத்திருக்க அவர்களைச் சுபர் பார்த்தால் அக்கணவன் வேண்டாமென்று ஓட்டிவிடுவன். அன்றி அங்காரகனும், சுக்கிரனும் தங்களுடைய அங்கிசத்திலிருக்கவும் இவர்கள் மாறுகவிருக்கவும் அவ்வீடு ஏழாகவும் அவள் வேறொருவனை விரும்பிப் போய்விடுவள், எ - று. (882)

என்றுமேழாமிடத்திற் சனிசெவ்வாய்சோமன்
இந்தமூவருங்கூடி யிருக்கிலவம்போவள்
வென்றசனிசெவ்வாயின் வீடேலக்கினமாய்
விரவுகுசனங்கிசமாகச் சென்மந்தன்னில்
துன்றுமிருளகற்றுமதி சுக்கிரனுமிருக்கச்
சூழ்ந்துதீக்கோள்பலருந் தொடர்ந்துமேநோக்க
நின்றிடிலோமலடியா மவளுமவடாயும்
நேமிதனிற்பலபேரை நேசித்தேசேர்வர்.

(இ - ள்.) ஏழில் சநி அங்காரகன் சந்திரன் இவர்கள் கூடியிருந்தால் சோரம் போவாள். சநி, அங்காரகர்களின்வீடே லக்கினமாய் அது அங்காரகனங்கிசமாக சென்மத்தில் சந்திரனும், சுக்கிரனுமிருந்து அவர்களைப் பாவிகள் பார்க்க நிற்கவிருந்தால் மலடியாவள். அன்றி, அவளுமவள்தாயும் பலரை நேசிப்பவர்களாவார்கள், எ - று. (883)

சேருதயலக்கினவங் கிசத்துக்கேழில்
செவ்வாயுஞ்சனியிருவர் சேர்ந்துமேநிற்க
நாரிபதந்தனிற்பிணிகொண் டிருந்துபரதவிப்பாள்
நாடுமிவர்நல்லோர்க ளங்கிசையினன்றும்
பாரியதொரிடைதொடைகள் சோபனமுள்ளவளாய்ப்
பர்த்தாவினிதயத்திற் பக்ஷமுறவிருப்பள்
காருதயந்தனக்கேழு சனிவீடதாகில்
தாலிதரிப்பவன்கிழவன் சற்குணமில்லானே.

(இ - ள்.) உதயலக்கின வங்கிசத்துக்கு ஏழில் அங்காரகனும், சநியும் கூடி யிருந்தால் அவள் கால்நோயால் வருந்துவாள். நல்லோர்களங்கிசமானால் நன்றும். இடைதொடைகள் அழகுள்ளவளாய் கணவனுக்குப் பிரியமுள்ளவளா யிருப்பள். லக்கினத்துக் கேழாம்வீடு சநிவீடானால் புருஷன் கிழவனும் நற்குண மில்லாதவனுமாவான், எ - று. (884)

சற்குணஞ்சேர்லக்கினத்துக் கேழாகும்ராசி
தனைசுதன்வீடாகியவன் றன்னுடையங்கிசையால்

சிற்குணமாயவள்கணவன் ஸ்திரீலோலனுவன்
 செறிபிருகுராசியா யங்கிசமேநேசரில்
நற்குணஞ்சேர்சீமானு யழகுடையனுவன்
 நாடுபுதனங்கிசையாய் ராசியுமேயாகில்
சொற்கலைஞானியுமாவன் சோமனுமேயாகில்
 தோகைபலருடன்கூடிச் சுகித்துவாழ்ந்திருப்பன்.

(இ - ள்.) லக்கினத்துக்கு ஏழாம்வீடு அங்காரகன்வீடாய் அவனங்கிசையானுல் அவள் கணவன் ஸ்திரீலோலனுவன், சுக்கிரனது ராசியாய் சுக்கிர னங்கிசமானுல் நற்குணனும், சீமானும், அழகுடையவனுமாவான். புதனங்கிசமாய் அந்த ராசியுமானுல் சாத்திர ஞானியாவான். சந்திரனங்கிசமானுல் அநேக பெண்களுடன் கூடிச் சுகிப்பவனுவான், எ - று. (885)

வேறு.

இந்துவசுரகுருவுடனே யேழிலிருக்கக்கிழப்புருடன்
வந்தேதிபொல்லாரேழிலுற விதவையாவள்வாலிபத்தில்
தொந்தேதகும்பந்தேண்மேடந் துலைநண்டுசுறுமீன்லக்கினமாய்
பந்திமதியம்புகர்கூடிப் பாவர்பார்க்கில்விபசாரி.

(இ - ள்.) சந்திரனும் சுக்கிரனும் எழிலிருந்தால் கிழப்புருடனுவன், பாவிகள் அதிலிருந்தால் வாலிபத்தில் விதவையாவள். கும்பம் மேடம் மகரம் மீனம் இவை லக்கினமாய் அவற்றில் சந்திரனும் சுக்கிரனும்கூடப் பாவிகள் பார்த்தால் விபசாரியாவாள், எ - று. (886)

சாரவெட்டிற்பாவர்களுந் தானுமிருக்கவிரண்டதனில்
ஏருஞ்சுபர்களிருந்திடவே யோங்கிமரணஞ்சுமங்கலியாய்
நேருமேழாமிடந்தானு நிறைந்தபுகரின்மனையாயின்
பாரோரறியவனுகூலப் பாவையாகுங்கண்டீரே.

(இ - ள்.) எட்டில் பாவிகளும், இரண்டில் சுபரிருந்தால் சுமங்கலியாய் மரிப்பாள். ஏழாம்வீடு சுக்கிரன் வீடாயின் பலருக்கும் அநுகூலம் விளைக்கும் பெண்ணுவள், எ - று. (887)

கண்டவேழாமனையுரைக்குங் கதிரோன்வீடாயிருந்திடவே
மிண்டேசொல்வாளவள்கணவன் வினவும்பரிதியதிலிருந்தால்
கொண்டோனோட்டிவிடுவனெனக் குறும்புதனின்மனையாயின்
பண்டேபுலவராவர்குரு பண்பாமனையிற்குணவானே.

(இ - ள்.) ஏழாம்வீடு சூரியன்வீடானுல் கணவனிடம் அகடவிகடம் பேசுவாள். அதில் சூரியனிருந்தால் கணவன் அவளை யோட்டி விடுவான். அது புதன் வீடானுல் புலவராவர். குருவீடாயின் நல்ல குணவானுவன், எ - று. (888)

குணமாமேழிற்பாவர்களுங் கூடிப்பலன்களற்றிடவே
மணமார்நோக்குமுற்றதனுன் மகிழ்நனழகில்லாதவனே
இனமாரேழேசரமனையாயிருக்க வதிபன்சரத்திலுறச்
சினமேசராங்கிசையாத்திரையாந் திரமேயாகிற்றீர்க்கமுளன்.

(இ - ள்.) ஏழில் பாவிகள் கூடில் பலன்களிலாதிருக்கப் புருஷன் அழகிலாதவனாவன். அது சரமாகவும் அதற்குடையோனும் சரத்திலிருக்கவும் அங்கிசையும் சரமானால் யாத்திரைபோவன். ஸ்திரமானால் தீர்க்கவயதுள்ளவனாவன், எ - று. (889)

தீர்த்கமேழிற்சனிசெவ்வாய் செறிந்தால்விதவைவாலிபத்தில்
நீர்த்தவேழிற்சுபர்பாவர்நின்றால் கமனம்பரபுருடன்
ஊர்த்தலக்கின்மிப்பாக முரைந்தாற்றிரங்கிசாதிபதி
ஏர்த்கபலன்கள்ஸ்திரீகளுக்கு மியல்பாயறிந்தேவுரைத்திடுமே.

(இ - ள்.) ஏழில் சநி அங்காரகர்க ளிருந்தால் பாலியத்தில் விதவையாவள். அதில் சுபரும் பாவிகளும் கலந்திருந்தால் பரபுருட கமனமுடையளாவள். ஊர்த்துவலக்கின முப்பாகமாய் திரங்கிசாதி பலன்காண ஸ்திரீகளுக்கு நன்மையை யறிந்து சொல்லுக, எ - று. (890)

உரைக்குங்கதிர்மதியங்கிசையா லோங்குந்தன்னில்விபசாரி
நிறைக்குஞ்செவ்வாய்தானுமி னீண்டலக்கினமவ்வீடாய்
மரிக்குமபிள்ளையுள்ளவெல்லாம் வாழும்புந்தியங்கிசையில்
நரைத்தக்கிழவியானுனு நாடுங்கமனம்பரபுருடன்.

(இ - ள்.) சூரிய சந்திரர்களங்கிசையானால் விபசாரியாவாள். அங்காரகனங்கிசமாய் லக்கினமும் அவ்வீடேயானால் பிள்ளைகளெல்லாம் இறக்கும். புதனங்கிசமானால் அவள் கிழவியானாலும் பரபுருடகமன முண்டாகும், எ - று. (891)

புருடக்கிரகங்குருவங்கிசையில் பிறந்தான்மகவுந்தனமுண்டாம்
குருடப்புகரினங்கிசையாற் றரும்போகந்தனமுளதே
வருடக்காரியங்கிசையில் வளருஞ்சனிவீடிலக்கினமாய்
திருடிக்கமனம்பரபுருடன் சிந்தைநோக்கவரும்பலமே.

(இ - ள்.) புருடக்கிரகங்கள் குருவங்கிசையிலிருக்கப் பிறந்தால் பிள்ளைகளும் தனமுமுண்டாம். சுக்கிரனங்கிசையால் போகமும் தனமுமுண்டு. சநியங்கிசையாலும் சநி வீடே லக்கினமாயுமிருந்தால் பரபுருட கமனமுண்டாம், எ - று. (892)

பலங்களுரைக்கும்ஸ்திரீகளுக்குப் பகருமெட்டாமிடம்விதவை
நலங்குமேழாமிடந்தன்னுற் சுகமுமகிழ்நன்பலமறியப்
பிலங்கொள்லக்கினமழகறிந்து பேசுமொன்பான்புத்திரரும்
நலங்களறிந்தேமிகவுரைப்பர் தாமுங்கணிதவல்லோரே.

(இ-ள்.) ஸ்திரீகளுக்குப் பலனுரைத்தால் எட்டாமிடத்தால் விதவையும், ஏழாமிடத்தால் சுகமும் கணவன் பலமும், லக்கினத்தால் அழகும், ஒன்பதால் புத்திரரும் ஆகிய இவைகளை ஸ்தலமறிந்து பலனைச்சொல்லுவர் பெரியோர், எ-று. (893)

வல்லமதியமிவள்சன்மம்பெருமே ஸ்திரீகள்மனையாயின்
நல்லசுபருநோக்கமுற நாடும்வடிவுமாபரணம்
சொல்லுமிவ்விடிரண்டொற்றை தோன்றப்புருடக்கிரகமிதை
ஒல்கிப்பார்க்கபுருடவடி வுற்றேயிருக்குமிவடனக்கே.

(இ-ள்.) சன்மத்தில் சந்திரனிருக்க அது ஸ்திரீ வீடாயின் சுபரும் பார்க்க நல்வடிவும் ஆபரணமு முண்டாகும். இவ்வீடுகள் ஒற்றையாயின் ஆண்கிரகங்கள் இதைப்பார்க்க இவள் புருடவடிவா யிருப்பாள், எ-று.

தனமார்குருசுக்கிரர்சென்மத்தன்னைச சந்திரலக்கினத்தை
முனமேநோக்கவாலிபத்தின் முற்றும்போகநன்மணமும்
தனிசூழ்மதியலக்கினத்தைச் சனிசெய்பாவர்நோக்கமுற
மனமேசலிக்கத்தலைநரைக்கு வாழ்க்கைப்படாளிம்மாநிலத்தே.

(இ-ள்.) குரு சுக்கிரர் சென்மலக்கினத்தையும், சந்திரலக்கினத்தையும் பார்க்க வாலிபத்தில் விவாகமாய் போகங்கூடும். சந்திரலக்கினத்தை சநி அங்காரகன் பாவிகள் இவர்கள் பார்க்கக் கிழவியாகியும் கலியாணமாகாமலே யிருப்பாள், எ-று. (895)

மானேசுங்கன்செவ்வாயின் மனையிலிருக்கமதிதானும்
ஊனச்சனியின்வீட்டிலுற வோங்கும்பாவர்மிகநோக்கித்
தானேயிவர்கள்லக்கினத்திற் றரித்தாலிவளும்விபசாரி
தேனேய்மொழியாய்சுரிகுழலின் சிந்தையறிந்துசொல்லுகவே.

(இ-ள்.) சுக்கிரன் அங்காரகன் வீட்டிலும், சந்திரன் சநி வீட்டிலுமிருக்கப் பாவிகள் பார்க்கவும் அன்றி இவர்கள் லக்கினத்தில் பிறந்தாலும் விபசாரி யாவாளென்றறிந்து பெண்ணே! நீ சொல்லுக, எ-று. (896)

சொல்லுநவாங்கிசைக்கேழ்மனையுந் தொடருஞ்செவ்வாய்மனையுளதாய்
வல்லசனியுமிருந்திடவே வருமேயோனிரோகமுடல
நல்லமதியுஞ்சுக்கிரனு நயக்கேகூடிலக்கினத்தில்
அல்லலறவேயிருந்ததனு லழகுஞ்சுகமுமுண்டாமே.

(இ-ள்.) நவாங்கிசைக் கேழாம்வீடு அங்காரகன் வீடாய் சநியிருந்தால் யோனிரோகமும் சந்திரனுஞ் சுக்கிரனுங்கூடி லக்கினத்திலிருந்தால் அழகுஞ்சுகமு முண்டாகும், எ-று. (897)

உண்டாமதியும்புதனிவரு முற்றசென்மத்திருந்திடவே
பண்டேவித்துவத்தன்மையுள்ளாளென்றும் பகர்வர்மறைவல்லோர்

சுண்டேபுதனுஞ்சுக்கிரனுங் காணும்லக்கினமுற்றதனுல்
கொண்டமகிழ்நனபிரியமெனக் கூறுஞ்சௌரியமுள்ளவனே.

(இ - ள்.) சந்திரனும் புதனும் சன்மத்தி லிருந்தால் பண்டிதையும் புதனுஞ் சுக்கிரனு மிருந்தால் கணவனிடம் பிரீதியும் சௌரியத்தவளு, மாவாள், எ - று. (898)

உள்ளசுபர்கண்மூன்றுமனை யுற்றசென்மமுதற்கொண்டு
மெள்ளவிருக்கத்தனலாபம் விரும்புஞ்சுகமுமழகுள்ளாள்
துள்ளும்பாவியெட்டிலுறச் சூழ்ந்தேவிதவையாயிருப்பள்
கள்ளவிழியினமுதவிஷங் கருதிநோக்குங்கண்ணோளே.

(இ - ள்.) சுபர்கள் சென்மவீடு முதல் மூன்று வீடுகளிலு மிருந்தால் தன லாபமும், அழகும், சுகமுமுள்ளவளும், பாவிகள் எட்டிலிருந்தால் விதவையாவாளென்று விஷம்போற் கண்ணுளே! நீ அறிக, எ - று.

கண்ணுமெட்டினதி தியுங் காணுமொருவனங்கிசத்தில்
நண்ணியிருக்கவவ்வீட்டோ னயந்தேயெட்டிலிருந்ததனுல்
எண்ணுஞ்சுமங்கலிமரணமென வினிதாங்கன்னிதேளிடபம்
ஒண்ணுஞ்சிங்கமிதின்மதியு முற்றாலற்பபுத்திரனே.

(இ - ள்.) எட்டுக்குடையோன் வேறொருவ னங்கிசத்திலிருந்து அவ்வீட்டோன் எட்டிலிருந்தால் சுமங்கலியாய் மரணமாவாள். கன்னி, விருச்சிகம், ரிஷபம், சிங்கம் இவைகளில் சந்திரனிருந்தால் அற்ப புத்திர ருண்டாவர், எ - று. (900)

பெண்கள் ஜாதகம்
முற்றிற்று.

---

# வியாதி யறியும்படி.

பூவையேலக்கினுதி புதன்குசன்மிதுனங்கன்னி
மேவிடிற்புந்திபார்க்கில் விளைக்குமாசனத்தில்ரோகம்
ஏவுறசசிக்குமூன்று மதிபனேடிரவிகூடில்
பாவைபோனேஞ்சையாகிப் பலர்முலைப்பாலுங்கொள்வன்.

(இ - ள்.) பெண்ணே! லக்கினுதிபதியும், புதனும், அங்காரகனும் மிதுனம் கன்னி இவ்விராசிகளிலிருந்து அவர்களைப் புதன் பார்க்கில் ஆசனத்தில் ரோகமுண்டாம். சந்திரனுக்கு மூன்றும் வீட்டுக்குடையவனேடுசூரியன் கூடினுல் நோஞ்சையா யிளைத்துப் பல பேர் முலைப்பாலையுங் குடிப்பவனுவான், எ - று. (901)

பத்துமூன்றதிபன்றன்னைப் பயில்சசிபார்க்கிற்கூடி
மெத்தியவேசுராசி மேவிடின்மேவுபத்தாம்
அத்தலத்திரைதிசைக்கு ளணுகுநீரிழிவிரோகம்
உத்தமர்சென்மமெட்டோ டெட்டுறிலற்பாயுள்தான்.

(இ - ள்.) பத்து மூன்றுமிடங்களின் அதிபர்களை சந்திரன் பார்த்தாலும், அன்றி அவர்களுடன் கூடி ஒரு ராசியி லிருந்தாலும், பத்தாம் வீட்டுக்குடையோன் திசைக்குள் நீரிழிவுண்டாகும். சுபக்கிரகங்கள் லக்கினம் எட்டாமிடம் அதற்கு எட்டாமிடம் இவைகளிருந்தால் அற்பாயுசுண்டாகும், எ - று. (902)

மூன்றொன்றுமதிபனோடு மொழிபுதன்குசனுங்கூடில்
தோன்றுநீர்விடுத்துநின்ற துவாரமுமிரண்டதாகும்
வேன்றிடுமிவர்களோடே சவுரியுமிசைந்துகூடில்
கான்றிடுசலத்துவாரங் கல்லடைப்பாகுமன்றே.

(இ - ள்.) மூன்று லக்கினம் இவ்விடங்களி னதிபர்களோடு புதனும் அங்காரகனும் கூடினால் நீர்த்துவாரம் இரண்டாகும், இவர்களோடு சனியுங் கூடினால் சலத்துவாரத்தில் கல்லடைப்புண்டாகும், எ - று. (903)

மறையவன்லக்கினாதி வாழ்கருங்கோளுமூன்றில்
உறையின்மூன்றதிபனோ டமறிலண்டவாதரோகம்
நறைகமழ்குசன்சன்மத்தி னண்ணிடிற்சனியும்பார்க்கில்
முறைமையாற்சிரம்பிளந்து மூந்துமந்நோயாலமாய்வன்.

(இ - ள்.) குரு லக்கினாதிபதியோடு ராகு இவர்கள் மூன்றுமிடத்திலிருந்தாலும், அன்றி மூன்றுமிடத்தானோடு கூடியிருந்தாலும் அண்டவாதரோக முண்டாகும். அங்காரகன் லக்கினத்திலிருக்க அவனை சனியும் பார்த்தால் தலை யுடைந்து அந்த நோயினாலேயே மரணமாவான், எ - று.

வேறு.

மாயுஞ்சசியுந்தீயோரை மருவிப்பாவர்மத்தியத்தில்
ஏயுமிருக்கச்சென்மாதிக் கில்லைப்பலமேலெழும்பிணியாம்
தீயபாவர்மத்தியத்திற் றிகழ்சென்மாதியுறிற்சென்மம்
தாயபாவர்சசிபலமற் றமர்ந்தாற்பிணியராவாரே.

(இ - ள்.) சந்திரன் பாபக் கிரகங்களுடன் சேர்ந்து அவர்கள் மத்தியிலிருக்கவும், சென்மாதிபதிக்கு பலமில்லையானால் நோயுண்டாகும். பாபக்கிரகங்களின் மத்தியில் சென்மாதிபதி யிருக்க, அன்றி சென்மத்தில் பாபக்கிரகங்களும் சந்திரனும் பலமற்றிருந்தாலும் நோயாளனாவான், எ-று

வாரெட்டாதிசத்துருநீ சத்திலிருக்கமகிழ்பாவத்
தோருஞ்சென்மத்துறச்சென்ம முடையோன்பாவருடன்கூடி
ஏர்சென்மாதிருளிகனுட னிருக்கவிந்துசனிகூடி.
சேருமாறில்வியத்தினிற்கச் சிறுவன்பிணியாலுறுமரணம்.

(இ - ள்.) எட்டுக்குடையவன் பகைதானத்திலும், நீசஸ்தானத்திலுமிருக்கவும், பாவக்கிரகங்கள் சென்மத்தி லிருக்கவும், சென்மாதிபதியும்

பாவக்கிரகங்களுடன் கூடிக் குளிகனுடனிருக்க சந்திரனும் சநியும் கூடி ஆறில் பன்னிரண்டிருக்கவும் அக்குழந்தை வியாதியால் மரணமாகும், எ-று.

மருவெட்டாதிசென்மத்தின் மற்றுமிரண்டோனேரெட்டில்
தருஞ்சென்மாதிசனிகூடச் சசியும்பாவருடன்கூட
உருவில்லாதரோகமதா மொன்றிலெட்டிவிரவியுடன்
பெருஞ்சென்மத்தாகியுறிற் பித்தரோகப்பிணிகுளிப்பன்.

(இ - ள்.) எட்டுக்குடையோன் சென்மத்திலும், இரண்டுக்குடையோன் எட்டிலுமிருந்து சென்மாதிபதியைச்சனியும், சந்திரன் பாவருடனும் கூடி வாதரோக முண்டாகும். லக்கினத்திலும் எட்டிலும் சூரியனேடு சென்மாதிபதியும் கலந்திருந்தால் பித்தரோக முடையவனுவான், எ - று.

குளிகன்கருங்கோள் சென்மத்திருந்தாலும்
குளிகன்றிரிகோணங்களினுமெட்டா மிடத்துங்குலவுகினும்
குளிகன்செவ்வாய்நான்காதியுடனே கூடியிருந்தாலும்
தெளியோர்விரையிற்சிற்றண்டத்திரண்டு திரண்டுபெருத்திடுமே.

(இ - ள்.) குளிகனும் ராகுவும் சென்மாதிபதியுடன்கூடி சென்மத்திலிருந்தாலும் குளிகன் திரிகோணத்திலும் எட்டாமிடத்திலு மிருந்தாலும், குளிகன் அங்காரகன் நான்காம் வீட்டோன் இவர்களுடனிருந்தாலும் ஒரு பக்கத்து விரை அண்டம்போற் பெருக்கும், எ - று. (908)

பெருக்குஞ்சன்மாதிபனுடனே பெரும்பாவக்கோளுடன்குசனும்
இருக்கப்பார்க்கக்கல்லதனுலடியும் பட்டுமிரணமதாம்
தரிக்கும்வைசூரிதன்னுலுஞ் சரீரந்தன்னில்வடுவுண்டாம்
முருக்கங்கொவ்வைக்கனியுமென முதிரச்சிவந்தவிதழ்மானே.

(இ - ள்.) சன்மாதிபனேடு பாபக்கிரகங்களும், அங்காரகனும் இருந்தாலும் பார்த்தாலும் கல்லடியால் விரணமுண்டாகும். அன்றிரவை சூரியனும் தேசமெல்லாம் வடுவுண்டாகுமென்றும் அறிவாய் பெண்ணே. எ-று.

மானேலக்கினுதிபன்ராகுமதி சேய்புதனேடைவர்களும்
தானேலக்கினமாறெட்டிற் றரிக்கிற்காணுவிடந்தன்னில்
ஈனமாயவெண்குட்ட மிரவிசேய்மால்சனமாதி
தேனுமாறிற் சேரிற்செங்குட்டமுமா.

(இ - ள்.) லக்கினுதிபதி ராகு, சந்திரன், அங்காரகன், புதன் இவ்வைவர்களும், லக்கினம் ஆறு எட்டாமிடங்களிலிருந்தால் காணுதவிடத்தில் வெண்குட்டமுண்டாகும். சூரியன் அங்காரகன் புதன் சென்மாதிபதி இவர்கள் சன்மத்திலும் எட்டாமிடத்திலுமிருக்கச் செங்குஷ்டமுண்டாகும், எ-று.

## வேறு.

குட்டமாஞ்சனிராகு சென்மாதியும்
எட்டிலாறிலிந்து பலன்கெடில்
செட்டதாகிய காலிற்செங்கருங்
குட்டமெய்துமெனக் கண்டுகொள்கவே.

(இ - ள்.) சனி, ராகு, சன்மாதிபதி இம்மூவரும் எட்டு ஆறுமிடங்களி லிருந்தும் பலன்கொடுமோனல் காலில்செழுத்த கருங்குஷ்டமுண்டாமெனக் கண்டு கொள்க, எ - று. (911)

---

## வியாதி தோன்றுமிடம்.

கொள்ளுமாங்கிரகஞ்சென்னி ரவிமதிகுள்ளிர்ந்ததிங்கள்
ஒள்ளியகண்டத்தங்காரக னிடக்கரத்திற்புந்தி
வள்ளலாம்வலக்கைமன்னன் மார்பிற்சுக்கிரன்முழந்தாள்
தெள்ளியசனிகால்பாம்பு செறிக்கதோரிடத்திற்குட்டம்.

(இ - ள்.) சூரியன் சந்திரனிவர்களால் தலையிலும் அங்காரகனுல் கண்டத்திலும், புதனுல் இடது கரத்திலும், குருவால் வலது கரத்திலும், சுக்கிரனுல் மார்பிலும், சனியால் முழங்காளிலும், ராகு கேதுக்களாற் பாதத்திலும் குட்ட முண்டாகும், எ - று. (912)

குட்டமாங்கருங்கோளுஞ் சென்மாதியும்
கிட்டிலக்கின மேழுறக்கெடிலா
எட்டினிற்சனியெய்த முன்சொன்னநோய்
மட்டிலாமல் வருமென்றுரைக்குமால்.

(இ - ள்.) ராகுவும், சென்மாதிபனும், சேர்ந்து லக்கினத்திலும் ஏழாமிடத்திலு மிருந்து எட்டாமிடத்திற் சனியிருக்க குட்டநோய் அதிகமாய் வருமென்று சொல்லுவர், எ - று. (913)

## வேறு.

மாலாயரசன்பாவருடன் மருவியிரண்டாறெட்டிலுறச்
சாலவவரைலக்கினத்தைச சாமர்நோக்கிற்சயரோகம்
சீலமுடனேதேய்ந்தபிறை சலராசியிற்பாவரைக்கூடிக்
காலாரெட்டிலொன்றிலுறக் கயரோகங்கள்காட்டிடுமே.

(இ - ள்.) குரு பாபக்கிரகங்களோடு சேர்ந்து இரண்டு ஆறு எட்டாமிடங்களி லிருக்க, அவரையாவது லக்கினத்தையாவது பாபக்கிரகங்கள் பார்க்க க்ஷயரோகமுண்டாகும். தேய்பிறைச் சந்திரன் சராசியில் பாபக்

கிரகங்களோடு கூடியிருந்தாலும் அப்படியே ஆறு, எட்டு முதலாமிடங்களி லிருந்தாலும் க்ஷயரோகமே யுண்டாகும், எ - று. (914)

காட்டுங்குசன்சன்மத்திலுறக் கணக்கன்பாவருடன்கூடிச்
சூட்டுமிரண்டெட்டினிலிருக்கச் சுரரோகங்கள்சன்மாதி
யிட்டும்பிருகினுடன்கூடி யெட்டிலிருக்கச்சென்மாதி
மீட்டுநீசசத்துருத்தானத்தி லிருக்கப்பிரமியநோய்.

(இ - ள்.) அங்காரகன் சன்மத்திலிருக்கப் புதன் பாபக்கிரகங்களுடன் சேர்ந்து இரண்டு எட்டாமிடங்களிலிருக்கச் சுரரோகமுண்டாகும், அன்றி சென்மாதிபதி சுக்கிரனுடன் கூடி எட்டாமிடத்தி லிருக்கவும், சன்மாதிபதி பகை வீட்டிலிருக்கவும் பிரமிய நோயுண்டாகும், எ - று. (915)

நோயுமாறெட்டாதிபனு நவலுங்கருங்கோளுடன்கூடிப்
பேயுமிரண்டாமிடத்திருக்கப் புதல்சன்மத்திற்குசனிருக்க
ஆயும்பாவர்சன்மத்தை யடர்ந்துநோக்கக்குருமுளைத்துச்
சேயும்வாதைப்படுமென்றுசொன்னார் செகத்திற்மறிந்தோரே.

(இ - ள்.) ஆறு, எட்டாமிடங்களுக் கதிபர்கள் ராகுவோடு கூடி இரண்டாமிடத்திலிருக்கவும், சன்மத்தில் அங்காரகனிருக்கவும், பாபக்கிரகங்களெல்லாம் சேர்ந்து சென்மத்தைப் பார்க்கவும், கொப்புளங்களுண்டாய் பாதையை யுண்டாக்குமென்று பெரியோர் சொன்னார், எ - று. (916)

வேறு.

தெரிந்துகாரியுந் தேய்பிறைபாவரோ
டிருந்துலக்கினத் தெய்தவாறுதிபன்
பொருந்திரண்டா மிடத்தினிற்புக்கிட
வருந்திடக்குன்ம ரோகமும்வந்திடும்.

(இ - ள்.) சநியும், தேய்பிறைச் சந்திரனும், பாபக்கிரகங்களோடு சேர்ந்து லக்கினத்தி லிருக்கவும், ஆறுக்குடையவன் இரண்டாமிடம் வரவும் குன்மமுண்டாகும், எ - று. (917)

வேறு.

வந்தவாறுமதிபதியு மருவுஞ்சன்மம்பத்தேழில்
ஐந்திலிருக்கச்சன்மமதி லங்காரகனுமமர்ந்திடவே
முந்திநல்லோர்பாராமற் கூடாதிருக்கமுதலோமம்
வந்தவாபிசாரத்தா லாகம்வருந்தும்பிணியாமே.

(இ - ள்.) ஆறுக்குடையோன் சன்மம், பத்து, ஏழு, ஐந்தாமிடங்களிலும் கர்மத்தில் அங்காரகனும் இருந்தாலும் அவரை சுபக்கிரகங்கள் பாராதும், கூடாதுமிருந்தாலும் ஓமாபிசாரத்தால் ரோகமுண்டாகும்,எ-று.

வேறு.

பிணிகொளாறுமதிபன் சன்மாதியும்
மணிகுசனுடன்கூடிச் சன்மத்தினில்
தணியுமூவர் தங்கியிருந்திடிற்
பிணியுமபிசாரத்தினாற் பீடையாம்.

(இ - ள்.) ஆறுக்குடையோன் சன்மாதிபதி அங்காரகன் இவர்களுடன் கூடச் சன்மத்தி லிருந்தால் அபிசாரத்தால் பிணியும் பீடையுமுண்டாகும், எ - று. (919)

வேறு.

பீடுயரும்லக்கினத்திற் கருங்கோண்மூன்றிடத்தில்
பெருகுசனியுறவண்டம பெருக்குமவன்றனக்கே
கூடியசன்மத்திரவி குசனுமேகூடிற்
குன்மவலியாம்பார்க்கிற் கொடுமூச்சுண்டாகும்
நீடுசன்மாதிபன்செவ்வா யிருவருமேகூட
நின்றிடுதீயோர்காணி னிறைந்துமிகக்கூடில்
கேடுபடுங்கல்லெறியுந் தலையதனிற்பட்டுக்
கிளறுநோயாற்றுன்பமே கிடைக்குந்தானே.

(இ - ள்.) லக்கினத்தில் ராகுவும், மூன்றாமிடத்தில் சனியுமிருக்க அண்டம் பெருக்கும். அன்றி சன்மத்தில் சூரியனும் அங்காரகனும் கூடியிருந்தால் குன்மவலியாம் பார்த்தால் பெருமூச்சுண்டாகும். சென்மாதிபதியும் அங்காரகனுமே கூடி அவர்களைப் பாபக்கிரகங்கள் கண்டாலும் கூடினும் கல்லெறிப்பும் தலையில் ஒரு வகையான கிளறு நோயுமுண்டாம், எ - று.

தானமெனும்லக்கினத்திற் சனிராகுநிற்கில்
சருவிப்பேய்பிடித்துச் சஞ்சலமுற்றிடுவன்
ஆனவமாவாசிதனிற் குசன்சன்மத்திருக்க
அவனைத்தீயோர்காணி லணிவயிற்றில்வலியாம்
காணிலமெண்சனி சன்மத்திருக்கச்சூரியனும்
ராகுவுங்கூடிப்பார்க்க நலன்செறியாயுதத்தால்
ஊனமுறும்வயிற்றி லதனாலேநோயதாகும்
உலகினிலிப்படிப் பிணிகண்டுரைபகருவீரே.

(ஞ - ள்.) லக்கினத்தில் சனியும், ராகுவுமிருந்தால் பேய்க்கோட்படுவான். அமாவாசையில் அங்காரகன் சன்மத்திருக்கவும் அவனைப் பாபக்கிரகங்கள் கண்டால் வயிற்றுவலியுண்டாம் சனி சன்மத்திருக்க அவனைச் சூரியனும், ராகுவும் கூடிப்பார்க்க ஆயுதத்தால் நோயும் அதனால் வயிற்றிலும் நோயுண்டாகும், எ - று. (921)

உரைபகருங்கணுய் கருநாகந்தானும்
உரைவிட்டாதிபதி யாறுக்குமதிபதியும்
பெருமையுடனிவர்மூவர் தாமுங்கூடிடிலே
பேசியரெண்டாமதிபதி மனைதிசையில்
மருவியவன்றான்புகிக்கு மந்தநாடன்னில்
வலியதந்தரோகமே வருமெனவும்பகர்வர்
பரிவுடனேபுதன்கூடில் ரோகசரீரனுமாம்
பரிந்துநல்லோர்விழி நோக்கப்பரிகாரமாமே.

(இ - ள்.) கறுத்த கண்ணுய்! ராகு இருந்த வீட்டுக்குடையோனும் ஆறுக்குடையோனும், ராகு இம்மூவரும் சேர்ந்தால் இரண்டுக்குடையோன் திசையில் சனிக்கிழமையில் புசிக்கும்வேளையில் தந்தரோகம் வருமென்று சொல்லுவர். அவர்களோடு புதனும்கூடினுல் ரோகசரீரனுவான். அவர்களை சுபர் பார்க்க அந்நோய் பரிகாரமாகும், எ - று. (922)

பரிதிசனியுடன்கூடி யட்டமத்திலிருக்கப்
பரவுமகோதாநோயால் பரதவித்தேயிடுவர்
கருதியசன்மமுமே நாலாமிடங்கடம்மில்
கதிரோனுங்குசனேனுங் கவ்வியுமேசிற்கத்
திருவுறைபத்தாமிடத்திற் சவுரியுமேசிற்கத்
திகழ்தனபாவந்தன்னிற் றேய்ந்தபிறையிருக்கத்
துரிதசிறுபாம்பர் திரிகோணந்திலிருக்கச்
சூலைநோயாலாவிசோரு மெனச்சொல்லும்.

(இ - ள்.) சூரியன் சநியுடன்கூடி அட்டமத்திலிருந்தால் மகோதர நோயாலும், ஜன்மம் நாலாமிடங்களில் சூரியனுவது அங்காரகனுவது இருந் தாலும், பத்தாமிடத்தில் சநியிருந்தாலும், தனஸ்தானத்திலும், பாவஸ்தா னத்திலும், தேய்பிறைச்சந்திரன் இருந்தாலும், ராகு கேதுக்கள் திரிகோ ணத்தி லிருந்தாலும், சூலைநோயால் சாவானென்று சொல்லுவர், எ - று.

வேறு.

தந்தலக்கினத் ததிபதிசனியுமே
இந்தவாறெட்டுப் பன்னிரண்டிசைந்திடில்
அந்தவிரணஞ் சிரசினிலாமெனச்
சிந்தைமாதவர் தெளிந்துகண்டாரே.

(இ - ள்.) லக்கினுதிபதியும், சநியும், ஆறு, எட்டு, பன்னிரண்டாமிடங் களில் இருந்தால் சிரசில் விரணமுண்டாகுமென்று சொல்லுவர், எ - று.

வேறு.

கண்டசன்மலக்கினமுங் காணுமைந்தொன்பதனில்
கொண்டபரிதிமதியிருக்கக் கூறுநாலேழீரைந்தில்
திரண்டாயரசன்சனியிருக்கச் செவ்வாய்மந்தன்வாரமதில்
அண்டிதசனிக்கேதனுன்மத்தனுகுஞ் சடவாணுவானே.

(இ - ள்.) ஜென்மலக்கினத்திலும், ஐந்து, ஒன்பதாமிடங்களிலும், சூரியனும், சந்திரனும், நாலு, பத்தாமிடங்களில் குருவும் சனியும் இருந்தால் செவ்வாய்க்கிழமை, சனிக்கிழமைகளில் பிறந்தோனுனல் உன்மத்தனும் வஞ்சகனுமாவான்; எ - று. (925)

ஆவார்சன்மலக்கினத்துக் கணுருக்கேந்திரஞ்சோமனுறில்
பாவாய்கிரகநோக்கமிலாப் பசாசயோகமுன்மத்தம்
பூவேசன்மம்கேந்திரத்தில் புகருமதியுந்தானிருக்க
நாவோர்பாவரைந்தெட்டி னண்ணிமுயல்கண்டமுமாம்.

(இ - ள்.) ஜென்மலக்கினத்துக் கேந்திரத்தில் சந்திரன் இருந்து அவனை வேறு கிரகங்கள் பாராதிருந்தால் பசாசயோகமாம். உன்மத்த முண்டாகும் அன்றி ஜென்மத்திலும் கேந்திரத்திலும் சுக்கிரனும், சந்திரனும், ஐந்து, எட்டாமிடங்களில் பாவிகளுமிருந்தால் முயலகண்டரோக முண்டாகும், எ - று. (926)

கண்டவேனைபரிவேடங்காணுஞ் சன்மந்தானுறவே
சென்டாயெட்டிவிருமூன்றிற் செவ்வாயென்றுதானிருக்கக்
கொண்டசன்மந்திரிகோணங் குருவுமில்லாதேயிருந்தால்
பண்டேகுமரகண்டமெனப் பகர்வாய்வலிப்புந்தான்வருமே.

(இ - ள்.) பரிவேடம் ஜென்மத்திலும் எட்டு ஆறுமிடங்களில் அங்காரகனு மிருந்து, ஜென்மம் திரிகோணங்களில் குருவில்லாதிருந்தால் குமர கண்ட வலி உண்டாகும், எ - று. (927)

வருமேசன்மஞ்சனிசெவ்வாய் வந்திரண்டிற்பன்னிரண்டில்
புரவேயெட்டிலக்கினதிபதி புகவேகேந்திரத்தினியோர்கள்
உரவோரில்லாதானிருக்க வுண்டாமீனரோகமுடன்
தருமேசீரவாதியக்ந்தானும் தணிகொள்சாற்றிடுமே.

(இ - ள்.) ஜென்மத்தில் சனியும் செவ்வாயும் இரண்டு பன்னிரண்டாமிடங்களில் பொருந்தவும், எட்டில் லக்கினதிபதியும் இருந்து கேந்திரத்தில் சுபக்கிரகங்களும் மித்துருக்கிரகங்களும் இல்லாமலிருந்தால் ஈனரோகமுண்டாகுமென்று சொல்லுவர் பெரியோர், எ - று. (928)

சாற்றுந்தனமீனமகரமுடன் றுனுமிந்தராசியினும்
தேற்றியங்கிசையாறுலு நின்றேபாவர்தானிருக்கப்

பொற்றமதனுவிலக்கினுதி புகவொருட்ட ரோகமென
ஆற்றிவினியகாவலர்களறிந்த்த புரைப்பர்பெருமையினுல்.

(இ - ள்.) தனுசு, மீனம், மகரம், எந்தராசிகளாலும் இவற்றின் அங்கிசமாலும் அவற்றுள் பாவிகளிருந்து அதில் லக்கினுதிபதியுமிருந்தால் தட்டரோக முண்டாகுமென்று பெரியோர் சொல்லுவர், எ - று. (929)

பெருமைநன் முவிருச்சிகமும் பெறுமேடமிடபமுடன்
ஒருமைராசியாலுறு முற்றவங்கிசத்தன்னாலும்
வருமேபாவருடன்கூடிவந்து சன்மத்தாதிபனும்
புரவேசிற்கிற் குட்டமெனப் புகல்வாரறிவுக்கினியோரே.

(இ - ள்.) விருச்சிகம், மேஷம், ரிஷபம், எந்த ராசிகளாலும் அவற்றின் அங்கிசங்களாலும் ஜென்மாதிபதி பாவிகளுடன் கூடி அவைகளில் வந்திருந்தாலும், குட்டமென்றே சொல்லுவர் பெரியோர், எ - று. (930)

இனியசோமன்கிராணத்தி லியன்றபாவர்மிகவுறவே
தனியேயொன்பதெட்டுவியஞ் சசிதானிருக்கிலுன்மத்தம்
குனியேகலகப்பிரியனெனக் கொள்வன்கோபிதானுதி
நனியேசோம்பித்திரிவனிவனுறுங் குழற்சீர்வல்லியரே.

(இ - ள்.) மணமிகக் கூந்தலையுடையாய்! சந்திரகிரணத்தில் பாவிகளும் ஒன்பது, எட்டு, பன்னிரண்டாமிடங்களில் சந்திரனுமிருந்தால் உன்மத்தம் கலகப்பிரீதி கோபம், சோம்பல் இவைகளைக் கொண்டுள்ளவன் ஆவான், எ - று. (931)

வல்லமிரண்டிற்சனிராகு வந்தேயிருக்கவிரண்டாதி
சொலலும்பலன்களற்றிருக்கச் சூழும்வீட்டிற்குடையோனும்
நல்லவிரண்டைநோக்கமுற நாடுக்காரிகருநாகம்
வெல்லுந்திசையிலிரண்டாதி மேவத்தொந்தரோகமீந்த.

(இ - ள்.) கொடியன்னாய்! இரண்டில் சநியும் ராகுவும்வர இரண்டுக்குடையோன் துர்ப்பலனாக அவனிருக்கும் வீட்டிற்குடையோன் இரண்டைப்பார்க்க விருந்தால் சநி, இராகு திசைகளில் இரண்டுக்குடையோன் புத்தியந்தரங்களில் தந்தரோகம் உண்டாகும், எ - று. (932)

---

## நாய்கடியறிய.

### வேறு.

தக்கரண்டாமிடத்திற் சனியுடன்
ஒக்கபாவர்கள் கூடியுறைந்திட
மிக்கபாவர் வெகுண்டதைப்பார்த்திட
குக்கல்கண்டு பயந்துகுலைவனே.

(இ - ள்.) இரண்டாமிடத்தில் சநியுடன் பாவிகள் சேர்ந்திருந்தாலும் பாவிகள் பார்த்தாலும் குக்கலைக்கண்டு பயந்து குலைப்பான், எ - று. (933)

நேயரெண்டா மிடத்திநீசனும்
தாயிரெண்டா மதிபனுஞ்சூழ்ந்திட
ஆயபாவாணுகிட நோக்கிட
நாயுமேகடித்திட்டிட நாணுவார்.

(இ - ள்.) இரண்டாமிடத்தில் நீசக்கிரகமும் இரண்டுக் குடையோனும் பாவிகளோடு சேர்ந்திருந்தால் அவர்களுடைய பார்வையைப் பெற்றிருந்தாலும், நாய்கடித்து வருந்துவான், எ - று. (934)

---

## பாம்புக்கடியறிய.

### வேறு.

எட்டாமிடத்திற்கொடியவிடராகு விருக்கினியரெண்டில்
துட்டர்கூட நோக்குமுதற் றொடர்க்துவிஷதிருஷ்டங்களுமாம்
மாட்டார்சன்மாதிபனுறுமன்னன் கருங்கோளிர்மூவர்
பட்டாபெருவீட்டினிலிருக்கப் பாம்பாலரிட்டம்படுவாரே.

(இ - ள்.) எட்டில் ராகும், இரண்டில் துஷ்டகிரகங்களு மிருந்து பார்த்தால் விஷதிருஷ்டங்கள் உண்டாகும் அன்றி ஜென்மாதிபன், ஆறுக் குடையோன், ராகு இவர், மூவரும் ஒரு வீட்டிற் கூடியிருந்தால் பாம்பால் அரிஷ்டமுண்டாகும், எ- று. (935)

### வேறு.

பார்செறிசசி கரும்பாம்புக்கூடியே
ஏற்செறியேழினி லெட்டிலுற்றிடில்
சீர்செறிதமனியன் ஜென்மமேனினும்
கார்செறிவிஷத்தினு லெட்டிற்கண்டமே.

(இ - ள்.) சந்திரனும், ராகுவும்கூடி ஏழு, எட்டாமிடங்களிலும், குரு சென்மத்திலும் இருந்தால் எட்டாவது வயதில் விஷத்தால் கண்டமுண்டாகும், எ - று. (936)

---

## துர்க்குணமறிய.

### வேறு.

இந்துடன்பாவக்கிரகங் கூடிநான்கில்
இருந்தாக்காற்றிருடனு மிரண்டாம்வீட்டில்

வெந்துகுளிகன் செவ்வாய்பாவர்கூடில்
வழுத்துவன்பொய் தூர்ப்பலவான் மனைவிவிபசாரி
விந்தரவிந்தவாவினன் தூர்வியாபாரன்
தூர்ப்போசனங்கடனைச் சுவையுடனேபுசிப்பன்
சந்தமுநாய்போலக் கூப்புவதல்லாற்
சற்றுமிதம்பேசரியான் சினன்றோகிதானே.

(இ - ள்.) சந்திரனோடு பாவக்கிரகங்கள் கூடி நான்கிலிருந்தால் திருடனுவன். இரண்டில் குளிகன், அங்காரகன், பாவிகள் இவர்கள் கூடில் பொய் பேசுதல், தூர்ப்பலம் விபசாரமனைவி, தூர்வியாபாரம், தூர்போசனம், நாய்போலக் கதறுதல், உபசாரம் பேசாமை, ரோகம் முதலியவைகளையுடையவனுவான், எ - று. (937)

---

## நெய்யிற்கையிடுகை.

### வேறு.

ஏருஞ்சன்மமிரண்டேழி லெட்டிலிரவிதானிருக்கப்
பாருஞ்செவ்வாயல்லாமன் மற்றையோர்கள்பார்த்தருள
நேருங்கனலிற்காய்ந்திட்ட நெய்யிற்கையும்வெந்துவிடுஞ்
சேரும்வைசூரிதன்னுலும் வாதையென்றுசெப்பிடுமே.

(இ - ள்.) ஜென்மம், இரண்டு, ஏழு, எட்டாமிடங்களில் சூரியனிருக்க அவனை அங்காரகனெழிந்த கிரகங்கள்பார்க்க நெருப்பிலிட்டநெய்யில் கை வெந்துவிடும், அன்றி வைசூரியாலும் வருத்தப்படவருமென்றும் சொல்லுவர், எ - று. (938)

குளிகன்செவ்வாய்த்தன்னுடனே கூடிச்சன்மம்விபமாறில்
அளியநண்டிற்றானிருக்க வாதித்தன்கண்பார்வையுறில்
தெளிவென்றுலகோர்பழிசுமத்தத் தெய்வச்சபையிற்செந்தழலில்
ஒளியிற்காய்ந்தநெய்யிற்கையிடுவன் றப்பாதுண்மையிதே.

(இ - ள்.) குளிகன், அங்காரகன், இவர்கள்கூடி சென்மம் பன்னிரண்டு, ஆறுமிடங்களிலும், கற்கடகத்திலுமிருக்க அவர்களை சூரியன் பார்த்தால் சத்தியத்தின்பொருட்டு சபையோர் மத்தியில் சுகநெய்யிற் கையிடுவன், எ - று. (939)

---

## ஆயுதவிரணமறிய.

### வேறு.

எயதேய்ப்பிறை யேழுறவாறிடத்
தாயனும்வியத் துற்றிடப்பாவர்கள்
ஆயபேர்களடர்ந்து கண்ணேனுக்குறக்
காயம்பட்டொரு கைகுண்டாய்விடும்.

(இ - ள்.) தேய்பிறைச சந்திரன் எழிலும், ஆறுக்குடையோன் பன்னிரண்டிலும் பாவிகள் பார்வையைப் பெற்றிருந்தால் காயம்பட்டு ஒருகை துண்டாய் விடும், எ - று. (940)

ஏற்றலக்கின மெட்டதியாயினும்
கூற்றன்றனக் குளிகனைக்கூடியே
போற்றப்பன்னிரண் டாறெட்டிற்புக்கியல்
தோற்றங்கா லிருதுண்டமதாகுமே.

(இ - ள்.) லக்கினாதிபதியும் எட்டுக்குடையோனும் குளிகனைச்சேர்ந்து பன்னிரண்டு, ஆறு, எட்டாமிடங்களிலிருந்தால் கால் இருதுண்டாகும், எ - று. (941)

எட்டினுதிசெவ்வா யிருவோர்களும்
முட்டவாறின் முந்நான்கினுறைந்திடில்
துட்டர்கையிற் சுரிகையினாலுமே
வெட்டவாவி விடுவது திண்ணமே.

(இ - ள்.) எட்டுக்குடையோனும் அங்காரகனும் ஆறு, பன்னிரண்டாமிடங்களில் இருந்தால் துஷ்டர் வாளினால் வெட்ட உயிர்விடுவது திண்ணம், எ - று. (942)

திண்ணியசன்மத்திற்சனிபாம்பு தெரிவையிற்சுக்கிரன்றானும்
நண்ணவும்மமாவாசையிற் பிறந்தோனடந்தகால்கரந்தறிபடுமே
எண்ணியகரும்பாம்பிரவியும்பிறையு மிசைந்தவொருவீட்டினிலிருக்க
விண்ணினிலாவிசெல்லவேசென்னி தேறுபட்டவனியில்விழுமே.

(இ - ள்.) ஜென்மத்தில் சநியும், ராகுகேதுக்களும், கன்னியில் சுக்கிரனும் இருக்க அமாவாசையில் பிறந்தோன் கைகால்கள் தடுபடுவான், அன்றி ராகுவும், சூரியனும், சந்திரனும், ஒரு வீட்டில் சேர்ந்திருந்தால் தலையறுந்து சாவான், எ - று. (943)

விழுமியகதிர்சன்மத்துறச்செவ்வாய் மேவியட்டமத்தினிலிருக்க
வழுவுறத்தேய்ந்தமதிகரும்பாம்பு மருவியோர்காலினிலிருக்கச்
செழுமையிற்பிறந்தோனுடலிருபிளவாஞ் சென்மதீதிற்சனியிருக்கத்
தழுவியசசிபாம்பிரவியுங்கூடிற் சரீரமேபிளந்திருகூறும்.

(இ - ள்.) சூரியன் ஜென்மத்திலும் அங்காரகன் எட்டிலும், தேய்பிறைச் சந்திரனும் ராகுவும், ஒரேகாலிற் சேர்ந்து ஓரிடத்திலிருக்கவும் பிறந்தோன் சரீரம் இருபிளவாகும் அன்றி ஜென்மத்தில் சநியும் சந்திரன் ராகு கேது சூரியன் இவர்களும் கூடியிருந்தாலும் சரீரம்பிளந்து இரு கூறுகும், எ - று. (944)

வேறு.

கூறும்லக்கினத்தாதி யெட்டாதியும்
வீறுகாலமிருத்துவுங் கூடிடில்
சீறுமேகத்திரளிடி வீழ்ந்துடல்
கீறதாகநிலத்திடை மாள்வரே.

(இ - ள்.) லக்கினாதிபதியும் எட்டுக்குடையோனும் காலமிருத்துவுங் கூடினால் இடிவிழுந்து சாவான், எ - று. (945)

வேறு.

கூறியவிரண்டிலரசனுமிருக்கக் குலவுமூம்மூன்றினிற்சனியும்
ஆறுபன்னிரண்டி லிரவியுமிருக்க வறுபடுங்கரங்குசனரசன்
சீறுமெட்டேழிலுறவுமீரைந்திற் சேய்புதன்சனியிராகுறவே
வீறுடன்கால்கடுனிபடுமென்றே விளம்பினர்வேதவேதியரே.

(இ - ள்.) இரண்டில் குருவும், மூன்றில் சநியும், ஆறு பன்னிரண்டா மிடங்களில் சூரியனுமிருந்தால் கையறுபடும், அங்காரகனும், குருவும் எட்டு ஏழாமிடங்களிலும், பத்தில் அங்காரகன், புதன், சநி, ராகு இவர்களும் இருந்தால் கால்கள் துனிபடுமென்று சொல்லுவர் பெரியோர், எ - று.

வேதனுங்குருசுக்கிரனு மோராறின் மேவிடக்காரியும்பார்க்க
ஓதியகருங்கோளிலக்கினத்திருக்க விற்றசன்மாதியாருறவும்
தீதறுசிரம்போமுடலினிற்காரி செறியமற்றோர்மனைதன்னில்
ஆதவன்கருங்கோள்சந்திரனிருக்க வணியுதரம்இருபிளவாம்.

(இ - ள்.) குருவும், சுக்கிரனும், ஆறிலிருக்க சநிபார்க்கவும் லக்கினத்தில் ராகுவும், ஆறில் சென்மாதிபதியும் இருந்தால் தலையற்றுப்போகும். சரீரஸ்தானத்தில் சநியும், மற்ற வீடுகளில் சூரியன் ராகு சந்திரன் இவர்களும் இருந்தால் வயிறு இருபிளவாம், எ - று. (947)

வேறு.

பிளவுபட்டுடும் பேருடல்ரண்டினில்
வளமைசூரியன் மற்றும்வியக்குசன்
இளவதேய்பிறை யெட்டிலுறச்சனி
களவதாய்ப்பிறை தன்னையேகண்டிடில்.

(இ - ள்.) இரண்டில் சூரியனும், பன்னிரண்டில் அங்காரகனும், எட்டில் தேய்பிறைச் சந்திரனும் இருக்க அச் சந்திரனை சநி பார்த்தால் சரீரம் பிளவுபடும், எ - று. (948)

கண்டதேய்பிறை சூரியன்காரிசேய்
மண்டிநால்வரு நாலெட்டில்வந்துறப்
பண்டுநல்லவர் பாராதிடிற்கைகால்
துண்டமாகித் துயரின்மடிந்திடும்.

(இ - ள்.) தேய்பிறைச் சந்திரன், சூரியன், சநி, அங்காரகன் இவர்கள் நான்கு, எட்டாமிடங்களில் வரச் சுபர் பாராதிருந்தால் கைகால் துண்டமாய் வருந்தி இறக்கும், எ - று. (949)

மடிந்ததேய்பிறை வந்துசன்மத்துறப்
படிந்தவெட்டினிற் பானுகுசன்சனி
தொடர்ந்துமூவருங் கூடியுறத்துரை
கடிந்துவாளினாற் கண்ட துண்டஞ்செய்வன்.

(இ - ள்.) தேய்பிறைச்சந்திரன் சன்மத்திலும், சூரியன், அங்காரகன், சநி இவர்கள் சேர்ந்து எட்டிலுமிருந்தால் வாளினால் கண்டதுண்டஞ் செய்வான், எ - று. (950)

---

## இலங்கைராசிமானசங்கை.

### விழுச்சாயை சரபிண்டத் துருவம்.

### வேறு.

மீனமேடங்கன்னிதுலாம் விரும்புமிருநூற்றெழுபத்துடன்
ஆனவெட்டேவிடைசிங்கமாகுங் குடங்தேள்முந்நூறில்
ஈனமொன்றுகண்டுதனுவெழில்சேர் மிதுனமகரமிவைக்
கானமுந்நூற்றிருபான்மூன்றாகு மிலங்கைவினாடியென்ப.

(இ - ள்.) மீனம், மேஷம், கன்னி, துலாம் இவற்றின் விநாடி இருநூற்றெழுபத்தெட்டு, ரிஷபம், சிங்கம், கும்பம், விருச்சிகம் இவற்றிற்கு முந்நூற்றொன்றும், கடகம், தநுசு, மிதுனம், மகரம் இவற்றிற்கு முந்நூற்றிருபத்து மூன்றும் என்று இலங்கைக்கு விநாடிசொல்வர், எ - று. (951)

என்னுந்தேசவிழுச்சாயை யியன்றதுரைகயொருநூறும்
மன்னுமையேழாங்காஞ்சிக்கறைவர் நூறேடைம்பானேழ்
பன்னுஞ்சோழநாட்டிற்கே பகர்வாய்நூற்றுநாற்பானான்
கென்னபெங்களூர்தனக்கே யிருநூற்றிருபதெனச்செப்பே.

(இ - ள்.) தேசவிழுச்சாயையானது மதுரைக்கு நூற்றுமுப்பத்தைந்தும், காஞ்சிக்கு நூற்றைம்பத்தேழும், சோழநாட்டிற்கு நூற்றுநாற்பத்து நான்கும், பெங்களூருக்கு இருநூற்றுப்பத்துமாமென்று சொல்லுக, எ - று.

செப்பியதோர்சரபிண்ட முதலிருபானுன்கும்
திகழிரண்டோதிபனுறுஞ் செறிமூன்றினுக்கோ
ஒப்புறுமாறுடனையே வீசமாகும்
உயர்ந்துருவமிவைமூன்றை விழுச்சாயைதன்னால்
தப்பாமற்றனித்தனியே பெருக்கிவருந்தொகையை
சார்மேடம்விடைமிதுனந் தன்னின்முறையாக
இப்புவியோர்புகழிலங்கை காசிதனிற்களைய
இயதேசராசி யளவாகுமெனலாமே.

(இ - ள்.) சொல்லியமுதல் சரபிண்டம் இருபத்துநான்கும், இரண்டாவது பதினாறும், மூன்றாவது ஆறையே வீசமுமாகும் இதுவே துருவம் இவை மூன்றையும் விழுச்சாயையால் தனித்தனியே பெருக்கிவருந் தொகையை மேடம், ரிஷபம், மிதுனங்களில் முறையாக இலங்கைராசியிற் களைந்தால் தேசராசியளவாய் என்று சொல்லலாம். எ - று. (953)

வேறு.

ஆனபெண்ணு மரியுடனண்டிலும்
யானகோலுந் தேளுந்தனுவும்முறை
ஆனவாறுடன் கூட்டிடுமின்குடம்
மானுஞ்சொன்ன முறைப்படுவாங்கியே.

(இ - ள்.) கன்னி, சிங்கம், கடகம், துலாம், விரிச்சிகம், தநுசு இவைகளின் கூட மீனம் கும்பம் இவைகளையும் கூட்டி சொன்னவரிசைப்படி வாங்குக, எ - று. (954)

---

## சீவனம்.

வேறு.

அம்புவியோர்செய்தொழிலாற் சீவனமுண்டாகும்
அவையன்றிலக்கினஞ்சோமனுதவன் மும்மனைக்கும்
தம்பமொடுபத்தாம்வீட் டாங்கிசையிலிருந்தோர்
தம்மிலதிகப்பலமாய்த் தரித்தவராங்கிசைதான்
வெம்புரவித்தேரோ னங்கிசத்தனையன்பலமே
மேவிபுய்வைக்கோலும் விற்றுணவேகொள்வன்
செம்பொன்விற்பது ராசிப்பலனூலுக்கோரை
திக்குபலமுண்டாயிற் செய்வன்வயித்தியங்கள்.

(இ - ள்.) உலகத்தோர் ஜீவனத்தை யுரைக்குங்கால், லக்கினம், சந்திரன் சூரியன் வீடு இவர்களுக்குப் பத்தாம்வீட்டங்கிசையி லிருந்தோர்களை

விடப் பலத்தாரங்கிசை சூரியனங்கிசையாய்ப் பலப்பட்டிருந்தால் பில்லும், வைக்கோலும் விற்றுண்பவனும், ராசிபலமானாலும் செம்பொன் விற்பவனும், ஓரைதிக்கு பலமானால் வயித்தியஞ் செய்பவனுமாவான், எ - று. ()

களங்கமில்லாவெண்டிங்க ளங்கிசமேயாக்கி
கமழுமிலக்கினத்திரேகையைக் காணமுதலாகில்
விளங்கியநற்பயிர்த்தொழிலே புரிந்துணவுகொள்வன்
மேவியரெண்டாதிரேகையைக் காணமேயாயின்
வளங்கெழுசிந்துவிற் சம்பான்கப்பல்சோங்கோட்டி
வாழ்வன்மூன்றாந்திரேகையைக் காணமுமேயாயின்
இளம்பிடியோதிமந்தனையும் பழித்தநடைமடவார்
இணக்கத்தாற்சீவன முண்டென்பரினியோரே.

(இ - ள்.) சந்திராங்கிசமாய் லக்கினமுதற் றிரிகோணமாயின் பயிர்த்தொழில் செய்பவனும், இரண்டாவதானால் கப்பலோட்டியும், மூன்றாவதானால் பெண்கள் சிநேகத்தால் சீவனமுமுண்டென்பர் பெரியோர், எ - று.

இனியசெவ்வாயங்கிசத்தி லக்கினமேபலமாய்
இரும்புவெள்ளிசெம்பொனும் விற்றிரும்பனவாங்கிசைதான்
நனியபலமாயிடி லக்கினியிலுறுதொழிலே
நடத்திடுவன்றிரிங்கிசாங்கிசம் பலமேயாயின்
கனியுறுமாயுதம்பிடித்துச் சேவிப்பனேழாம்
தானமதுபலனாயிற் றக்கதொழில்செய்வன்
கனிமொழியாயிரவிமுதல் சனிமட்டுமெண்ணிக்
கண்டதுசத்தாங்கிச மேழாம்பலன்கண்டீரே.

(இ - ள்.) அங்காரகனங்கிசத்து லக்கினம் பலகாயிருந்தால் இரும்பு வெள்ளி, பொன் இவைகள் விற்பவனும், நவாங்கிசம் பலமாயிருந்தால் அக்கினித் தொழிலால் ஜீவிப்பவனும், திரிங்கிசாங்கிசம் பலமாயிருந்தால் ஆயுதம் பிடித்துச் சேவிப்பவனும், எழாம் ஸ்தான பலமாயிருந்தால் குலாஸ்ரமத்தொழில் செய்பவனுமாவானென்றும் பெண்ணே! சூரியன்முதல் சனிவரைக்கும் எண்ணிக் கண்டது சத்தமாங்கிசம் ஆகையால் எழாம் பலனைக் காண்பீர், எ - று. (957)

கண்டபுதனங்கிசத்தின்பல னவாங்கிசையே
காவியங்கற்பன் றுவாதசாங்கிசமேயாயின்
மிண்டுசிற்பசாஸ்திரமேயறிந் துணவுகொள்வன்
மேவுந்திரிசாங்கிசமே யெழுதுந்தொழிலான்
கொண்டவறுபதிலோரை யங்கிசமேற்கணிதங்
குறித்திடுவன்புதனிருந்த ராசிதனைப்பிரித்து.

மண்டியறுபதுபங்குசெய்யு லொற்றைப்பங்கில்
வந்துபுதனிருக்கிலனவே வழுத்தல்வேண்டும்.

(இ - ள்.) புதனங்கிச நவாங்கிசைகளின் பலன் காவியங் கற்பவனுவான் துவாதசாங்கிசமாஞல் சிற்பசாஸ்திரத்துவ ஜீவனம் செய்வான். திரிசாங்கிசமாஞல் எழுதும் தொழிலால் ஜீவிப்பன் அறுபதில் ஓரையங்கிசமாஞல் கணிதத்தால் சீவிப்பன் புதனிருந்த ராசியைப்பார்த்து அறுபதுபங்காக்கி அதில் ஒற்றையில் புதனிருந்தாலே முன்சொன்ன கணிதசீவனமாம், எ - று. (958)

வேண்டுகுருவங்கிசத்தின் முதற்றிரையக்காணம்
விப்பிரரார்பலனிரண்டாந் திரையக்கணந்தான்
பூண்டதேவதைகளிஞற் பலன்மூன்ருங்காணம்
புண்ணியத்தாற்பயனுகுஞ் சுக்கிரனங்கிசைக்குத்
தாண்டுசுரபிகளெருமைபெறு மூன்ருங்காணம்
தக்கவெள்ளிவிற்ப னடுத்திரையைக்காணந்தான்
மீண்டுமுதற்றிரையக் காணம்மதுவேயாயின்
விரவுநவரத்தினமே வியாபாரஞ்செய்வன்.

(இ - ள்.) குருவங்கிசத்தில் முதல் திரேக்காணத்திற்குப் பிராமணராலும் இரண்டாந் திரேக்காணத்திற்குத் தேவதைகளாலும் மூன்ருந் திரேக்காணத்திற்குப் புண்ணியத்தாலும் சுக்கிரனங்கிசத்தில் மூன்ருந்திரேக்காண மாஞல் பசு எருமை முதலியவற்ருலும் இரண்டாந் திரேக்காணத்திற்கு வெள்ளிவிற்றும் முதல் திரேக்காணத்திற்கு நவரத்தின வியாபாரஞ் செய்தும் பிழைப்பான், எ - று. (959)

செய்யசனியங்கிசத்திற் பலன்சிறுவன்ருனுஞ்
செப்பியமித்திராங்கிசமேற் பிரயாசதொழிலாம்
வெய்யபாவக்கிரகம் லக்கினத்தைப்பார்க்கில்
மெத்தவேசுமைசுமந்து மெய்க்குணருகொள்வன்
ஐயவிலக்கினந்தன்னை நீசருங்கண்டக்கால்
ஆகாதகாரியங்க ளவத்தொழிலேசெய்வன்
துய்யசனியங்கிசத்திற் சுபக்கிரகங்கள்கூடில்
துலங்கிடவேதான் சிற்பத்தொழில்செய்துவாழ்வன்.

(இ - ள்.) சநியங்கிசத்தின் பலஞவது அதுமித்திராங்கிசமாஞல் கஷ்டவேலையாலும் பாவிகள் லக்கினத்தைப் பார்த்தால் சுமைசுமந்தும் லக்கினத்தை நீசர்கண்டால் ஆகாத அவத்தொழில் செய்தும் சநியங்கிசத்தில் சுபக்கிரகங்கள் கூடிஞல் சிற்பத்தொழில் செய்தும் சீவிப்பான், எ - று.

வேறு.

ஆதவன் சசிலக்கின மிவைமூன்றுங் கதிபரிலதிகமாம் பலத்தோன், அடைந்த வங்கிசந்தான் பரிதியங்கிசமாயம் பொன்னும் வைக்கலும்விற்று, நீதியாய் வயித்தியங்களுஞ் செய்வன் நீள்பிறை யங்கிசமாயின், நீரினிற்சோக்கு நடத்தியேயுய்வன் நிலமகனங்கிசை யாயின், ஓதுமக்கினியாலிரும்பு பொன் வெள்ளி யுருக்கலாயுதங்களினும், உணவுகொண்டிடுவன் புந்தியங்கிசமேலுரைத்திடு கணிதமுங் கணக்கும், நீதமுஞ்சிற்பத்தொழில்கள் காவியத்தாற்சீவனம் வேந்தனங்கிசைக்குத், தெய்வமாமறையோர் பெரியவராலுஞ் சீவனம் புரிந்திருப்பான்.

(இ - ள்.) சூரியன் சந்திரன் லக்கினம் இம்மூன்றுக்கதிபரில் அதிகபலமுடையோனடைந்த வங்கிசம் சூரியனங்கிசமானால் பொன் வைக்கல் விற்றும் வயித்தியஞ்செய்தும் சீவிப்பன் சந்திர னங்கிசமானால் நீர்சோக்கு செய்து பிழைப்பன். அங்காரகன் அங்கிசமானால் அக்கினியாலும், இரும்பு பொன் வெள்ளி எழுகு இந்த ஆயுதங்களாலும் சீவிப்பன். புதனங்கிசமானால் கணிதம் கணக்கு சிற்பத்தொழில் காவியமிவைகளால் சீவிப்பான். குரு வங்கிசைக்கு பெரியோர்களாலும் அந்தணர்களாலும் சீவிப்பான், எ - று. (961)

வேறு.

இருந்தசுக்கிர னங்கிசமேறிலோ
தெரிந்தரத்தினம் வெள்ளியாற்சீவனம்
பொருந்தசுன்னங் கிசம்புகவீனமாய்
வருந்திடுந்தொழிற் செய்வன்வளமிலான்.

(இ - ள்.) சுக்கிரனங்கிசமானால் ரத்தினம் வெள்ளி விற்றுச் சீவிப்பான், சநியங்கிசமானால் ஈனமாய் வருந்துந் தொழில் செய்து ஜீவிப்பான், எ - று.

---

# கேந்திரபலன்

வேறு.

திக்குப்பலமாவது சேய்கதிபத்தில்
தொக்கக்குருபுந்தி யிலக்கினத்தாற்றுல்
தக்கச்சனியேழினிற் சூழ்ந்திடின்வல்லன்
வக்கிரன்சனிநான்கில் வலியெனச்சொல்லே.

(இ - ள்.) கேந்திரபலமாவது அங்காரகனும் சூரியனும் பத்திலும் குருவும் புதனும் இலக்கினத்திலும், சநி ஏழிலும் சுக்கிரனும் சந்திரனும் நாலிலு மிருந்தால் வலிவென்று சொல்லுக, எ - று. (963)

வேறு.

பத்தாகுமதிபதியை யிரவிசசிபார்க்க
பரிந்திவர்மூவருங்கூடப் பத்தாம்வீட்டதிபன்
மெத்தரவிசசி வீட்டினுலுமிருக்க
வெற்றிமுடியரசர்பக்கன் மேவியவர்தம்மைப்
புத்தியுடனேசேர்ந்து சீவனமேசெய்வன்
புகழ்பத்தாமதிபன் பூபுத்திரனைக்கூடில்
சித்தமாய்ச்சேனுபதிக டமைச்சேர்ந்தே
சீவனம்பண்ணுவனென்றே தெரிந்துரைசெய்வாரே.

(இ - ள்.) பத்துக்குடையோனை சூரியனும் சந்திரனும் பார்த்தாலும், மூவருங் கூடினுலும், பத்துக்குடையோன் சூரியசந்திரர் வீட்டிலிருந்தாலும், அரசரிடம் சேர்ந்து ஜீவிப்பன். பத்துக்குடையோன் அங்காரகனைச் சேர்ந்தால் சேனுதிபதிகளைச் சேர்ந்து ஜீவிப்பானென்று சொல்லுவர் பெரியோர், எ - று. (964)

செய்யபத்ததிபன்புதனைச் சேர்ந்துமேநிற்கில்
ஸ்திரீகளினுற்புத்திரியாற் றெரிகணிதத்தாலும்
துய்யகுருவுடன்கூடிற் புராணசாத்திரத்தால்
சுருதியாலமைச்சராரியர் துரைகடம்மால்
வையமெலாம்புகழ் பாக்கியத்தோடுசீவிப்பன்
மகிழுஞ்சுக்கிரனுடனே வந்துமிகக்கூடில்
பையமறையோரமைச்சர் பரிகரியமெருமை
படைத்தும்ரத்தினக்கிரயம் பண்ணியுஞ்சீவிப்பன்.

(இ - ள்.) பத்துக்குடையோன் புதனுடன் சேர்ந்திருந்தால் ஸ்திரீகளாலும், புத்திரியாலும், கணிதத்தாலும், குருவுடன் சேர்ந்தால் புராணசாஸ்திர சுருதிகளாலும், அமைச்சர் ஆசிரியர் துரைகளாலும் உலகத்தார் புகழும்படி பாக்கியத்துடனிருந்தும், சுக்கிரனுடன் சேர்ந்தால் பிராமணர் அமைச்சர் இவராலும், குதிரை யானை எருமையாதிகளாலும் ரத்தினம் விற்றும் ஜீவிப்பான், எ - று. (965)

சீவியமார்ச்சனியும் பத்ததிபனும்கூடில்
சிலம்பங்கள்படிப்பித்துந் திருடியுமேதிரிந்து
பாவங்கடமையொருவர் தமக்குப்போதிப்பித்தும்
படர்வனத்திலிங்கிசைகள் பண்ணிமரம்வெட்டப்
பூவுலகிற்சீவிப்பன் பத்ததிசெவ்வாய்
பொருபாம்புமூவர்களுமே பொருந்திநிற்கில்
தாவுகளில்விஷப் பிரயோகங்களையேசெய்துந்
தரணியிலேதிருடியுமே சீவிப்பன்றானே.

(இ - ள்.) சனியும் பத்துக்குடையோனுஞ் சேர்ந்தால் சிலம்பங்கள் படிப்பித்தும், திருடியும், பாவங்களைப் போதித்தும், வனத்திலிம்சைசெய்து மரம் வெட்டியும் பத்துக்குடையோன் அங்காரகன் ராகு இவர்கள் கூடினால் விஷப்பிரயோகஞ்செய்தும், திருடியும் ஜீவிப்பான், எ - று. (966)

தானமாமைந்தாகு மதிபதிபாவியுமாய்த்
தக்கவாளெயிற்றரவந் தன்னையுமேகூடி
ஈனமிலாதிருமூன்றிலே யிருந்தக்காலும்
எண்ணியமூன்றுமதிபன் பாவியுமேயாகி
ஊனமுறும்பாம்புடனே கூடியெங்கேயேனும்
உற்றாலுமவன்மனையா ளுடனேமற்றோரை
மானமறக்கூட்டியவன் கைப்பொருளைவாங்கி
வயிறுவளர்ப்பானெனவே வழுத்துவர்மாதவரே.

(இ - ள்.) ஐந்தாம் வீட்டோன் பாபியாய் கேதுவைக்கூடி ஆறிலிருந்தாலும், மூன்றுக்குடையோன் பாவியாய் ராகுவுடன்கூடி எங்கே யிருந்தாலும் மனைவியை மற்றோர்க்குக் கூட்டிக்கொடுத்து வயிறு வளர்ப்பான், எ - று.

வழுத்தியசுக்கிரன் செவ்வாய்சனிபுந்தியரசன்
மருவவினத்தொழிலாய் வயிறுவளர்த்திடுவான்
செழித்தபிறைசனிவெள்ளி செவ்வாய்புந்தியுமே
செறியுமரம்வெட்டிவிற்றே சீவனமேசெய்வன்
இழுத்தமுடன்வெள்ளி குருசெவ்வாய்கூடில்
ஏழைதுக்கமுளன் கணக்கெழுதியுஞ்சீவிப்பன்
பழித்தசனிகுருவெள்ளி பதங்கன்செவ்வாயும்
பரிந்துறின்மந்திரவித்தை பண்ணியினிதிருப்பன்.

(இ - ள்.) சுக்கிரன், அங்காரகன், சனி, புதன், குரு இவர்கள் சேர்ந்தால் ஈனத்தொழில் செய்து வயிறு வளர்ப்பன், சந்திரன், சனி, சுக்கிரன், அங்காரகன், புதன் இவர்கள் கூடினால் மரம் வெட்டி விற்று சீவிப்பன். சுக்கிரன், குரு, அங்காரகன் இவர்கள் கூடினால் துக்கமுள்ளவனும் கணக்கெழுதிச் சீவிப்பவனுமாவான். சனி, குரு, சுக்கிரன், ராகு, அங்காரகன் இவர்கள் கூடினால் மந்திரவித்தை செய்து சீவிப்பான், எ - று. (968)

இருந்ததனலாப பாக்கியாதிகுசனானால்
இயல்சேவகவிருத்தி யினியவர்க்குச்செய்வான்
செரிந்தபுதனாயின் வித்தைவாகனங்களுண்டு
சொல்லரியகுருவாயின் சகலபாக்கியவான்

அருந்தவஞ்சேர்பிருகாயின் புவிலாபமேவும்
அரவுசனியாயிற் சோரங்களினேதியினால்
வருந்துமீனத்தொழிலே புரிந்துசீவிப்பன்
மதிவதனத்திலகநுதல் வளர்வஞ்சியரே.

(இ - ள்.) தனம் லாபம் பாக்கியம் இவைகட்குடையோன் அங்காரகனால் சேவகவிர்த்தி செய்வான். புதனால் வித்தை வாகன முதலியவையுள்ளவனுவன். குருவானுல் சகல பாக்கியவானுவான். சுக்கிரனால் பூலாபமுடையனுவான். ராகு, சனி இவர்களானுல் சோரத்தினுல் ஈனத்தொழில் புரிந்து சீவிப்பான் என்று சந்திரமுக முதலிய வுறுப்புகளை யுடையவளே நீ அறிக, எ - று. (969)

வேறு.

வஞ்சியேசனி செவ்வாய்மதிமகன்
செஞ்சொல்சுக்கிரன் தேவர்கடன்குரு
அஞ்சுபேருமொன்றாக வமர்ந்திடில்
துஞ்சுமீனத்தொழில் செய்துவாழ்வனே.

(இ - ள்.) பெண்ணே! சனி, அங்காரகன், புதன், சுக்கிரன், குரு இவர்கள் ஒன்றாய்ச் சேர்ந்தால் ஈனத்தொழில் செய்து வாழ்வன், எ - று.

வேறு

கண்டசன்மங்கேந்திரத்திற் காணுமைந்தெட்டொன்பதனில்
பண்டேசோமன்புகரிருக்கப் பாரிதனைகுமறுபுருடன்
கொண்டேவிடுத்துச்சீவனமாய்க் கொள்வன்கூறும்புவிதியார்க்குக்
கெண்டைவிழியின்பார்வையினுற் கிட்டியணையுந்தனத்தாளே.

(இ - ள்.) சன்மம் கேந்திரம் ஐந்து எட்டு ஒன்பதாமிடங்களில் சந்திரனும் சுக்கிரனுமிருந்தால் தன் மனைவிக்கு வேறு புருஷர்களைத் தேடிவிட்டு அதனால் சீவிப்பானென்று கெண்டைபோலும் பார்வையினுல் அணையும் ஸ்தனமுடையாளே! நீ அறிவாயாக, எ - று. (971)

---

## துர்ப்பிட்சகாலம்.

வேறு.

மந்தனுமிருபாதி யரசனிந்நால்வர் மாறியேகூடிடில்வினையும் மழைபயிரற்பமிவரிருவர்க்கு மற்றொருபத்தினிலொருவர், இந்தவாறிருக்கின் வெட்டைகாலமதாமிடபந்தேள் கோள்சிங்கமீனம் இனியகும்பத்திலிருக்கி விப்புவியிலிறைபுதன்மனுஷியருமடிவர், அந்தவீடாறின் முன்சொன்ன நால்வராதித்தன் குசனெடுங்கூடி அமரவேகுடி-

களிருந்த வூரெங்குமலகை நாய்நரிகுடிகொள்ளும், தந்திரஞ்சுருதி மொழிப்படிபுரிந்து தக்கதோர்வேள்விகளெல்லாம், தான்மறந்திடு மம்புவிகள் காடாகுந்தானெனச் சாற்றுவர் பெரியோர்.

(இ - ள்.) சநி, ராகு, கேது, குரு இவர்கள் மாறிமாறிச் சேர்ந்தால் மழையும் பயிரும் அற்பமாம். இவ்விருவருக்கும் பத்தில் ஒருவர் இப்படியிருந்தால் உயர் உஷ்ணகாலமாம். ரிஷபம், விருச்சிகம், துலாம், சிங்கம், மீனம், கும்பம் இவ்விராசிகளில் புதனிருந்தால் மனுஷர் மிகுதியாய் மடிவார்கள். அந்த வீடுகளுக்காறில் முன் சொன்ன நால்வர் சூரியன், அங்காரகன் இவர்கள் கூடியிருந்தால் குடிகளிருந்த ஊரெங்கும் பிசாசு நாய் நரி வசிக்கும். வேதத்திற் சொல்லப்பட்டுச் செய்யும் வேள்விகளெல்லாம் மறந்திடும். ஊர்கள் காடாகுமென்று சொல்லுவர் பெரியோர், எ - று.

சாற்றியவாசஙெனுடுசனியாதல் தரைசுதனுதல்பாம்பாதல் தானறக்குருவுக் கேழினின்றானுந் தக்கிறையோடு பாம்புற்றினும், போற்றியகுசனைக்காரி கூடினும்புலவுமீன்தேள் கடையினிலும் புணர்ரிஷபத்தின்மத்தியிலேனும்பொருசிங்கத்தாதியிலேனும் கூற்றமாஞ் சனிநின்றன் மழையின்றிக் குவலயத்துளபலவுயிரும் கொடும்பசியாலுஞ்சமர்க்களத்தாலுங் குறுகிமாண்டிடுமெனக்கூறே, ஏற்றமன்னிடபந்தேள் தனுசுசிங்கம்மிவையினிற் காரிசேயாதல், இருந்து வக்கிரந்தானுகில் மன்னவர்க்கே யிடுக்கமுண்டெனவுரைத்திடர்.

(இ - ள்.) குருவாவது சநியாவது அங்காரகனுவது பாம்புகளாவது குருவுக்கு எழிலிருந்தாலும், மேஷத்திற் குடையவனோடு ராகுவிருந்தாலும், அங்காரகனை சநி சேர்ந்தாலும், மீனம் விருச்சிகக் கடைசியிலும், ரிஷபத்தின் மத்தியிலும், சிங்கத்தின் முதலிலுமானாலும், சநியிருந்தாலும் மழையில்லாமல் உலகவுயிர் பலரும் கொடிய பசியாலும், போர்க்களத்தில் குறுகியும் உயிரிழப்பர். மீனம், ரிஷபம், விருச்சிகம், தநுசு, சிங்கம் இவைகளில் சநியாவது அங்காரகனுவ திருந்து வக்கிரமானல் அரசர்க்கே துன்பமுண்டாகுமென்றுஞ் சொல்லுக, எ - று. (973)

இடும்பைசேர்வெள்ளிக் கேழினிற்குருவுமிருந்திடின் மாரிபெய்யாதாம், இரும்புதன்வெள்ளி நாப்பணினிரவி யிருக்கவெய்யோற்கு முன்சனிசேரு, உடன்கலந்திருக்க மாரியுமறுத்தே யுலகினிற்பஞ்சமென்றுரைக்கும், உயர்சனிதனக்கு மூன்றுபன்னொன்றி லும்பர்கோன்குருவும் வந்துறையில், நெடும்புவிதன்னி னரர்பசுமுதலாய் நின்றநாற்காலுயிர் தனக்கும், நேமியாள்பவர்க்குந் துன்பமேயாகு நின்றிடு பங்குபாதற்கே, திடம்பெறவைந்தாம் வீட்டினிலரசன் சேர்ந்த விருந்தகாலையினில், செகமொருமூன்றி னுளபலவுயிர்க் குந்தீம்புறு மென்றுரைசெய்வர்.

(இ - ள்.) சுக்கிரனுக்கேழில் குருவிருந்தால் மழை பெய்யாதாம். புதன், சுக்கிரன் இவர்கள் மத்தியில் சூரியனிருந்தாலும், சூரியனுக்கு முன் சனி அங்காரகன் இவர்கள் கலந்திருந்தாலும், மாரிவறண்டு உலகத்தில் பஞ்சமுண்டாம். சனிக்கு மூன்று பதினோராமிடங்களில் குரு வந்திருந்தால் நரர் பசு முதலிய நாற்கால் ஜெந்துக்கள் அரசர் இவர்கட்குத் துன்பமுண்டாகும். சனிக்கு ஐந்தாம் வீட்டில் குருவிருந்தால் உலகமூன்றினு முள்ள உயிர்கட்கெல்லாம் துன்பம் வருமென்று சொல்லுவர், எ - று. (974)

---

## மறுமையிலடையுமிடம்.

### வேறு.

பன்னிரண்டாமதிபனைச் சேர்ந்தவராற்சொல்லும்
　பலன்குருசுக்கிரனுயிற் றெய்வலோகம்
மின்னுகதிருடன்கூடி விராஜயோகம்
　வெண்மதியுடன்கூடிற் பிதிர்லோகந்தான்
மன்னுகுசனைக்கூடில் வீரசொர்க்கம்
　மந்தன்பாம்புடன்கூடின் மரலிபதியாகும்
உன்னுபுதன்கூடி லெங்கெங்கேதாம்போய்
　உற்றிருக்கவேண்டுமெனி லங்குறையலாமே.

(இ - ள்.) பன்னிரண்டுக்குடையோனைச் சேர்ந்தவர்களால் அடைவதாய்ச் சொல்லும் பலன்கள்: குரு சுக்கிரர்களானல் தெய்வலோகமும், சூரியனுல் இராஜயோகமும், சந்திரனுல் பிதிர்லோகமும், அங்காரகனுல் வீர சொர்க்கமும், சனி ராகு கேதுக்களானல் மறலியூரும், புதனுல் எங்கு செல்ல விருப்பமோ அங்கங்கும் போய்ச் சேரலாம், எ - று.

---

## மாரகதிசையறிய.

### வேறு.

மாரகத்தின்றிசையறிய வருநான்காந்திசைசனியேவந்துற்றாலும்
பார்தனக்குச்சுதன்செவ்வாயைந்தாகுந்திசை தானைபரிந்துற்றாலும்
பேருதித்தவாறுகுந் திசையாசானுலும்பின்புராகு
சீருதித்தவேழாகுந்திசையானுலும் மரணந்திண்ணந்தானே.

(இ - ள்.) மாரகத்தின் திசைவிவரம் எப்படியென்றால் நான்காவது திசை சனியானுலும், அங்காரகதிசை ஐந்தாவதானுலும், குருதிசை ஆறாவதானுலும், ராகுதிசை ஏழாவதானல் அத்திசைகளிலும் மரணமுண்டாவது நிச்சயமே. (976)

## கிரகதிசையறிய.

### வேறு.

காரத்திகைமுதல்மூவொன்பானுள்களும் பகல்திங்கள்செவ்வாய்
ஆர்த்தவிராகுபொன்சனிஙின் புந்திகேதுவெள்ளிச்
சீர்த்தவர்க்கிம்முறையாகச் செப்பியதிசைகளாகும்
ஏர்த்தயற்றைநாண்மீது மிவ்வாறேகொள்ளற்பால.

(இ - ள்) கார்த்திகை நட்சத்திரமுதல் பரணிநட்சத்திரம் வரைக்குமுள்ள 27-நட்சத்திரங்களையும் சூரியன், சந்திரன், அங்காரகன், ராகு, குரு, சனி, புதன், கேது, சுக்கிரன் இவர்களுக்கு வரிசையாகஒவ்வொரு நட்சத்திரமாகக் கொண்டு மூன்றுமுறை மடக்கிவர ஏற்படுவதாகிய நட்சத்திரங்கள் மூன்றி லெதிலாவது ஜென்மமானால் அவ்வவர்கள் திசைகளென்றறியவேண்டும். மற்றைய நட்சத்திரங்களையும் இப்படியே கொள்ளவேண்டும், எ - று.

---

## கிரகதிசாவருடமறிய.

சூரியன்றிசையாண்டாறு திங்கட்குப்பத்துச்செவ்வாய்க்
காருமோரேழிராகுக் கறைபதினெட்டுப்பொன்னுக்
கீரெட்டுமந்தற்கியம்பு பத்தொன்பதாகும்
புந்திக்கோர்பானேழ்சசிக்கேழ் வெள்ளிக்கைந்நான்கே.

(இ - ள்.) சூரியனுக்கு ஆறு வருஷமும், சந்திரனுக்கு பத்து வருஷமும் அங்காரகனுக்கு ஏழு வருஷமும், ராகுவுக்கு பதினெட்டு வருஷமும், குருவுக்கு பதினாறு வருஷமும், சனிக்குப் பத்தொன்பது வருஷமும், புதனுக்குப் பதினேழு வருஷமும், கேதுவுக்கு ஏழு வருஷமும், சுக்கிரனுக்கு இருபது வருஷமும் திசைகளாகும். எ - று. (978)

---

## புத்திபிரிக்கவகை.

கோள்களின்றிசையிற்புத்தி குறிக்கிடந்திசையோனுண்டை
நீள்புத்திநாதனுண்டா னேர்படப்பெருக்கிக்கண்ட
வாளமர்தொகையொன்றிற்கு மருவுநாண்மூன்றதாகும்
வாள்கடல்கெண்டைவண்டு வசனமாம்விழியினாளே.

(இ - ள்.) கிரகங்களின் திசைகளில் புத்தியை எடுப்பதெப்படியென்றால் திசாதிபதியின் மொத்த வருஷத்தை புத்திநாதன் திசை மொத்த வருஷத்தால் பெருக்கி வந்த தொகையை மீண்டும் மூன்றுநாளால் பெருக்க நாளாகும். அதை மீண்டும் முப்பதால் வகுக்க அவரவர்கட்குரிய புத்தி மாதநாட்களாகும் என்று உணர்வாய் பெண்ணே! எ - று. (979)

## சித்திரம் பிரிக்கவகை.

அவரவரபகாரத்தி ஒுண்டொன்றின் மூன்றுநாளும்
கவினுமாதங்கால்நாளு நாழிளொன்றிற்பாதிக்கன்னல்
இவைமூன்றுதொகையைச்சேர்க்கத் தான்வருஞ்சித்திரந்தான்.

(இ - ள்.) அவரவர்களுடைய அபகாரத்தில் வருஷம் ஒன்றுக்கு 3-நாளும், மாதம் ஒன்றுக்குக் கால்நாளும், நாழிளொன்றுக்கு அரைக்கன்னலு மாகக் கொண்டு இவை மூன்றையும் திசை வருஷத்தால் பெருக்கி வந்த தொகையைச் சேர்க்கச் சித்திரமுண்டாம், எ - று. (980)

---

## உள்சித்திரம் பிரிக்கவகை.

### வெண்பா.

ஒருநாளுக்கிகாரரை நாழிகையாத்தோற்றும்
ஒருநாழிகைக்கரைவிநாடி—துருவமாம்
எந்திசைக்குமிவர் வருடங்கொண்டெண்ணச்
சிந்தனைக்குட் சித்திரமாற்செப்பு.

(இ - ள்.) ஒரு நாளுக்கு அரைநாழிகையும், ஒரு நாழிகையும் அரை விநாடியுமாகக்கொண்டு எந்திசைக்கும் அந்தந்த வருஷத்தைக்கொண் டெண்ண வருவது உட்சித்திரமென்று சொல்லுக, எ - று. (981)

கூறுபலனைக்கொடுமென்பான் போதகனும்
வேறுபண்ணித்தட்டுவிப்பான் வேதகனும்—தேறுபலன்
கூட்டுவிப்பான்பாசகனுங் கோலமாயத்திசைக்கே
ஈட்டுபொருள் காரகனீவான்.

(இ - ள்.) பலனைக் கொடுமென்பான் போதகனும், அதை மறுப்பவன் வேதகனும், பலனைக்காட்டுவிப்பவன் பாசகனும், அந்தத் திசைகளுக்குப் பொருளீவோன் காரகனுமாவார்கள், எ - று. (982)

பானுதிசைக்குமந்தன் பாசகனுஞ்சுக்கிரனே
மானேகேள்வேதகனு மன்னவனும்—தேனனையாய்
காரகனுஞ்செவ்வாயுங் காசினியுங்காசினியோர்தாமறிய
ஏரணியும் போதகனுமே.

(இ - ள்.) சூரியதிசைக்கு சநிபாசகனும் சுக்கிரன் வேதகனும், குரு காரகனும், அங்காரகன் போதகனு மாவார்கள், எ - று. (983)

இந்துதிசைக்குவெள்ளி யேற்றமேதோர்பாசகனும்
விந்தைதமலர்நண்பனே வேந்தனும்—மந்தனே
சங்காரதிபுடைசூழ் காசினியிற்காரகனும்
அங்காரகன் போதகன்.

(இ - ள்.) சந்திரதிசைக்கு சுக்கிரன் பாசகனும், சூரியன் வேதகனும், சனிகாரகனும், அங்காரகன் போதகனுமாவார்கள், எ - று. (984)

மங்களனார்தந்திசைக்கு மார்த்தாண்டன்பாசகனும்
திங்களரும்போதகனுஞ் சேயிழையீர்—பொங்குபுகழ்
மேவியபுதன்வேதகனு மித்தாரணியோரறிய
ஆயசனி காரகனாகும்.

(இ - ள்.) அங்காரகதிசைக்கு சூரியன் பாசகனும், சந்திரனும் போதகனும், புதன் வேதகனும், சனி காரகனுமாவார்கள் என்று அறிவீர் நங்கைமீர்! எ - று. (985)

புந்திதிசைக்குப் புரவலனேபோதகனும்
சந்திரனேபாசகனுந்தானவன்—இந்துநுதல்
மின்னனையீர்செவ்வாயும் வேதகனும்வெள்ளியோ
மன்னுபுகழ் காரகனுமாம்.

(இ - ள்.) சந்திரன்போலும் நெற்றிவாய்ந்தபெண்காள்! புதன்திசைக்கு குரு போதகனும், சந்திரன் பாசகனும், அங்காரகன் வேதகனும், சுக்கிரன் காரகனு மாவார்கள், எ - று. (986)

வேந்தன்மகாதிசைக்கு வெய்யவனேவேதகனும
போந்துவருஞ்செவ்வாயே போதகனும்—காந்திசெறி
சந்திரனேகாரகனுந் தையலேதாரணியில்
மந்தனே பாசகனாமே.

(இ - ள்.) பெண்ணே! குரு திசைக்கு சூரியன் வேதகனும், அங்காரகன் போதகனும், சந்திரன் காரகனும், சனி பாசகனுமாவார்கள், எ - று.

வெள்ளிமகாதிசைக்கு வேந்தனேபோதகனும்
தெள்ளுபுதன்பாசகனுஞ் செங்கதிரும்—மெள்ளவரும்
காரகனேதானுகுங்காரியே வேதகனும்
வாரணியுங் கொங்கைமயிலே.

(இ - ள்.) கச்சிறுக்கிய கொங்கையாய்! சுக்கிரதிசைக்கு குருபோதகனும், புதன் பாசகனும், சூரியன் காரகனும், சனி வேதகனுமாவான், எ - று.

சனியின்றிசைக்குச் சசிபோதகனும்
இனியசெவ்வாய் வேதகனென்றேத்தும்—தனிமொழியாய்

வெள்ளியேபாசகனும் வேந்தனேகாரகனும்
தெள்ளிதமிழோ ருரைத்தசீர்.

(இ - ள்.) கனிசொல்லுடையாளே! சநி திசைக்கு சந்திரன் போதகனும், அங்காரகன் வேதகனும், சுக்கிரன் பாசகனும், குரு காரகனுமாவார்களென்று பெரியோர் கூறினர், எ - று. (989)

ஒருவர்மகா திசைக்கு ளுற்றபலனுண்ண
வருவர்நவக்கிரகர் மாதே—அவரவரில்
போதகனும்பாசகனும் போற்று பொருள்காரகனும்
வேதகனும் மாகிவருவார்.

(இ - ள்.) பெண்ணே! ஒருவர் திசையிலுண்டாம் பலனை யுண்ணவருவோர் நவக்கிரகர்களே. ஆனால் அவரவர்களும் போதகன் பாசகன் காரகன் வேதகன் என்கிற பெயரோடு வருவார் என்றறிக. இராகு கேதுகளுக்கிவை யில்லையாம், எ - று. (990)

இந்தப்படிநால்வரெய்தி யொருவர்திசைக்குள்
வந்துபலனுண்ணும் வகையறிந்தே—சிந்தித்
துரைத்தபலனொத்திருக்கு மொண்டொடியேகேளாய்
தரைத்தமிழோர் தாமறியத்தாம்.

(இ - ள்.) ஒள்ளிய வளையுடையாய்! இப்படி நால்வரும் ஒருவர் திசைக்குள் வந்து பலனுண்ணும் விதத்தை யறிந்து சொல்லச் சர்வ பலன்களும் ஒத்திருக்குமென்று அறிவாயாக, எ - று. (991)

---

## திசாபுத்தி பலனறிய.

### சூரிய திசாபுத்தி பலன்.

### வேறு.

அருக்கினிலருக்கன்புத்தி யறியநானூற்றெட்டுக்கு
கருகொடுமிற்றுற்கேடு கலகமந்தணனாற்பீடை
வருத்தமாந்தலைநோயுண்டாம் வலக்காதில்வலியுண்டாமே
பெருக்கநீரிழிவுமேட மாதத்திற்பீடைதானே.

(இ - ள்.) சூரியதிசையில் சூரியபுத்தி நாள் நூறெட்டில் (3 மாதம் 18 நாள்) கேடு, கலகம், பிராமணனால் பீடை, தலைநோய், வலது காதில் வலி, நீரிழிவு, சித்திரைமாதத்தில் பீடை இவைகளுண்டாம், எ - று. (992)

இரவியிலிருந்துபுத்தி யினியநூற்றெண்பதுக்கும்
அரசரான்மகிழ்ச்சிலாப மதிகவாகனமுமுண்டாம்
பரவியபணமாம்பெண்ணாற் பகையிடக்கண்ணினோயாம்
திரமெனுங்கடகத்திங்க டீவினைகாணுந்தானே.

(இ - ள்.) இதில் சந்திரபுத்தி நூற்றெண்பது நாட்களில் (6 மாதம்) அரசரால் மகிழ்ச்சி லாபம் வாகனம் விவாகம் பெண்ணால் பகை இடது கண்ணோய் ஆடிமாதத்தில் கொடிய தீங்கு இவைகளுண்டாம், எ - று. (993)

ஆதித்தன் றன்னிற்செவ்வாய் புத்திநூற்றிருபத்தாறும்
வாதித்தவியாதிசண்டை வழக்கறல்வறட்சிபீடை
சாதித்தவுற்றாற்கேடு தனம்பொருட்சேதமாகும்
போதித்தபொருளுஞ்சாயும் பூமியின்பலனுமாதே.

(இ - ள்.) இதில் அங்காரகபுத்தி நூற்றிருபத்தாறு நாட்களில் (நாலு மாதம் ஆறுநாள்) வாது வியாதி சண்டை வறட்சி பீடை சாதிப்பால் தீங்கு தனவிரயம் பொருள் நஷ்டம் பூமி பலனின்மை இவைகளுண்டாம், எ - று.

சூரியன்றனிலேராகு சுகத்தைத்தேபசொல்லவென்றால்
வரியகாண்மூந்நூற்றே டிருபத்துநான்கதாகும்
பாரியவிடிவிஷத்தாற் படைபயம்பிறந்தார்பின்னம்
வீரியமைந்தன்றேசாந் திரத்தினின்மேவுவானே.

(இ - ள்.) இதில் ராகு புத்தி முந்நூற்றிருபத்துநான்கு நாட்களில் (பத்துமாதம் இருபத்துநான்கு நாள்) இடியாலும் விஷத்தாலும் படையாலும் பயம். பிள்ளைகள் சேதம். குமாரன் தேசாந்திரம் போதல் இவைகளுண்டாம், எ - று. (995)

எதிருறுங்கதிர்ற்பொன்னி னிருநூற்றெண்பத்தெட்டும்
கதிபெறுபுகழ்நர்நட்புங் கல்வியுஞ்செல்வமுண்டாம்
மதியுறுமிராசசேவை மக்களுஞ்சுத்தமுண்டாம்
அதிகசத்துருவைவெல்லு மதிசயமிகுதியாமே.

(இ - ள்.) இதில் குரு புத்தி இருநூற்றெண்பத்தெட்டு நாட்களில் (மாதம் ஒன்பது, நாள் பதினெட்டு) பலர் சிநேகம், கல்வி, செல்வமிவைகளுண்டாதல், இராஜசேவை, மக்களும் சுற்றமுமுண்டாதல், சத்துருவை வெல்லுதல் என்னும் இவைகளுண்டாம், எ - று. (996)

நன்கதிர்சனிமுன்னூற்று நாற்பத்தோடிரண்டினுக்கும்
மன்பயமக்கள்பீடை மனத்துயர்பகைவருண்டாம்
தன்பொருட்சேதமுந்தி யடுப்பதுசரீரபீடை
இன்பமேயில்லைமண்ணி லெவர்களும்பகைவராமே.

(இ - ள்.) இதில் சனி புத்தி முந்நூற்று நாற்பத்திரண்டு நாட்களில் (மாதம் பதினொன்று, நாள் பன்னிரண்டு) பயம், மக்களுக்குப் பீடை, மனத்தில் துன்பம், பகைவர் பெருக்கம், பொருட்சேதம், சரீரபீடை, இன்பமென்ப தின்மை, நல்லவர்களும் பகைவர்களாதல் என்னும் இவைகளுண்டாம், எ - று. (997)

நற்கதிர்வன்னியிற்புந்தி நாளதுமுன்னூற்றாறும்
வற்கமும்பகையதாகு மனத்திலேசரீரபீடை

கற்கரிவினுசமுந்திக் கடுப்பதுவழக்குமுண்டாம்
சொற்புகழ்மன்னனுசந் துக்கமுமிகுதியாமே.

(இ - ள்.) இதில் புதன்புத்தி முந்நூற்றுநூநாட்களில் (மாதம் பத்து, நாள் ஆறு) சுற்றத்தார்பகை, மனதில் திகில், சரீரபீடை, வயிற்றுக்கடுப்பு, வழக்கம், அரசனுசம், துக்கம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (998)

ஆதித்தன்றனிலேகேது வனுகினூற்றிருபத்தாறும்
சோதித்தகினைவுகுன்றுந் தூரதேசத்திற்போவார்
வாதித்தவிஷமுமுண்டாம் வழக்குண்டுமனைவேறுகும்
பேதிக்குமுற்றார்கேடு பிணக்குண்டுபலன்செய்யாதே.

(இ - ள்.) இதில் கேதுபுத்தி நூற்றிருபத்தாறு நாட்களில் (மாதம் நான்கு நாள் ஆறு) மறதி, தூரதேசம்போதல், விஷமுண்டாதல், வழக்கு, வீடுவிட்டு வீடுபோதல், சுற்றத்தார் கேடு, பிணக்கு என்னும் இவைகளுண்டாம், எ - று. (999)

அருக்கனில்வெள்ளி முன்னூற்றறுபதுநாளிலாகும்
திருக்கலியாணஞ்செல்வஞ் செம்பொன்னுமிகவுமுண்டு
வருத்தமாஞ்சரீரநோயுமலர்க்கண்ணில் வியாதிதோன்றும்
உருக்கியபிணியுந்தீரு முண்மையாய்க்கருமநன்றே.

(இ - ள்.) இதில் சுக்கிரபுத்தி முந்நூற்றறுபது நாட்களில் (ஒருவருடம்) கலியாணம் செல்வம் திரவியம் இவைகள் மிகுதியாயுண்டாதல். வருத்தம், சரீரரோகம் கண்ணோய் உண்டாம். முன்னோய்த்தீரும். நற்கருமமுண்டாம், எ - று. (1000)

---

## சந்திர திசாபுத்தி பலன்.

சந்திரன்றன்னிலேதான்றனக்குநாள் வருமுன்னூறும்
விந்தையாங்கன்னிசேர்வள் வீரமன்னனுக்குமுண்டாம்
முந்தியகாரியங்கணினைத்தது முடியுமேலும்
இந்திரன்றனைபோன்மைந்த னினிதுடனுண்டாங்கண்டீர்

(இ - ள்.) சந்திரதிசையில் சந்திரபுத்தி முந்நூறு நாட்களில் (மாதம் பத்து) பெண்சேர்தலும், வெற்றியுண்டாதலும், நினைத்தகாரியம் முடிதலும், இந்திரன்போல் பிள்ளைகளுண்டாதலும் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1001)

நண்புறுமதியிற்செவ்வாய் நாளிருநூற்றுப்பத்தும்
பண்பிலாவழக்குச்சண்டை பயித்தியங்களவுநோயாம்
தண்பொருள்சேதங்குட்டந் தழற்பயமேடமாகும்
திண்பெருந்தளையேபூணு மேற்றிமைக்கலகஞ்சேரும்.

(இ - ள்.) இதில் அங்காரகபுத்தி இருநூற்றுப்பத்து நாட்களில் (ஏழு மாதம்) வழக்குசண்டை பயித்தியம் களவுநோய் பொருட்சேதம் குஷ்டம்

அக்கினிபயம் சித்திரைமாதத்தில் விலங்கிட்டுக் கொள்ளுதல் பெண் கலகம் இவைகளுண்டாம், எ - று. (1002)

அம்புலிதனிலேராகு வைந்நூற்றுநாற்பதுக்குள்
செம்பொனுஞ்சேதமாகுஞ் செற்றலர்பயம்வியாதி
நம்பியர்துன்பம்ராச நிஷ்டூரமிகவுமாகும்
வம்பலர்குழலினாளே மதலையர்பீடையாமே.

(இ - ள்.) இதில் ராகுபுத்தி, ஐந்நூற்றுநாற்பது நாட்களில் (ஒருவருடம் ஆறுமாதம்) செம்பொன்சேதம், பகைவர்பயம், வியாதி, பெரியோரால் துன்பம், அரசநிஷ்டூரம், பிள்ளைகள் பீடை இவைகளுண்டாம், எ - று.

நன்றிசேர்மதியிற்பொன்ன னானூற்றெண்பதுக்கும்
வென்றிசேர்குதிரையானை மேன்பொருடானியங்கள்
குன்றேறுமலையாய்சேருங் கொற்றவனாலேயின்பம்
கன்றுநன்சாலியுண்டாங் காளையைப்பெறுவர்தாமே.

(இ - ள்.) இதில் குருபுத்தி நானூற்றெண்பது நாட்களில் (ஒருவருடம் நான்குமாதம்) குதிரை, யானை, பொருள், தானியங்கள் சேர்தல், அரசனுலின்பமுண்டாதல், பசுப்பிராப்தி, புத்திரப்பேறு இவைகளுண்டாம், எ - று.

மதிதனிற்காரிபுத்தி மாதம்பத்தொன்பதுக்கும்
பதிகெடுங்கன்றுகாலி பற்றறுமனதிற்றுக்கம்
விதியுறுமனையாளோடு மெய்பொருட்சேதமாகும்
சதிபெறுகறுத்தோனாலே கோள்வருஞ்சாற்றினேன்கேள்.

(இ - ள்.) இதில் சநிபுத்தி பத்தொன்பது மாதங்களில் பதிகெடுதல், பசு முதலியவை கெடுதி, மனோதுக்கம், மனைவி பொருள்சேதம், கறுத்தவனால் கோள்களுண்டாதல் என்னும் இவைகளுண்டாதம், எ - று. (1005)

சந்திரன்றன்னிற்புந்தி தான்பதினேழுமாதம்
அந்தரக்கலகம்போக மழகியமக்கட்பேறும்
சிந்தைசேரிராசயோகஞ் சேர்ந்திடுநினைத்ததெல்லாம்
முந்தியவித்தைலாபம் புரட்டாசிமுடிவிற்றுனே.

(இ - ள்.) இதில் புதன்புத்தி பதினேழுமாதங்களில் கலகம், போகம், மக்கட்பேறு, ராஜயோகம், நினைத்தகாரியஞ் சித்தி, வித்தை, புரட்டாசி மாதமுடிவில் லாபம் இவைகளுண்டாகும், எ - று. (1006)

நிலவினிற்கேதுக்கேழு மாதமுநெருப்பாற்பீடை
தொலைவிலாச்சரீரம்வீங்குஞ் சுற்றஞ்சாமிடக்கண்ணேயாம்

மலைவதுபயமுமுண்டா மதிகதண்டனையுமுண்டாம்
பலசனம்வெறுப்புவந்து நாசமாம்பகையுண்டாமே.

(இ - ள்.) இதில் கேதுபுத்தி எழுமாதங்களில் நெருப்பால் பீடை, சரீரம் வீக்கம், சுற்றநஷ்டம், இடக்கண்ணோய், பயம், தண்டனை, பலர் வெறுப்பு, நாசம், பகை இவைகளுண்டாம், எ - று. (1007)

வட்டமாதியில்வெள்ளி மாதங்களிருபதுக்கும்
திட்டமாம்வியாதியுண்டாஞ் சேர்ந்திடுவிதனங்காட்டும்
நட்டமாமர்த்தநாச நாளிலேவிரோதமுற்றார்
கஷ்டமாஞ்சத்துருவாலே காரியஞ்சேதமாமே.

(இ - ள்.) இதில் சுக்கிரபுத்தி இருபதுமாதங்களில் வியாதியுண்டாதல், விசனம், பொருட்சேதம், விரோதம், சுற்றத்தார்கஷ்டம், சத்துருவால் காரியபங்கம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1008)

வெண்மதிதனிலேவெய்யோன் வேண்டியவாறுமாதம்
உண்மதிசுரமும்பித்த முருவமுங்குலைந்துவேறாய்
கண்மதியங்கந்தன்னிற் கடுவலிநோயுமுண்டாம்
பண்புறுகுணத்தினாலே பலனுண்டுபலன்சொல்மாதே.

(இ - ள்.) இதில் சூரியபுத்தி ஆறுமாதங்களில் உட்காய்ச்சல், பித்தம், ரூபமாறுட்டம், கண் சரீரம் இவைகளில் வலியும் நோயும் உண்டாதல் என்னும் இவையுண்டாமென்று நற்குணத்தால் நீயறிந்து செப்புக, எ - று.

---

## செவ்வாய் திசாபுத்தி பலன்.

நன்றிசெய்சேயின்மாத நாலுநாளிருபத்தேழும்
கன்றிடுங்காலினாய்கள் கடித்திடுமேடமாதம்
வென்றிசேர்மன்னரச்சம் வெப்புநோய்நீசராலே
கொன்றிடுந்தேளின்மாதத் துடன்வெட்டுங்குத்துமாமே.

(இ - ள்.) அங்காரகதிசையில் அங்காரகபுத்தி நான்குமாதம் இருபத்தேழு நாட்களில் காலில் நாய்கடித்தல், சித்திரைமாதத்தில் அரசரால் பயம், நோய், கார்த்திகை மாதத்தில் நீசரால் வெட்டுங் குத்துமுண்டாதல் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1010)

செவ்வாயில்ராகோராண்டுஞ் சேர்ந்தநாள்பதினெட்டுக்கும்
ஒவ்வாதவிஷத்திற்றேரைந் திங்களிலுற்றார்நாசம்

இவ்வாறுமேகக்கட்டி யிருந்திடுந்தலம்வேறாகும்
கொவ்வையாய்மானேகுட்டங் குரூரமாம்பீடையாமே.

(இ - ள்.) இதில் ராகுபுத்தி ஒருவருஷம் பதினெட்டு நாட்களில் கார்த்திகையில் விஷத்தால் பயம் சுற்றத்தார்நாசம், வீடுவிட்டுவீடுமாறுதல் அன்றி பெண்ணே! குட்டமும் குரூரமுமான பீடையும் உண்டாகுதலாம், எ - று.

முழங்கியசேயிற்பொன்னன் முந்நூற்றுமுப்பத்தாறும்
வழங்கிடுமர்த்தநாச மன்னராற்பகையுமுண்டு
தழங்கிடுந்திசைதொடங்குச் சத்துருபலருமாவர்
அழுங்கலிந்நாளிற்செல்வ மரசராலுறவுமாமே.

(இ - ள்.) இதில் குருபுத்தி முந்நூற்று முப்பத்தாறுநாட்களில் (மாதம் பதினொன்று, நாள் ஆறு) பொருட்சேதம், அரசரால்பகை, அந்தத்திசை முதல் பல பகைவர்களுண்டாதல், செல்வம் நாசமாகும்; ஆனால் அரசரால் உறவுண்டாதல் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1012)

மருவியசேயிற்காரி மாதமீராறுமொன்று
கருதியகாளொன்பானுங் கலகமாம்வழக்குச்சண்டை
பொருபடையர்த்தநாசம் பொருந்தியமெய்யிற்குட்ட
மருவியநிலையுங்கெட்டு மனைத்தினிற்கிலேசமாமே.

(இ - ள்.) இதில் சனிபுத்தி பதின்மூன்றுமாதம் ஒன்பது நாட்களில் கலகம், வழக்கு, சண்டை, அர்த்தநாசம், குட்டம், வீடழிதல், கிலேசம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1013)

முந்தியசேயிற்பிந்தி முந்நூற்றுடைம்பத்தேழும்
செந்திருவரிவைசேர்வள் செல்வமுமிகுதியாகும்
வந்திடுநோயுந்தீரு மருவியகன்னிமாதம்
நிந்தையாமரவுதீண்டு நீடியபலன்செய்யாதே.

(இ - ள்.) இதில் புதன்புத்தி முந்நூற்றைம்பத்தேழு நாட்களில் (பதினொன்றுமாதம் இருபத்தேழுநாட்கள்) பெண்சேர்தல், செல்வமிகுதியு முண்டாதல், நோய்தீர்தல், புரட்டாசிமாதத்தில் சர்பந்தீண்டுதல் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1014)

வெய்யவன்றனிலேகேது சேர்ந்திடுமாதநான்கு
உய்யுநாளிருபத்தேழு முடன்பகைமாதராலே
மெய்யிலேவியாதிதோன்று விஷபயமிகுதியாகும்
தையலர்பொருட்டாலிந்தை சத்துருமிகுதியாமே.

(இ - ள்.) இதில் கேதுபுத்தி நான்குமாதம் இருபத்தேழு நாட்களில் பெண்டீரால் பகை, வியாதி, விஷபயம், தையலர்பொருட்டு நிந்தை, மிகுந்த சத்துருக்கள் இவைகளுண்டாம், எ - று. (1015)

நாடியசேயிற்சுங்க னற்றிங்களீரேழுக்கும்
நீடியபொருளுஞ்சேரு நேரிழைவந்துசேர்வள்
தேடியதெய்வபூசை செய்வன்மாதவர்கள்சேர்வர்
வாடியசிரங்குதேமல் லாகனம்பெறுவர்தாமே.

(இ - ள்.) இதில் சுக்கிரபுத்தி பதினன்கு மாதங்களில் பொருள்சேர்தல், பெண்சேர்தல், தெய்வபூசை செய்தல், பெரியோர்கள் சேர்க்கை, சிரங்கு, தேமல், வாகனமிவையுண்டாதல் என்னும் இவைகளுண்டாம், எ-று.

அங்கியிற்பரிதிதிங்க ளானுநாளாறுமாகும்
மங்கியகுட்டங்கண்ட வியாதியாமன திற்றுக்கம்
செங்கனற்பயமுண்டாகுஞ் சீர்மறையவராற்றுன்பம்
இங்கிதமனையாளோவு மெவர்களும்பகைவராமே.

(இ - ள்.) இதில் சூரியபுத்தி மாதம் நான்கு ஆறுநாட்களில் குட்டம் கண்ட வியாதி, மனேதுக்கம், அக்கினி பயம், பிராமணரால் துன்பம், மனைவி, நோய், எவர்க்கும் பகை என்னும் இவைகளுண்டாம், எ - று. ()

நலமுறுசேயிலிந்து நாடியதிங்களேழும்
பலமுறும்பூமிலாபம் பலித்திடுங்கன்றுகாலி
இலகியபொன்னுமுத்து யின்பமாமாடையுண்டாம்
தலமதுபேதம்பின்பு தளர்ச்சிவந்தெய்துந்தானே.

(இ - ள்.) இதில் சந்திரபுத்தி எழு மாதங்களில் பூலாபம், கன்றுகாலி, பொன், முத்து, இன்பம், வஸ்திரம் இவைகளுண்டாவதுடன் இடமாறுதல், தளர்ச்சி இவைகளும் உண்டாம், எ - று. (1018)

---

## இராகு திசாபுத்தி பலன்.

இராகுவிலிராகுமாத நாலெட்டுநாளீராறும்
வாகுறுவேந்தனசை மனத்துயர்விஷத்தாற்பீடை
ஏகமாமனையாடுன்ப மிகுந்திடுந்தலபேதங்கள்
காகநேர்நிறத்தனலே கலகமுங்கோளுண்டாமே.

(இ - ள்.) இராகுதிசையில் இராகுபுத்தி மாதம் முப்பத்திரண்டு நாள் பன்னிரண்டில் அரசநாசம், மனத்துயரம், விஷத்தால் பீடை, மனைவி துன்பம், ஸ்தல பேதம், கறுத்தவனல் கலகம் கோள் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1019)

பாரியவிராகின்மன்னன் பரிவுடன்புசிக்குந்திங்கள்
நாரியேயிருபத்தெட்டு நாளுமூவெட்டினின்பம்

ஆரியராலேசெல்வ மாயரான்மகிழ்ச்சியுண்டாம்
காரியமெல்லாங்கூடும் காரிழைமணமுண்டாமே.

(இ-ள்.) இதில் குருபுத்தி இருபத்தெட்டு மாதம் இருபத்துநான்கு நாட்களில் இன்பம், ஆசிரியரால் செல்வம், அரசரால் மகிழ்ச்சி, காரியமெல்லாங் கைகூடுதல், விவாகம் என்னும் இவைகளுண்டாம், எ-று. (1020)

வடிவுளவிராகிற்காரி மாதமுப்பதுநான்கும்
படிமிசைநாளாறுக்கும் பகைமனத்திடர்வியாதி
முடியாதவழக்குச்சண்டை மூண்டிடும்வாதபித்தம்
இடியுறுசெங்கைசோதி சதயமுமிகுதிநோயே.

(இ-ள்.) இதில் சநிபுத்தி முப்பத்துநான்கு மாதம் ஆறுநாட்களில் பகை, மனோதுக்கம், வியாதி, தீராவழக்கு, சண்டை, வாதம், பித்தரோகம், செங்கைசோதி, சதயம் இவைகளில் மிக்கநோய் என்னும் இவைகளுண்டாம், எ-று. (1021)

வந்திடுமிராகிற்புந்தி மாதமுப்பதின்மேனாட்கள்
முந்தியமூவாறுக்கு முயற்சியாம்வாழ்வுண்டாகும்
சிந்தையிற்றெய்வபத்தி சிலபொருள்வந்துசேரும்
விந்தையாமழலைசேரு மேலுறுபகையுண்டாமே.

(இ-ள்.) இதில் புதன்புத்தி முப்பது மாதம் பதினெட்டு நாட்களில் வாழ்வு, தெய்வபக்தி, சிலபொருள் சேர்க்கை, பிள்ளையுண்டாதல் பகை என்னும் இவைகளுண்டாம், எ-று. (1022)

மருவியராகிற்கேது மாதமீராறுமிக்க
கருதியநாண்மூவாறு கடிவிஷத்தாலேபயம்
தருமகவுக்குப்பீடை சரீரமேவீங்கிநோயாம்
அரிவையர்தமக்குத்துன்ப மரசராலச்சமாமே.

(இ-ள்.) இதில் கேதுபுத்தி பன்னிரண்டு மாதம் பதினெட்டு நாட்களில் விஷத்தால் பயம், மகவுக்குப் பீடை, சரீரம் வீங்கி நோக்காடு, பெண்சாதிக்குத் துன்பம், அரசரால் அச்சம் என்னும் இவைகளுண்டாம், எ-று.

மன்னியவிராகில்வெள்ளி மாதமோமுப்பத்தாறும்
பொன்னுடன்பொருளுஞ்சேரும் பூஷணமிகுதியுண்டாம்
மன்னியமங்கைசேர்வ ளரசரால்மகிழ்ச்சியுண்டு
பின்னும்வஞ்சனையாற்றுன்பம் பீடைவந்தகன்றுபோமே.

(இ-ள்.) இதில் சுக்கிரபுத்தி முப்பத்தாறு மாதங்களில் பொன், பொருள் சேர்க்கை, பூஷணமுண்டாதல், மங்கைசேர்தல், அரசரால் மகிழ்ச்சி, வஞ்சனையால் துன்பம், பீடைவந்தொழிதல் என்னும் இவைகளுண்டாம், எ-று. (1024)

ராகுவிலிரவிமாதம் பத்துடனுண்மூவெட்டும்
வாகுறுகுலத்தாற்சண்டை மன்னராற்றஞ்சமாகும்
சேகுறுமனையாள்பிள்ளை பிராதுருசிலுகதாகும்
ஆகமூவிதத்தாலைய மிருப்பிடமகலுந்தானே.

(இ - ள்.) இதில் சூரிய புத்தி பத்துமாதம் இருபத்து நான்கு நாட்களில் குலத்தால் சண்டை, மன்னரால் ஆதரிப்பு, பெண்சாதி பிள்ளைபெருது சிலுகாதல், மூவிதத்தால் ஐயம் இருப்பிட நீங்குதல் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1025)

உதித்திடுமிராகுவிந்தி னுயர்திங்களீரொன்பானும்
மதித்திடும்பந்துநாச மனைவியாற்பொருளுஞ்சேதம்
கதித்திடும்மத்தமோணத் திசையினிற்கால்கணோவு
விதித்திடுந்தலம்விட்டேகும் விஷத்தினாற்றுன்பமாமே.

(இ - ள்.) இதில் சந்திரபுத்தி பதினெட்டு மாதங்களில் பந்துநாசம் மனைவியாற் பொருள் நஷ்டம், அத்தம் ஓணம் இத்திசைகளில் கால்கள் இவைகள் நோவு, ஸ்தலமாறுதல், விஷத்தால் துன்பம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1026)

இன்புறுமிராகிற்செவ்வாய் மாதமீராறுமிக்க
வன்புறுநாண்மீவாறு மக்கினிபயங்கிலேசம்
மன்பகைவிஷத்தாற்பீடை மருவுசண்
துன்பமாங்களவுசண்டை துயர்மனைகிலேசந்தானே.

(இ - ள்.) இதில் அங்காரக புத்தி பன்னிரண்டு மாதம் பதினெட்டு நாட்களில் அக்கினியால் பயம், கிலேசம், பகை, விஷத்தால் பீடை, சண்டாளரின்பம், களவு சண்டை, மனைவியால் கிலேசம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1027)

---

## குரு திசாபுத்தி பலன்.

மருவியபொன்னின்மன்னன் மாதமையைந்துநாளோ
டொருபதினெட்டினுக்கு முயர்பிரதாபமிக்க
பொருளுடன்றனியங்கள் பூஷணம்பூமிலாபம்
அரிவையர்சேர்த்தியின்ப மரசரான்மகிழ்ச்சியாமே.

(இ - ள்.) குரு திசையில் குருபுத்தி இருபத்தைந்து மாதம் பதினெட்டு நாட்களில் பிறதாபம், பொருள், தானியம், பூஷணம் இவைகள் லாபம் பெண் சேர்க்கை இன்பம், அரசரால் மகிழ்ச்சி இவைகளுண்டாம், எ - று.

பொருந்தியகுருவிற்காரி புகழ்திங்களாகும்பத்து
வருந்தியநாளீராகும் வாகனம்பொருளும்வாய்க்கும்
திருந்தியகால்கைவாதஞ் சேயிழைதனக்குத்துன்பம்
இருந்திடம்வெற்றியில்லை யிடர்வந்துநீங்குந்தானே.

(இ - ள்.) இதில் சனிபுத்தி பத்து மாதம் பன்னிரண்டு நாட்களில் வாயனம் பொருள், கால்கைவாதம், மனைவிக்குத் துன்பம், இருந்தவிடத்தில் ஜகமின்மை, துன்பம் வந்து விலகுதல் என்னும் இவைகளுண்டாம், எ - று.

மருவியகுருவிற்புந்தி மாதமோவிருபத்தேழும்
அறுகுறுநாளோராறு மாடலும்பாடன்ஞானம்
வருவதுபூசையாலும் வளமுளமாதர்மைந்தர்
பெருகிடுஞ்செல்வமன்னாற் பெருமையும்புகழுண்டாமே.

(இ - ள்.) இதில் புதன் புத்தி இருபத்தேழு மாதம் ஆறு நாட்களில் ஆடல் பாடல் ஞானம் பூசை மைந்தர்க்கரிட்டம் செல்வப்பெருக்கம் அரசரால் பெருமையும் புகழும் பெறுதல் என்னும் இவைகளுண்டாம், எ - று.

பரவியகுருவிற்கேது பதினொருமதிநாளாறும்
திரமுளமாதர்கேடு திரியுமேதேசமெங்கும்
உரமுளவுற்றார்மற்றை யுறவினர்பகையதாகும்
நிரவியமனையாடன்று னிலைவிட்டுப்போவதாமே.

(இ - ள்.) இதில் குரு திசையில் கேது புத்தி பதினொருமாதம் ஆறு நாட்களில் மாதர் கேடு, தேசமெங்குந் திரிதல், சுற்றத்தார் பகை, மனைவியால் இடமாறுதல் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1031)

மருவியகுருவில்வெள்ளி மாதமுப்பத்திரண்டு
நிறைபரிகட்டுவர்க்க நிலைமையாம்பொருளுஞ்சேரும்
பொரையுளகன்னிமாதம் பூமியும்போகமுண்டாம்
குறைகடற்சுற்றத்தோடு குணமுடன்வாழ்வர்தாமே.

(இ - ள்.) இதில் சுக்கிரபுத்தி முப்பத்திரண்டு மாதங்களில், பசு, குதிரை வர்க்கம், பொருள்சேர்க்கை, புரட்டாசி மாதத்தில் பூமியும், போகமுண்டாதல் சுற்றத்தோடு கூடிவாழ்தல் என்னும் இவைகளுண்டாம், எ-று.

உலகுறுகுருவிற்பானு வொன்பதுநாண்மூவாறும்
நலமுறுமர்த்தலாப நாடியகருமங்கூடும்
பலகுறைநெருப்பிற்காற்றிற் பிணிபலர்பகையும்பீடை
கலகமாமகத்திற்பின்பு காரியநன்மையாகும்.

(இ - ள்.) இதில் சூரியபுத்தி ஒன்பதுமாதம் பதினெட்டு நாட்களில் செல்வ லாபம், செய்கருமம் கூடுதல், நெருப்பினாலும் காற்றினாலும் நோயாலும் பயம் பலர் பகை, பீடை, வீட்டிற்கலகம். பின்னர் காரியம் நன்மையாதல் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1033)

நின்றதோர்விருவிவிந்து சேர்பதினாறுமாதம்
வென்றிநற்சிவிகைமுத்து வெண்குடைபணியுமுண்டால்
அன்றன்மனையாண்மைந்த ரறிவுளோர்பொருளுஞ்சேரும்
என்றுசற்கருமமெல்லாந் தெய்வத்தாலெய்துந்தானே.

(இ - ள்.) இதில் சந்திரபுத்தி பதினாறுமாதங்களில் பல்லக்கு, முத்து, வெண்குடை, ஆபரணம், மனைவி, மைந்தர், அறிவுள்ளோர், பொருள் இவை சேர்தல், நற்கர்மங்களெல்லாம் தெய்வத்தால் நிறைவேறுதல் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1034)

பாங்குளபொன்னிற்செவ்வாய் பதினொன்றுமதிநாளாறு
தீங்குறுவினைகளுண்டாந் திருடராற்றழலாற்றுன்பம்
ஆங்குறுமுற்றார்சேத மல்லதுபிணியுமுண்டாம்
நீங்கியேநிலைவிட்டேகு நினைத்ததுமுடிந்திடாதே.

(இ - ள்.) இதில் அங்காரகபுத்தி பதினொருமாதம் ஆறுநாட்களில் தீய வினைகள் திருடராலும், அக்கினியாலும் துன்பம், சுற்றத்தார் கஷ்டம், நோய் நிலைமாறுதல், நினைத்தகாரியம் முடியாமை என்னும் இவைகளுண்டாம், எ - று. (1035)

மாதங்கக்குருவில்ராகு மாதமோரிருபத்தெட்டும்
ஓதியநாண்மூவெட்டு முடன்பகைசிறுவிழக்குச்
சேதமாம்பொருள்விரோதஞ் சேயிழைதனக்குத்துன்பம்
சூதுகண்மிகவுண்டாகுந் தொடர்ந்திடுஞ்செல்வம்போமே.

(இ - ள்.) இதில் ராகுபுத்தி இருபத்தெட்டு மாதம் இருபத்து நான்கு நாட்களில் பகை, சிறுவழக்கு, பொருட்சேதம், விரோதம், மனைவிக்கு துன்பம், சூதுகள் மிகவுண்டாதல் என்னும் இவைகளுண்டாம், எ - று.

---

## சனி திசாபுத்தி பலன்.

காரியிற்காரிமாதங் கருதியமுப்பத்தாறும்
வீரியமூன்றுநாளும் மெய்யினில்வியாதிதோன்றும்
சீரியவடிமைமைந்தர் செல்வமுங்குறையும்பின்னும்
கூரியவுறவுதன்னாற் கொடும்பகைதானுண்டாமே.

(இ - ள்.) சனிதிசையில் சனிபுத்தி மாதம் முப்பத்தாறு, மூன்று நாட்களில் சரீரநோய், அடிமை, மைந்தர், செல்வம் குறைதல், சுற்றத்தாரால் பகை இவைகளுண்டாம், எ - று. (1037)

பங்கினிற்புந்திமாத நாலெட்டுநாளொன்பானும்
இங்கிதகல்விஞான மெழிலுடைப்பொருளுஞ்செல்வம்

மங்கையர்மருவிக்கூடும் மைந்தருஞ்சுற்றமுண்டாம்
பொங்கமாய்மன்னராலே புகழ்ந்துவாழ்ந்திருப்பர்தாமே.

(இ - ள்.) இதில் புதன்திசை முப்பத்திரண்டு மாதம் ஒன்பது நாட்களில் கல்வி, ஞானம், பொருள், செல்வம் இவைகளும், பெண்டிரும் மைந்தரும் சுற்றமும் உண்டாதல், அரசரால் புகழ்ந்து வாழ்தல் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1038)

படிமிசைசனியிற்கேது பதின்மூன்றுமதிநாளொன்பான்
கடியதோர்வலக்கால்வாதங் காணுமேபித்தரோகம்
மிடியதுமைந்தனாலே விஷபயமர்த்தநாசம்
கொடியிடையவராற்றுன்பங் கோளினாற்கலகமாமே.

(இ - ள்.) இதில் கேதுபுத்தி பதின்மூன்று மாதம் ஒன்பது நாட்களில் வலதுகால்வாதம், பித்தரோகம், மைந்தனால் தரித்திரம், விஷபயம், செல்வநாசம், மனைவியால் துன்பம்,கோளினால்கலகம் இவைகளுண்டாம், எ - று.

முனிவுறுசனியில்வெள்ளி மாதமோமுப்பத்தெட்டு
இனியதோர்பணிநல்லோர்தம் மின்பமும்வெற்றியுண்டாம்
வனிதையர்சேர்வர்லாப மக்களுஞ்சுற்றமுண்டாம்
தனியொருபகையுமுண்டாந் தன்னையும்வெல்லலாமே.

(இ - ள்.) இதில் சுக்கிரபுத்தி முப்பத்தெட்டு மாதங்களில் நல்லாபரணம், பெண்சுகம், வெற்றி, பெண்கள் சேர்க்கை, லாபம், மக்கள், சுற்றமுண்டாதல், தனியாயொரு பகை வருதல், தன்னையும் வெல்லும் சாமர்த்தியம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1040)

பரவியசனியிற்பானு பதினொன்றுநாளீராறும்
உரமுளரத்தமேக முதரத்திற்சூலைகண்ணோய்
திரமுளமனையாண்மக்கள் சிறித்திடுநோயினாலே
கரமதுவெரிவாங்காலுங் கடுவலிவாதமாமே.

(இ - ள்.) இதில் சூரியபுத்தி பதினொருமாதம் பன்னிரண்டு நாட்களில் ரத்தமேகம், வயிற்றில் சூலை, கண்ணோய், மனைவியும் பிள்ளைகளும் நோயினாலிளைத்தல், கைகால் எரிச்சல், வலிவாதம்என்னும் இவைகளுண்டாம், எ-று.

மதமுறிசனியிலிந்து மாதம்பத்தொன்பதுக்கும்
விதமதாங்கலகம்பீடை வீட்டினில்வழக்குச்சண்டை
பதனமாம்பணிபூணாம் பல்வளம்பொருளுஞ்சேதம்
அதனமாந்தலங்கள்விட்டே யவதியான்மீள்வர்தாமே.

(இ - ள்.) இதில் சந்திரபுத்தி பத்தொன்பதுமாதங்களில் கலகம்,பீடை வீட்டில் வழக்கு, சண்டை, ஆபரணம், பூஷணம், பலவளப்பம், பொருள் இவை சேதம் இடம் விட்டுமாறுதல் என்னும் இவைகளுண்டாம், எ - று.

பலனிலாச் சனியிற்செவ்வாய் பதின்மூன்று நாளொன்பானும்
குலங்களிலீனமிக்க கொடும்பகைபழியுங்காட்டும்
அலைந்திடுதேசமெங்கு மனைவரும்விரோதமாவர்
தலங்களிற்பொன்னுஞ்சோரந் தலம்விட்டுப்பிரியுந்தானே.

(இ - ள்.) இதில் அங்காரகபுத்தி பதின்மூன்று மாதம் ஒன்பது நாட்களில் குலத்தில் ஈனம், மிகுந்த பகை, பழி, தேசமெங்குந்திரிதல், அனை வரும் விரோதம், பொன் சோரம், இடம்விட்டு மாறுதல் என்னும் இவைக ளுண்டாம், எ - று. (1043)

முன்னமேசனியில்ராகு முப்பதுமதிநாளாறும்
சொர்னமுஞ்சேதமாகும் விஷமதுதூரத்திதீண்டும்
இன்னமுஞ்சரீரமெங்கு மேருதவியாதியுண்டாம்
அன்னியர்பகையதாகு மல்லலுமிகுதியாமே.

(இ - ள்.) இதில் ராகுபுத்தி முப்பது மாதம் ஆறுநாட்களில் சொர்னஞ் சேதம், விஷம் தீண்டுதல், சரீரத்தில் வியாதி, அந்நியர் பகை, துன்பம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1044)

முன்புறுசனியின்மன்னன் முப்பதுநாளீராறும்
அன்புறுமடியார்சேவ ராடையாபரணமுண்டாம்
இன்பமாமரசராலே யெண்ணியகருமமாகும்
மின்கொடியுடனேசுற்ற மிகுதியாம்பலனுண்டாமே.

(இ - ள்.) இதில் குருபுத்தி முப்பது மாதம் பன்னிரண்டு நாட்களில் அடியார் சேர்க்கை, ஆடையாபரணமுண்டாதல், அரசரால் நினைத்தகாரியம் முடிதல், பெண்ணுண்டாதல் என்னும் இச்சுப பலன்களுண்டாம், எ - று.

---

## புத திசாபுத்தி பலன்.

வலம்புரிபுதனிற்புந்தி மாதமோரிருபத்தெட்டும்
துலங்குநான்மூவொன்பயனுஞ் சுற்றமுந்துணையுமுண்டாம்
பலந்தருமர்த்தலாபம் பாக்கியமிகவுமுண்டு
நலம்பெருஞானங்கல்வி நாடியகருமமாமே.

(இ - ள்.) புதன் திசையில் புதன் புத்தி இருபத்தெட்டு மாதம் இருபத்தேழு நாட்களில் சுற்றம், சகாயம், அர்த்தலாபம், மிகுந்த பாக்கியம், ஞானம், கல்வி, நாடிய கருமமாதல் என்னும் இவைகளுண்டாம், எ - று.

பரிந்திடும்புதனிற்கேது பதினொருமாதம்பின்னும்
வருந்துநாண்மூவொன்பானு மாதலத்தனைவிட்டேகும்
பொருந்திடும்வியாதிபீடை பொருட்சேதமுற்றார்கேடு
மருந்திடுகுணத்தாற்றுன்ப மனமதுகிலேசந்தானே.

(இ - ள்.) இதில் கேதுபுத்தி பதினொருமாதம் இருபத்தேழுநாட்களில் இடம்விட்டு மாறுதல், வியாதி, பீடை, பொருட்சேதம், சுற்றநாசம் மருந்திடு குணத்தால் துன்பம், மனக்கிலேசம் என்னும் இவைகளுண்டாம், எ - று.

வாசமாம்புதனில்வெள்ளி மாதமுப்பதுமேனன்கு
நேசமாகக்கட்பேறு நேரிழையுடனேயின்பம்
பாசமாஞ்சுற்றம்வித்தை பலவணிமற்றுமுண்டாம்
தேசமேபோனூர்மீள்வர் சேயிழைமணமுமாமே.

(இ - ள்.) இதில் சுக்கிரபுத்தி முப்பத்துநான்கு மாதங்களில்மக்கட்பேறு மனைவியுடன் கூடிய இன்பம், சுற்றம், கல்வி, பல ஆபரணம், இவைகளும் தேசாந்திரம்போனவர்வருதல், விவாகம் என்னும் இவைகளுண்டாம்,எ-று.

நேருற்றபுதனிற்பானு நீடியமாதம்பத்தும்
சீருற்றநாட்களாறுஞ் செந்தழற்பயங்கிலேசம்
பாருற்றமனையாள்பீடை பகைவருவிடையூறுண்டாம்
வாருற்றகொங்கையாளே மன்னராற்றுன்பமாமே.

(இ - ள்) இதில் சூரியபுத்தி பத்துமாதம் ஆறுநாட்களில் அக்கினியால் பயம். கிலேசம் மனைவி, பீடை, பகை, இடையீறு, அரசரால் துன்பம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1049)

வாரணப்புதனிற்சோமன் மாதமேபதினேழுக்கும்
பூரணமானசோகை கண்டபின்புறங்கால்வீக்கும்
காரணக்கலகம்பெண்ணிற் கனபீடைசிலுகுமுண்டு
தாரணிதன்னின்மாந்தர் தமக்கெலாம்பகையதாமே.

(இ - ள்.) இதில் சந்திரபுத்தி பதினேழுமாதங்களில் சோகை கண்டு பின்பு புறங்கால் வீக்கம், பெண்ணாற்கலகம், மிகுந்த பீடை, சிலுகு, உலக மக்கட்கெல்லாம் பகை என்னும் இவைகளுண்டாம், எ - று. (1050)

பன்னியபுதனிற்செவ்வாய் பதினொன்றுநான்மூவொன்பான்
தன்னிலேபித்தரோகங் காமாலைதலைநோக்காடு
வன்னியர்பகைவிரோத மாயுதத்தாலேபீடை
முன்னொருபகையுமுண்டு முடியவேகலகந்தானே.

(இ - ள்.) இதில் அங்காரகபுத்தி பதினொருமாதம் இருபத்தேழு நாட்களில் பித்தரோகம், காமாலை, தலைநோய், அந்நியர் பகை, ஆயுதத்தால் பீடை, முன்பகை, கலகம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1051)

நற்புகன்றனிலைராகு முப்பத்துநான்மூவாறும்
நிற்பர்தார்நிலைவிட்டோடு நீசராறவிஷத்தாலையம்
மற்பொருபூசலுண்டா மனதுநொடார்த்தவாணி
சொற்பனந்தலைநோய்பித்தஞ் சூட்சமாமன்னந்தானே.

(இ - ள்.) இதில் ராகு புத்தி முப்பது மாதம் பதினெட்டு நாட்களில் இடம்விட்டு மாறுதல். நீசராலும் விஷத்தாலும் பயம். சண்டை, மனத் துன்பம், பொருட்சேதம், சொப்பனம், தலைநோய், பித்தம், அன்னக் குறைவு என்னும் இவைகளுண்டாம், எ - று. (1052)

புந்தியிற்பொன்னன்மாதம் புகழ்பெறவிருபத்தேழும்
வந்தநாளாறுமின்ப மன்னரான்மகிழ்ச்சியாகும்
சிந்தையிற்கிலேசமில்லை சிறுவருஞ்சுற்றமுண்டாம்
பைந்தொடிமணமதாகும் பாக்கியமிகவுண்டாமே.

(இ - ள்.) இதில் குரு புத்தி இருபத்தேழு மாதம் ஆறு நாட்களில் இன்பம், அரசரால் மகிழ்ச்சி, மனக்கிலேசமின்மை, மக்களுஞ் சுற்றமு முண்டாதல், விவாகம், பாக்கியம் என்னும் இவைகளுண்டாம், எ - று.

நன்றிசேர்புதனிற்காரி நாலெட்டுமதினொன்பான்
இன்றிடுநன்மைநாளு மெதிர்த்திடும்பகையுமுண்டாம்
சென்றிடும்வலக்காலூனுயாந் திசையுத்திராடந்துன்பம்
மன்றிடுமுற்றார்கேடு மனமதிற்கிலேசமாமே.

(இ - ள்.) இதில் சனிபுத்தி முப்பத்திரண்டுமாதம் ஒன்பது நாட்களில் நன்மை, பகை, வலக்கால் நோய், உத்திராடத்திசையில் துன்பம், சுற்ற நஷ்டம், மனக்கிலேசம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1054)

---

## கேது திசாபுத்தி பலன்.

நண்டியகேதிற்கேதி நாலுநாளிருபத்தேழும்
வேண்டியமனையாண்மக்கட் சகோதரவெறுப்புண்டாகும்
பூண்டிடும்விலங்குகாலில் புரண்டாதியுள்ளேதேறும்
ஆண்டதுவருஷத்தார்க்குத் திசையதுவவதிதானே.

(இ - ள்.) கேது திசையில் கேது புத்தி நான்கு மாதம் இருபத்தேழு நாட்களில் மனைவி மக்கள் சகோதரர் இவர்கள்மேல் வெறுப்பு, புரட்டாசி மாதத்தில் காலில் விலங்கிடுதல், அந்தத்திசையில் அவதி என்னும் இவைக ளுண்டாம், எ - று. (1055)

பூரியேகேதில்வெள்ளி புத்தியீரேழுமாதம்
பாரியுமக்கட்பேறும் பலித்திடுங்கன்றுகாலி
காரியமெல்லாங்கூடும் கடைசியிற்பீடையுண்டு
வீரியமனையாளேயா மீளவுமகன்றுபோமே.

(இ - ள்.) இதில் சுக்கிரபுத்தி பதினான்கு மாதங்களில் மனைவியும், மக்கட்பேறும், கன்று காலியுமுண்டாவதுடன் காரியங் கைகூடுதல், கடைசியிற் பீடை, மனைவி நோய்பட்டகலுதல் என்னும் இவைகளுண்டாம், எ-று.

அந்தமாங்கேதிற்பானு நாற்றிங்களாறுநாளும்
சிந்திடும்பூமிவிட்டுத் தேசம்போய்வருவன்பின்பு
சுந்தரமேனியெங்குஞ் சுரத்தலைநோயுண்டாகும்
மந்தரமூலையினாளே மனமதிற்கிலேசந்தானே.

(இ - ள்.) இதில் சூரியபுத்தி நான்கு மாதம் ஆறுநாட்களில் இடம் விட்டுத் தேசாந்திரம் போய்வருதல், சுரம், தலைநோய், மனக்கிலேசம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1057)

சாதககேவிந்து தன்புத்தியேழுமாதம்
மாதரால்வழக்குச்சண்டை மைந்தர்க்குப்பீடையுண்டாம்
போதவேகன்றுகாலி பொன்னுமாபரணமுண்டாம்
சீதளமுகத்தினாளே தீங்குவந்தகன்றுபோமே.

(இ - ள்.) இதில் சந்திரபுத்தி ஏழு மாதங்களில் பெண்களால் வழக்கு சண்டை, மைந்தர்க்குப் பீடை, கன்று, காலி, பொன் ஆபரணம் இவையுண்டாதல் தீமை வந்தொழிதல் என்னும் இவைகளுண்டாம், எ - று.

கடையரவதனிற்செவ்வாய் கதந்திடுமாதநாலு
இடையுறுமிருபானேழ்நா ளிடர்பயமர்த்தவானி
படையுறுவழக்குச்சண்டை பலபலவிரோதமாகும்
தடையுறும்பெண்ணாற்கேடு தழல்பயமிகவுண்டாமே.

(இ - ள்.) இதில் அங்காரக புத்தி நாலுமாதம் இருபத்தேழு நாட்களில் துன்பம், பயம், செல்வநாசம், வழக்கு, சண்டை, பலபல விரோதம், பெண்ணாற் கேடு, அக்கினி பயம் என்னும் இவைகளுண்டாம், எ - று.

கேதுவிலிராகுபுத்தி கேள்பன்னிரண்டுமாதம்
மீதியபொன்பாநாளும் விஷபயம்வந்துதீரும்
மாதர்கடமக்குப்பீடை மன்னவனசமாவான்
போதவேயர்த்தநாசம் புகழ்நிலைநின்றிடாதே.

(இ - ள்.) இதில் ராகுபுத்தி பன்னிரண்டுமாதம் பதினெட்டு நாட்க ளில் விஷபயம், மனைவிக்குப்பீடை, அரசன்கேடு, பொருட்சேதம், புகழி னில்லாமை என்னும் இவைகளுண்டாம், எ - று. (1060)

பரியுளகேதுவுக்குள் பாங்குள்ளமன்னன்புத்தி
ஒருபதினொன்றுநாட்க ளோராறுமர்த்தலாபம்
மருவியமன்னர்சேர்த்தி விஷபயம்வந்துதீரும்
திருவெனமனையாள்சேர்வள் செல்வமுமிகுதியாமே.

(இ - ள்.) இதில் குருபுத்தி பதினொருமாதம் ஆறுநாட்களில் அர்த்த லாபம், அரசசேர்க்கை, விஷபயம், மனைவி சேர்க்கை, செல்வமிகுதியாகல் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1061)

சதியுறுகேதுவுக்குட் சனிபுத்தியானமாதம்
பதின்மூன்றுநாளொன்பானும் பலபொருட்சேதமாகும்
மதிதலம்பேதமாகு மங்கத்திற்சொறிசிரங்கு
மதிமுகத்தரிவைபீடை மனமதுகிலேசமாமே.

(இ - ள்.) இதில் சனிபுத்தி பதின்மூன்றுமாதம் ஒன்பதுநாட்களில் பல பொருட்சேதம், இடமாறுதல், சரீரத்தில் சொறிசிரங்கு உண்டாதல், பெண் களால் பீடை, மனக்கிலேசமென்னும் இவைகளுண்டாம், எ - று. (1062)

குலமுளகேதிற்புந்தி குறித்திடும்புத்திமாதம்
நலமுறுபத்துமொன்று நாளிருபத்தேழுக்கும்
தலமதுவிட்டுப்போகுந் தமரினாற்பயமுண்டாகும்
நிலைமையாய்ப்புத்திரசோப நினைத்ததுமுடிந்திடாதே.

(இ - ள்.) இதில் புதன்புத்தி பதினொருமாதம் இருபத்தேழு நாட்க ளில் இடம்விட்டுமாறுதல், சுற்றத்தாரால் பயம், புத்திரசோபம், எண்ணிய காரியம் கைகூடாமை என்னும் இவைகளுண்டாம், எ - று. (1063)

---

### சுக்கிர திசாபுத்தி பலன்.

வண்மையாம்புகரில்வெள்ளி மாதங்களுற்பதுக்கும்
உண்மையாம்பணிகண்முத்து முயர்குடைபுரவியானை
தண்மையாம்புன்மைநீங்கி நாளிலேதனமுஞ்சேரும்
எண்மையங்கிசத்திற்றுக்க மெய்துமைப்பசியிற்றானே.

(இ - ள்.) சுக்கிரதிசையில் சுக்கிரபுத்தி நாற்பதுமாதங்களில் ஆபர ணங்கள், முத்துக்குடை, குதிரை, யானை இவைகளுண்டாதல், நன்மையுண் டாய்த் தனலாபமுண்டாதல், ஐப்பசியில் துக்கமுண்டாதல் என்னும் இவை களுண்டாம், எ - று. (1064)

சிறந்திடும்புகரிற்பானு திங்கணீராறுந்துன்பம்
குறைந்திடுந்தனமுநாளிற் கொடும்பகையரசராலே
பறந்திடுமனையாண்மக்கள் பலருடன்வழக்காமென்க
உறைந்திடுதெய்வமுள்ளூ றுறவதுபகையதாமே.

(இ - ள்.) இதில் சூரியபுத்தி பன்னிரண்டு மாதங்களில் துன்பம், தனக்குறைவு, அரசரால் பகையுண்டாதல், மனைவிமக்களுடன் வழக்கிடுதல், தெய்வம் சுற்றத்தார்க்குப்பகை என்னும் இவைகளுண்டாம், எ - று.

மருவியபுகரிற்சோமன் மாதமோரிருபதுக்கும்
கருதியகருமநாளில் வந்துகைகூடுமென்க
அருகுறுமனையாளாலே யடர்பகைவந்துதீரும்
கருதியவின்பமாதர் தம்மொடுமிணக்கமாமே.

(இ - ள்.) இதில் சந்திரபுத்தி இருபது மாதங்களில் கருமம் கைகூடுதல், மனைவியால்பகை, இன்பம், பெண்களிடத்திணக்கம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1066)

புண்ணியபுகரிற்செவ்வாய் புகறிங்களீரேழுக்கும்
நண்ணியபூமியுண்டா நாரியாற்கருமநாசம்
எண்ணியதேவர்சேவை யிருவராற்பகையுண்டென்னும்
கண்ணினோய்மெய்யிற்குட்டங் கண்டுதீருந்தானே.

(இ - ள்.) இதில் அங்காரகபுத்தி பதினான்குமாதங்களில் பூமியுண்டாதல், மனைவியால் காரியபங்கம், தேவசேவை, இருவரால்பகை, கண்ணோய் குட்டம் இவைகளுண்டாம், எ - று. (1067)

திருந்தியபுகரில்ராகு திங்களோர்முப்பத்தாறும்
பொருந்தியமுனியைப்போலே பூமியிற்றபசுசெய்வன்
வருந்தியேமைந்தராலே வருங்கலகங்கண்மெத்த
அருந்தியமருந்தினாலே விஷமதாயலைவன்றானே.

(இ - ள்.) இதில் இராகுபுத்தி முப்பத்தாறு மாதங்களில் தபசு செய்தல், மைந்தரால் கலகம் வருதல், தின்றமருந்து விஷமதாய் அலைதல் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1068)

முன்புறுபுகரின்மன்னன் முப்பத்திரண்டுமாத
மின்புறுதானியங்க ளெய்துமேயர்த்தலாபம்
அன்புறுமறையோராலே யதிசயமிகவுமுண்டாம்
மன்புகழ்தோணியவிட்டத் திசையினில்வருத்தமாமே.

(இ - ள்.) இதில் குருபுத்தி முப்பத்திரண்டு மாதங்களில் தானியலாபம், அர்த்தலாபம், மறையோரால் அதிசயமுண்டாதல், தோணி, அவிட்டம் இத்திசைகளில் வருத்தம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1069)

சாலவேவெள்ளிதன்னிற் சனிமாதமுப்பத்தெட்டும்
மூலமாநோயினாலே முயங்கியேமீளுங்கைகால்
வேலெனும்விழியாய்துன்ப மெய்யினில்ரோகமுண்டு
ஆலமாம்விஷம்போலன்ன மரோசிகமாகுந்தானே.

(இ - ள்.) இதில் சநிபுத்தி முப்பத்தெட்டு மாதங்களில் மூலநோய், கை கால் நோய், சரீரத்தில் ரோகம், துன்பம், அன்னத்துவேஷம் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1070)

வெள்ளியிற்புந்திமாதம் விரும்புமுப்பத்துநான்கும்
தெள்ளியமனையாண்மக்கள் சிறுடன்பொருளுண்டாகும்
வள்ளியகல்விஞானம் வாக்கினாற்பாடலாகும்
நள்ளியசிவப்பனாலே நன்மைகள்பலவுண்டாமே.

(இ - ள்.) இதில் புதன்புத்தி முப்பத்துநான்கு மாதங்களில் மனைவி மக்கள் சிறப்பு, பொருள் சேர்வை, கல்வி, ஞானம், வாக்கினால் பாடுதல், சிவப்பனாலே நன்மைகள் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1071)

இட்டமாம்வெள்ளிதன்னிற் கேதுவீரேழுமாதம்
துட்டமாமிருகத்தாலே துன்பமுமிகவுண்டாகும்
அட்டமாமனையாடன்னி னனுபோகத்தாலேநோயாம்
திட்டமாய்விஷந்தான்வீட்டிற் றீண்டியேமீளுந்தானே.

(இ - ள்.) இதில் கேதுபுத்தி பதினான்கு மாதங்களில் துட்டமிருகத்தால் துன்பம், மனைவியின் சம்போகத்தால் நோய், விஷந்தீண்டியிறங்கல் என்னும் இவைகளுண்டாம், எ - று. (1072)

புத்தியின்பலன்கடம்மைப் பொதுமையாயுரைத்தாரேனும்
சித்தமாய்க்கோள்கணின்ற திரிகோணங்கேந்திரமுச்சம்
தத்தியவியமாறெட்டுப் பகைநீசந்தான்சேரம்சம்
ஒத்தநல்லாதிபத்தியம் வர்க்கமோடவஸ்தைவக்கிரம்.

(இ - ள்.) புத்தியின் பலன்களைப் பொதுவாகச் சொன்னாலும் கிரகங்கள் நின்ற திரிகோணம், கேந்திரம், உச்சம், பன்னிரண்டு, ஆறு, எட்டாமிடங்கள் பகை, நீசம் இவைகளி னம்சங்கள், ஆதிபத்தியம், வர்க்கம், அஸ்வதை, வக்கிரம், எ - று. (1073)

பாவத்திற்கண்டயோக மவயோகந்தன்னைப்பார்த்தும்
பூவருமானேநல்ல பலன்களைப்புகலவேண்டும்
தாவறுசித்திரமுட்சித் திரத்திற்கும்புத்திபோல
ஓவறப்பலன்கள்சொல்வ ருயர்மதிவல்லோர்தாமே.

(இ - ள்.) கண்டயோகம் அவயோகம் இவைமுதலியவற்றைப் பார்த்து பெண்ணே! நல்ல பலன்களைச் சொல்லவேண்டும். அன்றி சித்திர உட்சித்திரங்களுக்கும் புத்திபோலவே பார்த்து மதியூகிகள் பலன்கள் சொல்லுவார்கள், எ - று. (1074)

## மகாதிசை பலனறிய.

### வெண்பா.

சீரார் திசாபலனைத் தேர்ந்துபின்சொல்ல வெண்பாய்
பாரோர் முன்னேயானும் பாடவே—மோராருங்
கையா னளித்தமலர்க் கையானைக் காய்ந்தமழுக்
கையான்சுதன் முன்னோன் காப்பு.

(இ - ள்.) திசாபலன்களை யாராய்ந்து வெண்பாவாகப் பாடுதற்கு மன்மதனைக் காய்ந்த மழுக்கையோனாகிய பரமசிவன் தந்த விநாயகனே காப்பாவான், எ - று. (1075)

## சூரியன் மகாதிசை பலன்.

அக்கினி யால்பீடை யமைவிருத்தி பொன்சேத
மிக்கபயஞ் சத்துருவால் மேவுபகை—யொக்கவே
கண்ணோய் சிரரோகங் காதற் பிதாமிருத்தி
யெண்ணு மிரவி திசைக்கே.

(இ - ள்.) சூரியதிசையில் அக்கினியால் பீடை, அமைவிருத்தி, பொன்சேதம், பயம், சத்துருவால் பகை, கண்ணோய், தலைநோய், பிதாமிருத்தி என்னும் இக்குணங்களுண்டாம், எ - று. (1076)

## சந்திர மகாதிசை பலன்.

ஆரோக்கியங்கள் சுபமர்த்தலாபம்பிரியஞ்
சீரார்புவிலாபஞ் செல்வருண்டாம்—பாராளப்
பாக்கியமுமின்பம் பரவுவிவாகங்களுடன்
றேக்குசசியின் றிசை.

(இ - ள்.) சந்திரதிசையில் ஆரோக்கியம், சுபம், தனலாபம், பிரியம், புவிலாபம், மக்கட்பேறு, பாக்கியம், இன்பம், விவாகங்கள் என்னும் இக்குணங்களுண்டாகும், எ - று. (107 7)

## செவ்வாய் மகாதிசை பலன்.

சித்தப்பிரமைவருஞ் செங்கோலால்சோரரால்
மெத்தபயமிருத்தி வெண்குட்டம்—மத்தப்
பிரமியமீளைப் பெருகிவருஞ்செவ்வாய்
பாவுசேய்திக்கில் பார்.

(இ - ள்.) அங்காரகதிசையில் சித்தப்பிரமை, செங்கோலால் கள்ளரால் பயம், மிருத்தி, வெண்குஷ்டம், பிரமியம், ஈளை என்னும் இக்குணங்களுண்டாம், எ - று. (1078)

## இராகு மகாதிசை பலன்.

துற்சேட்டைபீடைநட்டந் துக்கந்துர்விருத்தி
யற்றமனத்தஞ் சொயமக்கினியால்—செச்சையுட்
காசுவிநாசம்பார்க்கில் தலமறப்பாக்கியமாந்
தேசுகரும் பாம்பின்றிசை.

(இ - ள்.) இராகுதிசையில் துர்ச்சேஷ்டை, நஷ்டம், துக்கம், துர்விர்த்தி இக்குணங்களுண்டாகும், எ - று. (1079)

## குரு மகாதிசை பலன்.

வித்தைசெயம் புத்திரசம் பத்துமிகுமரசர்
சித்தமகிழ்சன்மானஞ் சேருமே—மெத்த
அபிடேக பூடணமு மாதிபத்தியங்கள்
பவுசாங் குருதிசைக்குப்பார்.

(இ - ள்.) குருதிசையில் வித்தை, வெற்றி, புத்திரசம்பத்து, அரசசன்மானம், அபிஷேகம், பூஷணம், ஆதிபத்தியம் என்னும் இக்குணங்களுண்டாம், எ - று. (1080)

## சனி மகாதிசை பலன்.

சோகம்பயமிலங்குந் துக்கமகோதரமுண்
டாகுமபிமானமது கெடுமே—வாகன
மாட்டுக்குஞ்சேதம் வருமுயிர்த்தமுண்டாகுந்
தீட்டு சனியின்றிசை.

(இ - ள்.) சனி திசையில் சோகம், பயம், துக்கம், மகோதரம், அபிமானம், மாட்டுக்குச் சேதம், உயிர்த்தமுண்டாதல் என்னும் இக்குணங்களுண்டாம், எ - று. (1081)

## புத மகாதிசை பலன்.

பண்ணியதோர்செட்டும் பயிர்ச்செலவுந்தான்பொசிக்கும்
நண்ணுவிரகம்பூமி லாபமாம்—எண்ணுந்
தனலாபம்பங்குகொள்ளத் தானும்வெகுலாபங்
கனமாம்புதன்றிசைக்குள் காண.

(இ - ள்.) புதன்திசையில் பண்ணினவகையும், பயிர்ச்செலவு, பூலாபமும், தனலாபமும், பங்குசேரலாம் என்னும் இக்குணங்களுண்டாம், எ - று.

## கேது மகாதிசை பலன்.

பித்தஞ்சயரோகம் பெண்மருந்தினாலிளைப்பன்
சுத்தந்தரித்திரமுஞ் சூனியமு—மெத்த
வருபாடுமாயுமே வாய்த்திறல்கேது
உருவாய் மருவுதிசைக்குள்.

(இ - ள்.) கேது திசையில் பித்தம் க்ஷயம் பெண் மருந்தாலிளைத்தல் சுத்தம் தரித்திரம் சூனியம் வருமானக்குறைவு என்னும் இக்குணங்களுண்டாம், எ - று. (1083)

## சுக்கிர மகாதிசைப் பலன்.

மன்னர்மறையோர்தமிழர் வாஞ்சிப்பர்வாகனமு
முன்னுசத்திசாமரைபொன் னுண்டாகு—மின்னும்
விவாகஞ்சுபம்பிரிய மெய்துஞ்பிணிபோஞ்
சுவாகப்புவிலாபச் சுக்கிரன்.

(இ - ள்.) சுக்கிரதிசையில் அரசர், பிராமணர், தமிழர் இவர்கள் வாஞ்சினை வாகனமுண்டாதல், சத்திரம், சாமரை செல்வமுண்டாதல், விவாகம், சுபம், இன்பம் இவைகளுண்டாதல், பிணிபோதல் என்னும் இக்குணங்களுண்டாம், எ - று. (1084)

## கோசாரபலன்.

### வேறு.

ஓதியகோசரந்திசை சக்கரங்கடம்மில்
உதித்தநவக்கிரகத்தா லுண்டாகும்பலன்கள்
ஆதவன்செவ்வாயிருவர்க் காதியிலேபலன்கள்
அம்புலிக்கும்புதனுக்கு மனுதினமும்பலனே
பீதகன்சுக்கிரன்கண் மத்தியத்திற்றருவர்
பெருகுசனிபாம்பிரண்டும் பிற்பலனேதருவர்

சூதுமதக்கரிக்கோட்டைக் கமலமாமுகையைச்
சுந்தரப்பொற்கிரியைவென்ற துணைமுலைமாமயிலே.

(இ - ள்.) கோசாரதிசைச் சக்கிரத்திலுண்டாம் நவக்கிரகங்களால் வரும் பலன்களாவன: சூரியன் அங்காரகனிருவரும் ஆதியிலும், சந்திரனும் புதனும் எப்போதும், குருவும் சுக்கிரனும் மத்தியிலும், சனியும் ராகு கேதுக்களும் கடையிலும் பலனைத்தருவாரென்று மதக்கரி முதலியவற்றைப் பொருவும் முலையாளே! நீ அறிக, எ - று. (1085)

## கோசார வேதை.

### வேறு.

இரவியைந்தின்மதி யெட்டினேழிற்சேய்
பரவுமூன்றிற்பொன் பார்க்கவனாறிலு
விரவுபுந்தி நான்கொன்பானிராகுசன்
உரவுசென்ம முறிற்கடுங்கேடுறும்.

(இ - ள்.) சந்திரலக்கினத்திற்கு ஐந்தில் சூரியனும், எட்டில் சந்திரனும், எழில் அங்காரகனும், மூன்றில் குருவும், ஆறில் சுக்கிரனும், நான்கில் புதனும், ஒன்பதில் ராகுவும், சென்மத்தில் சநியுமிருந்தால், கொடுமைகளெல்லாமுண்டாம், எ - று. (1086)

## கோசார நற்பல ஸ்தானம்.

### வேறு.

கதிர்பதினொன்றுமூன்று கருதுபத்தாறினல்லன்
மதியொன்றுமூன்றோராறு மன்னுமேழ்பதுபன்னொன்றும்
பதிபுகன்பேய்சுன்ராகு பதினொன்றுமூன்றாறும்
மதிகமகதற்கிரண்டோராறு மன்னெட்டுப்பதுபன்னொன்றே.

(இ - ள்.) சந்திர லக்கினத்திற்குச் சூரியன் பதினொன்று மூன்று பத்து ஆறிலும், சந்திரன் ஒன்று மூன்று ஆறு எழு பத்து பதினொன்றிலும், அங்காரகன் சநி ராகு இவர்கள் பதினொன்று மூன்று ஆறிலும், புதன் இரண்டு ஆறு எட்டு பத்து பதினொன்றிலுமிருந்தால் நல்ல பலனைக் கொடுப்பார்கள், எ - று. (1087)

பொன்னவன்பதினொன்றுன்பான் பொருந்துமேழைந்திரண்டாம்
துன்னுசுக்கிரற்கொன்றுதி யைந்துமோரெட்டொன்பானும்
பன்னொன்றீராறுதன்னிற் பற்றிடினல்லராவர்
அன்னமேவேதைக்கோள்க ளூறிற்றீயராவரென்னே.

(இ - ள்.) குரு பதினொன்று ஒன்பது எழு பத்திலும், சுக்கிரன் ஒன்று முதல் ஐந்தும் எட்டு ஒன்பது பதினொன்று பன்னிரண்டிலுமிருந்தால் நல்ல பலன் கொடுப்பவர்களும், வேதைக்கிரகங்களிலிருந்தால் தீயவர்களு மாவார்கள், எ - று. (1088)

## வேதை ஸ்தானம்.

சூரியற்குரைத்தவீட்டிற் கேழிற்கோணின்றாலும்
கூரியமதிக்கைக்கொன்பான் குலவுமீராறிரண்டும்
ஏர்பெறுமொருநான்கெட்டு மிராகுசன்சேய்தமக்குக்
கார்பெறுங்குழலாயைந்தீ ராறொன்பானெனுங்கணக்கும்.

(இ - ள்.) சூரியனுக்கு மொழிந்த வீட்டுக்கு ஏழில் கிரகமிருந்தாலும், சந்திரனுக்கு ஐந்து ஒன்பது பன்னிரண்டு இரண்டு நான்கு எட்டிலும், இராகு சனி அங்காரகர்களுக்கு ஐந்து பன்னிரண்டு ஒன்பது என்னும் கணக்கிலும், எ - று. (1089)

புந்திக்கைந்தொன்பானொன்றெட் டீராறிற்றனிப்பொன்னுக்
கந்தமாமெட்டுப்பத்து மூன்றுநான்கீராறாகும்
சந்தமார்புகருக்கெட்டே ழொன்றுபத்தொன்பதைந்தும்
உந்துபன்னொன்றுமூன்றோ டாறுமுன்முறைக்குவேதை.

(இ - ள்.) புதனுக்கு ஐந்து ஒன்பது ஒன்று எட்டு பன்னிரண்டிலும், குருவுக்கு எட்டு பத்து நான்கு பன்னிரண்டிலும், சுக்கிரனுக்கு எட்டு எழு ஒன்று பத்து ஒன்பது ஐந்து பதினொன்று மூன்று ஆறிலும் கிரகமிருந்தால் அது வேதை ஸாதனமாம், எ - று. (1090)

## அஷ்டக வர்க்கம்.

ஆதித்தன்றனக்காறெட்டா மம்புலிக்குதன்மேலொன்றும்
வாதிக்குஞ்செவ்வாய்மந்தன் றமக்குமாமுப்பத்தொன்பான்
போதிக்கும்புதற்கைம்பானோ டொருநான்குபொன்னேழெட்டாம்
கோதற்றபுகர்க்கைம்பானோ டிரண்டட்டவர்க்கங்கூறே.

(இ - ள்.) சூரியனுக்கு நாற்பத்தெட்டும், சந்திரனுக்கு நாற்பத்தொன்பதும், அங்காரகன் சனி இவர்களுக்கு முப்பத்தொன்பதும், புதனுக்கு ஐம்பத்துநான்கும், குருவுக்கு ஐம்பத்தாறும், சுக்கிரனுக்கு ஐம்பத்திரண்டுமாக அஷ்டகவர்க்கஞ் சொல்லுக, எ - று. (1091)

## வேறு.

கூறியவிரவிதனிலரிசேய் சுன்குலவு மொன்றிரண்டுநான் கோரேழ்கூடிருநான்கொன்பான்பது பன்னொன்று மதிக்கோ டொரு மூன்றும், ஆறுபத்துடன் பன்னொன்றதாம் புந்திக்கான மூன்றைந்

துடனுலும் அடுத்திடுமொன்பத்துபன்னொன் றீராறுபொன்னைந்து மாராறு, வீறுறுமொன்பானே டுபன்னொன்றேவிளங்கிய புகரினுக் காறுமேவுமேழீராகும் லக்கினமோ விரும்புமூன்றும் வருநான்கும், ஆறுமீரைந்தும் பத்துடனொன்றீரா றிரண்டாகு மென்றவாய் அன நடைமையின்சாயன்மான் விழியுமமைநிகர் தோளுடையணங்கே.

(இ - ள்.) சூரியன்பால் நாற்பத்தெட்டில் சூரியன் அங்காரகன் சநி இவர்களுக்கு ஒன்று இரண்டு நான்கு எழு எட்டு ஒன்பது பத்து பதினொன்று ஆக ஒவ்வொருவர்க்கெட்டெட்டும், சந்திரனுக்கு மூன்று ஆறு பத்து பதி னொன்று ஆக நான்கும், புதனுக்கு மூன்று ஐந்து ஆறு ஒன்பது பத்து பதி னொன்று பன்னிரண்டு ஆக எழும், குருவுக்கு ஐந்து ஆறு ஒன்பது பதி னொன்று ஆக நான்கும், சுக்கிரனுக்கு ஆறு எழு பன்னிரண்டு ஆக மூன் றும், லக்கினத்திற்கும், மூன்று நான்கு ஆறு பத்து பதினொன்று பன்னி ரண்டு ஆக ஆறும், ஆகுமென்று அன்னநடை முதலியவற்றையுடைய பெண்ணே! நீ சொல்லுவாய், எ - று. (1092)

மதியிலிரவிமூன்றுடனாறேழ் வருமெட்டுபத்துபன் னொன்றும் மதியொன்றுமூன்றுமாறுடனேழு மன்னுபத்துடன்பதினொன்றும், துதிகுசனிரண்டுமூன்றுடனைந்தா றொன்பதீரைந்து பன்னொன்றும் சொல்லுமாற்கொன்று மூன்றுநான்கைந்துந் தொடருமேழெட்டுமீ ரைந்தும் பதினொன்றும்பொன்னிற் கொன்றிரண்டொருநான்காகு மேழெட்டுபத்துடனே - பகருபன்றொன் றும்புகர்க்கு மூன்றொரு நான்கைந்துட னெழுமான்பானும், அதிகமாம் பதுமன்னொன்று சன்மூன்று மைந்திரு மூன்றுபன்றொன்றும் - அமருலக்கினமூன்றுறு மீரைந்துமாம்பதி னொன்றென வரைவாய்.

(இ - ள்.) சந்திரன்பால் நாற்பத்தொன்பதில் சூரியனுக்கு மூன்று ஆறு எழு எட்டு பத்து பதினொன்று ஆக ஆறும், சந்திரனுக்கு ஒன்று மூன்று ஆறு எழு பத்து பதினொன்று ஆக ஆறும், அங்காரகனுக்கு இரண்டு மூன்று ஐந்து ஆறு ஒன்பது பத்து பதினொன்று ஆக எழும், புதனுக்கு ஒன்று மூன்று நான்கு ஐந்து எழு எட்டு பத்து பதினொன்று ஆக எழும், சுக்கிரனுக்கு மூன்று நான்கு ஐந்து எழு ஒன்பது பத்து பதினொன்று ஆக எழும், சநிக்கு மூன்று ஐந்து ஆறு பதினொன்று ஆக நான்குமாமென்று சொல்லுவாய், எ - று. (1093)

சேயினிலிரவிமூன் றைந்திருமூன்று செப்பிய பத்துபன்னொன் றும் - செழுமதி பொருமூன்றுபன் னொன்றுஞ் சேர்குச னொன்றிர டொருநான்காயவேழிருநான் கொருபதுபன்றொன்றுகு நற்புலவன் மூவைந்தே அழகுறு மிருமூன்றொருபதினொன்று மணிகொள்பொன்

மூவிரண்டைந், தேயபன்னொன் றீராறுசுக்கிரற் கோலியவிருமூன் றெட்டுப் பதினொன்-றேதமற்றிடு மீராறுமந்தனுக்கோன் றிரண் டேழ்முதலைக்கெண், தூயலக்கினத்திற்கொன்றுமூன்று சொலத்தகு பத்துபன்னொன்றும், தோடிவர் செவியைத்தாவி மீண்டிகலுந் துணை விழிப்பணை முலைமயிலே.

(இ - ள்.) அங்காரகன்பரல் முப்பத்தொன்பதில் சூரியனுக்கு மூன்று ஐந்து ஆறு பத்து பதினொன்று ஆக ஐந்தும், சந்திரனுக்கு மூன்று ஆறு பதினொன்று ஆகமூன்றும், அங்காரகனுக்கு ஒன்று இரண்டு நான்கு எழு எட்டு பத்து பதினொன்று ஆக எழும், புதனுக்கு மூன்று ஐந்து ஆறு பதினொன்று ஆக நான்கும், குருவுக்கு ஆறுபத்து பதினொன்று பன்னிரண்டு ஆக நான்கும், சுக்கிரனுக்கு ஆறு எட்டு பதினொன்று பன்னிரண்டு ஆக நான்கும், சனிக்கு ஒன்று நான்கு எழு எட்டு ஒன்பது பத்து பதினொன்று ஆக எழும், லக்கினத்திற்கு ஒன்று மூன்று ஆறு பத்து பதிமூன்று ஆக ஐந்தாகுமென்று அறிகபெண்ணே, எ - று. (1094)

புந்தியிலிரவிக்கைந்திரு மூன்றொன்பான் பதினொன்று பன்னி ரண்டாம்-புகழ்மதி யிரண்டீரண்டிரு மூன்றெட்டொருபது புகல் பதினொன்றும், உந்துசேய்மந்தர் கொன்றிரண்டொருநான் கொளிரு மேழாதியைத் தெண்ணும - உயர்புதற்கொன்றூர் மூன்றுநல்லைந்தா றொன்பஃதாதிநான் கெண்ணும் சந்தமார், பொன்னுக்கொன் றாதி யைக்கெண்ணுந் தானெட்டொன் பதுபதினொன்றும், தந்தலக்கி னத்திற் கொன்றிரண்டொருநான் காறிருநான்கு சார்பத்துந் தரு பதினொன்றுந் தண்மலருறைபொன் றன்னைநேர்தார்குழலாளே.

(இ - ள்.) புதன்பரல் ஐம்பத்து நான்கில் சூரியனுக்கு ஐந்து ஒன்பது பதினொன்று பன்னிரண்டு ஆக ஐந்தும், சந்திரனுக்கு இரண்டு நான்கு ஆறு எட்டு பத்து பதினொன்று ஆக ஆறும், அங்காரகனுக்கும் சனிக்கு ஒன்று இரண்டு நான்கு எழு எட்டு ஒன்பது பத்து பதினொன்று பன்னிரண்டு ஆக எட்டும், குருவுக்கு ஆறு எட்டு பதினொன்று பன்னிரண்டு ஆக நான்கும், சுக்கிரனுக்கு ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து எட்டு ஒன்பது பதினொன்று ஆக எட்டும், லக்கினத்திற்கு ஒன்று இரண்டு நான்கு ஆறு எட்டு பத்து பதினொன்று ஆக எழுமாமென்று லட்சுமீகர்த்த நங்காய்! நீ அறிவாயாக, எ - று. (1095)

பொன்னிலிரவிக்கொன்றாதி நான்கெண் புகலுமே ழாதியைந் தெண்ணும் - புதுமதிக்கிரண்டே ழைந்தொன்பான் பதினொன்றாய்ப் புகல்சேய் தனக்கொன்று, துன்னிரண்டொருநான் கேழிருநான்

கிரைந்தோ ருென்பதாதி மூன்றெண்ணும், நன்னயப்பொன்னுங் கொன்ருதிநாண்கெண்ணவிலுமே மெட்டொருபஃதாதி மூன்றெண் ணும், கன்னினுக்கொரு மூன்றைந்திரு மூன்றீராறுலக்கினத்தினுக் கொன்று, துய்யரண்டொருநான் கைந்திருமூன்றே மொன்பஃதாதி மூன்றெண்ணும்.

(இ - ள்.) குருவின் பரல் ஐம்பத்தாறில் சூரியனுக்கு ஒன்று இரண்டு மூன்று நான்கு ஏழு எட்டு ஒன்பது பத்து பதினொன்று ஆக ஒன்பதும், சந்திரனுக்கு இரண்டு ஏழு ஐந்து ஒன்பது பதினொன்று ஆக ஐந்தும், அங்காரகனுக்கு ஒன்று இரண்டு நான்கு ஏழு எட்டு பத்து பதினொன்று ஆக ஏழும், புதனுக்கு ஒன்று இரண்டு நான்கு ஐந்து ஆறு ஒன்பது பத்து பதினொன்று ஆக எட்டும், குருவுக்கு ஒன்று மூன்று நான்கு ஏழு எட்டு பத்து பதினொன்று ஆக எட்டும், சுக்கிரனுக்கு இரண்டு ஐந்து ஆறு பன்னிரண்டு ஆக நான்கும், லக்கினத்திற்கு ஒன்று இரண்டு நான்கு ஐந்து ஆறு ஏழு ஒன்பது பத்து பதினொன்று ஆக ஒன்பதுமாமென்றறிக, எ - று. (1096)

புகரினிலிரவிக்கெட்டு பன்னொன்றீராறு திங்கட்கொன்று மூதலாப்புகலுமைந்தெண்ணு மெட்டுமொன்பான் பன்னொன்று பன்னிரண்டதாஞ்சேய்க்குத் தகவுறுமூன்று நான்கிருமூன்ருென்பான்பதினொன்று பன்னிரண்டாம்-சார்புதன் மூன்றைந்தாறு நல்லொன்பான் றங்குற்றமூன்றெண்ண தாம்புகருக் கியலுமொன்ருதி யானவைந்தெண்ணிமெட்டு மூன்னைநான்கெண்ணும், நற்கருமந்தற்கு மூன்று நான்கைந்து நவிலுமெட்டாதிநான்கெண்ணும் - நட்டுலக்கினமொன்றுருதியைந்தெண்ணுநாலிரண் டொன்பானொன்றே.

(இ - ள்.) சுக்கிரன் பரல் ஐம்பத்திரண்டில் சூரியனுக்கு எட்டு பதினொன்று பன்னிரண்டு ஆக மூன்றும், சந்திரனுக்கு ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து எட்டு ஒன்பது பதினொன்று பன்னிரண்டு ஆக ஒன்பதும், அங்காரகனுக்கு மூன்று ஐந்து ஆறு ஒன்பது பதினொன்று பன்னிரண்டு ஆக ஆறும், புதனுக்கு மூன்று ஐந்து ஆறு ஒன்பது பதினொன்று ஆக ஐந்தும் குருவுக்கு ஐந்து எட்டு ஒன்பது பத்து பதினொன்று ஆக ஐந்தும், சுக்கிரனுக்கு ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து எட்டு ஒன்பது பதினொன்று ஆக ஒன்றிலும், சனிக்கு மூன்று நான்கு ஐந்து எட்டு ஒன்பது பதினொன்று ஆக எழும், லக்கினத்திற்கு ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து எட்டு ஒன்பது பதினொன்று ஆக எட்டுமாம் என்று அறிக, எ - று. (1097)

வேறு.

சனியிலிரவிக் கொன்றிரண்டொருநான் கேழுடனெட்டு நற்பத்து, தங்குபன்னொன்ருமம் புலிமூன்ருறும்பதினொன்று சேய்

தனக்கே இனியமூன்றைந்தாறீரைந்து பதிணொன்றீராறதாகும் புந்திக்கோ, இயலுமாறு மெட்டாதியைந்தெண் ணிமயவர்குருவினுக்கைந்து, தனியோ ராறுபதிணொன்றீராறுங் கவிக்குநல்லாறுபன்ணொன்று, காட்டுமீராறுங் கணவரைவனசமாமுகை நேர்முலையாளே, புனைகருமேனிச் சனியொரு மூன்றைந்தாறு பன்ணொன்றெனப்புகவர், போற்றும்லக்கினத்திற் கொன்மூன்றொரு நான்காறு பத்துப் பதிணொன்றே.

(இ - ள்.) சனியின் பரல் முப்பத்தொன்பதில் சூரியனுக்கு ஒன்று இரண்டு நான்கு ஏழு எட்டு பத்து பதிணொன்று ஆக ஏழும், சந்திரனுக்கு மூன்று ஆறு பதிணொன்று ஆக மூன்றும், அங்காரகனுக்கு மூன்று ஐந்து ஆறு பத்து பதிணொன்று பன்னிரண்டு ஆக ஆறும், புதனுக்கு ஆறு எட்டு ஒன்பது பத்து பதிணொன்று பன்னிரண்டு ஆக ஆறும், குருவுக்கு ஐந்துஆறு பதிணொன்று பன்னிரண்டு ஆக நான்கும், சுக்கிரனுக்கு ஆறு பதிணொன்று பன்னிரண்டு ஆக மூன்றும், சனிக்கு மூன்று ஐந்து ஆறு பதிணொன்று ஆக நான்கும், லக்கினத்திற்கு ஒன்று மூன்று நான்கு ஆறு பத்து பதிணொன்று ஆக ஆறுமாம் என்றறிக, எ - று. (1098)

வேறு.

கோணமூன்றிற்பரல்சரியாக் குலவின்மூன்றுமெடுத்திக்
கோணந்தனிலொன்றிற்குறையிற் குறைந்தபடியேருறையிரண்டும்
கோணந்தனிலொன்றிற்பாலே கூடாதிருக்கிற்சோதனையக்
கோணந்தனக்குமில்லையெனக் கூறுவன்சமலர்மானே.

(இ - ள்.) லட்சுமிபோல்பவளே! திரிகோணராசி மூன்றிலும் பரல் சரியாயிருந்தால் மூன்றையும் எடுத்துப்போடவும், ஒரு ராசியில் குறைந்திருந்தால் அப்படியே மற்றைய ராசிகள் பரலையும் குறைத்துப் போடவும், ஒரு ராசியில் பரலில்லாதிருந்தால் திரிகோண சோதனையில்லை யென்னுஞ் சொல்லுக, எ - று. (1099)

மானேயிரண்டுமனை தனிலு மருவிக்கோள்களின்றுலும்
தேனேகோணின்றிடுமனையிற் பரலுற்றொன்றினிலதெனினும்
தானேரிரண்டிற்கோளின்றி மன்னுமொன்றில்பரலுறினும்
கானேர்சிங்கடத்திற் கனமேசோதித்திடுதலிலை.

(இ - ள்.) பெண்ணே! இரண்டு வீடுகளிலும் கிரகங்கள் சேர்ந்திருந்தாலும் கிரகமிருந்த ராசியில் பரலிருந்து ஒன்றில் இல்லையானாலும் இரண்டிலும் கிரகமின்றி ஒன்றில் மாத்திரம் பரலிருந்தாலும், சிங்க கடகங்களுக்குச் சோதனையில்லை, எ - று. (1100)

இல்லாதிரண்டுராசியிற்கோ ளியலும்பரல்கள்சரியுறினும்
வல்லாக்கோளுற்றிடுமனைபா ழாகிமற்றொன்றுற்றிடினும்

வில்லாக்கேளூற்றிடும்பரற்கு மேவுமெதிரிற்சமன்குறைமேல்
அல்லாருழலாய்ப்பாலே யகற்றுமென்பாரறிவோரே.

(இ - ள்.) இரண்டுராசியிலும் கிரகமில்லாமல் பரல் சரியாயிருந்தாலும் கிரகமிருக்கும் ராசி பாழாய் மற்றொன்றி லிருந்தாலும் கிரகமிருக்கும் பரலுக்கு எதிரில் பரல் ஒத்திருந்தாலும் குறைந்தாலும் அப்பரலை எடுத்துப் போடென்பார் அறிவுடையோர், எ - று. (1101)

ஓராய்கோளோர்மனையுறமற் றொன்றிலதிகப்பரலுறினும்
சீரார்கோளின்றிப்பரல்கள் சேர்ந்தொன்றிற்கதிகமதேல்
வாரார்கொங்கைமதிவதன மானேர்விழிநன்மடமாதே
ஏரார்பரலைநேராகவிருக்கச் செய்வாயெனவுரைத்தார்.

(இ - ள்.) ஒரு ராசியில் கிரகமிருக்க மற்றொன்றில் பரல் அதிகமிருந்தாலும் கிரகமில்லாமல் பரல் மாத்திரம் ஒன்றுக்கொன்று அதிகமானால் அதைச் சரியாயிருக்கச் செய்வாயென்று கச்சிறுக்கிய தன முதலியவற்றையுடையவளே பெரியோர் கூறினர், எ - று. (1102)

வே று.

உறைத்தகோள்களுறுஞ் சமுதாயமாய
விரைத்தவார்குழ லவ்வவ்விராசியில்
நிரைத்தபிந்தை யொன்றச்செறித்திட்டதே
திரைத்தநற்சரு வாட்டகஞ்சேருமே.

(இ - ள்.) வாசனை கமழும் கூந்தலுடையாளே! சொல்லப்பட்ட கிரகங்கள் கூட்டமாயிருந்தாலும் அவ்வவ்விராசியி லிருந்த பிந்தை ஒன்றாய்ச் சேர்ந்ததே சர்வாட்டகமாகும், எ - று. (1103)

இலக்கினமாதிநந்நான்கு வீட்டிலிருந்திடுபரல்களைக்கூட்டி
உலப்பறுமூன்றுதொகையினின் முறையேயுயர்பரலைக்கொடுபலன்கள்
நலப்பறுமூன்றுகூறிட்டே நலம்பெறமொழிந்திடவேண்டும்
சிலைப்புருவத்தண்மதிநுதற் கருங்கட்செய்யவாய்பைந்தொடியாளே.

(இ - ள்.) இலக்கினமுதல் நந்நான்கு வீடுகளிருந்த பரல்களைக் கூட்டி மூன்று தொகையினில் அப்பரலைக் கொடுக்கப் பலன்களாம். வயதை மூன்று பங்காக்கி மொழிய வேண்டும் பெண்ணணங்கே, எ - று. (1104)

இரவிக்கொன்பான்மதிக்கும் புந்திக்குமீரண்டாம்
குருவினுக்கைந்துசேய்க்கு மூன்றுசுக்கிரனுக்கோரேழ்

வருசனிக்கிருநான்காகு மிராசியின்சமுதாயத்தை
விரவுசேர்த்திடத்தாற்றுக்கு மேவுமூமொன்பாற்கீந்தே.

(இ - ள்.) சூரியனுக்கு ஒன்பதும், சந்திரனுக்கும்புதனுக்கும் நான்கும், குருவுக்கைந்தும், அங்காரகனுக்கு மூன்றும், சுக்கிரனுக்கு ஏழும், சனிக்கு எட்டுமாகிய ராசியின் கூட்டத்தை சேர்த்தியத்தால் தாக்கி இருபத்தேழுக் கீந்து, எ - று. (1105)

வருபலன்வளர்பிறைக்கே மகிழசுபதிமுன்னாகத்
திருவுறுதேய்பிறைக்கே சேரவிட்டம்முன்னாக
விரவுடனெண்ணிக்கண்ட நாள்குருமேவுங்காலம்
பரவுநற்பலன்தான்கூடிற் பகர்காரகர்க்குக்கண்டம்.

(இ - ள்.) உண்டாகும் பலன்கள் வளர்பிறைக்கு அஸ்வினி முதலாகவும், தேய்பிறைக்கு அவிட்டம் முதலாகவும் நல்லபலனும் சனிவரும் காலம் காரகர்களுக்குக் கண்டமுமுண்டாம், எ - று. (1106)

தான்சமுதாயமுப்பான் மேலுறிற்பூரணஞ்சாற்றும்
ஆனவையைந்தின்மீதி லடுத்திடின்மத்திமந்தான்
ஈனமாமிதன்கீழற்பமாம் பலன்வியமீரைந்தில்
வான்பரல்குறைந்திலாபம் வருஞ்சன்மமுயரில்யோகம்.

(இ-ள்.) சமுதாயத்தில் முப்பதுக்குமேலானால் பூரணமும், இருபத்தைந்துக்கு மேலானால் மத்திமமும், அதற்குக் கீழானால்அற்பமும், பன்னிரண்டுபத்தில் பரல் குறைந்திருந்தால் லாபமும் சன்மத்தில் அதிகமிருந்தால்யோகமுண்டாம், எ - று. (1107)

பதினொன்றில்வியமிகுந்தாற் பகர்ந்திடுசெலவுமேலாம்
துதிபெறுபத்தின்மேலாம் வியமெனிற்சகடந்தோற்றும்
வதியுமாறெட்டீராறின் மென்பரற்றொகைக்குமேலாய்ப்
பதிபுகழிரண்டொன்பான்பன் னொன்றிற்பகர்வர்யோகம்.

(இ - ள்.) பதினொன்றை விடப் பன்னிரண்டில் அதிகமாயின் செலவதிகமாம். பத்தில் பன்னிரண்டதிகமாயின் வண்டியுண்டாம். ஆறு எட்டு பன்னிரண்டாமிடங்களை இரண்டு ஒன்பது பதினொன்றில் பரல் அதிகமானால் யோகமாம், எ - று. (1108)

## இராசி குணகாரம்.

இடபஞ்சிங்கமீரைந்தா மியன்மேடங்கோலீரேழாம்
கடகமோர்நான்கும்மீனங் கருதுமீராறேயாகும்
மடஞ்சேர்கன்னிசுறாவைந்தா மன்னுந்தனுவொன்பானாகும்
குடம்பன்னொன்றுமிதுனந்தே ளெட்டாம்ராசிகுணகாரம்.

(இ - ள்.) (இங்ஙனம் சோதித்தபின்) ரிஷபசிங்கத்திற்குப் பலத்திலும், மேஷதுலாத்திற்கு எழிலும், கடகத்திற்கு நான்கிலும், மீனத்திற்குப் பன்னிரண்டிலும், கன்னிமகரத்திற்கு ஐந்திலும், தநுசுவுக்கு ஒன்பதிலும், கும்பத்திற்குப் பதினொன்றிலும், மிதுன விருச்சிகத்திற்கு எட்டிலும் பெருக்கிக் கொண்ட மொத்தம் ராசி குணகாரமாம், எ - று. (1109)

## கிரக குணகாரம்.

### வேறு.

நற்றவக்குருபத்துசெய்
உற்றவெட்டுநற்சுக்கிரன்
முற்றவெழுமோரைந்துமே
மற்றையோர்குணகாரம்.

(இ - ள்.) குருவிருந்த ராசி பரலைப் பத்திலும், அங்காரகனிருந்த ராசியில் பரலை எட்டிலும், சுக்கிரனிருந்த ராசிப்பரலை எழிலும், மற்றக் கிரகங்கள் நின்ற ராசிப்பரலை ஐந்திலும் பெருக்கிக்கண்ட தொகை கிரக குணகாரமாம், எ - று. (1110)

## மாதங் கலப்தம்.

குணகாரத்தொகையிரண்டை யொன்றாய்க்கூட்டி
குலமுந்நூற்றிருபானன் கதனாற்றாக்கும்
கணமதனைமுந்நூற்றே டறுபானைந்தில்
கழித்துவருஞ்சேடத்தை மூழவொன்பானில்
உணக்கமறவேகழித்த பலனுண்டாகும்
உயர்சேடந்தனையீரா றதனிற்றாக்கி
இணக்கமுடன்முன்போல வியற்றிக்கொண்ட
லீவுமதிசேடமுப்பா னைபத்தாக்கே.

(இ - ள்.) குணகாரத்தொகை இரண்டையுங் கூடி முந்நூற்றிருபத்து நான்கால் பெருக்கிவந்த தொகையை முந்நூற்றறுபத்தைந்தால் வகுத்து வருந் தோஷத்தை இருபத்தேழில் வகுக்க வருவது வருஷமாகும். அம்மிச்சத்தை பன்னிரண்டால் பெருக்கி இருபத்தேழில் வகுக்கவரும் மிச்சு மாதமாகும் அதில் வருஞ்சேடத்தை முப்பதில் பெருக்கி, எ - று. (1111)

தாக்குதொகைதனைமுன்போ லீந்தபேறு
தானாளாஞ்சேடத்தை யறுபான்றன்னில்
தாக்கிவருபேறுகன்ன லாமிவ்வாறே
தான்காணும்வாய்மற்றை விநாடியாதி
போக்கருமவ்வவர்வருட மாதமாதி
புறம்பாசுவைத்ததனை யாணஞ்செய்யும்

தாக்கணங்கேவகையதனை விரித்துச்சொல்வர்
சாதகநூலுணர்ந்தபெரியோர்கடாமே.

(இ - ள்.) அதனால் வருந்தொகையை இருபத்தேழால் வகுக்க அதில் வருவது நாளாம். அதில் வருஞ் சேடத்தை அறுபதால் பெருக்க வருந் தொகை கன்னலாம், இவ்வாறே மற்றைய விநாடி முதலியவைகளுமா மென்று பெரியோர் சொன்னார், எ - று. (1112)

ஓர்மனைதனிலிரண்டு கோல்கணின்றிடினுநீசம்
ஏறுமத்தமானம் பகையினுங்கடகத்தேனும்
ஆர்மதிகூடினாலு மலதுநேர்நோக்கினாலும்
தார்குழலையக்கோ ளாயுளிற்பாதிதள்ளே.

(இ - ள்.) ஒரு வீட்டில் இரண்டு கிரகங்களிருந்தாலும், நீசம் அத்தமன பகை கடகம் இவைகளில் யார் சேர்ந்தாலும், நோக்கினாலும், அந்தக் கிரகத்தின் வயதிற் பாதி தள்ளுக, எ - று. (1113)

தள்ளுநண்டதிற்சுபக்கோ டங்கிடின்மூன்றிலொன்று
தள்ளுநட்பதனினின்ற கோளுக்குநான்கிலொன்று
தள்ளுபாபக்கோணீசம் பகையுறிலெட்டிலொன்று
தள்ளுபாபக்கோணட்புத் தானுறினான்கிலொன்றே.

(இ - ள்.) கடகத்தில் சுபக்கிரக மிருந்தால் மூன்றிலொன்றும், நட்பிலிருந்த கிரகத்திற்கு நான்கிலொன்றும், பாபக்கிரகங்கள் நீசம்பகை இவற்றைப் பெற்றால் எட்டிலொன்றும், அவர்கள் நட்பிலிருந்தால் நான்கிலொன்றும் தள்ளுக, எ - று. (1114)

ஒன்றியகோள்தணின்ற வோரைக்குவியத்திற்பாவர்
நின்றிடிலவர்கொடுத்த வாயுள்களெல்லாநீங்கும்
துன்றபன்னொன்றிற்பாதி சொல்பத்திலுநான்கிலொன்று
நன்றுபாக்கியமெட்டொன்று நவிலெட்டிற்பதினொன்றே.

(இ - ள்.) கோள்கள் நின்ற ஓரைக்குப் பன்னிரண்டில் பாவிகளிருந்தால் அவர் கொடுத்த ஆயுளெல்லாம் போம். பதினொன்றிருந்தால் பாதியும், பத்திலிருந்தால் நான்கிலொன்றும், பாக்கியம் எட்டு சென்மம் இவற்றிலிருந்தால் எட்டிலொன்றும், பதினொறிலொன்றுமாகப் போகும், எ - று.

ஆம்வகைசுபக்கோளாயின் பாபருக்கறுத்தவெண்ணில்
தாமதிற்பாதிநீங்குஞ் சார்பாபராட்சியுச்சம்
ஏழுறிலவணமில்லை விரும்புகோளாட்சியுச்சம்
வாமமார்குழலாய்பத்தி னொன்றுமேற்கூட்டுவாயே.

(இ - ள்.) இப்படியான சுபக்கிரகங்களாயின் பாவிகட்குச் சொன்ன தொகையில் பாதியொழியும், பாவிகள் ஆட்சி உச்சம் பெற்றிருந்தால் அரண யில்லை. சுபர் ஆட்சி உச்சம்பெறில் பத்துக்கொன்று கூட்டுவாயாக, எ - று.

## கால சக்கிர திசை யந்திரம்.

கீழ்குறித்திருக்கும் காலச்சக்கிர தசாபுத்திகள் சக்கரத்தில் வரைந்திருக்கும் எண்களில் வரிசைக்கிரமமாய் சவ்விய அபசவ்ய பாதங்களையும் அந்தந்த கிரகங்களின் கதிமாறி சஞ்சரிக்கும் காலங் களையும்,

நுட்பமாய்க் கண்டு தீர்மானித்துக் கூறவும்.



## காலசக்கிரம்.

### வெண்பா.

செய்க்கேழு பொன்பத்துச் சேரிரவிக்கைந்தாகும்
வாய்ந்தபுகர்க்கீரெட்டா மாலுக்கோ—னய்த்தொன்பான்
சந்திரற்குமூவேழாஞ் சாற்றுஞ்சனிக்கோநான்
கிந்தமுறை ராசிகளுக்கெண்.

(இ - ள்.) அங்காரகனுக்கு ஏழும், குருவுக்கு பத்தும், சூரியனுக்கு ஐந்தும், சுக்கிரனுக்குப் பதினாறும், புதனுக்கு ஒன்பதும், சந்திரனுக்கு இருபத்தொன்றும், சனிக்கு நான்கும் வருஷங்களாம். இப்படியே அவரவர் ஆட்சி ராசிகளுக்கும் வருஷங்களா மென்றெண்ணுக, எ - று. (1117)

கேள்சகடுமான் றலையாழ் கேடின்மகமுன் மூன்றும்
நீள்சுளகுதேள் கேட்டைநேரோணம்—வாளவிட்டம்
செக்குமிடவோட்டாகுஞ் சேராப்பதினைந்தும்
இக்குமொழியாய் வலவோட்டே.

(இ - ள்.) உரோகணி, மிருகசீரம், திருவாதிரை, மகம், பூரம், உத்திரம், விசாகம், அநுடம், கேட்டை, திருவோணம், அவிட்டம், சதயம் இவை பன்னிரண்டும் இடவோட்டு நட்சத்திரங்களும், இவையல்லாத பதினைந்தும் வலவோட்டு நட்சத்திரங்களுமாம், எ - று. (1118)

எயபரியார லெரியேதமறுசோதியா
வாயவத்தமூல முத்திராடமுட—தூயகடை
நான்புரட்டைமீரைந்தினன் முதற்கானக்காட்சி
நீளதனுவீறாக வருநேர்.

(இ - ள்.) அஸ்வனி, கார்த்திகை, புனர்பூசம், ஆயிலியம், அஸ்தம், மூலம், உத்திராடம், பூரட்டாதி, ரேவதி என்னும் பத்து நட்சத்திரங்களுக்கும் முதல்பாதம் மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலா, விருச்சிகம் தநுசு என்னும் ஒன்பது இராசிகளாம், எ - று. (1119)

நேரிரண்டாங்காருக்கு நீண்மகரங்கும்பஞ்சேல்
சேரறுதேள்கோலரிவை தேர்கடகம்—வார்சியம்
தண்டாகுமூன்றுக்கா ருனிடபமேடமீன
கொண்டகும்ப மான்றனுசுகூறு.

(இ - ள்.) இரண்டாம் பாதத்திற்கு மகரம்,கும்பம், மீனம், விருச்சிகம், துலா, கன்னி, கடகம், சிங்கம், மிதுனம் இவைகளும், மூன்றும் பாதத்திற்கு ரிஷபம், மேஷம், மீனம், கும்பம், மகரம், தநுசு இவ்வைகளும், எ-று.

கூறுமேடம்மிடங் கோபமிதுனமாம்
வீறுகாற்காறுக்கு மேலவன்—நாறுமலர்க்
கோதாய்முதலாகக் கொண்மீனராசிவரை
ஏதமறு புத்திக்கினம்.

(இ - ள்.) மேஷம், ரிஷபம், மிதுனம் இவைகளுமாம். நாலாம் பாதத்திற்கு கடகம், சிங்கம், கன்னி, துலா, விருச்சிகம், தநுசு, மகரம், கும்பம், மீனம் இவைகளாம். இவைகளே புத்திக்கினங்களுமாம், எ - று. (1121)

இனமார்பரணியேழிற் பூசஞ்சித்திரையோ
டனமேகீர்நாளுத்தி ரட்டாதி—எனுமைந்தின்
முதற்காறேள்கோலரிவை மூன்னுகடகஞ்சியம்
மிக்கதண்டே ராடுமீனம்

(இ - ள்.) பரணி, பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி என்னும் இவைகட்கு முதற்பாகம் விருச்சிகம், துலா, கன்னி, கடகம், சிங்கம், மிதுனம், ரிஷபம், மேஷம், மீனம் இவைகளாம், எ - று. (1122)

மீயிரண்டேகும்பமான் வின்மேடங்கெதட்டரிவை
ஆயாருமூன்றிற்கோல் தொட்டாறும்—ஏயதேள்
கோலரிவையாகுங் குளிர்சியந்தண்டுமுதல்
ஏலவின்மட்டா மிடமாயீறு.

(இ - ள்.) இரண்டாம் பாதத்திற்கு கும்பம், மகரம், தநுசு, மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம்,சிங்கம், கன்னிஇவைகளும், மூன்றும்பாதத்திற்கு துலாமுதல்ஆறும், விருச்சிகம்,துலா, கன்னி இவைகளுமாம், நாலாம் பாதத்திற்குக் கடகம், சிங்கம், மிதுன முதல் தநுசு வரைக்கு முள்ளவைகளுமாம், எ - று. (1123)

ஈருமுரோகணிமகமோர் சுளகோணமிவற்றின்
வீருமுற்காற்கு வில்லாதிதண்டும்—கூறுசிங்கம்
நண்டிரண்டாங்கால்கன்னி நற்கோறேண்மீனகும்பம்
அண்டுசுறுவிற்றேள் கோலாம்.

(இ - ள்.) உரோகணி, மகம், விசாகம், திருவோணம் இவற்றின் முதற் பாதத்துக்கு தநுசு, மகரம், கும்பம், மீனம், மேஷம், ரிஷபம், மிதுனம், சிங்கம், கடகம் இவைகளும், இரண்டாம் பாதத்திற்கு கன்னி, துலா, விருச்சிகம், மீனம், கும்பம், மகரம், தநுசு, விருச்சிகம்துலாஇவைகளுமாம், எ-று.

ஆமூன்றுங்காலுக் கரிவையரிநண்டுதண்டும்
வாமிடபமாடுதனு மான்குடமாம்—தேமொழிகேள்
மீனுடெருதுமிதுனஞ் சிங்கநண்டரிவை
தானுங்கோமேறள் கடைக்கால்சாற்று.

(இ - ள்.) மூன்றும் பாதத்திற்கு கன்னி, சிங்கம், கடகம், மிதுனம், ரிஷபம், மேஷம், தநுசு, மகரம், கும்பம் இவைகளும், நாலாம் பாதத்திற்கு மீனம், மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், கன்னி, சிங்கம், துலா, விருச்சிகம் இவைகளுமாம், எ - று. (1125)

சாற்றுமகசிரம்யாழ் சார்பூரமுத்திரமும்
போற்றுமகனுங்கேட்டை போரவிட்டம்—ஏற்றுமுதற்
காலுக்கிடமாக் கயலாதிஞண்டுவரை
கோலக்குவி முலையாய்கூறு.

(இ - ள்.) மிருகசிரம், திருவாதிரை, பூரம், உத்திரம், அநுடம், கேட்டை, அவிட்டம், சதயம் இவைகட்கு முதற்பாதம் மீனம், கும்பம், மகரம், தநுசு, விருச்சிகம், துலா, கன்னி, சிங்கம், கடகம் என்னு மிவைகளாமென்று பெண்ணணங்கே! நீ அறிக, எ - று. (1126)

கூறுதண்டுகுண்டைமறி கூன்சிலைநொட்டேறளவும்
வீறுமிருகாற்காமேலாங்காற்கு—மீறும்
அரிமதியாம்பெண்கோ றேளாமீன்குடமாம்
கரிகுழலா யாமெனவேசொல்.

(இ - ள்.) இரண்டாம் பாதத்திற்கு மிதுனம், ரிஷபம், மேஷம், தநுசு, மகரம், கும்பம், மீனம், மேஷம், ரிஷபம் இவைகளும், மூன்றாம்பாதத்திற்கு மிதுனம், சிங்கம், கடகம், கன்னி, துலா, விருச்சிகம், மீனம், கும்பம், மகம் இவைகளுமாம், எ - று. (1127)

சொல்லுநாலாங்காற்குத் தாயதனுவாதியாய்
வல்லமேடம்வரை யொன்பான்மனையும்—நல்லாய்
இடவோட்டாக்கொள்வ ரீராறுகாலுக்கும்
விடமார் தேளாதிவின்மட்டே.

(இ - ள்.) நாலாம்பாதத்திற்கு தநுசு, விருச்சிகம், துலா, கன்னி, சிங்கம், கர்க்கடகம், மிதுனம், ரிஷபம், மேஷம் இவைகளும் ஆகும். இவைகளை இடவொட்டாகக் கொள்க. ஈராறு காலுக்கும் விருச்சிக முதல் தநுசு வரைக்குமேயாம், எ - று. (1128)

மட்டாருஞ்சக்கரத்தின் வாணுண்டிற்கும்புத்தி
தொட்டாருமாண்டிற்குந் தோகாய்கேள்—நட்டார்
தொகைதம்மைமாறிச்சொலுந் திசையாண்டுக்கு
மிகைவரும்பேறே புத்திமேல்.

(இ - ள்.) இந்த காலச்சக்கிரத்தில் வருடத்திற்கும் புத்தி வருடத்திற்கும் வரும் தொகையை மாதச்சொல்லுந் திசைவருஷத்திற்கு மிகையாக வரும் பேறே புத்தி மேற்பட்டதாம், எ - று. (1129)

மேடந்தனுசுமீனம் விருச்சிகஞ்சிங்கக்கதியாம்
நாடரிவைநண்டுசிங்க நற்றண்டு—கூடும்
தவளைக்கதிவலநேர்தான் சர்ப்பவோட்டம்
திவளிடமேமர்க் கடமாச்செப்பு.

(இ - ள்.) மேஷம், தநுசு, மீனம், விருச்சிகம் இவை சிங்கக்கதியும் கன்னி, கடகம், சிங்கம் மிதுனம் தவளைக்கதியுமாகும். வலமாயின் சர்ப்பவோட்டமும், இடமாயின் மர்க்கட ஓட்டமுமாமெனச் சொல்லுக, எ - று.

செப்புவலவோட்டுக்குச் சேர்தொட்டலக்கினமெய்
ஒப்பரிய சீவன்விடுமோரையே—தப்புமிட
ஓட்டிற்குமாறு யுரைவயிற்றிலேசுபர்கள்
கூட்டமுறின்நற்பலனே கூறு.

(இ - ள்.) வலவோட்டு நட்சத்திரங்களுக்கு தொட்டலக்கினமே சீவன் மோரையாம். இடவோட்டு நட்சத்திரங்களுக்கு மாறாக வயிற்றில் சுபர்கள் கூடியிருந்தால் கூறுக, எ - று. (1131)

ஆக செய்யுள் பாயிரமுட்பட 1146.

# சாதகாலங்காரம்

## மூலமும் ஆதி - விரிவுரையும்

மீனாக்ஷி துணை.

சாதகாலங்கார

# பொருள் விளக்க அகராதி.

| பொருள். | பக்கம். |
|---|---|

பொருள் விளக்க அகராதி

முற்றுப்பெற்றது.

உ

மீனாக்ஷி துணை.

சாதகாலங்கார

# பொருளடக்க அகராதி.

சாதகாலங்கார பொருளடக்க அகராதி.

முற்றிற்று.




திருமகள்விலாசம் பிரஸ், சென்னை:—1935.